श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

द्वितीयो भागः

आह्निककाण्डः

पूर्वखण्डः द्रविडानुवादयुतः

இரண்டாம் பாகம் ஆஹ்நிக காண்டம்

பூர்வ பாகம்





உ

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

## द्वितीयो भागः

## आह्निककाण्डः

## पूर्वखण्डः द्रविडानुवादयुतः

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

இரண்டாம் பாகம்

ஆஹ்நிக காண்டம்

முதல் பகுதி

*தமிழ் உரையுடன்*

தொகுத்தளிப்பவர்:

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ

வெளியிடுபவர்:

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம்-631 502

விக்ருதி-2011

**SMRUTI MUKTHA PHALAM-2**

**ANHIKA KANDAM (Ist PART)**

with Tamil translation

Edited by :

**Vaidya S.V. Radhakrishna Sastri**

Srirangam

Published on behalf of

**Veda Dharma Sastra Paripalana Sabha**

(Regd Office) Kumbakonam

*by*

**Sri Kanchi Kamakoti Peetam**
**Srimatam Samsthanam**
1, Salai Street,
Kancheepuram-631 502

---

Lasertypeset & Printed at :
**V.K.N. Enterprises**
164, R.H. Road, Mylapore, Chennai-4, Cell : 9840217036

Phone : 044-2722115 e:mail:skmkanci@md3.vsnl.net.in
Fax : 044-27224305, 37290060

Sri Chandramouleeswaraya Namaha:
Sri Sankara Bhagavazdpadacharya
Paramaparagatha Moolamnaya Sarvagnapeeta:
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
**Srimatam Samasthanam**
**No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502.**

---



मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान् ।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात् ।।

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिल-स्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणबृन्द-माक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति । धर्म एव विशिनष्टि समाजं समजात् । मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः । धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षिताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागारं निर्मथ्य पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत् । सोऽयं ग्रन्थः

वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति। यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च। स वै राघवशार्दूल धर्मस्त्वामभि-रक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठु अवगम्यते। लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः। सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते। तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डादिः भागशः **वैद्यश्री शिवे. राधाकृष्णशास्त्रिभिः** द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे। सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बा-समेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थ-सम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयो-विलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्त-मङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधि-गच्छन्त्विति चाशास्महे।

शङ्करसंवत्सरः २५२०

काञ्चीपुरम्

**नारायणस्मृतिः।**

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# நூல் அறிமுகம்

பிரும்ம ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் என்ற மகான் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த கண்டிரமாணிக்கத்தைச் சார்ந்தவர். சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் அந்தணர் மரபின் வழிகாட்டியான சாஸ்திரப் பேரறிஞர். அவர் அன்றுவரை கிடைத்த தர்ம சாஸ்திர நூல்களிலிருந்து கடைந்தெடுத்துத் தொகுத்து நூலாகத் தந்துள்ளது ஸ்ம்ருதிமுக்தாபலம். வர்ணாச்ரம தர்மகாண்டம் ஆந்ஹிக காண்டம், ஆசௌச காண்டம், ஶ்ராத்த காண்டம். திதி நிர்ணய காண்டம். பிராயச்சித்த காண்டம் என்ற அதன் ஆறு பகுதிகளில் வர்ஞசிரம தர்ம காண்டம் வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபையினரால் இதற்கு முன் வெளியிடப்பட்டுள்ளது. ஆந்ஹிக காண்டம் இரு பகுதிகளாக வெளிவரவிருக்கிறது. அதன் முதற்பகுதி இது.

நல்லொழுக்கத்தையும் சமுதாய நன்னெறியையும் குறிக்கோளாகக் கொண்டு வாழ்வின் ஒவ்வொரு நொடியிலும் அதனைப் பின் பற்றித் தவறு நேராது பாதுகாப்பதாலேயே மனித சமுதாயம் பெருமை பெறும். தனி ஒவ்வொரு மனிதனின் சீர்கேடும் சமுதாயத்தைப் பாதிக்கும். சமுதாயத்தின் பொதுச் சீர்கேடும் தனி மனிதனின் வாழ்வைப் பாதிக்கும். தூய்மையும் நேர்மையும் சீர்மையும் ஒவ்வொரு கணத்திலும் ஒவ்வொருவராலும் உள்ளும் வெளியும் பாதுகாக்கத் தக்கவை. இம்மூன்றையும் சீர்கெடச் செய்பவை நம்முடன் இணை பிரியாமல் சேர்ந்தே தோன்றியுள்ளன. அவற்றைக் கண்டறிந்து விலக்கி மறுபடியும் தூய்மையைப் பாதுகாப்பதே நம் பணிகளில் பேரிடம் பெறுகிறது.

தூய்மையும் - தூய்மையின்மையும் - (சௌசமும் ஆசௌசமும்) பிறருக்கு ஊறுவிளைவிக்காமல் தன்னளவில் தூய்மையைப் பெறுவது சௌசம். இந்த சௌசமே ஆந்ஹிக காண்டத்தின் உட்பொருள். தூய்மையின்மைக்குக் காரணம் பெரும்பாலும் அழுக்கு என்ற மலம், விழித்தெழுந்த பிறகும் படுக்கையில் நாட்டம். கொட்டாவி, கண்செறுகல், உடல் விரைப்பு - முறிப்பு தொடர, மனம் தெளியாமல் தமோ குணத்தின் ஆட்சி நீங்காமையை உணர்த்துகிறது. இது ஒரு அழுக்கு. விழித்ததும் சுறுசுறுப்பேற்று எழுந்து படுக்கையை அகற்றி காலாற வெளிநடப்பது தூய்மைக்கான முதற்படி. முற்பகலிலும் இரவிலும் நம்முள் தேங்கியுள்ள மல ஜலக்கழிப்பு அடுத்த சௌச முறை. தன்னலமிகுதியால் சுற்றுச் சூழலை இதனால் பாதிக்காதிருப்பதும் பாதிப்பிற்கான மாற்று தேடி சூழலின் தூய்மையைப் பாதிக்காதிருப்பதும் இதனுள் அடங்குகிறது. நாள் முழுதும் தரித்ததால் ஆடையில் சேர்ந்த மாசை நீக்கி, நீர் நிலையின் தூய்மை கெடாது நீராடி வெளி உடலை மாசற்ற தாக்கிக் கொள்வது எனத் தொடங்கிய சௌசம் இரவு படுக்கும்வரை ஒவ்வொரு கணமும் தொடர்கிறது. இது தனி மனித வாழ்க்கையில்.

மனிதன், தனித்து வாழ்வதில்லை. அவனுக்கென குடும்பம், வீடு, அடுத்து வாழ்கிற மக்களின் குடியிருப்பு, ஊர் எனச் சுற்றுச் சூழல் விரிய, ஊரோடு ஒத்து வாழ நேர்வதும் சூழலின் தூய்மையும் தேவை. ஒழுக்கத்தில் கட்டுப்பட்ட தனி மனிதன் அதே கட்டுப்பாடுள்ள குடும்பத்திலும் சூழலிலும் ஊரிலும் நாட்டிலும் அதே தூய்மை பாதுகாக்கப் பெறுவதன் பொறுப்பை ஏற்க வேண்டியிருக்கிறது. எல்லோரும் இவற்றில் ஒரே

கட்டுப்பாட்டு முறையைப் பின்பற்றவேண்டியதும் அவச்யம்.

குறுகிய பாதையில் தூய நிலையில் வருகிற அந்தணரும் அரசரும் எதிர்பட்டால் அரசர் அந்தணருக்கு முதலில் வழிவிட வேண்டும் என்பது ஒரு நியதி. நீராடித் தூய்மையுடன் வருகிற அந்தணர் எதிரே வருகிற வேளாளரிடம் அடுத்த ஊருக்கு எத்தனை தூரம் என விசாரித்தார். வேளாளர் எனக்கானால் ஒரு காதம், உமக்கானால் மூன்று காதம் என்றான். ஏன் இப்படி எனக் கேட்டவருக்கு, நீர் தூய்மையை உற்றுப் பார்த்து ஒதுங்கி ஒதுங்கிச் செல்வீர். நான் ஒதுங்காமல் நேரே செல்வேன் என்றாராம். இது மக்கள் வழக்கில் தேர்ந்த தூய்மையின் மதிப்பு.

ஆஹ்நிக காண்டம் முழுவதும் தூய்மையை விரும்புகிற மூவர்ணத்தினர் தூய்மையைப் பாதுகாக்கிற தூய்மை முறையை விளக்குகிறது. (இன்று அது மற்ற இருவர்ணத்தினரிடம் மறைந்து அந்தணர் மரபினரில் வெகு சிலரின் நடைமுறையில் முற்றிலுமின்றி சிற்சில பகுதிகளில் அனுஷ்டானத்தில் உள்ள தெனலாம்). அது இரு பகுதிகளாக வெளிவருகிறது. அதன் முதற்பகுதி இது. இதில் தூய்மைக்கான முக்கியச் சடங்கான திரிகால ஸந்தியாவந்தனத்தின் முற்பகுதிவரை இடம் பெறுகிறது.

இனி வரவிருக்கும் பிற்பகுதியில் முன்னிரவு வரை தொடர வேண்டிய நன்னடை முறை விளக்கம் பெறவுள்ளது. ஆஹ்நிக காண்டத்துடன் முடிவுறாத சௌசம் மூன்றாவது ஆசௌச காண்டத்தில் தொடர்கிறது.

ஒட்டுதல் உள்ளவரை தான் தூயவனாக இருப்பது மட்டும் போதாது. உற்றார் உறவினரின் தூய்மையின்மையும்

இவனைப் பாதிக்கும். தன் மனைவி கருவுற்றுப் பிரசவித்தால் பேறு நிலையில் வயிற்றிலுள்ள சிசுவிற்கு வாழ்வளித்த கருவறை நீரே தூய்மையைக் கெடுக்கிறதென தாயுடன் அது கொண்ட தொடர்பைக் தொப்புள்கொடியை நறுக்கிப் பிரித்து நீராட்டிக் கட்டிலிலிடுகின்றனர். தாயும் இதுவரை வயிற்றிலிருந்த சிசுவிற்கு ஊட்டமளிக்கப் பயன்படுத்திய தன் உடற்பகுதியை நீக்கிப் பெருமூச்சு விடுகிறாள். அசுசிப் பகுதி அகன்ற நிம்மதி. அசுசி முழுவதும் நீங்கித் தூய்மை பெற 30-40 நாட்களாகின்றன. இது காலவரைக்குட்பட்ட ஜனன - ஆசௌசம்.

பெண்ணிற்கென அவள் பருவமடைந்ததும் தொடர்கிற மாதவிடாயாலான தீட்டு, இந்த ப்ரஸவத் தீட்டு என்ற இரண்டும் பெண்ணிற்கு மட்டுமே எனினும் பிரஸவத் தீட்டில் கணவனுக்கும் அவரது உற்றார் உறவினருக்கும் நிலைக்கேற்ப பங்கு உண்டு. தந்தையின் ஆசௌசம் அந்த சிசுவின் பிறப்பில் உண்டான பொறுப்பின் பங்காகும். இது நீராடலால் நீங்குவதல்ல. காலவரையால் நீங்குவது. அதனால் ஆசௌசம் என்ற தனி நிலை.

இதேபோன்று ஒருவர் இறந்ததும் அவரது உடல் அழுகி அசுசிப் படுத்துமுன் எத்தனை அன்புக்குரியதாயினும் வீட்டிலிருந்தும் அகற்றப்பட்டு நெருப்பிலோ பூமியிலோ அடக்கப் பெறுகிறது. அத்துடன் நில்லாமல் அதனைச் சார்ந்தவர்கள் வெவ்வேறு அடிப்படையில் 10 நாட்கள் வரை தீட்டு (ஆசௌசம்) காக்கின்றனர். தெருவினர் கூட உடலடக்கம்வரை சுசியின்மையை உணர்வர். இது மரணா சௌசம். இதுவும் நீராடலாலோ மற்ற முறைகளாலோ நீங்காது. காலவரை தீர்ந்த பிறகே விலகும். இதுவும் ஆஹ்நிக நடைமுறைகளில் தடை விளைவிக்கும். அதனால் ஆஹ்நிக காண்டத்தையொட்டி ஆசௌச காண்டம் இடம்

பெறுகிறது. தூய்மை பற்றிய விளக்கங்களை இவ்விரு காண்டங்களில் கண்டு கொள்ளலாம். ஜனனாசௌசம் குடும்பத்தைப் பேணிக்காக்க மற்றொரு ஜீவன் தோன்றியதை வரவேற்பதாக அமைவதால் உள்ளத்து நிறைவுக்காகிறது. மற்றது இதுவரை குடும்பத்தைப் பேணிக்காத்ததொரு ஜீவனின் மறைவால் துயரம் நிரம்பியது. ஆக அகத் தூய்மையையும் புறத் தூய்மையையும் ஒவ்வொரு கணத்திலும் ஒவ்வொருவரும் எந்நிலையிலும் உறுதியுடன் இடையறுமல் பாதுகாப்பதன் அவசியத்தை வற்புறுத்தி வழி காட்டுவது ஆஹ்நிகமும், ஆசௌசமும்.

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இதற்கு வழிகாட்டிய நூற்றுக் கணக்கான மூல நூல்களை இயற்றிய மகான்களின் உபதேச வாக்யங்களை நம்முன் வைத்து ஆதாரத்துடன் முன்னோரின் ஆசாரத்தைத் தொகுத்துத் தந்துள்ளார். அவரது ஸம்ஸ்க்ருத நூலை நடுக்காவேரி பிரும்மஸ்ரீ ஸ்ரீநிவாஸ சாஸ்திரி அவர்கள் இயற்றிய தமிழுரையுடன் வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை வெளியிட்டது. அதனையொட்டி தேவ நாகரிலிபியில் மூலமும், தமிழில் உரையும் இப்போது மறுபதிப்பாக தொகுத்து அச்சிட்டு வெளிக் கொண்டுவருகிற வாய்ப்பை பரம பூஜ்யஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களின் ஆஜ்ஞையையும் அருளாசியையும் முன்னிட்டு வேததர்ம சாஸ்திர பரிபாலன ஸபை அடியேனிடம் தந்துள்ளது. தேவியின் அருளும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சரணர்களின் அருளும் துணை நிற்க ஆஹ்நிக காண்டத்தின் முதற்பகுதி நன்மக்களின் முன் வைக்கப்படுகிறது.

ஸ்ரீரங்கம்

விக்ருதி தை வைத்ய **S.V.** ராதாகிருஷ்ண சாஸ்திரீ

உ

# நூலாசிரியரால் தனக்கு வழிகாட்டியாகக் குறிப்பிடப் பெற்றவர்

*அகஸ்த்யர், அங்கிரஸ், அத்ரி, ஆச்வலாயனர், ஆபஸ்தம்பர், ஆக்னிவேச்யாயனி, உசநா, கண்வர், கர்கர், காச்யபர், காத்யாயனர், கார்க்யர், கார்ஷ்ணுஜினி, காலவர், கோபிலர், கௌசிகர், கௌதமர், சங்கர், சாண்டில்யர், சாதாதபர், சாலங்காயனர், சிவர், சௌனகர், ச்லோகாபஸ்தபம்பர், தக்ஷர், தேவலர், நந்திஸூரி, நாரதர், நாராயணர், பகவான், பரத்வாஜர், பராசரர், பாரத்வாஜர், பாரஸ்கரர், பிதாமஹர், புலஸ்த்யர், புலஹர், பைடீநஸி, போதாயனர், ப்ருகு, ப்ருஹஸ்பதி, ப்ரசேதஸ், ப்ரஜாபதி, ப்ரம்ஹா, ப்ருஹன்மனு, மரீசி, மனு, மஹாதேவர், மார்க்கண்டேயர், மேதாதிதி, யமன், யாக்ஞவல்க்யர், யோகயாக்ஞவல்க்யர், ருச்யச்ருங்கர், லிகிதர், லோகாக்ஷி, வஸிஷ்டர், விச்வாமித்ரர், விஷ்ணு, விக்ஞானேச்வரர், விவஸ்வான், வையாக்ரபாதர், வ்யாக்ரபாதர், வ்ருத்தபராசரர், வ்ருத்தசங்கர், வ்ருத்தசாதாதபர், வ்ருத்தமனு, வ்ருத்தகார்க்யர், வ்ருத்தயாக்ஞவல்க்யர், வ்ருத்தவஸிஷ்டர், ஜாதூகர்ணி, ஜாதூகர்ண்யர், ஜாபாலி, ஸங்க்ரஹகாரர், ஸத்யவ்ரதர், ஸத்யதபஸ், ஸுமந்து, ஸுதர்சனாசார்யர், ஸ்கந்தர், ஹரதத்தர், ஹரி:, ஹாரீதர்.*

—★—

## ஆதார நூல்கள்

*அகண்டாதர்சம், அங்கிரஸ் ஸ்ம்ருதி, அதர்வசிரஸ், அத்ரி ஸ்ம்ருதி, அபரார்க்கம், ஆய்வமேதிகம், ஆய்வலாயன ஸ்ம்ருதி, ஆதித்யபுராணம், ஆபஸ்தம்ப தர்மம், ஆபஸ்தம்ப ஸ்ம்ருதி, உசநஸ் ஸ்ம்ருதி, கடசாகா, கண்வ ஸ்ம்ருதி, கர்மப்ரதீபம், காத்யாயன ஸ்ம்ருதி, காயத்ரீ ஸாரம், காருடம், காருட புராணம், கால நிர்ணயம், காலாக்னி ருத்ரம், காலாதர்சம், கூர்ம புராணம், கோபில*

ஸ்ம்ருதி, கௌசிக ஸ்ம்ருதி, கௌதம ஸ்ம்ருதி, கௌர்மம், க்ரியா ஸாரம், க்ருஹ்ய பரிசிஷ்டம், சக்ரோபநிஷத், சங்கர ஸம்ஹிதா, சங்க ஸ்ம்ருதி, சதுர்விம்சதி மதம், சந்தோக ச்ருதி, சர்யா பாதம், சந்த்ரிகா, சாதாதப ஸ்ம்ருதி, சைவம், சௌனக ஸ்ம்ருதி, ஜாதிநிர்ணயஸங்க்ரஹம், ஜாபாலோபநிஷத், தர்ம ஸார ஸுதாநிதி, தக்ஷ ஸ்ம்ருதி, தேவல ஸ்ம்ருதி, தேவீ புராணம், தைத்திரீயகம், தைத்திரீயக ஶ்ருதி, நாரதீயம், நிருக்த பாஷ்யம், ந்ருஸிம்ஹ புராணம், பத்ததி, பராசர ஸ்ம்ருதி, பவிஷ்யத் புராணம், பவிஷ்யோத்தரம், பரத்வாஜ ஸ்ம்ருதி, பாகவதம், பாஞ்ச ராத்ரம், பாத்மம், பாரிஜாதம், பாராசரம், பாராசரோப புராணம், பாராசர்யம், புருஷார்த்த ப்ரபோதம், பைடீநஸ ஸ்ம்ருதி, போதாயன ஸ்ம்ருதி, போதாயன தர்மம், ப்ரசேதஸ் ஸ்ம்ருதி, ப்ரதீபிகா, ப்ரபஞ்ச ஸாரம், ப்ரயோக பாரிஜாதம், ப்ரஹ்ம புராணம், ப்ரஹ்மாண்ட புராணம், ப்ரஹ்ம கைவர்த்தம், ப்ரஹ்ம ஸித்தாந்தம், மந்த்ர தீபிகா, மந்த்ர தேவதா ப்ரகாசிகா, மரீசி ஸ்ம்ருதி, மஹாபாரதம், மனு ஸ்ம்ருதி, மஹோபநிஷத், மாத்யந்தின க்ருஹ்யம், மாதவீயம், மானவ புராணம், மானவம், மானவீய ஸம்ஹிதா, மானவோபபுராணம், யம ஸ்ம்ருதி, யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி, ரத்னாவளி, ருக்விதானம், லிகித ஸ்ம்ருதி, லைங்கம், லைங்க புராணம், வரதராஜீயம், வஸிஷ்ட ஸம்ஹிதா, வஸிஷ்ட ஸ்ம்ருதி, வாமன புராணம், வாயு புராணம், வாஸிஷ்டம், வாஸிஷ்ட லைங்கம், வாஸுதேவோபநிஷத், விக்ஞானேச்வரீயம், விஷ்ணு தர்மோத்தரம், விஷ்ணு புராணம், விஷ்ணு ஸ்ம்ருதி, வைகானஸ ஸூத்ரம், வ்யாஸ ஸ்ம்ருதி, ஷட்த்ரிசன்மதம், ஸங்க்ரஹம், ஸாங்க்யாயன க்ருஹ்யம், ஸார ஸமுச்சயம், ஸார ஸங்க்ரஹம், ஸுமந்து ஸ்ம்ருதி, ஸூத ஸம்ஹிதா, ஸௌர ஸம்ஹிதா, ஸ்காந்தம், ஸ்ம்ருதி சந்த்ரிகா, ஸ்ம்ருதி சிந்தாமணி, ஸ்ம்ருதி தீபிகா, ஸ்ம்ருதி பாஸ்கரம், ஸ்ம்ருதி ப்ரதீபிகா, ஸ்ம்ருதி ரத்னம், ஸ்ம்ருதி ரத்னாவளி, ஸ்ம்ருதி ஸங்க்ரஹம், ஸ்ம்ருதி ஸார ஸமுச்சயம், ஸ்ம்ருதி ஸாரம், ஸ்ம்ருத்யர்த்த ஸாரம், ஹாரீத ஸ்ம்ருதி.

உ

# आह्निककाण्डपूर्वभागविषयानुक्रमणिका

## ஆஹ்நிக காண்ட (முன்பகுதி) பொருளடக்கம்

எண்

श्रीगुरुभ्यो नमः

श्रीवैद्यनाथदीक्षितविरचिते

# स्मृतिमुक्ताफले

## आह्निककाण्डः

## (पूर्वभागः)

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றிய

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## ஆஹ்நிக காண்டம்

## (முன் பகுதி)

இனி இப்பொழுது ஆஹ்னிககாண்டம் ஆரம்பிக்கப்பட்டுகிறது. வர்ணாச்ரமதர்மகாண்டம் முடிந்த பிறகு. அதே பதம் க்ரந்தாரம்பத்தில் செய்யும் மங்களமுமாகும். அஹஸ் பகலும், ராத்திரியும். அவைகளில் செய்ய வேண்டிய கார்யங்கள் ஆஹ்னிகங்களெனப்படும். ஆஹ்னிகங்களைச் சொல்லும் காண்டம் ஆஹ்னிககாண்டம். காலையில் விழிப்பது முதல் இரவில் படுக்கும் வரையிலுள்ள கார்யங்களை, மன்வாதி தர்மசாஸ்த்ரங்களை அனுஸரித்துச் சொல்லும் க்ரந்தமிது.

### ब्राह्म मुहूर्ते प्रबोधादि ॥

तत्र मनुः– 'ब्राह्मे मुहूर्ते बुध्येत धर्मार्थावनुचिन्तयेत् । कायक्लेशांश्च तन्मूलान् वेदतत्वार्थमेव चे' ति ॥ वेदतत्वार्थः - परमात्मा।

**விடியற்காலத்தில் எழுந்திருப்பது முதலியவை**

அந்த ஆஹ்னிகங்களுள் விடியற்காலத்தில் எழுந்திருப்பதைப்பற்றி **மனு** - ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் எழுந்திருக்க வேண்டும். தர்மத்தையும் அர்த்தத்தையும் சிந்திக்க வேண்டும். அவைகளாலுண்டாகும் தேஹச்ரமங்களையும் வேதத்தின் உண்மைப் பொருளான பரமாத்மாவையும் சிந்திக்க வேண்டும். இனி பகலிலும் இரவிலும் இவ்விதம் தர்மத்தைச் செய்ய வேண்டும் என்றும் இவ்விதம் பொருளைத் தேடவேண்டுமென்றும் சிந்திக்க வேண்டும். அவைகளில் தேஹத்திற்கு ச்ரமமதிகமாகி, தர்மார்த்தங்கள் அல்பமாகாமல், அல்பச்ரமத்தால் அதிகதர்மமும் அதிக அர்த்தமும் கிடைக்கும் வழியைச் சிந்திக்க வேண்டும். வேததத்வார்த்தமென்பதற்கு வேதத்தில் விதித்துள்ள கர்மங்களும், ப்ரஹ்மம் என்றும் பொருளுண்டு.

तथा च व्यासः – 'ब्राह्मे मुहूर्ते उत्थाय धर्ममर्थञ्च चिन्तयेत्। कायक्लेशं तदुद्भूतं ध्यायीत मनसेश्वर' मिति ॥

**வ்யாஸர்:** - ப்ராம்ஹமுஹூர்த்தத்தில் எழுந்து தர்மம் அர்த்தம் இவைகளையும், அவைகளாலுண்டாகும் தேஹச்ரமத்தையும் சிந்திக்க வேண்டும், ஈச்வரனையும் மனதால் தியானிக்க வேண்டும்.

याज्ञवल्क्यः – 'ब्राह्मे मुहूर्ते उत्थाय चिन्तयेदात्मनो हितम्। धर्मार्थकामान् स्वे काले यथाशक्ति न हापये' दिति ॥ ब्राह्मे मुहूर्ते = पश्चिमेऽर्धप्रहरे प्रबुद्धः आत्मनो हितं कृतं करिष्यमाणञ्च वेदार्थरूपं चिन्तयेत्। ततो धर्मार्थकामान् स्वोचिते काले यथा सम्भवं सेवेतेत्यर्थः' इति विज्ञानेश्वरः ॥

**யாக்ஞவல்க்யர்** - ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் எழுந்து தனக்கு ஹிதமான கார்யத்தைச் சிந்திக்க வேண்டும். தர்மம், அர்த்தம், காமம் இவைகளை அவைகளுக்கு உரித்தான

காலத்தில் தன் சக்திக்குத் தகுந்தவாறு விடாமல் அனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹமுஹூர்த்ததில் - இராத்திரியின் கடைசி யாமத்தில் பின்பாகத்தில் விழித்தவனாய், தனக்கு ஹிதத்தை (முன் செய்ததையும் இனிச் செய்ய வேண்டியதையும்) வேதார்த்த ரூபமாயுள்ளதைச் சிந்திக்க வேண்டும். பிறகு தர்ம அர்த்த காமங்களை அதற்கு உசிதமான காலத்தில் யதாசக்தி ஸேவிக்க வேண்டும் என்று பொருள் என்கிறார் விக்ஞாநேச்வரர்.

माधवीये पराशरोऽपि – 'सूर्योदयात् प्रागर्धप्रहरे द्वौ मुहूर्तौ। तत्राद्यो ब्राह्मः। द्वितीयो रौद्र इति। स्मृत्यर्थसारेऽपि – 'प्रभात उत्थायेष्टं दैवतं मनसा नत्वा तदहः कृत्यं स्मरे' दिति ॥ स्मृतिभास्करे – 'रात्रेस्तु पश्चिमे यामे मुहूर्तो ब्राह्म उच्यते' सति ॥ शौनकः - 'ब्राह्मे मुहूर्त उत्थाय चिन्तयेदात्मनो हितम्। गुरुं विष्णुं नमस्कृत्य मातापित्रोस्तथैव चेति ॥

மாதவீயவ்யாக்யானத்தில் பராசரர் - ஸூர்யோதயத்திற்கு முன் கடைசி யாமத்தின் பாதியில் இரண்டு முஹூர்த்தங்களில் முதலாவது முஹூர்த்தம் ப்ராம்ஹம், இரண்டாவது முஹூர்த்தம் ரௌத்ரம் எனப்படுகிறது. ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலும்:- விடியற்காலத்தில் எழுந்து, இஷ்ட தெய்வத்தை மனத்தால் வணங்கி, வரும் பகலில் செய்ய வேண்டிய கார்யத்தைச் சிந்திக்க வேண்டும். ஸ்ம்ருதிபாஸ்கரத்தில்:- இராத்திரியின் கடைசி யாமத்தில் உள்ள ஒரு முஹூர்த்தம் ப்ராம்ஹமென்று சொல்லப்படுகிறது. சௌனகர்:- ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் எழுந்து குரு, விஷ்ணு, மாதாபிதாக்கள் இவர்களை நமஸ்கரித்துத் தனக்கு ஹிதமான கார்யத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

विष्णुपुराणे – 'ब्राह्मे मुहूर्त उत्थाय मनसा मतिमान् नृप। विबुद्धश्चिन्तयेद्धर्ममर्थाश्चाप्यविरोधिनः ॥ अपीडया तयोः काममुभयोः परिचिन्तयेदिति ॥ स्मृत्यन्तरे–'षोढा विभज्य रजनीं चरमांशे

प्रबोधितः । पत्न्या सह हरिं ध्यात्वा धर्ममर्थञ्च चिन्तयेदिति स्मृतिरत्नावल्याम् – 'गृहमेधिनि यत् प्रोक्तं स्वर्गभावनमुत्तमम् । ब्राह्मे मुहूर्त उत्थाय सर्वं सम्यग्विचारयेत् ।। ब्राह्मे मुहूर्ते वेदानां पितॄणाञ्च समागमः । जागरस्तत्र कर्तव्यः पितृसंमाननं हि तत् ।। य इच्छेच्छाश्वतीं सिद्धिं यमस्यादर्शनं तथा । सततं तेन कर्तव्यो ब्राह्मे काले प्रजागरः ।। ब्राह्मे मुहूर्ते संवेतां शयनं यत्र दम्पती । श्मशान तुल्यं तद्वेश्म पितृभिः परिवर्ज्यते ।। प्रत्यूषकाले निद्राञ्च कुरुते सर्वदा तु यः । अशुचि तं विजानीयादनर्हं सर्वकर्मसु ।। ब्राह्मे मुहूर्ते या निद्रा सा पुण्यक्षयकारिणी ।। तां करोति तु यो मोहात् पादकृच्छ्रेण शुध्यतीति ।।

**விஷ்ணுபுராணத்தில்:-** *ஓ அரசனே! நல்ல புத்தியுள்ளவன் ப்ராம்ஹ முஹுர்த்தத்தில் எழுந்து விழித்துக் கொண்டு, தர்மத்தையும், அதற்கு விரோதமில்லாத அர்த்தத்தையும் அவ்விரண்டிற்கும் விரோதமில்லாத காமத்தையும் மனதால் சிந்திக்க வேண்டும்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *இராத்திரியை ஆறாகப் பிரித்து, கடைசிப் பாகத்தில் விழித்துக் கொண்டு, பத்னியுடன் 'பத்னியாகிய லக்ஷ்மியுடன் கூடிய ஹரியை விஷ்ணுவை த்யானித்து' தர்மம் அர்த்தம் இவைகளையும் சிந்திக்க வேண்டும்.* **ஸ்ம்ருதிரத்னவளியில்:-** *க்ருஹஸ்தன் விஷயத்தில் ஸ்வர்க்க பிராப்திகரமாய்ச் சிறந்த கர்மம் எதுசொல்லப்பட்டுள்ளதோ அதை முழுவதும், ப்ராம்ஹ முஹுர்த்தத்தில் எழுந்து நன்றாய்ச் சிந்திக்க வேண்டும். ப்ராம்ஹ முஹுர்த்தத்தில் தேவர்களும், பித்ருக்களும் சேர்ந்து வருகிறார்கள். ஆகையால் அப்பொழுது விழித்துக் கொள்ள வேண்டும். அது பித்ருக்களையும் தேவர்களையும் மரியாதை செய்வதாகும். எவன் மோக்ஷத்தையும், யமனைப் பாராமலிருப்பதையும் வேண்டுகிறானோ, அவன் பிரதிதினமும் ப்ராம்ஹ முஹுர்த்தத்தில் விழித்திருக்க வேண்டும். எந்த க்ருஹத்தில் தம்பதிகள் ப்ராம்ஹ முஹுர்த்தத்தில் படுக்கையிலிருக்கின்றார்களோ, அந்த*

க்ருஹத்தைப் பித்ருக்கள் ச்மசானத்திற்குச் சமமாய்த் தள்ளிவிடுகிறார்கள். எவன் எப்பொழுதும் விடியற்காலத்தில் நித்திரை செய்கிறானோ, அவனை அசுத்தனாகவும், ஸகலகர்மங்களிலும் தகுதியற்றவனாகவும் அறிய வேண்டும். ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் செய்யப்படும் நித்திரை புண்யத்தை நாசப்படுத்துவதாகும். அறியாமையால் அக்காலத்தில் நித்திரை செய்பவன் பிராஜாபத்யக்ருச்ரத்தின் நாலிலொரு பாகமாகிய பாதக்ருச்ரம் அனுஷ்டித்தால் சுத்தனாகிறான்.

बृहन्मनुः – चत्वारीमानि कर्माणि सन्ध्यायां परिवर्जयेत्। आहारं मैथुनं निद्रां स्वाध्यायश्च तथैव च ।। आहाराज्जायते व्याधिः गर्भवेधश्च मैथुनात्। निद्रातो जायतेऽलक्ष्मीः स्वाध्यायादायुषः क्षय इति ।। मनुरपि - तश्चेदभ्युदियात्सूर्यश्शयानं कामकारतः । निम्रोचे द्वाऽभ्यनुज्ञानाज्जपन्नुपवसेद्दिनम्।। सूर्येण ह्यभिनिर्मुक्तः शयानोऽभ्यदितश्च यः । प्रायश्चित्तमकुर्वाणो युक्तः स्यान्महतैनसेति ।। तस्मिन् यस्मिन् कस्मिंश्चिदाश्रमिणि शयाने सति सूर्योऽभिनिम्रोचेत् - अस्तमियात्। अभ्युनुज्ञानात् - ज्ञात्वा उपेक्षणात्। एवं वचना दशक्त्यज्ञानादिषु प्रायश्चित्ताभावः सूचितः, अन्यथा तु प्रायश्चित्ताकरणे महान् प्रत्यवाय इत्यर्थः ।।

**ப்ரஹன்மனு** - ஆஹாரம், ஸ்த்ரீஸங்கம், தூங்குதல், அத்யயனம் (வேதமோதல்) இந்நான்கு கார்யங்களையும் ஸந்த்யாகாலத்தில் வர்ஜிக்க வேண்டும். அக்காலத்தில் சாப்பிடுவதால் வ்யாதியும், ஸ்த்ரீஸங்கத்தால் கர்ப்ப நாசமும், நித்திரையினால் மூதேவியும், அத்யயனத்தால் ஆயுளின் நாசமும் உண்டாகிறது. **மனுவும்:**- எந்த ஆச்ரமியானாலும் அறிந்தே தூங்கும் பொழுது ஸூர்யன் உதிக்கின்றானோ, அல்லது அஸ்தமிக்கின்றானோ அவன் பகல் முழுவதும் காயத்ரியை ஜபிப்பவனாய் உபவாஸமிருக்க வேண்டும். ஸூர்யாஸ்தமயகாலத்தில்

தூங்கும் அபிநிம்ருக்தனும், உதயகாலத்தில் தூங்கும் அப்யுதிதன் என்பவனும் முன் சொல்லிய பிராயச்சித்தம் செய்யாவிடில் மஹாபாபமுடையவனுவான். இது எல்லா ஆச்ரமிகளுக்கும் ஸமம். மனுவசனத்தில் 'காமகாரத:' அப்யனுஜ்ஞாநாத்' என்றிருப்பதால் அசக்தி, அறிவின்மை முதலிய காரணங்களாலேற்படும் விஷயத்தில் பிராயச்சித்தமில்லையென்து ஸூசிப்பிக்கப்படுகிறது. சக்தியுள்ளவனுக்கும், ஜ்ஞானமுள்ளவனுக்கும் பிராயச்சித்தம் செய்துகொள்ளாவிடில் மஹாதோஷம் என்பது பொருள்.

आपस्तम्बः – 'स्वपन्नभिनिम्रुक्तोऽनाश्वान्वाग्यतो रात्रिमासीत श्वोभूत उदकमुपस्पृश्य वाचं विसृजेत् । स्वपन्नभ्युदितोऽनाश्वान्वाग्यतोऽहस्तिष्ठेत् । आतमितोः प्राणमायच्छेदित्येक इति ।। 'सुप्ते यस्मिन्नस्तमेति सुप्ते यस्मिन्नुदेति च । अंशुमानभिनिम्रुक्ताभ्युदितौ तौ यथाक्रमम् ।। स्वपन्नभिनिम्रुक्तः अनाश्वान् - अभुञ्जानः, वाग्यतः तूष्णीं भूतो रात्रिं सर्वामासीत । न शयीत। अथापरेद्युः प्रातः स्नात्वा वाचं विसृजेत् ।। अयमस्य निर्वेशः ।। आतमितोः - यावदङ्गानां ग्लानिर्भवति, तावत् प्राणायामं कुर्यादित्येके मन्यन्ते इत्यर्थः ।। शक्त्यपेक्षो विकल्पः ।।

ஆபஸ்தம்பர் - ஸூர்யாஸ்தமயகாலத்தில் நித்திரை செய்பவன் 'அபிநிம்ருக்தன்' எனப்படுவான். அவன் இராத்திரி முழுவதும் உபவாஸத்துடன் மௌனியாய் உட்கார்ந்திருக்க வேண்டும், படுக்கக் கூடாது. மறுநாள் காலையிலும் ஸ்நானம் செய்த பிறகு பேசவேண்டும். இது பிராயச்சித்தம். ஸூர்யோதயகாலத்தில் நித்திரை செய்பவன் 'அப்யுதிதன்' எனப்படுவான். அவன் அன்று பகல் முழுவதும் உபவாஸத்துடன் மௌனியாய் நின்றுகொண்டிருக்க வேண்டும். 'அங்கங்களுக்கெல்லாம் சோர்வு உண்டாகும் வரை பிராணுயாமம் செய்ய வேண்டும் எனச் சிலர் சொல்லுகின்றனர். இந்த இரண்டு பிராயச்சித்தங்களுள் ஒன்றை யனுஷ்டிக்கலாம் என்ற

விகல்பம் சக்தியை அனுஸரித்துச் சொல்லப் பட்டிருக்கிறது.

विष्णुः – उत्थायोत्थाय बोद्धव्यं किमद्य सुकृतं कृतम्। दत्तं वा दापितं वाऽपि वाक्सत्या वाऽपि भाषिता ।। उत्थायोत्थाय बोद्धव्यं महद्भयमुपस्थितम्। मरण व्याधिशोकानां किमद्य निपतिष्यतीति ।। व्यासः – 'किन्नु मे स्यादिदं कृत्वा किन्नु मे स्यादकुर्वतः। इति सञ्चिन्त्य कार्याणि धीरः कुर्वीत वा न वेति ।। स्मृतिप्रदीपिकायाम् – 'यस्यां रात्र्यां व्यतीतायां न किंचिच्छुभमाचरेत्। तमेव वन्ध्यां दिवसमिति विद्याद्विचक्षण' इति ।।

விஷ்ணு:- ஒவ்வொரு நாளும் எழுந்தெழுந்து, சென்ற தினத்தில் என்ன நற்கார்யம் செய்தேன்? என்ன தானம் செய்தேன்? கொடுக்கச் செய்தேன்? என்ன உண்மையான வார்த்தையைப் பேசினேன் என்று சிந்திக்க வேண்டும். எழுந்தெழுந்து மரணம், வியாதி, துக்கம் இவைகளுள் எந்த மஹாபயம் இப்பொழுது ஸமீபித்து வந்துவிடுமோ என்று சிந்திக்க வேண்டும். வ்யாஸர்:- புத்தியுள்ளவன் இக்கார்யத்தைச் செய்தால் என்ன பயனுண்டாகும், இக்கார்யத்தைச் செய்யாவிடில் என்ன கெடுதியுண்டாகு மென்று ஆலோசித்துப் பலனுக்குத் தகுந்த படி கார்யங்களைச் செய்யவேண்டும், செய்யாமலும் இருக்க வேண்டும். ஸ்ம்ருதிப்ரதீபிகையில்:- நற்கார்யமொன்றும் செய்யாமல் எந்தத் தினம் சென்றதோ அந்தத் தினத்தை வீணனதென்று அறியவேண்டும்.

## प्रबोधानन्तरजप्यानि ।।

तत्र जप्यान्याह दक्षः – 'ब्रह्मा मुरारिस्त्रिपुरान्तकारिर्भानुश्शशी भूमिसुतो बुधश्च। गुरुश्च शुक्रश्शनिराहुकेतवः कुर्वन्तु सर्वे मम सुप्रभातम्। भृगुर्वसिष्ठः क्रतुरङ्गिराश्च मनुः पुलस्त्यः पुलहश्च गौतमः। रैभ्यो मरीचिश्च्यवनोऽथ दक्षः कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ।। सनत्कुमारश्च

सनन्दनश्च सनातनोऽप्यासुरिसिंहलौ च । सप्त स्वराः सप्त रसातलानि कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ।। सप्तार्णवाः सप्त कुलाचलाश्च सप्तर्षयो द्वीपवनानि सप्त । भूरादिकूर्मो भुवनानि सप्त कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् । पृथ्वी सगन्धा सरसास्तथाऽऽपः स्पर्शी च वायुर्ज्वलितश्च तेजः । नभः सशब्दं महता सहैव कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ।। इत्थं प्रभाते परमं पवित्रं पठेत् स्मरेद्वा शृणुयाच्च तद्वत् । दुस्स्वप्ननाशस्त्विह सुप्रभातं भवेच्च नित्यं भगवत्प्रसादात्' इति ।।

**விழித்த பிறகு ஜபிக்கவேண்டிய மந்திரங்கள்**

விடியற்காலத்தில் ஜபிக்க வேண்டியவைகளைச் சொல்லுகிறார் தக்ஷர்:- ப்ரம்மா, விஷ்ணு, சிவன், ஸூர்யன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்ரன், சனி, ராகு, கேது இவர்கள் எனக்குச் சுபமாக விடியற்காலத்தைச் செய்யவேண்டும். பிருகு, வஸிஷ்டர், கிரது, அங்கிரஸ், மனு, புலஸ்த்யர், புலஹர், கௌதமர், ரைப்யர், மரீசி, ச்யவனர், தக்ஷர் இவர்கள் எனக்குச் சுபமான விடியற்காலத்தை செய்ய வேண்டும். ஸனத்குமாரர், ஸநந்தனர், ஸநாதனர், ஆஸுரி, ஸிம்ஹளர், ஏழு ஸ்வரங்கள் ஏழு கீழுலகங்கள் இவர்களும் எனக்குச் சுபமான விடியற்காலத்தைச் செய்ய வேண்டும். 7-ஸமுத்ரங்கள், 7-குலபர்வதங்கள், 7-ருஷிகள், 7-தீவுகள், 7-வனங்கள், பூலோகம், ஆதிகூர்மம், 7-மேலுலகங்கள், இவைகளும் எனக்குச் சுபமான விடியற்காலத்தைச் செய்ய வேண்டும். கந்தகுணத்துடன் கூடிய பூமியும், ரஸத்துடன் கூடிய ஜலமும், ஸ்பர்சத்துடன் கூடிய வாயுவும். உருவத்துடன் கூடிய தேஜஸ்ஸும், சப்தத்துடன் கூடிய ஆகாசமும், மஹத்தத்வத்துடன் கூடி எனக்குச் சுபமான விடியற்காலத்தைச் செய்யவேண்டும். இவ்விதம் மஹாபரிசுத்தமான இந்த ஸ்தோத்ரத்தைக் காலையில் படித்தாலும், ஸ்மரித்தாலும், கேட்டாலும் துஷ்ட ஸ்வப்னபலன் நசிக்கும். நல்ல விடியற்காலமும், பகவத் ப்ரஸாதத்தால் என்றும் உண்டாகும்.

स्मृतिरत्ने – 'महाभारतमाख्यानं क्षितिं गाञ्च सरस्वतीम् । ब्राह्मणान् केशवञ्चैव प्रातरुत्थाय कीर्तयेत् ।। ब्राह्मणं शङ्करं विष्णुं यमं रामं दनुं बलिम् ।। सप्तैतान् संस्मरेन्नित्यं महापातकनाशनम् ।। पुण्यश्लोको नलो राजा पुण्यश्लोको युधिष्ठिरः ।। पुण्यश्लोका च वैदेही पुण्यश्लोको जनार्दनः ।। कार्कोटकस्य नागस्य दमयन्त्या नलस्य च । ऋतुपर्णस्य राजर्षेः कीर्तनं कलिनाशनम्' इति ।। शाण्डिल्यः – 'उच्चैस्स्वरेण यः प्रातः स्तोतु मिच्छदनन्यधीः । वासुदेवादिदेवानां नामसङ्कीर्तनं चरेदिति ।।

ஸ்ம்ருதிரத்னத்தில் - மஹாபாரதத்தையும், பூமியையும், பசுவையும், ஸரஸ்வதியையும், ப்ராம்ஹணர்களேயும், கேசவனேயும் விடியற்காலத்தி லெழுந்து உச்சரிக்க வேண்டும். ப்ரம்மா, சங்கரன், விஷ்ணு, யமன், ராமன், தனு, பலி இந்த ஏழு பேர்களேயும் ப்ரதிதினமும் ஸ்மரிக்க வேண்டும். மஹாபாதகங்களும் நசிக்கும். நளனெனும் அரசனும், யுதிஷ்டிரனும், ஸீதா தேவியும், ஜனார்த்தனனும் புண்யச்லோகர்களெனப்படுகின்றனர். (இவர்களின் கீர்த்தியைக் கேட்பதும் புண்யப்ரதமென்பதாம்) கார்க்கோடகனெனும் நாகன், தமயந்தீ, நளன், ருதுபர்ணனெனும் ராஜரிஷி இவர்களின் நாமத்தை உச்சரிப்பது கலியைப் போக்குவதாகும், (கலியென்பது பாபத்தையும், சண்டையையும், கலியுகத்தையும், சொல்லும்.) சாண்டில்யர்:- எவன் விடியற்காலத்தில் ஸ்துதி செய்ய விரும்புகின்றனே அவன் உரத்த குரலுடன் வாஸுதேவன் முதலான தேவர்களின் நாமங்களே உச்சரிக்க வேண்டும்.

## प्रातर्दर्शनीयान्यदर्शनीयानि च ।

अथ दर्शनीयान्यदर्शनीयानि च दर्शयति कात्यायनः - श्रोत्रियं सुभगं गाञ्च ह्यग्निमग्निचितं तथा । प्रातरुत्थाय यः पश्येदापद्भ्यः स प्रमुच्यते ।। पापिष्ठं दुर्भगं मर्त्यं नग्नमुत्कृत्तनासिकम् । प्रातरुत्थाय यत्

पश्येत् तत् कलेरुपलक्षणम्' इति ।। नग्नपदं बालव्यतिरिक्तविषयम् ।। अथ वा – छन्दांसि - ग्राः, न विद्यन्ते ग्राः यस्य सः 'नग्न' इत्युच्यते ।।

**விடியற்காலத்தில் பார்க்கத்தக்கவையும் பார்க்கத்தக்காதவையும்**

*பார்க்கக்கூடியவைகளையும், பார்க்கக்கூடாதவைகளையும் தெரிவிக்கின்றார். காத்யாயனர்:- ச்ரோத்ரியன், அழகுடையவன், பசு, அக்நி, சயநம் செய்தவன் இவர்களை விடியற்காலத்தில் எழுந்து பார்ப்பவன் ஆபத்துக்களினின்றும் விடுபடுவான். பாவி, குரூபமுள்ளவன், நக்னன், மூக்கறுப்பட்டவன் இவர்களைக் காலையிலெழுந்தவுடன் பார்ப்பது கலஹத்திற்கு ஸூசகமாகும். நக்னன் என்ற பதம் வஸ்த்ரமில்லாதவனைச் சொல்லுகின்றது. ஆனால் குழந்தைகளைத் தவிர்த்து மற்றவர் விஷயமாய்ச் சொல்லவேண்டும். அல்லது வேதாத்யயனம் செய்யாதவனென்றும் நக்னபதத்திற்குப் பொருளுண்டு.*

## बहिर्विहारः शौचं च

तत्र व्यासः – 'नक्षत्रज्योतिरारभ्य त्वासूर्योदयदर्शनात्। प्रातः सन्ध्येति तां प्राहुः श्रुतयो मुनिसत्तमाः ।। ततः पूर्वं समुत्थाय प्राचीमेवोपनिष्क्रमेत्। उदीचीं प्रागुदीचीं वा शौचाचारक्षमां दिशम् ।। यत्रोदकं प्रभूतन्तु तद्गत्वा शौचमाचरेत्' इति ।। माधवीये – 'नैर्ऋत्यामिषुविक्षेपमतीत्याभ्यधिकं भुवः। दूरादावसथान्मूत्रं पुरीषञ्च समाचरे' दिति ।। आपस्तम्बः – 'आराच्चावसथान्मूत्रपुरीषे कुर्याद् दक्षिणां दिशं दक्षिणापरां वेति ।। गत्वेति शेषः। आरात् - दूरादित्यर्थः। व्यासः – 'प्रतिश्रयाद्दक्षिणपश्चिमेन क्षिप्रं गत्वा क्षेपमात्रं शरस्य। कुर्यात्पुरीषं स्वशिरोऽवकुण्ठ्य न च स्पृशेज्जातु शिरः करेण' इति ।। प्रतिश्रयः - गृहम् ।। मनुः – 'दूरादावसथान्मूत्रं दूरात् पादावसेचनम्। उच्छिष्टान्नं निषेकञ्च दूरादेव समाचरे' दिति ।। एतद्दिवाविषयम्।

अस्तमिते च बहिर्ग्रामादारादावसथाद्वा मूत्रपुरीषयोः कर्म वर्जयेत्। 'रात्रौ मूत्रपुरीषे तु गृहाभ्याशे समाचरेत्' इति स्मरणात्॥

### வெளியில் ஸஞ்சாரம் -சௌசம்

**வ்யாஸர்:**- ஓ முனிவர்களே! நக்ஷத்ரங்களின் ஒளி இருக்கும் காலம் முதல் ஸூர்யோதயம் வரையிலுள்ள காலத்தைப் ப்ராத்ஸ்ஸந்த்யா என்று வேதங்கள் சொல்லுகின்றன. அதற்கு முன்பே எழுந்து கிழக்கு, வடக்கு, வடகிழக்கு இவைகளுள் சௌசாசாரத்திற்கு யோக்யமான திசையை நோக்கிச் செல்லவேண்டும். எந்த இடத்தில் ஜலம் அதிகமாயுள்ளதோ அந்த இடம் சென்று சௌசம் செய்து கொள்ளவேண்டும். **மாதவீயத்தில்:**- தென்மேற்குத் திக்கில் அம்புவிழும் தூரம், அல்லது அதிகமான ப்ரதேசத்தைக் கடந்துசென்று வீட்டிற்குத் தூரமான ஸ்தலத்தில் மூத்ரம், மலம் இவைகளை விடவேண்டும். **ஆபஸ்தம்பர்:**- தெற்கு, அல்லது தென்மேற்குத் திக்கில் சென்று, வீட்டிற்கு வெகுதூரத்தில் மல மூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டும். **வ்யாஸர்:**- வீட்டிற்குத் தென்மேற்குத் திக்கில் அம்பு விழும் தூரத்தளவு சென்று தலையை வஸ்த்ரத்தால் மறைத்துக் கொண்டு, மலவிஸர்ஜனம் செய்ய வேண்டும். தலையைக் கையினால் தொடக்கூடாது. **மனு:**- மூத்ரம், கால் கழுவிய ஜலம் எச்சிலன்னம், ரேதஸ் இவைகளை வீட்டிற்கு வெளியில் தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். இது பகல் விஷயம். ஸூர்யாஸ்தமயத்திற்குப் பின் க்ராமத்திற்கோ, வீட்டிற்கோ வெகுதூரத்தில் மலமூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டுமென்பதில்லை. ஸமீபத்திலும் செய்யலாம். ''ராத்திரியில் வீட்டிற்கு ஸமீபத்திலும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யலாம்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

अङ्गिराः – 'उत्थाय पश्चिमे यामे रात्रेराचम्य चोदकम्। अन्तर्धाय तृणैर्भूमिं शिरः प्रावृत्य वाससा। वाचं नियम्य यत्नेन ष्ठीवनोच्छ्वासवर्जितः। कुर्यान्मूत्रपुरीषे तु शुचौ देशे समाहित इति। अनेन यत्र स्वापादिना

निमित्तेनाचमनं प्राप्तम्, तत्राचम्यैव मूत्रपुरीषे कुर्यादित्युक्तं भवति ।। तृणानि - अयज्ञियानि ।। तथा च कात्यायनः – 'शिरः प्रावृत्य कुर्वीत शकृन्मूत्रविसर्जनम् । अयज्ञियैरनार्द्रैश्च तृणैः सञ्छाद्य मेदिनीमिति ।। तृणग्रहणं काष्ठादेरपि प्रदर्शनार्थम् ।। अत एव मनुः - 'तिरस्कृत्योच्चरेत्काष्ठं लोष्टं वर्णं तृणानि वा । नियम्य प्रयतो वाचं संवीताङ्गोऽवकुण्ठित' इति । तिरस्करणम् - अन्तर्धानम् । उच्चारः - पुरीषोत्सर्गः । मूत्रस्याप्युपलक्षणमेतत्, 'अयज्ञियैरनार्द्रैश्च तृणैः सञ्छाद्य मेदिनीम् । घ्राणास्ये वाससाऽऽवेष्ट्य मलमूत्रं त्यजेद्बुध इति स्मरणात् ।। संवीताङ्गः - आच्छादितदेहः । अवकुण्ठितः - प्रावृतशिराः ।।

*அங்கிரஸ்:- ராத்திரியின் கடைசி யாமத்தில் எழுந்து கவனமுடையவனாய் ஆசமனம் செய்து, புற்களால் பூமியை மறைத்து, வஸ்த்ரத்தால் தலையை மறைத்து, மௌனத்துடன், துப்புதல், பெருமூச்சுவிடுதல் இவைகளில்லாமல் சுத்தமான இடத்தில் மலமூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டும். இங்கு ஆசமனம் செய்து என்றிருப்பதால் நித்திரையைப்போல் வேறு ஆசமன நிமித்தம் நேர்ந்தால் ஆசமனம் செய்த பிறகே மலமூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டு மென்று சொல்லியதா யாகிறது. பூமியை மறைக்கும் புற்கள் யாகத்திற்கு அர்ஹமில்லாதவைகளாயிருக்க வேண்டும். அவ்விதமே விதிக்கின்றார் காத்யாயனர்:- தலையை மறைத்துக் கொண்டு, யாகத்திற்கு யோக்யமல்லாததும், உலர்ந்ததுமான த்ருணங்களால் பூமியை மறைத்து, மலமூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டும். இங்கு திருணம் (புல்) என்னும் பதம் கட்டை முதலியவையும் காட்டுவதற்காகும். ஆகையாலேதான், மனு:- சுத்தனாயும், மௌனியாயும், அங்கங்களையும் தலையையும் வஸ்த்ரத்தால் மறைத்துக் கொண்டு, கட்டை, மண் கட்டி, இலை, புல் இவைகளிலொன்றில் பூமியை மறைத்து மலவிஸர்ஜனம் செய்யவேண்டும். இங்குள்ள 'உச்சரேத்' என்ற பதம் மூத்ர*

விஸர்ஜனத்தையும் சொல்லும், 'யக்ஞார்ஹமல்லாததும், உலர்ந்ததுமான புல்களால் பூமியை மறைத்து, மூக்கையும் வாயையும் வஸ்த்ரத்தால் மறைத்து, மலமூத்ரங்களை விடவேண்டும்' என்ற ஸ்ம்ருதியிருப்பதால்.

अत्र विष्णुः – 'अनार्द्रेण स्ववाससा वेष्टयित्वा मूर्धानं ग्रीवायामवसज्योच्चरेदिति ॥ हारीतः – 'अप्रावृतशिरा यस्तु विण्मूत्रं सृजति द्विजः । तच्छिरश्शतधा भूया दिति देवाश्शपन्ति तमिति ॥ बोधायनः – 'शुष्कं तृणमयाज्ञिकं काष्ठं लोष्टं वा तिरस्कृत्याहोरात्र-योरुदग्दक्षिणामुखः प्रावृत्य शिर उच्चरेन्मेहेद्वेति ॥

இங்கு விஷ்ணு:- ஈரமில்லாத தன் வஸ்த்ரத்தினால் தலையை மறைத்துக் கொண்டு உபவீதத்தைக் கழுத்தில் சேர்த்து மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். ஹாரீதர்:- ப்ராம்ஹணன் தலையை வஸ்த்ரத்தால் மறைத்துக் கொள்ளாமல் மலமூத்ர விஸர்ஜனம் செய்தால் அவன் தலை பல துண்டுகளாய்ப் போகவேண்டுமென்று தேவர்கள் அவனைச் சபிக்கின்றனர். போதாயனர்:- யாகார்ஹமல்லாத உலர்ந்த புல், கட்டை, மண்கட்டி இவைகளிலொன்றினால் பூமியை மறைத்து, தலையை மூடிக்கொண்டு பகலில் வடக்குமுகமாகவும், இரவில் தெற்கு முகமாகவும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும்.

मनुः – 'मूत्रोच्चारसमुत्सर्गं दिवा कुर्यादुदङ्मुखः । दक्षिणाभिमुखो रात्रौ सन्ध्ययोश्च यथा दिवा ॥ छायायामन्धकारे वा रात्रावहनि वा द्विजः । यथासुखमुखः कुर्यात् प्राणबाधाभयेषु चेति ॥ 'छायायां मूत्रपुरीषयोः कर्म वर्जयेदिति स्मरणात्, अत्र छायाशब्देन अवर्जनीयो मेघपर्वतादिना महता व्यवधानेन सूर्यस्य तिरोभावो विवक्षितः । अन्धकारशब्देन रात्रौ ज्योतिषाम् ॥ यत्तु देवलेनोक्तम् – 'सदैवोदङ्मुखः प्रातस्सायाह्ने दक्षिणामुखः । विण्मूत्राणाचरेन्नित्यं सन्ध्यासु परिवर्जयेदिति, तत् निरुद्धेतरविषयं, 'नोपरुद्धः क्रियाः कुर्या' दिति स्मरणात् ॥

**மனு:-** பகலில் வடக்குமுகமாகவும், ராத்திரியில் தெற்கு முகமாகவும், இரண்டு ஸந்த்யாகாலங்களிலும் பகலில் போலவும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். நிழல், இருட்டு இவைகளிலும் ப்ராணபயம் வரக்கூடிய இடங்களிலும், பகல் ராத்திரியென்ற நியமமில்லாமல் இஷ்டப்படி இருந்து செய்யலாம். திக்குநியமமில்லை. 'நிழலில் மலமூத்ர விஸர்ஜனம் செய்யக்கூடா'தென்று ஸ்ம்ருதியிருப்பதால் இங்கு நிழல் என்ற பதத்தால், நம்மால் பரிஹரிக்க முடியாததாய் மேகம் பர்வதம் முதலியவைகளால் ஏற்படும் ஸூர்யனின் மறைவு சொல்லப்படுகிறது. அந்தகாரம் என்பதால் ராத்திரியில் நக்ஷத்ரங்களின் மறைவும் சொல்லப்படுகிறது. "எப்பொழுதுமே காலையில் வடக்கு முகமாகவும் மாலையில் தெற்கு முகமாகவும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். ஸந்த்யா காலங்களில் மலமூத்ர விஸர்ஜனம் செய்யக்கூடாது" என்று தேவலர் சொல்லியிருக்கிறாரெனில், அது அடக்கப்பட்ட மலமூத்ரங்களைத் தவிர்த்தவைகளின் விஷயம். 'மலமூத்ரங்களை அடக்கிக்கொண்டு, க்ரியைகளைச் செய்யக் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஆகையால் முனிவசன விரோதமில்லை.

स्मृतिसारे – 'आगम्य राक्षसीमाशां निवीती वाग्यतो दिवा । विण्मूत्रोत्सर्जनं कुर्यात् धृतशिश्न उदङ्मुखः ।। सन्ध्ययोश्च तथा रात्रौ दक्षिणाभिमुखो द्विज' इति ।। यत्तु – 'प्रत्युङ्मुखस्तु पूर्वाह्णेऽपराह्णे प्राङ्मुखस्तथा । उदङ्मुखस्तु मध्याह्ने निशायां दक्षिणामुख' इति यमवचनम्, तत् सूर्याभिमुख्यनिषेधपरमिति माधवीये ।। याज्ञवल्क्यः – 'दिवा सन्ध्यासु कर्णस्थब्रह्मसूत्र उदङ्मुखः । कुर्यान्मूत्रपुरीषे तु रात्रौ चेद्दक्षिणामुख' इति ।।

**ஸ்ம்ருதிஸாரத்தில்:-** நிருருதி திக்கிற்கென்று நிவீதியாயும், மௌனியாயும், சிச்னத்தைப் பிடித்தக்

கொண்டு பகலில் வடக்கு முகமாகவும், ஸந்த்யா காலத்திலும் ராத்திரியிலும் தெற்கு முகமாகவும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். முற்பகலில் மேற்கு முகமாயும், பிற்பகலில் கிழக்கு முகமாயும், நடுப்பகலில் வடக்கு முகமாயும், இரவில் கிழக்கு முகமாயும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டுமென்ற யமவசனம், ஸூர்யாபிமுகமாயிருந்து செய்வதை நிஷேதிப்பதில் தாத்பர்யமுள்ளது என்று மாதவீயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. **யாக்ஞவல்க்யர்:-** பகலிலும், ஸந்த்யா காலங்களிலும், காதில் பூணூலைத் தரித்து வடக்குமுகமாயும், ராத்திரியில் தெற்குமுகமாயும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும்.

आपस्तम्बः – प्राङ्मुखोऽन्नानि भुञ्जीत उच्चरेद्दक्षिणामुखः । उदङ्मुखो मूत्रं कुर्यात् प्रत्यक्पादावनेजनमिति ।। अत्र विकल्पो वेदितव्यः। अङ्गिराः – 'कृत्वा यज्ञोपवीतं तु पृष्ठतः कण्ठलम्बितम्। विण्मूत्रं तु प्रकुर्वीत यद्वा कर्णे समाहित इति ।। आपस्तम्बोऽपि – 'नोर्ध्वं नाधो न तिर्यक्च किञ्चिद्वीक्षेत बुद्धिमान् । नभोभूम्यन्तरं पश्येत् कृत्वा मूर्ध्न्युपवीतकमिति ।। स्मृत्यन्तरेऽपि – 'सूत्रं तु दक्षिणे कर्णे कृत्वा विण्मूत्रमुत्सृजेदिति ।।

**ஆபஸ்தம்பர்:-** கிழக்குமுகமாய்ப் போஜனம் செய்யவேண்டும். தெற்கு முகமாய் மலவிஸர்ஜனம் செய்யவேண்டும். வடக்குமுகமாய் மூத்ரவிஸர்ஜனம் செய்யவேண்டும். மேற்கு முகமாய்க் காலலம்பவேண்டும். இதில் விகல்பமுண்டு என்று அறியவேண்டும். **அங்கிரஸ்:-** பூணூலை நிவீதமாய்க் கழுத்திலிருந்து முதுகில் தொங்கும்படி செய்து, அல்லது காதில் தரித்து, மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். **ஆபஸ்தம்பரும்:-** புத்தியுள்ளவன் மேலேயும், கீழேயும், குறுக்கிலும் ஒன்றையும் பார்க்கக்கூடாது. ஆகாசம், பூமி இவைகளின் நடுவையே பார்க்கவேண்டும். பூணூலைத் தலையில்

தரிக்கவேண்டும். வேருருஸ்ம்ருதியில்:- உபவீதத்தை வலதுகாதில் தரித்துக் கொண்டு மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும்.

अङ्गिराः – 'यज्ञोपवीतं कर्णे च दक्षिणे तु निधाय च । कुर्यान्मूत्रपरीषे तु शुचौ देशे समाहितः' इति ।। दक्षिणकर्णनिधानमेकवस्त्रविषयम् ।। यदाह सुमन्तुः – 'यद्येकवस्त्रस्स्याद्विप्रः कर्णे कृत्वोपवीतकम् । मूत्रोत्सर्गं गृही कुर्यादिति साङ्ख्यायनोऽब्रवीदिति ।। साङ्ख्यायनगृह्येऽपि – 'यद्येकवस्त्रो यज्ञोपवीतं कर्णे कृत्वा मूत्रपुरीषोत्सर्गं कुर्यादिति ।। स्मृतिसारे – 'कृत्वाऽवकुण्ठनं चात्र उत्तरीयेण वाससा । पवित्रं दक्षिणे कर्णे कृत्वा विण्मूत्रमुत्सृजे' दिति ।। पवित्रं - यज्ञोपवीतम्।।

**அங்கிரஸ்:**- கவனமுள்ளவனாய், உபவீதத்தை வலது காதில் வைத்துக்கொண்டு, சுத்தமான இடத்தில் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். வலது காதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்பது ஒரே வஸ்த்ரம் தரித்திருப்பவனைப் பற்றியதாம். ஏனெனில், **ஸுமந்து** - 'க்ருஹஸ்தனான ப்ராம்ஹணன் ஒரே வஸ்த்ரமுடையவனாயிருந்தால் உபவீதத்தை காதில் வைத்துக்கொண்டு மூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டுமென்று ஸாங்க்யாயனர் சொன்னார்' என்று சொல்வதால். **ஸாங்க்யாயன க்ருஹ்யத்திலும்:**- ஒரே வஸ்த்ரத்துடனிருப்பானாகில் யக்ஞோபவீதத்தை காதில் வைத்துக் கொண்டு மலமூத்ரவிஸர்ஜனம் செய்யவேண்டும். **ஸ்ம்ருதி ஸாரத்தில்:**- உத்தரீய வஸ்த்ரத்தால் போற்றிக் கொண்டு, பவித்ரத்தை வலது காதில் வைத்துக்கொண்டு, மலமூத்ரவிஸர்ஜனம் செய்யவேண்டும். இங்கு பவித்ரம் பூணூல்.

तथा च भरद्वाजः – 'चण्डालैरन्त्यजैरुक्तौ मलमूत्रविमोचने । दक्षिणश्रवणे विप्रो ब्रह्मसूत्रं विनिक्षिपेदति ।। मूत्रपुरीषाधिकारे शङ्खः – 'नानुदको नामृत्तिको नापरिवेष्टितशिरा' इति ।। स्मृतिदीपिकायाम् –

'उद्धृतोदकमादाय मृत्तिकां चैव वाग्यतः । उदङ्मुखो दिवा कुर्याद्रात्रौ चेद्दक्षिणामुखः ।। त्यागान्मूत्रपुरीषस्य पूर्वं गृह्णीत मृत्तिकाम् । पश्चाद्गृह्णाति यो विप्रः सचेलो जलमाविशेदिति ।। पैठीनसिः – 'अनुदकमूत्र-पुरीषकरणे सचेलस्नानमिति ।। स एव – 'उद्धृत्यैव जलं पूर्वं कुर्यान्मूत्रपुरीषके ।। गृहीतोदकपात्रश्चेत्कुर्यान्मूत्रपुरीषके । तत्तोयं मूत्रतुल्यं स्यात् पीत्वा चान्द्रायणश्चरेत् ।। करस्थोदकपात्रश्चेत् कुर्यान्मूत्र पुरीषके । तज्जलं मूत्रसदृशं सुरापानेन तत्सममिति ।।

**அப்படியே பரத்வாஜர்:-** சண்டாளருடனும், அந்த்யஜருடனும் பேசும்பொழுதும், மலமூத்ர விஸர்ஜன காலத்திலும் ப்ராம்ஹணன் பூணூலை வலது காதில் வைத்துக்கொள்ளவேண்டும். **மலமூத்ரத்யாக ப்ரகரணத்தில் சங்கர்:-** சௌசத்திற்குரிய ஜலம், மண் இவைகளை எடுத்து வைத்துக் கொள்ளாமலும் தலையில் வஸ்த்ரத்தைச் சுற்றிக் கொள்ளாமலும் மலமூத்ரங்களை விடக்கூடாது. **ஸ்ம்ருதிதீபிகையில்:-** ஜலத்தையும், ம்ருத்திகையையும் எடுத்துக் வைத்துவிட்டு, மௌனியாய், பகலில் வடக்குமுகமாகவும், இரவில் தெற்குமுகமாகவும் மலமூத்ர விஸர்கம் செய்யவேண்டும். ப்ராம்ஹணன் மலமூத்ர விஸர்கத்திற்கு முந்தியே மண்ணை எடுத்து வைக்க வேண்டும். பிந்தி எடுத்தால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். சுட்டிய வஸ்த்ரத்துடனே ஸ்நானம் செய்வது ஸசேலஸ்நானம். **பைடீநஸி:-** ஜலத்தை எடுத்துக் கொள்ளாமல் மலமூத்ர விஸர்ஜனம் செய்தால் ஸசேலஸ்நானம் செய்யவேண்டும். **பைடீநஸியே:-** ஜலத்தை முந்தி எடுத்துக் கொண்ட பிறகே மூத்ர புரீஷவிஸர்கம் செய்யவேண்டும். ஜலபாத்ரத்தைத் தொட்டுக் கொண்டு விஸர்ஜனம் செய்தாலும் அந்த ஜலம் மூத்ரஸமமாகும். அதைக் குடிப்பது ஸுராபானஸம மாகும்.

भरद्वाजः – 'मलमूत्रं त्यजेद्यस्तु विस्मृत्यैवोपवीतधृत्। तत्सूत्रं तु परित्यज्य दध्यादन्यत्पुनर्नवमिति ।। अङ्गिराः – 'कृत्वा मूत्रं पुरीषं वा यदा नैवोदकं भवेत्। स्नात्वा लब्धोदकः पश्चात् सचेलं तु विशुध्यति। स्नानं कृत्वाऽऽर्द्रवासास्तु विण्मूत्रे कुरुते यदि। प्राणायामत्रयं कृत्वा पुनस्स्नानेन शुध्यति ।। तैलाभ्यङ्गे तथा वान्ते क्षुरकर्मणि मैथुने। अनाचम्योच्चरन् विप्रस्त्रिरात्रमशुचिर्भवेदिति ।।

**பரத்வாஜர்:**- *மறதியால் பூணூலை நிவீதம் செய்து கொள்ளாமல் உபவீதியாகவே மலமூத்ரத்யாகம் செய்தவன் அந்தப் பூணூலைப் விட்டுவிட்டுப் புதிதான பூணூலைத் தரித்துக் கொள்ள வேண்டும்.* **அங்கிரஸ்:**- *முதலில் ஜலமே கிடைக்காவிடில், மலமூத்ர விஸர்கம் செய்த பிறகு, ஜலம் கிடைத்தவிடத்தில் சௌசாதிகளைச் செய்துகொண்டு, ஸசேலஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான். ஸ்நானம் செய்த பிறகு ஈரவஸ்த்ரத்துடனேயே மலமூத்ர விஸர்கம் செய்தால், மூன்று ப்ராணாயாமங்கள் செய்து, மறுபடி ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான். எண்ணெய் தேய்த்துக் கொள்ளல், வாந்தி, க்ஷௌரம், ஸ்த்ரீஸங்கம் இவைகளில் அததற்குரிய சுத்தியைச் செய்து ஆசமனம் செய்யாமல் மூத்ரபுரீஷ விஸர்கம் செய்பவன் மூன்று நாள் அசுத்தனாகிறான்.*

आपस्तम्बः -'शिरः परिवेष्टनं प्रथमं निवीतं द्वितीयं दिशावलोकनं तृतीयमन्तर्द्धानं चतुर्थं मौनं पञ्चमं पुरीषं षष्ठं मृत्तिकाग्रहणं सप्तममुदकमष्टममिति। पुरीषकरणानन्तरं मृत्तिकोदकग्रहण मनुद्धृतविषयम् – 'सजलं भाजनं स्थाप्य मृत्तिकां च परीक्षिताम्। कुर्यान्मूत्रं पुरीषं च नान्यथा शुद्धिमाप्नुयादिति व्यासस्मरणात् ।। मनुः – न मूत्रं पथि कुर्वीत न भस्मनि न गोव्रजे। वाय्वग्निं विप्रमादित्यं अपः पश्यंस्तथैव गाम्। न कदाचन कुर्वीत विण्मूत्रस्य विसर्जनम्। न फालकृष्टे न जले न चित्यां न च पर्वते।। न जीर्णदेवायतने न वल्मीके कदाचन। न

ससत्वेषु गर्तेषु न गच्छन्नापि च स्थितः । न नदीतीरमासाद्य न च पर्वतमस्तके ।। प्रत्यग्निं प्रतिसूर्यं च प्रतिसोमोदकद्विजान् । प्रति गां प्रतिवातं च प्रज्ञा नश्यति मेहतः इति ।।

**ஆபஸ்தம்பர்:**- *தலையை வஸ்த்ரத்தால் சுற்றுவது முதலாவது, பூணூலை நிவீதம் செய்து கொள்வது இரண்டாவது, நான்கு திக்குகளையும் பார்ப்பது மூன்றுவது, புல் முதலியவற்றால் பூமியை மறைத்தல் நான்காவது, மௌனம் ஐந்தாவது, விஸர்ஜனம் ஆறுவது, மண்ணை எடுப்பது ஏழாவது, ஜலத்தை எடுப்பது எட்டாவது. இந்த வசனத்தில் மல விஸர்ஜனத்திற்குப் பிறகு மண் ஜலமிவைகளை க்ரஹிப்பதைச் சொல்லியிருப்பது பூமியிலேயே இருக்கும் ஜலத்தில் செய்யப்படும் சௌசத்தின் விஷயமாகும். ஏனெனில் ''ஜலத்துடனுள்ள பாத்ரத்தையும், சோதிக்கப்பட்ட மண்ணையும் வைத்துவிட்டு மலமூத்ர விஸர்கம் செய்யவேண்டும். வேறுவிதமானால் சுத்தனாவதில்லை'' என்று வ்யாஸர் சொல்லியிருப்பதால்.* **மனு:**- *வழியிலும், சாம்பலிலும், பசுக்கொட்டிலிலும், வாயு, அக்னி, ப்ராம்ஹணன், ஸூர்யன், ஜலம், பசு இவர்களைப் பார்த்துக் கொண்டும், கலப்பையால் உழுத பூமியிலும், ஜலத்திலும் ஆஹிதாக்னிகளின் செங்கற்களால் மந்த்ரத்துடன் கட்டப்படும் மேடையிலும் மலையிலும், ஜீர்ணமான தேவாலயத்திலும், புற்றிலும், ப்ராணிகள் வஸிக்கும் வளைகளிலும், நடந்து கொண்டும் நின்று கொண்டும், நதியின் கரையிலும், மலையின் உச்சியிலும், மலமூத்ரவிஸர்ஜனம் செய்யக்கூடாது. அக்னி, ஸூர்யன், சந்த்ரன், ஜலம், ப்ராம்ஹணன், பசு, காற்று இவர்களுக்கு எதிராயிருந்து கொண்டு மலமூத்ர விஸர்ஜனம் செய்பவனுக்கு புத்தி குறைந்துவிடும்.*

यमः – 'प्रत्यादित्यं न मेहेत न पश्येदात्मनश्शकृत् । दृष्ट्वा सूर्यं निरीक्षेत गामग्निं ब्राह्मणं तथेति ।। विष्णुः – 'न प्रत्यनिलानलेन्दुर्कस्त्रीगुरु

ब्राह्मणानिति ।। बोधायनः – 'फालकृष्टे जले चित्यां वल्मीके गिरिमस्तके । देवालये नदीतीरे दर्भपृष्ठे तु शाद्वले । छायायां वृक्षमूले वा विण्मूत्रे न त्यजेद्बुधः । नान्यचित्तश्चिरं तिष्ठेन्न स्पृशेत् पाणिना शिरः ।। न ब्रूयान्न दिशः पश्येद्विण्मूत्रोत्सर्जने बुध इति ।।

**யமன்**:- *ஸூர்யனுக்கு எதிராய் மலமூத்ர விஸர்ஜனம் செய்யக்கூடாது. தன்னுடைய மலத்தைப் பார்க்கக்கூடாது. பார்த்தால் ஸூர்யனைப் பார்க்க வேண்டும். அல்லது பசு, அக்னி, ப்ராம்ஹணன் இவர்களையாவது பார்க்க வேண்டும்.* **விஷ்ணு**:- *காற்று, அக்னி, சந்த்ரன், ஸூர்யன், ஸ்த்ரீ, குரு, ப்ராம்ஹணன், இவர்களுக்கு எதிராயிருந்து கொண்டு மலமூத்ர விஸர்கம் செய்யக்கூடாது.* **போதாயனர்**:- *கலப்பையாலுழுத ஸ்தலத்திலும், ஜலத்திலும், வேள்வி மேடையிலும், புற்றிலும் மலையினுச்சியிலும், தேவாலயத்திலும், நதியின் கரையிலும், தர்ப்பத்தின் மேலும், புல்லுள்ள தரையிலும், நிழலிலும், மரத்தினடியிலும் மலமூத்ர விஸர்ஜனம் கூடாது. மலமூத்ரவிஸர்ஜன காலத்தில் வேறு விஷயத்தில் கவனமாய் வெகுகாலமிருக்கக்கூடாது. கையால் தலையைத் தொடக்கூடாது பேசக்கூடாது. திக்குகளைப் பார்க்கக்கூடாது.*

पारिजाते – 'अग्नौ च तिष्ठन्वै रथ्यातीर्थे श्मशानके । अङ्गारे गोमये नद्यां यज्ञभूमिषु सर्वदा ।। बिले जले चितायां च वल्मीके गिरिमस्तके । देवालये नदीतीरे दर्भपुष्पकुशस्थले ।। सेव्यच्छायासु वृक्षेषु मार्गगोष्ठाम्बुभस्मसु । स्थानेष्वेतेषु वै कुर्यान्न तु मूत्रादि किञ्चन ।। तिष्ठेन्नातिचिरं तत्र नैव किञ्चिदुदीरयेत् इति ।। यमः – 'तुषाङ्गारक-पालानि देवतायतनानि च । राजमार्गश्मशानानि क्षेत्राणि च खलानि च ।। उपरुद्धो न सेवेत छायादृश्यं चतुष्पथम् । उदकं चोदपानं च पन्थानं च विवर्जयेत् ।। वृक्षमूलानि सर्वाणि चैत्यश्वभ्रबिलानि चेति ।। हारीतः

– 'चत्वरोपद्वारयोर्न मूत्रपुरीषे कुर्यान्न गोमये न गोष्ठे न तीर्थे न यज्ञभूमौ न यज्ञियानां वृक्षाणामधस्तादिति ।। उपद्वारं - द्वारसमीपम् ।।

**பாரிஜாதத்தில்:**- அக்னியிலும், நடந்துகொண்டும், நின்று கொண்டும், வீதியிலும், நதியின் துறையிலும், ச்மசானத்திலும், தணலிலும், சாணத்திலும், நதியிலும் யாக பூமியிலும், வளையிலும், ஜலத்திலும் மயான மேடையிலும், புற்றிலும், மலையினுச்சியிலும், தேவாலயத்திலும், நதிக்கரையிலும், தர்ப்பம், புஷ்பம் குசம் இவைகளுண்டாகுமிடங்களிலும், இளைப்பாறக்கூடிய நிழல்களிலும், மரங்களிலும், வழியிலும், பசுக்கொட்டிலிலும், ஜலத்திலும், சாம்பலிலும் மூத்ரம் முதலிய அசுத்தமொன்றையும் விடக்கூடாது. அங்கு வெகுநேரம் இருக்கக்கூடாது. ஒன்றும் பேசக்கூடாது. **யமன்:**- உமி, கரி, ஓடு, கோவில் ராஜமார்க்கம், மயானம், வயல், கள், நிழல், நாற்சந்தி, ஜலம் ஜலாதாரம், வழி, வ்ருக்ஷத்தினடி, தேவாலயம், பள்ளம், வளை இவைகளில் விஸர்ஜனம் செய்யக் கூடாது. **ஹாரீதர்:**- வாசல், வாசற்படியின் ஸமீபம், சாணம், மாட்டுக்கொட்டில், துறை, யாகபூமி, யாகார்ஹமான விருக்ஷங்களினடி இவைகளிலும் விஸர்ஜனம் கூடாது.

विष्णुरपि – 'नाप्रच्छादितायां भूमौ नोषरे न शाद्वले नोद्यानोदकसमीपयोर्नाकाश' इति ।। व्यासः – 'पुरीषं यदि वा मूत्रं ये न कुर्वन्ति मानवाः । राजमार्गे सभामध्ये धान्यमध्ये च ते शुभाः । वाय्वग्न्यर्काम्बुगोविप्रान् पश्यन्नोच्चारमुत्सृजेत् । नाश्ममूल-फलाङ्गारैरुन्मृज्यान्नाथ बर्हिषे' ति ।। स्मृतिरत्ने – 'न सोपानत्पादुको वा छत्री वा नान्तरिक्षके । तथैवाभिमुखः स्त्रीणां गुरुब्राह्मण-योर्गवामिति ।।

**விஷ்ணு:**- மறைக்காத பூமியிலும், களர் பூமியிலும், புல் தரையிலும், பூந்தோட்டத்திலும், ஜல ஸமீபத்திலும்,

ஆகாசத்திலும் விஸர்ஜனம் செய்யக்கூடாது. **வ்யாஸர்:-** ராஜமார்க்கத்திலும், ஸபையின் நடுவிலும், தான்யங்களின் நடுவிலும் விஸர்ஜனம் செய்யாதவர்கள் நல்லவராவர். காற்று, அக்னி, ஸூர்யன், ஜலம், பசு, ப்ராம்ஹணன் இவர்களைப் பார்த்துக் கொண்டு விஸர்ஜனம் செய்யக்கூடாது. கல், கிழங்கு, கரி, தர்ப்பம் இவைகளால் மலத்தைத் துடைக்கக்கூடாது. **ஸ்ம்ருதிரத்னத்தில்:-** செருப்பு, பாதுகை தரித்தவனும், குடை பிடித்தவனும், ஆகாயத்திலும். ஸ்த்ரீகள், குரு, ப்ராம்ஹணன், பசு இவர்களுக்கு எதிராயும் விஸர்ஜனம் செய்யக்கூடாது.

याज्ञवल्क्यः – 'न तु मेहेन्नदीच्छायावर्त्मगोष्ठाम्बुभस्मसु । न प्रत्यग्न्यर्कगोसोमसन्ध्याम्बुस्त्रीद्विजन्मनः ।। नेक्षेतार्कं न नग्नां स्त्रीं न च संसृष्ट मैथुनाम् । न च मूत्रं पुरीषं वा नाशुची राहु तारका इति ।। उदयास्तमये आदित्यं नेक्षेत, न हि सर्वदा । यथोक्तं मनुना – 'नेक्षेतोद्यन्तमादित्यं नास्तं यन्तं कदाचन । नोपसृष्टं न वारिस्थं न मध्यं नभसो गतमिति ।। उपभोगादन्यत्र न नग्नां, 'न नग्नां स्त्रियमीक्षेतान्यत्र मैथुना' दित्याश्वलायनस्मरणात् ।। मूत्रपुरीषे च न पश्येत् । तथा अशुचिः राहुतारकाश्च न पश्येदित्यर्थः ।

**யாக்ஞவல்க்யர்:-** நதி, நிழல், வழி, கொட்டில் ஜலம், சாம்பல் இவைகளிலும், அக்னி, ஸூர்யன், பசு, சந்த்ரன், ஸந்த்யை, ஜலம், ஸ்த்ரீ, ப்ராம்ஹணன் இவர்களுக்கு கெதிரிலும் விஸர்ஜனம் செய்யக்கூடாது. ஸூர்யனைப் பார்க்கக்கூடாது. வஸ்த்ரமில்லாத ஸ்த்ரீயையும், ஸங்கமம் செய்து கொண்டிருக்கும் ஸ்த்ரீயையும், மூத்ரம், மலம் இவைகளையும், அசுத்தனாய் ராகுவையும், நக்ஷத்ரங்களையும் பார்க்கக்கூடாது. உதயத்திலும் அஸ்தமயத்திலும், ஸூர்யனைப் பார்க்கக் கூடாது. எப்பொழுதும் பார்க்கக்கூடா தென்பதில்லை. ஏனெனில், **மனு:-** உதயத்திலும், அஸ்மதயத்திலும், க்ரஹணகாலத்திலும், ஜலத்திலும், ஆகாசத்தின் நடுவிலும்

ஸூர்யனைப் பார்க்கக் கூடாது. நக்னஸ்த்ரீயைப் பார்க்கலாகாதென்பது போககாலம் தவிர மற்றகாலத்தில். 'மைதுனகாலமின்றி மற்றகாலத்தில் நக்னஸ்த்ரீயைப் பார்க்கக்கூடாதென்று ஆச்வலாயனர் கூறியிருக்கிறார். மூத்ரம், மலம் இவைகளையும் பார்க்கக்கூடாது. அசுத்தனாய் ராகுவையும், நக்ஷத்ரங்களையும் பார்க்கக்கூடாது என்று பொருள்.

आपस्तम्बः – 'शिरस्तु प्रावृत्य मूत्रपुरीषे कुर्याद्भूम्यां किञ्चिदन्तर्धाय छायायां मूत्रपुरीषयोः कर्म वर्जयेत्। स्वान्तु च्छायामवमेहेत्। न सोपानन्मूत्रपुरीषे कुर्यात् कृष्टे पथ्यप्सु च। तथा ष्ठीवनमैथुनयोः कर्माप्सु वर्जयेत्। अग्निमादित्यमपो ब्राह्मणं गा देवताश्चाभिमुखो मूत्रपुरीषयोः कर्म वर्जये'दिति ॥ छायायां उपजीव्यच्छायायाम्। न चोपजीव्यच्छायास्विति स्मरणात्॥ ष्ठीवनं - श्लेष्मनिरसनम्॥

**ஆபஸ்தம்பர்:-** தலையை வஸ்த்ரத்தால் மறைத்து, பூமியை புல் முதலியதால் மறைத்து, மலமூத்ர விஸர்ஜனம் செய்ய வேண்டும். நிழலில் விஸர்ஜனம் செய்யக்கூடாது. தன்னுடைய நிழலில் செய்யலாம். பாதரக்ஷை தரித்து செய்யக்கூடாது. உழுத நிலத்திலும், வழியிலும், ஜலத்திலும், கூடாது. காரித்துப்புதல் மைதுனம் இவைகளை ஜலத்தில் செய்யக்கூடாது. அக்னி ஸூரியன், ஜலம், ப்ராம்ஹணன், பசு, தேவதைகள் இவர்களுக்குஎதிராக மூத்ரமலங்களை விடக்கூடாது. நிழல் பிறருக்கு உபகாரமான நிழல். அவ்விதம் ஸ்ம்ருதி சொல்லுவதால்.

स्मृत्यर्थसारे – 'मूत्रपुरीषं समुत्सृजन् अयज्ञियकाष्ठतृणपर्णादिकं गृहीत्वा शिरः प्रावृत्य निवीतं कण्ठलम्बितं कृत्वा एकवस्त्रश्चेत् दक्षिणे कर्णे निधाय, भुवं काष्ठाद्यन्तर्हितां कुर्यान्मौनं घ्राणास्यपिधानं कृत्वा दिवा सन्ध्ययोरुदङ्मुखो रात्रौ दक्षिणामुखो मूत्रपुरीषे कुर्यात्। फालकृष्टे जले

चित्यां वल्मीके गिरिमस्तके। देवालये नदीतीरे दर्भपुष्पेषु शाद्वले ।। सेव्यच्छायासु वृक्षेषु मार्गे गोष्ठांबुभस्मसु। अग्नौ च गच्छंस्तिष्ठंश्च विष्ठां मूत्रञ्च नोत्सृजेत् ।। रथ्याचत्वरतीर्थेषु श्मशाने गोमये जले। न सस्यमध्ये मेहेत जनसंसदि वर्त्मनि ।। अङ्गारोद्यानसप्राणियज्ञभूमिषु नोत्सृजेत्। मारुताग्न्यर्क गो सोम सन्ध्यांबु स्त्रीद्वि जन्मनः। पश्यन्नभि मिमुखश्चैव विष्ठां मूत्रं च नोत्सृजेत्। सर्वे निषेधा नैव स्युः प्राणबाधाभयेषु तु ।। काष्ठादिना त्वपानस्थममेध्यं निमृजीत च। कन्दमूलफलाङ्गारैः नामेध्यं निमृजीत च ।। अन्यासक्तमना नैव तिष्ठेदतिचिरं बुध इति ।।

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:-** மலமூத்ரவிஸர்ஜனம் செய்ய விரும்பியவன் யக்ஞார்ஹமல்லாத கட்டை, புல், இலே இவைகளிலொன்றை வைத்து, தலையை வஸ்த்ரத்தால் மறைத்து, பூணூலே நிவீதமாய் கழுத்தில் தொங்கவிட்டு, ஒரு வஸ்த்ரத்துடனிருந்தால் பூணூலே வலது காதில் வைத்துக் கொண்டு, பூமியை கட்டை முதலியதால் மறைத்து மௌனமாய், மூக்கையும், வாயையும் வஸ்த்ரத்தால் மறைத்து, பகலிலும் ஸந்த்யைகளிலும் வடக்கு முகமாகவும், இரவில் தெற்கு முகமாகவும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யவேண்டும். உழுத பூமி, ஜலம் வேள்விமேடை, புற்று, மலேயினுச்சி, தேவாலயம், நதிக்கரை, தர்ப்பம், புஷ்பம், புல்லுள்ள தரை, உபகாரகமான நிழல், மரம், வழி, கொட்டில், ஜலம், சாம்பல், அக்னி இவைகளிலும், நடந்து கொண்டும், நின்று கொண்டும் மலமூத்ர விஸர்ஜனம் செய்யக்கூடாது. ராஜவீதி, நாற்சந்தி, இறங்கும் துரை, மயானம், சாணம், ஜலம், பயிர்களின் நடுவு, ஜனக்கூட்டம், வழி, கரி, தோட்டம், ப்ராணிகளுள்ள இடம், யாகபூமி, இவைகளிலும், வாயு, அக்னி, ஸூர்யன், பசு, சந்த்ரன், ஸந்த்யை, ஜலம், ஸ்த்ரீ, ப்ராம்ஹணன் இவர்களேப் பார்த்தும் எதிராகவும், மலமூத்ர விஸர்ஜனம் செய்யக்கூடாது. ப்ராணபாதையுள்ள காலத்திலும்,

பயமுள்ள இடத்திலும் எல்லா நிஷேதங்களும் ப்ரவர்த்திப்பதில்லை. கட்டை முதலியதால் குத்திலுள்ள மலத்தைத் துடைக்க வேண்டும். கிழங்கு, வேர், பழம், கரி இவைகளால் துடைக்கக் கூடாது. வேறிடத்தில் மனதுடன் வெகுகாலம் இருக்கக்கூடாது.

पुराणे – 'देवालये तु परितः शतदण्डाद्बहिर्मुने । विण्मूत्रकरणं कुर्यात् क्रोशाद्बहिरथापि वे' ति ।। भारद्वाजः – 'अथापकृष्य विण्मूत्रं लोष्टकाष्ठतृणादिना । उदस्तवासा उत्तिष्ठेत् दृढं विधृतमेहन इति ।। मेहनं - लिङ्गम् ।। हारीतः – 'लोष्ठेन परिमृञ्जीत शुष्ककाष्ठेन वा गुदमिति ।। व्यासः – 'मार्जनं वामहस्तेन वीरणाद्यैरयज्ञियैः । कुर्यान्मूत्रपुरीषाणामेवमायुर्न हीयत इति ।।

**புராணத்தில்:-** கோவிலின் நான்கு புறத்திலும் நூறு கோலளவுக்கப்புறத்தில், அல்லது ஒரு க்ரோசத்திற்கப் புறத்தில் மலமூத்ர விஸர்கம் செய்யவேண்டும். **பாரத்வாஜர்:-** விஸர்ஜனம் செய்தபிறகு, மண்கட்டி, கட்டை, புல் முதலியவற்றால் மலமூத்ரங்களைத் துடைத்து, வஸ்த்ரத்தை உயர்த்திக் கொண்டு, ஆண்குறியை நன்றாய் பிடித்துக் கொண்டு எழுந்திருக்க வேண்டும். **ஹாரீதர்:-** மண்கட்டி அல்லது உலர்ந்த கட்டையினால் குதத்தைத் துடைக்க வேண்டும். **வ்யாஸர்:-** இடது கையினால் யக்ஞார்ஹமல்லாத கோரை முதலியவைகளால் மூத்ரமலங்களைத் துடைக்க வேண்டும். இவ்விதம் செய்பவனுக்கு ஆயுள் குறைவதில்லை.

आपस्तम्बः–'अश्मानं लोष्टमार्द्रानोषधिवनस्पतीनूर्ध्वानाच्छिद्य मूत्रपुरीषयोश्शुन्धने वर्जयेदिति। फलपाकावसानाः औषधयः । पुष्पैर्विना ये फलन्ति, ते वनस्पतयः । आर्द्रानिति वचनात् शुष्केषु न दोषः । ऊर्ध्वानिति वचनाद्वातादिनिमित्तेन भग्नेषु न दोषः । एतैरश्मादिभिः मूत्रपुरीषयोश्शोधनं न कुर्यादित्यर्थः ।। गौतमोऽपि – 'न

पर्णलोष्टाश्मभिर्मूत्रपुरीषापकर्षणं कुर्यादिति ।। अत्र लोष्टप्रतिषेध उक्तकाष्ठादि सम्भवे वेदितव्यः ।। हारीतः – आहारं तु रहः कुर्या द्विहारं चैव सर्वदा । गुप्ताभ्यां लक्ष्मीयुक्तस्स्यात् प्रकाशे हीयते श्रियेति ।।

**ஆபஸ்தம்பர்:-** கல்லினாலும், மண்கட்டியாலும், ஈரமுள்ளதும், உயர்ந்து நின்றிருப்பதுமான ஒஷதிகளையும் வனஸ்பதிகளையும் சேதித்து அவைகளாலும், மூத்ரபுரீஷங்களைத் துடைக்கக்கூடாது. ஓஷதிகளென்பவை காய்த்தவுடன் அழிந்து போகும் செடிகளாம். வனஸ்பதிகளென்பவை பூக்காமல் காய்க்கும் செடிகளாம். ஈரமுள்ள என்றதால் உலர்ந்தவைகளுக்குத் தோஷமில்லை. உயர்ந்து நிற்கு மென்பதால் காற்று முதலியவைகளால் ஒடிந்தவைகளுக்குத் தோஷமில்லை. என்பதாம். **கௌதமரும்:-** இலை, மண்கட்டி, கல் இவைகளால் மூத்ர புரீஷங்களைத் துடைக்கக்கூடாது. இங்கு மண்கட்டியை நிஷேதித்தது, சொல்லிய கட்டை முதலியவை கிடைக்கும் பக்ஷத்தில் என்று அறியவும். கிடைக்காவிடில் மண்கட்டியால் செய்யலாமென்பதாம். **ஹாரீதர்:-** ஆஹாரம், மலமூத்ரத்யாகம் இவைகளை எப்பொழுதும் ரஹஸ்யமான இடத்தில் செய்யவேண்டும். ரஹஸ்யமாய்ச் செய்தால் லக்ஷ்மியுடன் கூடுவான். பிரகாசமாய்ச் செய்தால் லக்ஷ்மியால் விடப்படுவான்.

## शौचविधिः

तत्र देवलः – आशौचान्नोत्सृजेच्छिश्नं प्रस्रावोच्चारयोरपि । गुदं हस्तं च निर्मृज्यान्मृदंभोभिर्मुहुर्मुहुरिति ।। स्मृत्यन्तरे – उत्थाय वामहस्तेन गृहीत्वाऽध्वनि मेहनम् । शौचदेशं समभ्येत्य कुर्याच्छौचं मृदम्बुभिरिति । याज्ञवल्क्यः – गृहीतशिश्नश्चोत्थाय मृद्भिरभ्युद्धृतैर्जलैः । गन्धलेपक्षयकरं शौचं कुर्यादतंद्रित' इति ।। अभ्युद्धृतैः = कमण्डल्वादिना उद्धृतैः ।। तथा च देवलः – 'मूत्रोच्चारे कृते शौचं न स्यादन्तर्जलाशये । अन्यत्रोद्धृत्य तत्कुर्यात् सर्वदैव समाहित' इति ।।

சௌசவிதி:-

தேவலர்:- மலமூத்ர விஸர்கங்களில் சௌசம் வரையில் சிச்னத்தை விடக்கூடாது. மண்ணுலும், ஜலத்தாலும் குதம், கை இவைகளை அடிக்கடி அலம்பவேண்டும்.

மற்ரெரு ஸ்ம்ருதியில்:- எழுந்து செல்லும்போது வழியில் இடதுகையால் சிச்னத்தைப் பிடித்துக் கொண்டு, சௌசம் செய்யுமிடத்திற்கு வந்து, மண் ஜலமிவைகளால் சௌசம் செய்து கொள்ளவேண்டும். யாக்ஞவல்க்யர்:- சிச்னத்தை க்ரஹித்துக் கொண்டெழுந்து மண்களாலும், வெளியிலெடுத்த ஜலங்களாலும், சோம்பலில்லாதவனுய் நாற்றமும் பூச்சும் போகும் வரையில் சௌசம் செய்துகொள்ள வேண்டும். இங்கு எடுத்த ஜலமென்பதற்குக் கமண்டலு முதலியதாலெடுக்கப் பட்டதென்று பொருள். அவ்விதமே. தேவலர்:- மலமூத்ர விஸர்கம் செய்தபிறகு, குளம் முதலியதின் உட்புறத்தில் சௌசம் செய்யக்கூடாது. ஜலத்தை எடுத்து ஜலாசயத்திற்கு வெளியிலேயே செய்ய வேண்டும். எக்காலத்திலும் இதை மறக்கக்கூடாது.

दक्षोऽपि :– 'तीर्थे शौचं न कुर्वीत कुर्वीतोद्धृतवारिणा । मृत्तिकावारिदौ चास्य शौचज्ञौ परिचारकौ' इति ।। बोधायनः – 'प्राङ्मुख उदङ्मुखो वाऽऽसीनश्शौचमारभेत इति । गौतमोऽपि – 'प्राङ्मुख उदङ्मुखो वा शौचमारभेतेति ।। 'शौचग्रहणं मूत्रपुरीषादिशौचेऽपि यथा स्यात् । आचमन एव माभूदिति हरदत्तेन व्याकृतम् ।। तथा स्मृतिरत्ने – 'उद्धृतोदकमादाय मृत्तिकां चैव वाग्यतः । उदङ्मुखो दिवा कुर्याद्रात्रौ चेद्दक्षिणामुख' इति ।। यमः – ''आहरेन्मृत्तिकां प्राज्ञः कूलात् ससिकतात्तु या । शुचौ देशे तु सा ग्राह्या शर्कराश्मविवर्जिता ।। नाखुकृष्टान्न वल्मीकात् पांसुतो न च कर्दमात् । न मार्गान्नोषराच्चैव शौचशिष्टात् परस्य च । एतास्तु वर्जयेन्नित्यं वृथा शौचं हि तत् स्मृत' मिति ।।

**தக்ஷர்:-** ஜலாசயத்தில் சௌசம் செய்யக்கூடாது. எடுத்த ஜலத்தால் செய்யவேண்டும். மண்ணையும் ஜலத்தையும் கொடுக்கும் இருகைகளும் இவனுக்கு சௌசத்தை அறிந்த பரிசாரகர்களாகின்றனர். இடதுகையால் மண்ணையும் வலதுகையால் ஜலத்தையும் சேர்த்து சௌசம் செய்யவேண்டுமென்பதாம். **போதாயனர்:-** கிழக்கு அல்லது வடக்கு முகமாய் உட்கார்ந்து சௌசம் செய்து கொள்ள வேண்டும். **கௌதமரும்:-** கிழக்கு, அல்லது வடக்கு முகமாயிருந்து சௌசம் ஆசமனம் செய்ய வேண்டும். இங்கு சௌசமென்ற பதத்தை க்ரஹித்தது மலமூத்ராதி சௌசங்களையும் சொல்வதற்காக; ஆசமனத்தில் மட்டிலும் என்பதில்லை என்று ஹரதத்தரின் வ்யாக்யானம். **அவ்விதமே ஸ்ம்ருதிரத்னத்தில்:-** எடுத்துவைத்த ஜலத்தையும், மண்ணையும் க்ரஹித்துக் கொண்டு மௌனியாய், பகலில் வடக்கு முகமாகவும், ராத்ரியில் தெற்கு முகமாகவும், சௌசம் செய்து கொள்ள வேண்டும். **யமன்:-** அறிந்தவன் மணலுடன் கலந்த கரையிலிருந்து மண்ணை க்ரஹிக்க வேண்டும். சுத்தமான இடத்திலுள்ளதைச் சுக்கான், கல் இவைகளில்லாமல் க்ரஹிக்க வேண்டும். எலி பறித்த இடம், புற்று, புழுதி, சேறு, வழி, களர்நிலம், பிறன் சௌசம் செய்து மீந்தது இவைகளிலிருந்து மண்ணை க்ரஹிக்ககூடாது. க்ரஹித்துச் செய்தால் அந்த சௌசம் வீணாகும்.

आश्वलायनः :- त्यागान्मूत्रपुरीषस्य पूर्वं गृह्णीत मृत्तिकाम्। न च प्रह्वो न चोत्तिष्ठन्नाशुचिर्नालपन् द्विजः ॥ क्रमादग्न्यादिवाय्वन्तदिङ्मुखो नाहरेन्मृदम्। क्षेत्रात् श्मशानाद्वल्मीकान्मार्गाद्गेहाज्जलात् खलात् ॥ ऊषराद्देवतास्थानान्न द्विजो मृदमाहरेत्। नाशुद्धभूमेश्चैत्याच्च न वेद्या गोव्रजान्मृदम् ॥ आहरेल्लेपभूतां च जन्तुमिश्रां न कर्दममिति ॥ देवलः – 'अङ्गारतुष कीटास्थिसिकताशर्करान्विताम्। वल्मीकोषरतोयान्तः कुड्योद्भूतां श्मशानजाम् ॥ आहृतामन्यशौचार्थमाददीत न

मृत्तिकामिति। तोयान्तः - जलमध्यात्। एतच्च वाप्यादिव्यतिरिक्त-विषयम्॥ अत एव मनुः – वापीकूपतटाकेषु बाह्यतो नाहरेन्मृदम्। आहरेज्जलमध्यात्तु परतो मणिबन्धनादिति॥ एतत् आरण्यविषयम्॥ स्मृतिरत्ने तु – अन्तर्जलगता ग्राह्या परतो मणिबन्धनात्। आरण्यकेषु त्वेवं स्यात् ग्राम्येष्वाहरणं नत्विति॥

**ஆச்வலாயனர்:-** மூத்ரபுரீஷ விஸர்ஜனத்திற்கு முன்பே ம்ருத்திகையை க்ரஹிக்க வேண்டும். குனிந்து கொண்டும், நின்று கொண்டும், அசுத்தனும், பேசிக்கொண்டும், அக்னி திக்கு முதல் வாயுதிக்கு வரையிலுள்ள திக்குகளை நோக்கியவனும் ம்ருத்திகையை க்ரஹிக்கக் கூடாது. வயல், மயானம், புற்று, வழி, வீடு, ஜலம், களம் களர்நிலம், கோயில், அசுத்தஸ்தலம், சைத்யம், யாகஸ்தலம், கொட்டில் இவைகளிலிருந்தும் க்ரஹிக்கக் கூடாது. பற்றுள்ளதும், ஜந்துக்களுடன் கூடியதும், சேறுயுமுள்ள மண்ணை க்ரஹிக்கக் கூடாது. **தேவலர்:-** கரி, உமி, புழு, அஸ்தி, மணல்,, சுக்கான் இவைகளுடன் கூடியதும், புற்று, களர்பூமி, ஜலத்தின் நடுவு, சுவர், ச்மானம், பிறர் சௌசத்திற்குக் கொண்டுவந்தது. இவைகளிலிருந்து ம்ருத்திகையை க்ரஹிக்கக் கூடாது. இங்கு 'ஜலத்தின் நடுவு' என்றது நீரோடை முதலியதைத் தவிர்த்து மற்ற ஜலமத்ய விஷயம். **மனு:-** வாபீ, கூபம், தடாகம் இவைகளில் வெளியிலிருந்து ம்ருத்திகையைக் கொண்டு வரக்கூடாது. அவைகளின் ஜலத்தின் நடுவில் மணிக்கட்டு அளவு ஜலத்திற்கு அப்புறமிருந்து ம்ருத்திகையை க்ரஹிக்க வேண்டும். இது அரண்யத்திலுள்ளவைகளின் விஷயம். **ஸ்ம்ருதி ரத்னத்தில்:-** ஜலமத்யத்தில் மணிக்கட்டு அளவுக்கு அப்புறமிருந்து க்ரஹிக்க வேண்டும். இவ்விதம் சொல்லியது அரண்யத்திலுள்ளவைகளின் விஷயம். கராமத்திலுள்ளவைகளிலோ வெனில் முன் சொல்லியபடி விதியில்லை.

मृदाहरणे शुक्लादिवर्णमाह मरीचिः – विप्रे शुक्ला तु मृच्छौचे रक्ता क्षत्रे विधीयते। हारिद्रवर्णा वैश्ये तु कृष्णा स्त्रीशूद्रयोस्तथेति ।। यत्र पुनः उक्तलक्षणा मृत् न लभ्यते, तत्र कथं शौचमित्यपेक्षिते मनुः - यस्मिन् देशे तु यत्तोयं या च यत्रैव मृत्तिका। सैव तत्र प्रस्शस्ता स्यात् तया शौचं विधीयते इति ।। यदा कथमप्युदकोद्धरणं न सम्भवति, तदा विशेषमाह विवस्वान् – अरत्निमात्रं जलं त्यक्त्वा कुर्याच्छौचमनुद्धृते । पश्चात्तच्छोधयेत्तीर्थमन्यथा ह्यशुचिर्भवेदिति ।। जलाद्बहिररत्निमात्र प्रदेशं तीरे त्यक्त्वा, जलपात्राभावेन उद्धरणासम्भवे दक्षिणहस्तेन उद्धृत्य वामेन प्रक्षालयेदित्यर्थः ।। तीर्थमत्र शौचस्थलम् ।।

**ம்ருத்திகை க்ரஹிப்பதில் வெளுப்பு முதலிய** வர்ணங்களை விதிக்கின்றார் **மரீசி:**- சௌசத்தில், ப்ராம்ஹணனுக்கு வெளுத்ததும், க்ஷத்ரியனுக்கு சிவந்ததும், வைச்யனுக்கு மஞ்சள் நிறமுள்ளதும், ஸ்த்ரீ சூத்ரர்களுக்குக் கறுத்ததுமான ம்ருத்திகை விதிக்கப் படுகிறது. எவ்விடத்தில் முன் சொல்லிய லக்ஷணங்களுடைய மண் கிடைக்கவில்லையோ அவ்விடத்தில் எப்படி சௌசமெனில் **மனு:**- எந்தத் தேசத்தில் எந்த ஜலம், எந்த ம்ருத்திகை கிடைக்கின்றதோ அதுவே அங்கு ச்லாக்யமாகும். அதனாலேயே சௌசம் செய்து கொள்ளலாம்.

எப்பொழுது எவ்விதத்திலும் ஜலத்தை எடுத்துவைப்பது ஸாத்யமில்லையோ அங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார். **விவஸ்வான்:**- ஜலக்கரையில் முழு அளவு தூரத்திற்கு அப்புறத்தில் சௌசம் செய்து கொள்ள வேண்டும். பிறகு அந்த இடத்தை சுத்தமாகச் செய்ய வேண்டும். சுத்தமாகச் செய்யாவிடில் அசுத்தனாவான். பாத்திரமில்லாததால் எடுத்துச் செல்ல முடியாவிடில் ஜலக்கரையில் ஒரு முழத்திற்கப் புரத்தில் உட்கார்ந்து வலது கையாலெடுத்து ஜலத்தைக் கொண்டு இடது கையால் சௌசம் செய்து கொள்ள வேண்டுமென்பது பொருள்.

இங்கு தீர்த்தமென்ற பதத்திற்குச் சௌசஸ்தல மென்பது பொருள். (அரத்னி என்பது ஒரு அங்குலம் குறைந்த முழம்.)

तथा च ऋश्यशृङ्गः – 'यस्मिंस्थाने कृतं शौचं वारिणा तत्तु शोधयेत्। न शुद्धिस्तु भवेत्तस्य मृत्तिकां यो न शोधयेदिति ।। स्मृतिरत्ने – 'देशान्तरगतो विप्रः क्षालयेच्छौचभूतलम् ।। शौचशेषमृदं तोयैर्नहि प्रक्षालयेद्यदि। अशेषास्तस्य पितरो भक्षयेयुर्न संशय' इति ।। देवलः – 'धर्मविद्दक्षिणं हस्तमधश्शौचे न योजयेत्। तथा च वामहस्तेन नाभेरूर्ध्वं न शोधयेदिति ।। सङ्ग्रहे – 'नाभेरधस्तात्सकलं क्षालयेद्वामपाणिना। कुर्यादाचमनादीनि सर्वाणीतरपाणिनेति ।। ऋश्यशृङ्गः – 'धाराशौचं न कर्तव्यं शौचसिद्धिमभीप्सता। चुलकैरेव कर्तव्यं हस्तशुद्धिविधानत इति । दक्षः – 'न शौचं वर्षधाराभिः आचरेत्तु कदाचनेति ।।

அவ்விதமே ருச்யச்ருங்கர்:- எந்த இடத்தில் சௌசம் செய்யப்பட்டதோ அந்த ஸ்தலத்தை ஜலத்தினால் சுத்தமாக்க வேண்டும். மண்ணைச் சுத்தம் செய்யாதவனுக்குச் சுத்தி உண்டாவதில்லை. ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ராம்ஹணன் வேறுப்ரதேசத்திலிருந்து கொண்டு சௌசஸ்தலத்தை அலம்பவேண்டும். சௌசத்தில் மீந்த மண்ணை ஜலத்தால் சோதிக்காவிடில் அந்த மண்ணை அவனின் பித்ருக்களெல்லோரும் பக்ஷிப்பார்கள். ஸந்தேஹமில்லை. தேவலர்:- தர்மமறிந்தவன் வலதுகையை இடுப்பிற்குக் கீழ்பாகத்தின் சௌசத்தில் உபயோகிக்கக் கூடாது. இடது கையால் தொப்புளுக்கு மேல் உள்ள அவயவத்தைச் சோதிக்கக்கூடாது. ஸங்க்ரஹத்தில்:- நாபிக்குக் கீழுள்ள அங்கமெல்லாவற்றையும் இடது கையினாலலம்ப வேண்டும். ஆசமனம் முதலிய எல்லாவற்றையும் வலது கையினால் செய்ய வேண்டும். ருச்யச்ருங்கர்:- சௌசத்தால் சுத்தியை விரும்புகின்றவன் தாரையாய் விழும் ஜலத்தினால் சௌசம் செய்யக்கூடாது. கையாலெடுத்த ஜலங்களாலேயே செய்ய வேண்டும். கையால் சௌசம் செய்து கொள்ளும்படி விதியுள்ளது.

**தக்ஷர்:-** மழைஜலத்தின் தாரைகளால் ஒருகாலும் சௌசம் செய்து கொள்ளக்கூடாது.

मृत्सङ्ख्यामाह वसिष्ठः – 'पञ्चापाने दशैकस्मिन्नुभयोः सप्त मृत्तिकाः। उभयोः पादयोः सप्त लिङ्गे द्वे परिकीर्तिते इति ।। यमोऽपि – 'द्वे लिङ्गे मृत्तिके देये गुदे पञ्च करे दश। उभयोस्सप्त दातव्याः पुनरेका गुदे तथेति ।। मनुः – 'एका लिङ्गे गुदे तिस्रस्तथैकस्मिन् करे दश। उभयोस्सप्त दातव्या मृदश्शुद्धिमभीप्सता ।। एतच्छौचं गृहस्थस्य द्विगुणं ब्रह्मचारिणः। त्रिगुणं तु वनस्थस्य यतीनां तु चतुर्गुणमिति ।। दक्षः – 'पञ्चापाने दशैकस्मिन्नुभयोस्सप्त मृत्तिकाः। गृहस्थशौचमाख्यातं त्रिष्वन्येषु यथाक्रमम् ।। द्विगुणं त्रिगुणं चैव चतुर्थस्य चतुर्गुण' मिति ।। हारीतः – 'एका लिङ्गे तिस्रोऽपाने दद्याद्दश सव्ये षट् पृष्ठे सप्तोभाभ्यामिति। पृष्ठे - सव्यस्य पश्चाद्भागे, तस्य प्रकृतत्वात् ।।

மண்ணின் ஸங்க்யையைச் சொல்லுகிறார் **வஸிஷ்டர்:-** அபானத்தில் ஐந்து, இடது கையில் பத்து, இரண்டு கைகளிலும் தனித்தனி ஏழு, கால்களிலும் தனித்தனி ஏழு, குறியில் இரண்டு மண்கள் உபயோகிக்கப்பட வேண்டும். **யமனும்:-** குறியில் இரண்டு, அபானத்தில் ஐந்து, இடது கையில் பத்து, கைகளில், தனித்தனி ஏழு, மறுபடி அபானத்தில் ஒன்று என்ற கணக்கால் ம்ருத்திகையை உபயோகிக்க வேண்டும். **மனு:-** சௌசத்தால் சுத்தியை விரும்பியவன் குறியில் ஒன்று, அபானத்தில் மூன்று, இடது கையில் பத்து, இருகைகளிலும் தனித்தனி ஏழு மண்களை உபயோகிக்க வேண்டும். இந்தச் சௌசம் க்ருஹஸ்தனுக்கு. இதை விட இரண்டு மடங்கு ப்ரம்ஹசாரிக்கும், மூன்று மடங்கு வானப்ரஸ்தனுக்கும், நான்கு மடங்கு ஸன்யாஸிக்கும் விதிக்கப்படுகிறது. **தக்ஷர்:-** அபானத்தில் ஐந்து, இடதுகையில் பத்து, இரண்டுகைகளிலும் தனித்தனி ஏழு ம்ருத்திகைகள் விதிக்கப்படுகின்றன. இது க்ருஹஸ்தனுக்கு. ப்ரம்ஹசாரிக்கு இரண்டு மடங்கும்,

வானப்ரஸ்தனுக்கு மூன்று மடங்கும், ஸன்யாஸிக்கு நான்கு மடங்கும் விதிக்கப்படுகின்றன. ஹாரீதர்:- குறியில் ஒன்று, குதத்தில் மூன்று, இடது கையில் பத்து, அதன் பின்புறத்தில் ஆறு, இரண்டு கைகளிலும் தனித்தனி ஏழு ம்ருத்திகைகள் விதிக்கப்படுகின்றன.

मरीचिः – 'तिसृभिश्चातलात् पादौ शोध्यौ गुल्फात्तथैव च। हस्तौ त्वामणिबन्धाच्च लेपगन्धापकर्षण' मिति ।। शङ्खः – 'मेहने मृत्तिकास्सप्त लिङ्गे द्वे परिकीर्तिते। एकस्मिन् विंशतिर्हस्ते द्वयोर्देयाश्चतुर्दश ।। षडन्या नखशुद्धौ तु देयाः शौचेप्सुना मृदः । तिस्रस्तु मृत्तिका देयाः कृत्वा तु नखशोधनम् । तिस्रस्तु पादयोर्देयाः शौचकामस्य नित्यश इति ।। विष्णुपुराणे – 'एका लिङ्गे गुदे तिस्रो दश वामकरे नृप । हस्तद्वये च सप्तान्या मृदः शौचोपपादिका' इति ।। स्मृतिसारे – 'कराग्रे करपृष्ठे च बहिर्विष्ठाविशुद्धये। षट्सङ्ख्यया प्रदातव्या मृत्तिकाश्च पृथक्' इति ।। यमः – 'पूर्वं जलेन प्रक्षाल्य मृदा पश्चात्ततोऽम्बुभिः । एवं द्वादशकृत्वस्तु गुदशौचं समाचरेत् ।। पञ्चकृत्वः करौ क्षाल्य मृदाऽऽमलकमात्रया। त्रिः कृत्वा लिङ्गशौचं च हस्तं क्षाल्य पदद्वयम् ।। संयोज्य त्रिर्मृदा क्षाल्य क्षालयेच्छौचभूतलमिति ।।

மரீசி:- மூன்று ம்ருத்திகைகளால் கால்களை உள்ளங்கால் முதல் கணுக்கால் வரையிலும், கைகளை உள்ளங்கை முதல் மணிக்கட்டு வரையிலும் பூச்சும் நாற்றமும் போகும்படி சோதிக்க வேண்டும். சங்கர்:- குதத்தில் ஏழு, குறியில் இரண்டு, இடது கையில் இருபது, கைகளில் தனித்தனி பதினான்கு ம்ருத்திகைகள், நகசுத்திக்காக மறுபடி ஆறு, நகசுத்தி செய்த பிறகு மூன்று, பாதங்களில் தனித்தனி மூன்று ம்ருத்திகைகளும் உபயோகிக்க வேண்டும். விஷ்ணுபுராணத்தில்:- குறியில் ஒன்று, குதத்தில் மூன்று, இடது கையில் பத்து, இரண்டு கைகளிலும், தனித்தனி ஏழு ம்ருத்திகைகள் சுத்தியை

உண்டு பண்ணுகின்றன. ஸ்ம்ருதி ஸாரத்தில்:- கையில் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் மலசுத்திக்காக தனித்தனியே ஆறு ம்ருத்திகைகளை உபயோகிக்க வேண்டும். யமன்:- முதலில் ஜலத்தால் அலம்பி, பிறகு மண்ணால் சோதித்துப் பிறகு ஜலத்தால் அலம்ப வேண்டும். இவ்விதம் பன்னிரெண்டு தடவை குதசௌசம் செய்ய வேண்டும். நெல்லிக்கனி யளவுள்ள மண்ணினால் கைகளை ஐந்து தடவை அலம்பி, மூன்று தடவை லிங்கசௌசம் செய்து கையை அலம்பி, கால்களைச் சேர்த்து வைத்து மூன்று தடவை மண்ணால் அலம்பி, சௌசம் செய்த ஸ்தலத்தைச் சுத்தம் செய்ய வேண்டும்.

स्मृतिचन्द्रिकायाम् – 'आद्यन्तयोस्तु शौचानामद्भिः प्रक्षालनं स्मृतम् । सुनिर्णिक्ते मृदं दद्यान्मृदन्ते जलमेव च ।। अन्तरा चान्तरा वामहस्तप्रक्षालनं चरेदिति ।अत्र न्यूनाधिकमृत्सङ्ख्याप्रतिपादकवचनानां गन्धलेपतारतम्याभिप्रायो विकल्पो वेदितव्यः ।। एवमुक्तशौचेऽपि यत्र गन्धो लेपश्च नापैति, तत्र उक्तसङ्ख्यातोऽधिकसङ्ख्यायामपि न विरोध इत्याह मनुः – 'विण्मूत्रयोस्समुत्सर्गे मृद्वार्यादेयमर्थवत् । यावन्नापैत्यमेध्याक्तात् गन्धो लेपश्च तत्कृतः । तावन्मृद्वारि चादेयं सर्वासु द्रव्यशुद्धिष्विति ।। देवलोऽपि – 'यावत्तु शुद्धिं मन्येत तावच्छुद्धिर्विधीयते । प्रमाणं शौचसङ्ख्याया न शिष्टैरुपदिश्यत इति ।। आपस्तम्बोऽपि – 'मूत्रं कृत्वा पुरीषं वा मूत्रपुरीषलेपान् अन्नलेपान्, उच्छिष्टलेपान् रेतसश्च ये लेपास्तानद्भिर्मृदा च प्रक्षाल्य पादौ चाचम्य प्रयतो भवतीति' ।।

ஸ்ம்ருதி சந்த்ரிகையில்:- சௌசங்களின் முதலிலும் முடிவிலும் ஜலத்தினால் அலம்பவேண்டும். ஜலத்தினால் அலம்பிய பிறகு ம்ருத்திகையை உபயோகிக்க வேண்டும். பிறகு ஜலத்தால் சோதிக்கவேண்டும். ஒவ்வொன்றிற்கும் நடுவில் இடது கையை அலம்பிக் கொள்ள வேண்டும். இங்கு மண்ணின் ஸங்க்யையை அதிகமாயும் குறைத்தும்

சொல்லும் வசனங்களுக்கு, மலத்தின் பற்று நாற்றமிவைகளின் தாரதம்யத்திற்குத் தகுந்தபடி விகல்பமென்றறிய வேண்டும். இவ்விதம் சௌசம் செய்தும், பற்றும் நாற்றமும் போகாவிடில், சொல்லிய கணக்கைவிட அதிகமாய்ச் செய்தாலும் விரோதமில்லை என்கிறார். **மனு:-** மலமூத்ர விஸர்கத்தில் மண்ணையும் ஜலத்தையும் வேண்டிய அளவு க்ரஹிக்க வேண்டும். அசுத்த வஸ்துவினுல் பூசப்பட்ட பதார்த்தத்திலிருந்து அந்த அசுத்தத்தின் நாற்றமும் பற்றும் நீங்கும்வரையில் மண்ணையும் ஜலத்தையும் உபயோகித்துச் சுத்திசெய்ய வேண்டும். எல்லா த்ரவ்யங்களின் சுத்திகளிலும் இது ஸமானம். **தேவலரும்:-** எவ்வளவு செய்தால் மனதில் சுத்தியுண்டாகிறதோ அவ்வளவு சௌசம் விதிக்கப் படுகிறது. சௌசத்தின் ஸங்க்யைக்கு அளவு சிஷ்டர்களால் சொல்லப்படுகிறதில்லை. **ஆபஸ்தம்பர்:-** மூத்ரவிஸர்கம், மலவிஸர்கம் செய்தாலும், மூத்ரத்தின் லேபம், மலத்தின் லேபம், அன்னத்தின் லேபம், எச்சிலின் லேபம், ரேதஸ்ஸின் லேபம் இவைகளையும் ஜலத்தாலும், மண்ணுலும் அலம்பி, கால்களையுமலம்பி, ஆசமனம் செய்தால் சுத்தனுகிறுன். (லேபம் = பூச்சு)

यत्तु दक्षेणोक्तम् – 'न्यूनाधिकं न कर्तव्यं शौचशुद्धिमभीप्सता। प्रायश्चित्तेन युज्येत विहितातिक्रमे कृते ।। गायत्र्यष्टशतं चैव प्राणायाम त्रयं तथा । प्रायश्चित्तमिदं प्रोक्तं नियमातिक्रमेसतीति, तत् सङ्कल्पितसङ्ख्यायाः प्रागेव गन्धलेपक्षये वेदितव्यम् ।। एवं चोक्तसङ्ख्यायाः अर्वागेव यत्र गन्धाद्यपगमः, तत्र सङ्ख्यानियमः अदृष्टार्थ इति स्मृतिचन्द्रिकादौ ।। विज्ञानेश्वरस्तु – 'गन्धलेपक्षयकरं शौचं कुर्या' दित्येतत् सर्वाश्रमिणां साधारणं, मृत्सङ्ख्यानियमस्त्वदृष्टार्थ इत्यवोचत्।

ஆனுல், தக்ஷர் ''சௌசத்தால் சுத்தியை விரும்புகிறவன் விதிக்கு அதிகமும் செய்யக்கூடாது,

குறைத்தும் செய்யக் கூடாது. செய்தால் விதியை அதிக்ரமிப்பதால் ப்ராயச்சித்தார்ஹனுகிருன். சாஸ்த்ர நியமத்தை அதிக்ரமித்தவனுக்கு 108-முறை காயத்ரீ ஜபமும், மூன்று ப்ராணுயாமமும் ப்ராயச்சித்தமென சொல்லப்படுகிறது'' என்று சொல்லியிருக்கிருரேயெனில், அது சௌசாரம்பத்தில் ஸங்கல்பிக்கப்பட்ட ஸங்க்யைக்கு முந்தியே துர்க்கந்தமும் லேபமும் நிவ்ருத்தித்து விட்ட விஷயத்திலென்று அறியவேண்டும். இப்படியிருப்பதால் தான் ''விதித்தஸங்க்யைக்கு முந்தியே கந்தலேபங்களின் நிவ்ருத்தி எங்கு ஆகிறதோ அங்கும் ஸங்க்யையின் நியமம் உண்டு. அது அத்ருஷ்டார்த்தம்'' என்று ஸ்ம்ருதிசந்த்ரிகை முதலிய க்ரந்தங்களில் கூறப்பட்டிருக்கிறது.

**விக்ஞானேச்வரரோவெனில்** ''கந்தலேபங்கள் நிவ்ருத்திக்கும் வரை சௌசம் செய்யவேண்டுமென்பது எல்லா ஆச்ரமிகளுக்கும் பொதுவானது. ஸங்க்யாநியமம் அத்ருஷ்டார்த்தம்'' என்ருர். (அத்ருஷ்டம் -விளக்க - காணஇயலாதது.)

अत्र मृत्परिमाणमाहाङ्गिराः – 'प्रथमा प्रसृतिर्ज्ञेया द्वितीया च तदर्धिका । तृतीया मृत्तिका ज्ञेया त्रिभागकरपूरणेति ।। दक्षः – 'अर्धप्रसृतिमात्रा तु प्रथमा मृत्तिका स्मृता । द्वितीया च तृतीया च तदर्धेन प्रकीर्तिता ।। चतुर्थी पञ्चमी चाऽपि तृतीयामृत्तिकासमेति ।। वसिष्ठः – 'अर्धप्रसृतिमात्रा तु प्रथमा मृत्तिका भवेत् । पूर्वपूर्वार्द्धमात्रा तु द्वितीयाद्या प्रकीर्तितेति ।। यत्तु शातातपेनोक्तम् – 'आर्द्रामलकमात्रास्तु ग्रासा इन्दुव्रते स्मृताः । तथैवाहुतयः सर्वाःशौचार्थे याश्च मृत्तिका इति, तद्धस्तशौचाभिप्रायम्, गुदलिङ्गयोः परिमाणान्तरविधानादिति स्मृतिचन्द्रिकायाम् ।।

இங்கு மண்ணின் அளவைச் சொல்லுகிருர் **அங்கிரஸ்**- முதல் ம்ருத்திகை சேரை (விரித்த கை கொள்ளுமளவு) அளவுள்ளது இரண்டாவதுஅதில் பாதி அளவுள்ளது. மூன்ருவது கையளவின் மூன்றிலொரு

பாகமுள்ளது என்று அறியவும். தக்ஷர்:- முதல் மண் சேரையின் அரையளவு, இரண்டாவதும் மூன்றுவதும் அதன் பாதியளவு, நான்காவதும் ஐந்தாவதும் மூன்றுவதின் அளவுக்குச் சமமாகியது. வஸிஷ்டர்:- முதல் ம்ருத்திகை அரைச்சேரையளவுள்ளது. அதின் பாதியளவு உள்ளது இரண்டாவது ம்ருத்திகை, அதின் பாதியளவு உள்ளது மூன்றுவது ம்ருத்திகை.ஆனுல் சாதாதபர்:- ''சாந்த்ராயண வ்ரதத்தில் விதிக்கப்பட்ட அன்னகபளங்களும், அக்னியில் ஹோமம், செய்யும் அன்னுஹுதிகளும், சௌசத்திற்கான ம்ருத்திகைகளும் பச்சை நெல்லிக்கனியளவுள்ளவைகளா யிருக்கவேண்டும்'' என்று விதித்திருக்கின்றுரேயெனில், அது கைகளின் சுத்திக்காகிய ம்ருத்திகையினளவைச் சொல்லியது, குதம் லிங்கம் இவைகளுக்கு வேறு பரிமாணம் விதித்திருப்பதால், என்று ஸ்ம்ருதி சந்த்ரிகையில் கூறப்பட்டுள்ளது.

मूत्रशौचे मृत्सङ्ख्यामाह दक्षः – 'एका लिङ्गे करे तिस्र उभयोर्मृद्वयं स्मृतमिति ।। शातातपोऽपि – 'एका लिङ्गे करे सव्ये तिस्रो द्वे हस्तयोर्द्वयोः । मूत्रशौचं समाख्यातं शुक्ले तु द्विगुणं भवे' दिति ।। यत्तु – 'तिस्रो मृदो लिङ्गशौचे ग्राह्याः स्युर्मूत्रशुद्धये । वामपाणौ मृदः पञ्च तिस्रः पाण्योर्द्वयोरपीत्यादि, तल्लेपभूयस्त्वाभिप्रायम् ।। 'एकां लिङ्गे मृदं दद्याद्वामहस्ते तु मृत्समम् । उभयोर्हस्तयोर्द्वौतु मूत्रशौचं प्रचक्षत' इत्यादिस्मरणात् । मूत्रशौचे मृत्परिमाणमाह दक्षः – 'लिङ्गे तु मृत् समाख्याता त्रिपर्वा पूर्यते यया । दातव्यमुदकं तावन्मृदभावो यथाभवेदिति ।।

மூத்ரசௌசத்தில் மண்ணின் ஸங்க்யையைச் சொல்லுகிறுர்தக்ஷர் - லிங்கத்தில் ம்ருத்திகை ஒன்று, இடது கையில் மூன்று இரண்டு கைகளிலும் தனித்தனி இரண்டு ம்ருத்திகைகள். சாதாதபரும்:- லிங்கத்தில் ஒன்று, இடது கையில் மூன்று, இரண்டு கைகளிலும் தனித்தனி இரண்டு ம்ருத்தி கைகள். இது மூத்ரவிஸர்க்கத்தில். ரேதஸ்ஸின்

விஸர்க்கத்தில் இது இரண்டு மடங்காக விதிக்கப்படுகிறது. ஆனால், "லிங்கத்தில் மூன்று, இடது கையில் ஐந்து இரண்டு கைகளிலும் தனித்தனி மூன்று" என்பது முதலான சில வசனங்கள் இருக்கின்றனவேனில், அவை அதிக லேபமுள்ள விஷயத்தினபிப்ராயமுள்ளவை, "லிங்கத்திலொன்று, இடது கையில் மூன்று, இருகைகளிலும் தனித்தனி இரண்டு ம்ருத்திகைகள் என்று மூத்ர சௌசத்தில் விதிக்கின்றனர்" என்பது போன்ற வசனங்களிருப்பதால். மூத்ரசௌசத்தில் மண்ணின் பரிமாணத்தைச் சொல்லுகின்றார் **தக்ஷர்:**- லிங்கசௌசத்தில் மூன்று விரல்கணுக்கள் நிறையுமளவுள்ள மண் விதிக்கப்பட்டுள்ளது. அந்த மண் சுத்தமாகுமளவு ஜலத்தையுமுபயோகிக்க வேண்டும்.

विवस्वान् – 'पर्वमात्रप्रमाणास्तु लिङ्गशौचे मृदः स्मृताः । आर्द्रामलकमात्रा वा यदि वाऽक्षप्रमाणका इति ॥ शौनकः – 'तत उद्धृततोयेन प्राङ्मुखो वाऽप्युदङ्मुखः । आर्द्रामलकमात्रां वै लिङ्गे प्रक्षिप्य शोधयेदिति ॥ व्यासः – 'विट्छौचं प्रथमं कुर्यान्मूत्रशौचमतः परम् । पादशौचं ततः कुर्यात् करशौचमतः परमिति ॥ आपस्तम्बः – 'अह्नि शौचं तु यत् प्रोक्तं निश्यर्द्धं तत उच्यते । पथि पादं तु विज्ञेयमार्तः कुर्याद्यथाबलमिति ॥ 'वालुकाभिर्यदा शौचं कुर्यात् तदा द्विगुणं कुर्या' दिति चतुर्विंशतिमते ॥

**விவஸ்வான்:**- விரல்கணுவுள்ள ம்ருத்திகைகள் லிங்க சௌசத்தில் விதிக்கப்படுகின்றன, அல்லது பச்சை நெல்லிக் கனியளவு, அல்லது தானிக்காயளவு உள்ளவைகளாயிருக்கலாம். **சௌனகர்:**- பிறகு வெளியிலெடுக்கப்பட் ஜலத்தினால், கிழக்கு அல்லது வடக்குமுகமாய், பச்சை நெல்லிக்கனியளவு மண்ணை லிங்கத்தில் போட்டுச் சுத்திசெய்யவேண்டும். **வ்யாஸர்:**- மலத்தின் சௌசத்தை முதலில் செய்யவேண்டும். பிறகு மூத்ரசௌசத்தைக் செய்யவேண்டும். பிறகு கால்களுக்கும், பிறகு கைகளுக்கும் சௌசம் செய்து கொள்ளவேண்டும்.

ஆபஸ்தம்பர்:- பகலில் விதித்த சௌசத்தில் பாதி இரவிலும், அதன் பாதி வழியிலும் அறியத்தக்கது. வ்யாதியுள்ளவன் தன் சக்திக்குத்தகுந்தவாறு செய்யலாம். ''மண்கிடைக்காவிடில் மணல்களால் சௌசம் செய்து கொண்டால் இரண்டு மடங்காய்ச் செய்து கொள்ளவேண்டும்'' என்று சதுர்விம்சதி மதத்தில் சொல்லப்பட்டுள்ளது.

यत्तु – 'यद्दिवा विहितं शौचं तदर्धं निशि कीर्तितम् । तदर्धमातुरे प्रोक्तमातुरस्यार्धमध्वनीति, एतत्सामर्थ्ययुक्तातुरविषयम् । अन्यथा तु यथासामर्थ्यमेव शौचम् ।। तथा च चन्द्रिकायाम् – 'दिवा शौचस्य निश्यर्धं पथि पादो विधीयते । आर्तः कुर्याद्यथाशक्ति स्वस्थः कुर्याद्यथोदित' मिति । बोधायनोऽपि – 'देशं कालं तथाऽऽत्मानं द्रव्यं द्रव्यप्रयोजनम् । उपपत्तिमवस्थां च ज्ञात्वा शौचं प्रकल्पयेदिति ।।

ஆனல், பகலில் விதிக்கப்பட்ட சௌசத்தின் பாதி இரவிலும், அதன் பாதி வியாதியுள்ளவனுக்கும், அதன் பாதி வழியிலிருப்பவனுக்கும் விதிக்கப்படுகிறது'' என்னும் வசனம் சக்தியுள்ள ஆதுரன் விஷயம். சக்தியில்லாவிடில், சக்திக்குக்தக்கவாறே சௌசம். அவ்விதமே சந்த்ரிகையில் - 'பகலில் விதித்த சௌசத்தின் பாதி இரவிலும், வழியில் கால் பாகமும் விதிக்கப்படுகிறது. வ்யாதியுள்ளவன் சக்திக்குத்தக்கவாறு செய்யலாம். ஸ்வஸ்தனுயிருப்பவன் விதிப்படி செய்யவேண்டும் என்றிருக்கிறது.

போதாயனரும்:- தேசம், காலம், தன் தேஹம், திரவியம், திரவியப்பிரயோஜனம், உபபத்தி, அவஸ்தை இவைகளை அறிந்து அவைகளுக்குத் தக்கவாறு சௌசம் செய்து கொள்ள வேண்டும்.

अनुपनीतादीनां शौचमाह पितामहः – 'न यावदुपनीयन्ते द्विजाश्शूद्रास्तथाऽङ्गनाः । गन्धलेपक्षयकरं शौचमेषां विधीयते ।।

यावच्छुद्धिं न मन्येत तावच्छौचं विधीयते। प्रमाणं शौचसङ्ख्याया न शिष्टैरुपदिश्यत' इति॥ स्त्रीशूद्रयोस्त्वादित्यपुराणे विशेषो दर्शितः — 'स्त्रीशूद्रयोरर्धमानं प्रोक्तं शौचं मनीषिभि' रिति॥ व्यासः – 'कुर्वीतैवं दिवा शौचं रात्रौ स्यादर्धमुच्यते। अशक्तस्य यथाशक्ति शौचमुक्तं तथाऽध्वनि॥ योषितामुक्तशौचार्धं शूद्राणामप्युदाहृत' मिति॥ यस्तु विण्मूत्रोत्सर्जनायोपविष्टस्तन्न करोति, तस्याप्यर्धशौचमाह वृद्धपराशरः – 'उपविष्टस्तु विण्मूत्रं कर्तुं यस्तु न विन्दति। स कुर्यादर्धशौचं तु स्वस्य शौचस्य सर्वदेति।

உபநயனமில்லாதவர் முதலியவர்க்கு சௌசம் சொல்லுகிறார் **பிதாமஹர்:-** உபநயனமாகாத ப்ராம்ஹணர்கள் சூத்ரர்கள், ஸ்த்ரீகள் இவர்களுக்கு, துர்க்கந்தமும் பிசிபிசிப்பும் நீங்கும் வரையில் சௌசம் விதிக்கப்படுகிறது. மனதிற்குச் சுத்தியுண்டாகாத வரையில் சௌசம் விதிக்கப்படுகிறது. சௌசஸங்க்யையின் ப்ரமாணத்தைச் சிஷ்டர்கள் சொல்லவில்லை. ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது **ஆதித்யபுராணத்தில்:-** ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும், சௌசம் (முன் புருஷர்களுக்கு விதித்த ஸங்க்யையில்) பாதியளவு விதிக்கப்பட்டிருக்கிறது. **வ்யாஸர்:-** பகலில் இவ்விதம் சொல்லியபடி சௌசம் செய்யவேண்டும். ராத்ரியில் பாதியும், சக்தியற்றவனுக்கும், வழியிலிருப்பவனுக்கும் சக்திக்குத்தகுந்தபடியும், ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் பாதியளவும் சௌசம் சொல்லப்பட்டிருக்கின்றது. மலமூத்ர விஸர்ஜனத்திற்காக உட்கார்ந்தவன் அதைச் செய்யாமலெழுந்தாலும் பாதி சௌசம் செய்து கொள்ள வேண்டுமென்கிறார் **வ்ருத்த பராசரர்:-** மலமூத்ர விஸர்ஜனத்திற்காக உட்கார்ந்தவன் அதைச் செய்யாவிடினும், தனக்கு எப்பொழுதும் விஹிதமான சௌசத்தில் பாதி சௌசம் செய்துகொள்ளவேண்டும்.

भोजने तु गुदस्रावे शौचमाह बृहस्पतिः – भुञ्जानस्य तु विप्रस्य कदाचित् स्रवते गुदम्। उच्छिष्टमशुचित्वं च तस्य शौचं कथं भवेत्।। पूर्वं कृत्वा तु शौचं तु पश्चात् स्नानं समाचरेत्। ततः कृत्वोपवासं च पञ्चगव्येन शुध्यतीति।। शरीरमलशौचं वक्तुं शरीरमलानाह मनुः – 'ऊर्ध्वं नाभेर्यानि खानि तानि मेध्यानि सर्वशः। यान्यधस्तान्यमेध्यानि देहाच्चैव मलाश्च्युताः।। वसाशुक्रमसृङ्मज्जा मूत्रविट्कर्णविण्णखाः। श्लेष्माश्रुदूषिका स्वेदो द्वादशैते नृणां मला' इति।। श्रुतिरपि – 'ऊर्ध्वं वै पुरुषस्य नाभ्यै मेध्यमवाचीनममेध्यमिति।। पुरुषस्य नाभेरूर्ध्वं मेध्यं - शुद्धम्, अवाचीनं - नाभेरधोभागः, अमेध्यम् - अशुद्धमित्यर्थः। स्वीयानामेतेषां मलानां स्पर्शे सति यथा योग्यं मृज्जलाभ्यां शुद्धिरित्याह मनुः — 'विण्मूत्रोत्सर्गशुध्यर्थं मृद्वार्यादेयमर्थवत्। दैहिकानां मलानां च शुद्धिषु द्वादशस्वपीति।।

*போஜனகாலத்தில் அபானத்தில் மலம் ஸ்ரவித்தால் சௌசம் சொல்லுகிறுர்* **ப்ருஹஸ்பதி**:- *ப்ராம்ஹணன் சாப்பிடும் பொழுது ஒரு ஸமயத்தில் குதத்தில் மலம் ஸ்ரவித்தால் அவனுக்கு இரண்டுவிதமான அசுத்தி இருக்கிறது. அவனுக்கு சௌசம் எப்படி எனில், முதலில் சௌசம் செய்து கொண்டு பிறகு ஸ்நானம் செய்ய வேண்டும். பிறகு உபவாஸம் செய்து பஞ்சகவ்யப்ராசனம் செய்து சுத்தனுகிறுன். சரீரமலங்களைத் தொட்டால் சுத்தியை விதிப்பதற்குச் சரீர மலங்கள் இவையென்கிறுர்* **மனு**:- *நாபிக்கு மேல் உள்ள இந்திரியங்கள் சுத்தமானவை, கீழ் உள்ளவை அசுத்தமானவை. தேஹத்தினின்றும் நழுவிய மலங்களும் அசுத்தமேயாம், வஸை (ஊன்நீர்) ரேதஸ், ரக்தம், மஜ்ஜை எலும்பினுள் ஜவ்வு மூத்ரம், விஷ்டை, காதினுள் குறும்பி, நகம், கோழை, தண்ணீர், கண் பீளை, வியர்வை இப்பன்னிரண்டும் மனிதர்களின் மலங்களாம்.* **வேதமும்**:- *மனிதனின் நாபிக்குமேலுள்ளவை சுத்தமானவை. அதற்குக் கீழுள்ளவை அசுத்தமானவை.*

முன்சொல்லிய தன்னுடைய பன்னிரண்டு மலங்களைத் தொட்டால் தகுந்தபடி மண் ஜலம் இவைகளால் சுத்தி செய்து கொள்ள வேண்டுமென்கிறார் மனு - மலமூத்ர விஸர்க்கத்தில் சௌசத்திற்குவேண்டிய அளவு மண்ணும் ஜலமும் க்ரஹித்துக் கொள்ளவேண்டும். தேஹத்திலுள்ள (பன்னிரண்டு) மலங்களின் பன்னிரண்டு சுத்திகளிலும் தகுந்தபடி மண் ஜலம் இவைகளைக் கிரஹித்துக் கொள்ள வேண்டும்.

अत्र विशेषमाह बोधायनः – 'आददीत मृदोऽपश्च षट्सु पूर्वेषु शुद्धये । उत्तरेषु तु षट्स्वद्भिः केवलाभिर्विशुध्यती' ति ।। परकीयमलस्पर्शने शुद्धिमाह देवः – 'मानुषास्थि वसां विष्ठामार्तवं मूत्ररेतसी। मज्जानं शोणितं वाऽपि परस्य यदि संस्पृशेत्। स्नात्वाऽपमृज्य लेपादीनाचम्य स शुचिर्भवेत् । तान्येव स्वानि संस्पृश्य पूतःस्यात् परिमार्जनादिति ।। परिमार्जनं प्रक्षालनम् ।।

இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார் போதாயனர் - முந்திய ஆறு மலங்களின் சுத்தியில் மண் ஜலம் இரண்டையுமுபயோகிக்கவேண்டும். பிந்திய ஆறு மலங்களின் சுத்தியில் ஜலத்தை மட்டுமுபயோகித்துச் சுத்தி செய்வதாலேயே சுத்தனாகிறான். பிறரின் மலங்களை ஸ்பர்சித்த விஷயத்தில் சுத்தியைச் சொல்லுகிறார் தேவலர்:- மனிதனுடைய எலும்பு, வஸை, மலம், ரஜஸ், மூத்ரம், சுக்லம், மஜ்ஜை, ரக்தம், இவைகளைத் தொட்டால், ஸ்நானம் செய்து லேபங்களைத் துடைத்து ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். மேல் சொல்லியவை தன்னுடையவையாகில் அவைகளின் ஸ்பர்சத்தில் அலம்புவதால் சுத்தனாகிறான்.

अत्र विशेषमाह विष्णुः – 'नाभेरधस्तात् कायिकैर्मलैस्सुराभिर्मद्यैर्वोपहतो मृत्तोयैस्तदङ्गं प्रक्षाल्याचान्तः शुध्येत्। अन्यत्रोपहतो मृत्तोयैस्तदङ्गं प्रक्षाल्य स्नानेन। इन्द्रियेषूपहतस्तूपोष्य स्नात्वा पञ्चगव्येन

दशनच्छदोपहतश्चे'ति ॥ अत्र यमः – 'मूत्रे तिस्रः पादयोस्तु हस्तयोस्तिस्र एव तु । मृदः पञ्च दशामेध्ये हस्तादीनां विशेषतः। एतदात्मीयमूत्रादिस्पर्शे शौच मुदाहृतम् । उत्सर्गकालादन्यत्र परकीयेषु पठ्यते ॥ परस्य शोणितस्पर्शे रेतोविण्मूत्रजे तथा । चतुर्णामपि वर्णानां द्वात्रिंशन्मृत्तिकाः स्मृताः' इति ॥

இதில் விசேஷம் சொல்லுகிறுர் விஷ்ணு:- தேஹத்தின் மலங்கள், மத்யம் கள் இவைகளால் நாபிக்குக் கீழுள்ள அவயவங்களில் ஸ்பர்சிக்கப்பட்டு அசுத்தனுனல், அசுத்தமான அங்கத்தை மண் ஜலம் இவைகளால் சுத்தி செய்து ஆசமனம் செய்தால் சுத்தனுவான். நாபிக்கு மேலுள்ள அவயங்களிலானுல் மண் ஜலமிவைகளினுல் அந்த அங்கத்தை அலம்பி ஸ்நானத்தால் சுத்தி. இந்த்ரியங்களில் அசுத்தனுனல் உபவாஸம், ஸ்நானம், பஞ்சகவ்யப்ராசனம் இவைகளால் சுத்தி, உதடுகளில் அசுத்தனுனலும் இதே முறை. இதில் யமன்:- மூத்ர ஸ்பர்சத்தில், கால்களில் மூன்று மண்கள், கைகளில் மூன்று, மலஸ்பர்சத்தில் கைகளில் ஐந்து, கால்களில் பத்து. இது தனது மூத்ராதிகளின் ஸ்பர்சத்தில் சொல்லப்பட்டது. மல மூத்ர விஸர்க்காலம் தவிர மற்றகாலத்தில் பிறருடைய மூத்ராதி ஸ்பர்சத்தில் சொல்லப்படுகிறது. பிறருடைய ரக்தம், சுக்லம், மலம், மூத்ரம் இவைகளின் ஸ்பர்சத்தில் நான்கு வர்ணத்தார்களுக்கும் 32-ம்ருத்திகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

स्मृतिरत्ने – सकर्दमं तु वर्षाम्बु प्रविश्य ग्रामसङ्कटे । जङ्घयोर्मृत्तिकास्तिस्रः पादयोर्द्विगुणं न्यसेदिति ॥ स्मृत्यर्थसारे – 'एका तु मृत्तिका लिङ्गे तिस्रः सव्यकरे मृदः । करद्वये मृद्द्वयं स्यात् मृत् प्रमाणमनेकधा ॥ त्रिपर्वा पर्वमात्रा वा मृत्तिकाऽक्षप्रमाणका । आर्द्रामलकमात्रा वा मूत्रशौचे तु मृत्तिका ॥ मूत्रात्तु द्विगुणं शुक्ले मैथुने त्रिगुणं स्मृतम् । पुरीषे पञ्चमृत्क्षेपः करे वामे दश स्मृताः ॥ करयोः सप्त

दातव्याः पुरीषे मृत्प्रमाणकम्। अर्धप्रसृतिमात्राऽऽद्या तत्तदर्धास्ततः पराः ॥ यद्वाऽपाने मृदस्तिस्रः प्रसृत्यर्धत्रिभागकाः । यद्वा प्रसृति मात्रास्त्रिः पायोः पाण्योः पृथक् पृथक् ॥ एतच्छौचं गृहस्थानां यतीनां तु चतुर्गुणम् ॥ दिवा यद्विहितं शौचं तदर्धं निशि कीर्तितम्। तदर्धमातुरे प्रोक्त मातुरस्यार्धमध्वनि ॥ स्त्रीशूद्रादेरशक्तानां बालानां चोपनीतितः । गन्धलेपक्षयकरं शौचं कार्यमसङ्ख्यया ॥ एकैकया मृदा पादहस्तप्रक्षालनं ततः । अमेध्याङ्गमलस्पर्शे मृत्तिकाषट्कमिष्यते ॥ मेध्याङ्गमलसंस्पर्शे शौचं प्रक्षालनं स्मृतम्। परविण्मूत्रसंस्पर्शे द्वात्रिंशन्मृत्तिकाः स्मृता इति ॥

**ஸ்ம்ருதிரத்னத்தில்**:- *க்ராமத்தில் குறுகிய வழியில் சேறுடன் கூடி மழை ஜலத்தில் இறங்கினால், முழங்கால்களுக்கு மூன்று மண்களும், பாதங்களுக்கு இருமடங்கு உபயோகிக்க வேண்டும்.* **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்**:- *மூத்ர சௌசத்தில், லிங்கத்தில் ஒரு ம்ருத்திகையும், இடதுகையில் இரண்டு, மறுபடி இரண்டு கைகளிலும் இரண்டு மண்களையும் உபயோகிக்க வேண்டும். மண்ணின் ப்ரமாணம் அநேகவிதம். மூன்று விரல்கணு, அல்லது ஒரு விரல்கணு, அல்லது தானிக்காயளவு, அல்லது பச்சை நெல்லிக் கனியளவு உள்ள ம்ருத்திகை மூத்ர சௌசத்தில் விதிக்கப்படுகிறது. மூத்ர சௌசத்தின் இரண்டு மடங்கு சுக்லஸ்ராவத்திலும், மூன்று மடங்கு மைதுனத்திலும், சௌசம் விதிக்கப்பட்டிருக்கின்றன. மல விஸர்க்கத்திலும், அபானத்தில் ஐந்து, இடதுகையில் பத்து, இருகைகளிலும் ஏழு மண்களை உபயோகிக்க வேண்டும். மல சௌசத்தில் மண்ணின் ப்ரமாணமாவது - முதல் மண் அரைச்சேரை அளவு, பிறகு உள்ளவை முந்தியதின் அளவில் பாதியளவுள்ளவை. அல்லது அபானத்தில் மூன்றும், சேரை, அதன்பாதி, சேரையின் மூன்றிலொரு பாகமுள்ளவை. அல்லது அபானத்தில் மூன்றும் சேரையளவுள்ளவை. கைகளுக்கும் தனித்தனி மூன்று*

இவ்விதமே. இது க்ருஹஸ்தர்களுக்குச் சொல்லப்பட்டது. இது இரண்டு மடங்கு ப்ரம்ஹசாரிகளுக்கு, மூன்று மடங்கு வானப்ரஸ்தர்களுக்கு, நான்கு மடங்கு ஸன்யாஸிகளுக்கு. பகலில் விதிக்கப்பட்ட சௌசத்தின் பாதி இரவிலும், அதன் பாதி வ்யாதிஸ்தனுக்கு, அதன் பாதி வழிப்போக்கனுக்கு, ஸ்த்ரீ சூத்ரன் முதலியவர்களுக்கும், சக்தியற்றவருக்கும், உபநயனம் வரை சிறுவருக்கும், கணக்கில்லாமல் நாற்றமும் பற்றும் நீங்கும் வரையில் சௌசம் விதிக்கப்படுகிறது. ஸங்க்யை இல்லை. பிறகு ஒவ்வொரு ம்ருத்திகையால் கால் கைகளை அலம்ப வேண்டும். நாபிக்குக் கீழுள்ள அங்கத்தின் மலம்பட்டால் ஆறு மண்களால் சுத்தி. நாபிக்குமேலுள்ள அங்கத்தின் மலம்பட்டால் அலம்புவதால் சுத்தி. பிறனுடைய மலமூத்ர ஸம்பந்தத்தில் 32-ம்ருத்திகைகளால் சுத்தி.

एवमुक्तशौचकरणेऽपि यस्य भावशुद्धिर्नास्ति तस्याशुद्धिरेवेत्याह दक्षः – 'शौचं तु द्विविधं प्रोक्तं बाह्यमाभ्यन्तरं तथा । मृज्जलाभ्यां स्मृतं बाह्यं भावशुद्धिस्तथाऽऽन्तरम् ।। शौचं तु परमं बाह्यं तस्मादाभ्यन्तरं परम् । उभयेन शुचिर्यस्तु स शुचिर्नेतरः स्मृत सति ।। व्याघ्रपादोऽपि – 'गङ्गातोयेन कृत्स्नेन मृद्भारैश्च नगोपमैः । आमृत्योराचरन् शौचं भावदुष्टो न शुध्यतीति ।। बोधायनः – 'कालोऽग्निर्मनसः शुद्धिरुदकाद्युपलेपनम् । अविज्ञातं च भूतानां षड्विधं शौचमुच्यत' इति ।।

இவ்விதம் சொல்லிய சௌசத்தைச் செய்தும் எவனுக்கு மனச்சுத்தி இல்லையோ அவனுக்கு அசுத்தியேதான் என்கிறார் தக்ஷர்:- சௌசமென்பது, பாஹ்யம் ஆப்யந்தரம் என இருவகை. மண் ஜலம் இவைகளால் செய்வது பாஹ்யம். மனச்சுத்தி ஆந்தரம். பாஹ்ய சௌசம் சிறந்தது. அதைவிடச் சிறந்தது ஆப்யந்தர சௌசம். இவ்விரண்டினாலும் எவன் சுத்தனோ அவனே சுத்தனெனப்படுகிறான். மற்றவன் சுத்தனெனப்படுவ தில்லை. வியாக்ரபாதரும்:- கங்கா ஜலம் முழுவதாலும்,

மலேக்கொப்பான் மண் குவியல்களாலும், சாகும் வரையில் சௌசம் செய்து கொண்டவனாயினும் மனச்சுத்தி யில்லாதவன் சுத்தனாவதில்லே. போதாயனர்:- காலம், அக்னி, மனச்சுத்தி, ஜலம் முதலியவை, மண் முதலியவை, அவிக்ஞாதம் என்று ஆறுவிதமான சௌசம் பிராணிகளுக்குச் சொல்லப்படுகின்றது.

शौचाकरणे प्रत्यवायो हारीतेन दर्शितः – 'भ्रष्टशौचं नरं दृष्ट्वा प्रह(स)रन्तीह राक्षसाः । यक्षाः पिशाचा भूतानि ये चान्ये दुष्टचारिणः। स्नानं दानं तथा ध्यानं मन्त्रकर्मविधिः क्रिया । मङ्गलाचारनियमाः शौचभ्रष्टस्य निष्फला इति ।। बोधायनः 'शौचे यत्नस्सदा कार्यः शौचमूलो द्विजः स्मृतः । शौचाचारविहीनस्य समस्ता निष्फलाः क्रियाः ।। यस्य शौचे तु शैथिल्यं व्रतं तस्य परिक्षतमिति ।। अपरार्के – शुचिं देवाश्च रक्षन्ति रक्षन्ति पितरश्शुचिम्। शुचेर्बिभ्यति रक्षांसि ये चान्ये दुष्टचारिण इति। व्यासः – अपवित्रः पवित्रो वा सर्वावस्थां गतोऽपि वा । यः स्मरेत् पुण्डरीकाक्षं स बाह्याभ्यन्तरः शुचिरिति ।।

சௌசம் செய்துகொள்ளாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார் ஹாரீதர்:- சௌசமில்லாத மனிதனேச் கண்டு, ராக்ஷஸர், யக்ஷர். பிசாசர், பூதங்கள், இதர துஷ்டர் எல்லோரும் பரிஹஸிக்கின்றனர். (ஹிம்ஸிக்கின்றனர்) சௌசநியம மற்றவன் செய்யும் ஸ்நானம், தானம், த்யானம், மந்த்ரஜபம், செய்யும், கர்மானுஷ்டானங்கள், மங்களம், ஆசாரம், நியமம் இவையெல்லாம் பயனற்றதாகின்றன. போதாயனர்:- எப்பொழுதும் சௌசத்தில் ப்ரயத்னம் செய்யவேண்டும். ப்ராம்ஹணன் சௌசத்தையே ஆதாரமாயுடையவன். சௌசாசாரம் இல்லாதவனின் கர்மங்களெல்லாம் பயனற்றவையே. எவனுக்குச் சௌசத்தில் குறைவிருக்கிறதோ அவன் நியமம் வீணாகியதே. அபரார்க்கத்தில்:- சுத்தனாயிருப்பவனேத் தேவர்களும், பித்ருக்களும் காக்கின்றனர். ராக்ஷஸர்களும்,

மற்றும் துஷ்டராய் ஸஞ்ஸரிக்கும் பிசாசஜாதிகளும் சுத்தனிடமிருந்து பயப்படுகின்றன. வ்யாஸர்:- சுத்தனுயினும், அசுத்தனுயினும், எவ்வித அவஸ்தையே அடைந்தவனுயினும், எவன் புண்டரீகாக்ஷனை (செந்தாமரைக் கண்ணனான விஷ்ணுவை) ஸ்மரிக்கின்றானே அவன் பாஹ்ய ஆப்யந்தர சுத்திகளுடன்கூடி சுத்தனே.

## गण्डूषविधिः-

तत्र पराशरः-कृत्वाऽथ शौचं प्रक्षाल्य पादौ हस्तौ मृज्जलैः । निबद्धशिखकच्छस्तु गण्डूषाचमनं चरेदिति ।। स्मृतिसारे – विप्रस्य दक्षिणे भागे देवास्तिष्ठन्ति नित्यशः । आसीन एव गण्डूषान् वामभागे विसर्जयेत् ।। मूत्रे पुरीषे भुक्त्यन्ते तथैवान्यस्य भक्षणे। चतुरष्ट द्विषड्द्व्यष्ट गण्डूषैस्तुविशुध्यति इति ।। व्यासः – अपां द्वादश गण्डूषान् पुरीषोत्सर्जने द्विजः । मूत्रे तु चतुरः कुर्याद्भोजनान्ते तु षोडशेति । स्मृत्यन्तरे – अपूपभक्षणे भुक्तौ विण्मूत्रोत्सर्जनादिषु । आसीन एव गण्डूषान् वामभागे विसर्जयेत्। मूत्रे पुरीषे भुक्त्यन्ते तथैव द्विजधावने। चतुरष्ट द्विषड्द्व्यष्ट गण्डूषैः शुद्धिरिष्यत इति ।। गौतमः – गण्डूषस्याथ समये तर्जन्या वक्त्रचालनम्। करोति यदि मूढात्मा रौरवे नरके पतेदिति ।।

### கண்டுஷ (வாய்க்கொப்புளித்தலின்) விதி

அதில் பராசரர்:- சௌசம் செய்து, பிறகு மண் ஜலம் இவைகளால் கால், கை இவைகளை அலம்பி, சிகை (குடுமி) கச்சம் இவைகளைக் கட்டிக் கொண்டு கண்டூஷம் ஆசமனம் இவைகளைச் செய்யவேண்டும். ஸ்ம்ருதிஸாரத்தில்:- ப்ராம்ஹணனின் வலது பாகத்தில் நித்யமும் தேவர்கள் இருக்கின்றார்கள். ஆகையால் உட்கார்ந்து கொண்டு இடது பாகத்திலேயே கண்டூஷங்களை விடவேண்டும். மூத்ர விஸர்ஜனம், மல விஸர்ஜனம், போஜனம்,

தின்பண்டங்களைத் தின்பது இவைகளின் முடிவில், முறையே நாலு, எட்டு, பன்னிரண்டு, பதினாறு கண்டூஷங்கள் செய்தால் சுத்தனாகிறான். வ்யாஸர்:- மல விஸர்ஜனத்தில் பன்னிரண்டு, மூத்ர விஸர்கத்தில் நாலு, போஜனாந்தத்தில் பதினாறு கண்டூஷங்கள் செய்ய வேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- அப்பம் தின்பது, போஜனம், மல மூத்ரவிஸர்ஜனம் முதலியவைகளில் உட்கார்ந்தவனாகவே இடது பாகத்தில் கண்டூஷங்களை விடவேண்டும். மூத்ரவிஸர்கம், மலவிஸர்கம், போஜனம், தந்ததாவனம் இவைகளில் முறையே நாலு, எட்டு, பன்னிரண்டு, பதினாறு கண்டூஷங்களால் சுத்தி விதிக்கப்படுகிறது. கௌதமர்:- கண்டூஷம் செய்யும் பொழுது தர்ஜனியால் (ஆள்காட்டி விரலால்) வாயை அசைத்தால் (சோதித்தால்) அம்மூடன் ரௌரவமெனும் நரகத்தில் விழுவான்.

## आचमनविधिः

अथाचमनम् ॥ तत्र वृद्धपराशरः – कृत्वाऽथ शौचं पादौ हस्तौ च मृज्जलैः । कृत्वोपवीतं सव्येंऽसे वाङ्मनःकायसंयतः ॥ निबद्धशिखकच्छस्तु द्विज आचमनं चरेदिति । देवलः – इत्येवमद्भिराजानु प्रक्षाल्य चरणौ पृथक् । हस्तौ चामणिबन्धाभ्यां कुर्यादाचमनं ततः ॥ केशान्नीवीमधः कायमस्पृशन् धरणीमपि । यदि स्पृशति चैतानि भूयः प्रक्षालयेत् करमिति ॥ व्यासः – प्रक्षाल्य पादौ हस्तौ च मुखमद्भिस्समाहितः । दक्षिणं बाहुमुद्धृत्य कृत्वा जान्वन्तरे करौ ॥ आमुच्य प्राङ्मुखः पश्चाद्दन्तधावनमारभेदिति ॥

### ஆசமனவிதி

இனி ஆசமனம் சொல்லப்படுகிறது. அதில் வ்ருத்த பராசரர்:- சௌசம் செய்து பிறகு மண்ணினாலும் ஜலத்தினாலும் கால் கைகளை அலம்பி, இடது தோளில் உபவீதத்தைத் தரித்து, வாக்கு, மனம், தேஹம் இவைகளை

அடக்கி, சிகை, கச்சம் இவைகளைக் கட்டி ப்ராம்ஹணன் ஆசமனம் செய்யவேண்டும். **தேவலர்:-** இவ்விதம் ஜலத்தால் கால்களை முழங்கால் வரையிலும், கைகளை மணிக்கட்டு வரையிலும், தனித்தனியாய் அலம்பி, பிறகு ஆசமனம் செய்ய வேண்டும். மயிர், கச்சம், நாபிக்குகீழான அங்கம், பூமி இவைகளைத் தொடாமல் செய்ய வேண்டும். தொட்டால் மறுபடி கையை அலம்பவேண்டும். **வ்யாஸர்:-** கால் கை வாய் இவைகளை ஜலத்தால் அலம்பி, கவனிப்புடன், உபவீதியாய், முழங்கால்களின் நடுவில் கைகளை வைத்துக் கொண்டு, கிழக்கு நோக்கியவனாய் ஆசமனம் செய்து, பிறகு தந்ததாவனத்தை (பல் துலக்குவதை) ஆரம்பிக்க வேண்டும்.

स्मृत्यर्थसारे – पादौ हस्तौ प्रक्षाल्य यज्ञोपवीती पादौ भूमौ प्रतिष्ठाप्य बद्धकच्छशिखः पुण्डरीकाक्षमिष्टदैवतं स्मृत्वाऽऽचामेदिति । दिङ्नियममाह हारीतः – 'ऐशान्यभिमुखो भूत्वोपस्पृशेत्तु यथाविधि इति ।। उपस्पृशेत् आचामेदित्यर्थः ।। याज्ञवल्क्यः – अन्तर्जानु शुचौ देश उपविष्ट उदङ्मुखः । प्राग्वा ब्राह्मेण तीर्थेन द्विजो नित्यमुपस्पृशेदिति। अन्तर्जानु - जान्वोरन्तरा, अरत्नीकृत्वेत्यर्थः ।। 'अन्तरूर्वोररत्नी कृत्वा त्रिरपो हार्दाः पिबेदिति हारीतस्मरणात् । उपविष्ट इति गमनादिनिषेधः । न गच्छन्न शयानश्च न तिष्ठन्न परं स्पृशन् । न हसन्नैव सञ्जल्पन् नात्मानमवलोकयन्निति स्मरणात् ।।

**ஸ்ருத்யர்த்தஸாரத்தில்:-** கால் கைகளை அலம்பி, உபவீதியாய், கால்களைப் பூமியில் வைத்துக் கொண்டு சிகை, கச்சம் இவைகளைக் கட்டிக் கொண்டு, இஷ்ட தைவமான செந்தாமரைக் கண்ணனை ஸ்மரித்து ஆசமனம் செய்யவேண்டும். திக்கு நியமத்தைச் சொல்லுகிறார் **ஹாரீதர்:-** ஈசான திக்கை நோக்கியவனாய் விதிப்படி ஆசமனம் செய்ய வேண்டும். **யாக்ஞவல்க்யர்:-** ப்ராம்ஹணன் எக்காலத்திலும், சுத்தமான இடத்தில், வடக்கு அல்லது கிழக்கு நோக்கியவனாய் உட்கார்ந்து,

முழங்கால்களின் நடுவில் கைகளை வைத்துக் கொண்டு, ப்ராம்ஹ தீர்த்தத்தால் ஆசமனம் செய்ய வேண்டும் 'துடைகளுக்கு நடுவில் முழங்கைகளை வைத்துக் கொண்டு. மார்புவரை செல்லும் ஜலத்தை மூன்று தடவை குடிக்க வேண்டும்' என்று ஹாரீதர் விதித்திருப்பதால் அந்தர்ஜானு என்பதற்கு இவ்விதம் அர்த்தம் சொல்லப்பட்டது. 'உட்கார்ந்தவனாய்' என்பதால் நடப்பது முதலியதற்கு நிஷேதம்; 'நடந்தும் படுத்தும், நின்றும், பிறனைத் தொட்டுக் கொண்டும், சிரித்துக் கொண்டும், பேசிக்கொண்டும், தன் சரீரத்தைப் பார்த்துக் கொண்டும் ஆசமனம் செய்யக்கூடாதென்று ஸ்ம்ருதி உள்ளது.

भरद्वाजः— जङ्घान्तं जानुपर्यन्तमपि वा चरणद्वयम्। कूर्परान्तं करं सम्यक् क्षालयेत् प्रथमं बुधः ॥ उपविश्य शुचौ देशे प्राङ्मुखो ब्रह्मसूत्रधृक्। बद्धचूडः कुशकरो द्विजः शुचिरुपस्पृशेदिति ॥ स्मृतिभास्करे – दक्षिणं तु करं कृत्वा गोकर्णाकृतिवत् पुनः । त्रिः पिबेद्दक्षिणेनाम्बु द्विरास्यं परिमार्जयेदिति ॥ प्रदीपिकायाम् – संहताङ्गुलिना तोयं गृहीत्वा पाणिना द्विजः । मुक्त्वाऽङ्गुष्ठकनिष्ठे तु शेषेणाचमनं चरेदिति ॥ व्यासः – गोकर्णाकृतिहस्तेन माषमग्नं जलं पिबेत् । तन्न्यूनमधिकं पीत्वा सुरापानसमं भवेदिति ॥ भरद्वाजः - आयतं दक्षिणं कृत्वा गोकर्णाकृतिवत् करम् । माषमज्जनमात्रास्तु सङ्गृह्य त्रिः पिबेदप इति ॥ देवलः – अप्स्वीक्षितासु हृदयं प्राप्तासु ब्राह्मणः शुचिः । राजन्यः कण्ठमास्यं वै विट् शूद्रः स्पर्शनाच्छुचिरिति ॥ स्पर्शनात्, तालुनेति शेषः ॥ शूद्रग्रहणं स्त्रीणामपि प्रदर्शनार्थम् ॥

பரத்வாஜர்:- முதலில், கணுக்கால் அல்லது முழங்கால் வரை கால்களையும், முழங்கைவரை கைகளையும் நன்றாய் அலம்பவேண்டும். பிறகு சுத்தமான ஸ்தலத்தில் கிழக்கு நோக்கி உட்கார்ந்து, உபவீதம் தரித்தவனாய், சிகையைக் கட்டியவனாய், குசத்தைக் கையில் தரித்தவனாய், சுத்தனாய் இருந்து ப்ராம்ஹணன்

ஆசமனம் செய்யவேண்டும். ஸ்ம்ருதிபாஸ்கரத்தில்:- வலதுகையைப் பசுவின் காது போல் செய்து அதனால் மூன்று தடவை ஜலத்தைப் பருகவேண்டும். இரண்டுதடவை வாயைத் துடைக்க வேண்டும். ப்ரதீபிகையில்:- எல்லாவிரல்களும் சேர்ந்த வலதுகையால் ஜலத்தை எடுத்து, பெருவிரல், சுண்டுவிரல் இவைகளை நீக்கி மீந்த ஜலத்தால் ஆசமனம் செய்ய வேண்டும். வ்யாஸர்:- பசுவின் காதுபோன்ற கையினால் மாஷம் முழுகுமளவுள்ள ஜலத்தைப் பருகவேண்டும். அதற்கு அதிகம் அல்லது குறைந்த ஜலத்தைப் பருகினால் ஸுராபானத்திற்குச் சமமாகும். மாஷம் உளுந்து. உள்ளங்கையிலுள்ள ரேகை என்பர் சிலர். பரத்வாஜர்:- வலதுகையை விரித்து, பசுவின் காதுபோல் செய்து, மாஷம் முழுகுமளவுள்ள ஜலத்தை எடுத்து மூன்று தடவை பருகவேண்டும். தேவலர்:- கண்ணால் பார்க்கப்பட்டுப் பருகப்பட்ட ஜலம் மார்பைச் சேர்ந்தபொழுது ப்ராம்ஹணன் சுத்தனாகிறான். கண்டத்தை அடைந்தால் க்ஷத்ரியனும், வாயை அடைந்தால் வைச்யனும், ஸ்பர்சத்தால் சூத்ரனும் சுத்தனாகிறான். மோவாய்க் கட்டையினால் ஸ்பர்சித்ததால் என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். இங்கு சூத்ரசப்தம் ஸ்த்ரீகளையும் குறிப்பதற்கு.

तथा च याज्ञवल्क्यः – हृत्कण्ठतालुगाभिस्तु यथासङ्ख्यं द्विजातयः । शुध्येरन् स्त्री च शूद्रश्च सकृत् स्पृष्टाभिरन्तत इति ॥ सकृदेव ताल्वन्तेन स्पृष्टाभिरद्भिरित्यर्थः ॥ अप्सु प्राशासु हृदयं ब्राह्मणः शुद्धिमाप्नुयात् । राजन्यः कण्ठं तालु विट् स्त्रीशूद्रौ तु तदन्तत इति स्मरणात् । मनुरपि – हृद्गाभिः पूयते विप्रः कण्ठगाभिस्तु भूमिपः । वैश्योऽद्भिः प्राशिताभिस्तु शूद्रः स्पृष्टाभिरन्तत इति ॥ स्मृत्यर्थसारे – हृत्कण्ठतालुगाभिस्तु अद्भिः शुद्धाः क्रमाद्द्विजाः । स्त्रीशूद्रानुपनीता अन्ततस्तालौ सकृत्स्पृष्टाभिः शुद्धा इति ॥ बोधायनः – गताभिर्हृदयं विप्रः कण्ठ्याभिः क्षत्रियः शुचिः । वैश्योऽद्भिः प्राशिताभिस्स्यात्

स्त्रीशूद्रौ स्पृश्य चान्तत इति हृदयङ्गमानामपां परिमाणमाहोशना – माषमज्जनमात्रा आपो हृदयङ्गमा भवन्तीति ।।

அவ்விதமே யாக்ஞவல்க்யர்:- மார்பு, கண்டம், தாலு இவைகளை அடைந்த ஜலத்தால் முறையே மூன்று வர்ணத்தாரும் சுத்தராகிறார்கள். ஸ்த்ரீகளும், சூத்ரர்களும் ஒரு தடவை தாலுவை ஸ்பர்சித்த ஜலத்தால் சுத்தராகின்றனர். தாலுவின் அடியால் ஒரே தடவை ஸ்பர்சித்த ஜலத்தால் என்று பொருள். "ஆசமன ஜலம் மார்பை அடைந்ததும் ப்ராஹ்மணனும், கண்டத்தை அடைந்ததும் க்ஷத்ரியனும், தாலுவை அடைந்ததும் வைச்யனும், ஸ்த்ரீ சூத்ரன் இவர்கள் தாலுவின் அடியையடைந்ததும் சுத்தராகின்றனர்" என்று ஸ்ம்ருதி இருப்பதால். 'தாலு' மேலவாய்க்கட்டை. **மனுவும்:-** மார்பை அடையும் ஜலத்தால் ப்ராம்ஹணனும், கழுத்தை அடையும் ஜலத்தால் க்ஷத்ரியனும், வாயிற் சென்ற ஜலத்தால் வைச்யனும், தாலுவின் அடியால் ஸ்பர்சிக்கப்பட்ட ஜலத்தால் சூத்ரனும் சுத்தராகின்றனர். **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** மார்பு, கண்டம், தாலு இவைகளை அடையும் ஜலத்தால் முறையே மூன்று வர்ணத்தாரும், தாலுவின் அடியைத் தொடும் ஜலத்தால் ஒரு தடவையில் ஸ்த்ரீ, சூத்ரன் அனுபநீதன் இவர்களும் சுத்தராகின்றனர். **போதாயனர்:-** மார்பை அடைந்த ஜலத்தால் ப்ராம்ஹணனும், கண்டத்தை அடைந்த ஜலத்தால் க்ஷத்ரியனும், முகத்தை அடைந்த ஜலத்தால் வைச்யனும், தாலுவை ஸ்பர்சித்த ஜலத்தால் ஸ்த்ரீ சூத்ரர் இவர்களும் சுத்தராகின்றனர். மார்பை அடையும் ஜலத்தின் பரிமாணத்தைச் சொல்லுகிறார் உசநஸ்:- உளுந்து முழுகும் ப்ரமாணமுள்ள ஜலம் மார்பை அடையக்கூடியதாகிறது.

अत्रोदकनियममाह शङ्खः – अद्भिस्समुद्धृताभिस्तु हीनाभिः फेनबुद्बुदैः । वह्निना च न तप्ताभिर्न क्षाराभिरुपस्पृशेदिति ।। भारद्वाजः – पक्वं सफेनं कलुषं सदुर्गन्धं सबुद्बुदम् । उष्णं समृत्तिकं क्षारं

त्यजेदाचमनेऽजलम् ।। तिष्ठन्नमन् हसन् जल्पन् शृण्वन्नन्त्यजभाषणम् । अन्यं स्पृशन् दिशः पश्यन्न कदाचिदुपस्पृशेत् ।। काकाश्वरखविट् क्रोडताम्रचूडरजस्वलाः । व्रात्यान्त्यजाति पतितान् पश्यन्नोपस्पृशेद्-द्विजः इति ।।

இங்கு ஜலத்தின் நியமத்தைச் சொல்லுகிறார் சங்கர்:- கையால் எடுக்கப்பட்ட ஜலம் நுரை, குமிழி இவையில்லாததாயிருக்க வேண்டும். அக்னியில் சூடேறியதும், உறைப்புள்ளதுமான ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது. பாரத்வாஜர்:- கொதிக்கச் செய்யப்பட்டதும், நுரையுடையதும், கலங்கியதும், துர்க்கந்த முடையதும், குமுழியுடையதும், சூடுள்ளதும், மண்ணுடன் கூடியதும், உறைப்புள்ளதுமான ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது. நிற்பவனும், வணங்கியவனும், சிரிப்பவனும், பேசுபவனும், சண்டாளன் வார்த்தையைக் கேட்பவனும், பிறனைத் தொடுபவனும், திக்குகளைப் பார்ப்பவனுமாய் ஒரு காலும் ஆசமனம் செய்யக்கூடாது. காக்கை, குதிரை, கழுதை, பன்றி, கோழி ரஜஸ்வலை, வ்ராத்யன், சண்டாளன், பதிதன் இவர்களைப் பார்த்துக் கொண்டும் த்விஜன் ஆசமனம் செய்யக்கூடாது.

मनुः – अनुष्णाभिरफेनाभिरद्भिस्तीर्थेन धर्मवित् । शौचेप्सुः सर्वदाऽऽचामेदेकान्ते प्रागुदङ्मुख इति ।। वसिष्ठोऽपि – न पर्णरसदुष्टाभिः याश्च स्युरशुभागमाः इति ।। हारीतः – विवर्णं गन्धवत्तोयं फेनिलं च विवर्जयेदिति ।। याज्ञवल्क्यः – अद्भिस्तु प्रकृतिस्थाभिः हीनाभिः फेनबुद्बुदैरिति ।।

மனு:- சுத்தியை விரும்பியவனன் தர்மமறிந்து, சூடில்லாததும், நுரையில்லாததுமான ஜலத்தால், ஏகாந்தமான ஸ்தலத்தில், கிழக்கு அல்லது வடக்கு நோக்கியவனாய், ப்ராம்ஹம் முதலிய தீர்த்தத்தால் எப்பொழுதும் ஆசமனம் செய்ய வேண்டும். வஸிஷ்டரும்:-

இலைகளின் ரஸத்தால் கெடுதியுள்ளதும். அசுத்த ஸ்தலத்திலிருந்து வருவதுமான ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது. ஹாரீதர்:- வர்ணம் மாறியதும், நாற்றமுடையதும், நுரையுடையதுமான ஜலத்தை வர்ஜிக்க வேண்டும். யாக்ஞவல்க்யர்:- இயற்கை மாருததும், நுரை, குமுழி இவை இல்லாததுமான ஜலத்திஞல் ஆசமனம் செய்ய வேண்டும்.

स्मृतिसारे – एलालवङ्ग कर्पूर गन्धाद्यैर्वासितैर्जलैः । नाचामेदद्भिरुष्णाभि स्तथा शौचावशेषितैः ।। पात्रशिष्टं तु यच्छौचे पाने पादावनेजने । भूमौ तदम्बु निस्राव्य शेषेणाचमनं चरेत् ।। न चाग्न्युदकशेषेण कुर्यादाचमनं बुधः । यदि कुर्याज्जलं भूमौ स्रावयित्वा समाचरेत् इति ।। अग्न्युदकशेषेण अग्निपरिषेचनावशिष्टेनेत्यर्थः ।। स्मृत्यर्थसारे – नान्योदकशेषमाचामेद्यद्याचामेद्भूमौ जलं स्रावयित्वाऽऽचामेन्न पादप्रक्षालनाचमनाग्न्युदकशेषैराचमनं कुर्याद्यदि कुर्याद् भूमौ जलं स्रावयित्वा तत्राम्बुपात्रं स्थापयित्वा तत उद्धृत्य कुर्यादिति ।।

ஸ்ம்ருதிஸாரத்தில்:- ஏலம், லவங்கம், கர்ப்பூரம், சந்தனம் முதலியதால் வாஸனையுள்ளதும், சூடானதும், சௌசத்தில் மீந்ததுமான ஜலத்தால் ஆசமனம் கூடாது. ஜலம் கிடைக்காவிடில், சௌசம் செய்தபிறகு பாத்ரத்தில் மீந்த ஜலம் குடித்து மீந்த ஜலம், காலலம்பிய பிறகு மீந்த ஜலம் இவைகளில் கொஞ்சம் பூமியில் கொட்டிவிட்டு மீதியுள்ள ஜலத்தால் ஆசமனம் செய்யலாம். அக்னியைப் பரிஷேசனம் செய்து மீந்த ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது. வேறு ஜலமில்லாததால் அதஞலேயே செய்ய நேர்ந்தால் பூமியில் கொஞ்சம் கொட்டி விட்ட மீதியுள்ளதால்ஆசமனம் செய்யலாம். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் :- அன்யன் ஆசமனம் செய்து மீந்த ஜலத்தால் ஆசமனம் கூடாது. ஆவச்யகமாஞல் அதில் ஸ்வல்ப ஜலத்தை பூமியில் கொட்டி, மீதியுள்ளதால் ஆசமனம் செய்யலாம். பாதப்ரக்ஷாளனம், ஆசமனம், அக்னிகார்யம் இவைகள் செய்து மீந்த ஜலத்தால் ஆசமனம் கூடாது. செய்ய

வேண்டியது ஆவச்யகமானால் பூமியில் கொஞ்சம் ஜலத்தைக் கொட்டி அவ்விடத்தில் ஜலபாத்ரத்தை வைத்து அதிலிருந்து எடுத்து ஆசமனம் செய்யலாம்.

बोधायनः – 'प्राङ्मुख उदङ्मुखो वाऽऽसीनः शौचमारभेत शुचौ देशे दक्षिणं बाहुं जान्वन्तरा कृत्वा प्रक्षाल्य पादौ पाणी चामणिबन्धात् पादप्रक्षालनोच्छेषेणनाचामेद्यद्याचामेद्भूमौ स्रावयित्वाऽऽचा-मेन्नाङ्गुलीभिर्न सबुद्बुदाभिर्न सफेनाभिर्न चोष्णाभिर्न क्षाराभिर्न लवणाभिर्न कलुषाभिर्न कटुकाभिर्न दुर्गन्धरसाभिर्न हसन्न जल्पन्न तिष्ठन्नावलोकयन्न प्रह्वो न प्रणतो न विमुक्तशिखो न प्रावृतकण्ठो न वेष्टितशिरा न त्वरमाणो नायज्ञोपवीती न प्रसारितपादो नाबद्धकक्ष्यो न बहिर्जानुर्न शब्दं कुर्वन्निति ॥

**போதாயனர்**:- கிழக்கு அல்லது வடக்கு முகமாய் உட்கார்ந்து சௌசம் செய்து கொள்ள வேண்டும். பிறகு சுத்தமான இடத்தில், வலது கையை முழங்கால்களுக்குள் வைத்துக் கொண்டு, கால்களையும், கைகளையும், மணிக்கட்டு வரையில் அலம்பி ஆசமனம் செய்ய வேண்டும். கால் கழுவி மீந்த ஜலத்தால் ஆசமனம் கூடாது. ஆவச்யகமானால் பூமியில் கொஞ்சம் கொட்டிவிட்டு, மீந்ததால் ஆசமனம் செய்யலாம். விரல்களால் ஆசமனம் கூடாது. குமிழியுள்ளதும், நுரையுள்ளதும், சூடானதும், உறைப்புள்ளதும், உப்புள்ளதும், கலங்கியதும், கசப்புள்ளதும், கெட்ட நாற்ற ரஸங்களுள்ளதுமாகிய ஜலத்தினால் ஆசமனம் கூடாது, சிரித்துக் கொண்டும், பேசிக்கொண்டும், நின்றுகொண்டும், வெளியில் பார்த்துக் கொண்டும், வணங்கியும், குனிந்தும், அவிழ்ந்த சிகையுடனும், கழுத்தை வஸ்த்ரத்தால் சுற்றிக்கொண்டும், தலையை வஸ்த்ராதிகளால் மறைத்துக் கொண்டும், உபவீதமில்லாமலும், கால்களை நீட்டிக் கொண்டும், கச்சம் கட்டிக் கொள்ளாமலும், முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டும், சப்தம் செய்துகொண்டும் ஆசமனம் செய்யக்கடாது.

प्रचेताऽपि – अनुष्णाभिरफेनाभिः पूताभिर्वस्त्रचक्षुषा । हृद्गताभिरशब्दाभिः त्रिश्चतुर्वाऽद्भिराचमेदिति ॥ अनुष्णाभिरित्यनातुरविषयम्॥ अत एव यमः – 'रात्राववीक्षितेनापि शुद्धिरुक्ता मनीषिणाम् । उदकेनातुराणां च तथोष्णेनोष्णपायिनामिति। उष्णपायिनामातुराणां, न पुनरातुरमात्राणामित्यर्थः ॥ उष्णपायिनो दीक्षिता इति केचित् ॥ स्मृत्यर्थसारे – नात्मानं पश्यन्नाचामेन्नासीनस्त्रिपाद्यां नान्यार्थ आसते भुक्त्वाऽऽचामेन्नान्यासने न शयानो न पादुकोपानत्स्थो न दुर्देशेन पादाग्रस्थो न प्रह्वो नान्यमना न नग्नो नैकवस्त्रो न वामहस्तेन न प्रसारितपादो नाबद्धासनो यज्ञोपवीत मुत्तरीयं वाऽन्यथा धृत्वा नाचामेदिति ॥

**ப்ரசேதஸ்ஸும்:**- சூடில்லாததும், நுரையில்லாததும், வஸ்த்ரத்தாலும், கண்ணுலும், சுத்தமாகியதும், மார்புவரை போகக்கூடியதும், சப்தமில்லாததுமான ஜலத்திஞல் மூன்று அல்லது நான்கு தடவை ஆசமனம் செய்ய வேண்டும். இங்கு 'உஷ்ணமில்லாத' என்பது நோயாளியல்லாதவன் விஷயத்தில், **யமன்:**- இரவில் கண்ணுல் பார்க்கப்படாத ஜலத்திஞல் ஆசமனம் செய்தாலும் சுத்தியுண்டென வித்வான்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. உஷ்ணோதகத்தையே பருகவேண்டிய நோயாளிகளுக்கு, உஷ்ணோதகத்தால் ஆசமனம் செய்வதாலும் சுத்தி உண்டெனச் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா நோயாளிகளுக்குமல்ல. இங்கு 'உஷ்ணபாயிஞம்' என்ற பதம் தீக்ஷிதர்களைக் குறிக்கிறதென்று சிலர். **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:**- தன்னை நோக்கிக்கொண்டும், முக்காலியில் உட்கார்ந்தும், பிறருக்காகக் கல்பித்த ஆஸனத்தில் போஜனம் செய்த பிறகும், பிறர் ஆஸனத்திலமர்ந்தும், படுத்துக்கொண்டும், வஸ்த்ரமில்லாமலும், ஒரு வஸ்த்ரத்துடனும், இடது கையிஞல், கால்களை நீட்டியும், ஆஸனமில்லாமலும், பூணூல் வஸ்த்ரம் இவைகளை மாற்றித் தரித்துக்கொண்டும் ஆசமனம் செய்யக்கூடாது.

भृगुः – 'सोष्णीषो बद्धपर्यङ्कः प्रौढपादश्च यानगः। दुर्देशे प्रपदश्चैव नाचामन् शुद्धिमाप्नुयात्। आसनारूढपादो वा जान्वोर्वा जङ्घयोस्तथा। कृतावसक्थिको यश्च प्रौढपादः स उच्यत इति ॥ संवर्तः – अकृत्वा पादशौचं तु तिष्ठन्मुक्तशिखोऽपि वा। विना यज्ञोपवीतेन आचान्तोऽप्यशुचिर्भवेदिति ॥ माधवीये – कण्ठं शिरो वा प्रावृत्य रथ्यापणगतोऽपि वा। अकृत्वा पादयोः शौचमाचान्तोऽप्यशुचि-र्भवेदिति ॥

ப்ருகு:- தலைப்பாகையுடனும், கட்டிலிலிருந்தும், ப்ரௌடபாதனும், வாஹனத்திலிருந்தும், துஷ்ட ஸ்தலத்திலும், கால்களை நீட்டியும், ஆசனம் செய்பவன் சுத்தியையடையான், ஆஸனத்திலேறிய கால்களையுடையவனும், முழங்கால்களிலாவது, அவைகளின்கீழ்ப் பாகத்திலாவது கட்டிக்கொண்டிருப்பவனும் ப்ரௌட பாதன் எனப்படுகிறான். ஸம்வர்த்தர்:- காலலம்பாமலும், நின்றுகொண்டும், அவிழ்ந்த குடுமியுடையவனும், யக்ஞோபவீதமில்லாமலும் ஆசமனம் செய்தவன் அசுத்தனாகிறான். மாதவீயத்தில்:- காதை மூடிக் கொண்டும், தலையை மூடிக்கொண்டும், வீதியிலிருந்தும், கடையிலிருந்தும், காலலம்பாமலும் ஆசமனம் செய்பவன் அசுத்தனாகவேயிருக்கிறான்.

पुलहः – शिरः प्रावृत्य कण्ठं वा मुक्तकच्छशिखोऽपि वा। अकृत्वा पादयोः शौचमाचान्तोऽप्यशुचिर्भवेदिति ॥ अत्रिः – अपः पाणिनखाग्रेभ्यः आचामेद्ब्राह्मणस्तु यः। सुरापानेन तत्तुल्यमित्येवं मनुरब्रवीदिति ॥ यमः – अपः परनखस्पृष्टा य आचामति वै द्विजः। सुरां पिबति स व्यक्तं यमस्य वचनं तथेति ॥ मरीचिः – न बहिर्जानुराचामेन्नासनस्थो न चोत्थितः। भुक्त्वाऽऽसनस्थोऽप्यप्या चामेन्नान्यकाले कदाचन। नान्तरीयैकदेशस्य कृत्वो चैवोत्तरीयकम्। आच्छन्नदक्षिणांसस्तु नाचामेत्तु कदाचन ॥ विना यज्ञोपवीतेन तथा धौतेन

वाससा। मुक्त्वा शिखां वाऽऽचान्तेन कृतस्यैव पुनः क्रिया ॥ याम्य प्रत्यङ्मुखत्वेन कृतमाचमनं यदि। प्रायश्चित्त्यै तदा कुर्यात् स्नानमाचमनं क्रमादिति ॥

புலஹர்:- தலையை மூடிக்கொண்டும், காதை மூடிக்கொண்டும், அவிழ்ந்த கச்சம் குடுமி இவைகளையுடையவனும், காலலம்பாலும் ஆசமனம் செய்தவன் அசுத்தனாகவேயிருக்கிறான். அத்ரி:- ப்ராம்ஹணன் கையின் நுனி, நகத்தின் நுனி இவைகளிலிருந்து ஜலத்தை ஆசமனம் செய்வானாகில் அது ஸுராபானத்திற்குச் சமமென மனு சொன்னார். யமன்:- எந்த ப்ராம்ஹணன் பிறர் நகம்பட்ட ஜலத்தை ஆசமனம் செய்கின்றானோ, அவன் மத்யத்தையே குடிக்கிறான். நிச்சயம், என்று யமனுடைய வசனம். மரீசி:- முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டும், ஆஸனத்திலுட்கார்ந்தும், நின்று கொண்டும், ஆசமனம் செய்யக்கூடாது. போஜனத்திற்குப்பிறகு ஆஸரத்திலிருந்தும் ஆசமனம் செய்யலாம். மற்றக் காலத்தில் கூடாது. இடுப்பு வஸ்த்ரத்தின் ஒரு பாகத்தால் உத்தரீயம் தரித்துக் கொண்டும், வலது தோளை மறைத்துக் கொண்டும் ஒருகாலும் ஆசமனம் செய்யக்கூடாது. யக்ஞோபவீத மில்லாமலும், வெளுத்த வஸ்த்ரமில்லாமலும், அவிழ்ந்த குடுமியுடனும் ஆசமனம் செய்தால் செய்த கர்மத்தை மறுபடி செய்ய வேண்டும். தெற்கு முகமாகவோ, மேற்கு முகமாகவோ ஆசமனம் செய்தால், அதற்கு ப்ராயச்சித்தமாய் ஸ்நானம் ஆசமனம் இவைகளை முறையே செய்யவேண்டும்.

प्रचेताः – नान्तर्वाससा बहिर्वासः कुर्वन्नाचामेदिति ॥ देवलः – शिखां बध्वा वसित्वा द्वे निर्णिक्ते वाससी शुभे। तूष्णीं भूत्वा समाधाय न क्रुद्ध्यन्नावलोकयन्' इति । उदकं यावद्वामेन न स्पृशति, तावन्नाचामेदित्याह यमः – 'तावन्नोपस्पृशेद्विद्वान् यावद्वामेन न स्पृशेत्। वामे हि द्वादशादित्या वरुणश्च जलेश्वर इति।

ப்ரதேசஸ்:- இடுப்பு வஸ்த்ரத்தால் மேல், வஸ்த்ரம் தரித்து ஆசமனம் செய்யக்கூடாது. தேவலர்:- சிகையை மூடிக்கொண்டு, வெளுத்த இரண்டு வஸ்த்ரங்களைத் தரித்து, மௌனியாயிருந்து கவனித்துச் செய்யவேண்டும். இடது கையினால் ஜலத்தைத் தொடாமல் ஆசமனம் செய்யக்கூடாதென்கிறார் யமன்:- இடது கையினால் ஜலத்தைத் தொடாதவரையில், அறிந்தவன் ஆசமனம் செய்யக்கூடாது. இடது கையில் 12- ஆதித்யர்களும், ஜலத்திற்கதிபதியான வருணனுமிருக்கின்றனர்.

स्मृत्यर्थसारे – 'वामेन पात्रमुद्धृत्य न पिबेद्दक्षिणेन तु । सौवर्णरौप्यताम्रैश्च वेणुबिल्वाश्मचर्मभिः ।। अलाबुदारुपर्णैश्च नालिकेरैः कपित्थकैः । तृणकाष्ठैर्जलाधारैरन्यान्तरितमृन्मयैः ।। वामेनोद्धृत्य वाऽऽचामेदन्यदातुरसंभवे । तत्र मृन्मयपात्रस्थं जलं नैवोपहन्यते ।। तीर्थतोयं च शुध्येत करकादिस्थितं सदेति ।। माधवीये – अलाबु ताम्रपात्रं च करकं च कमण्डलुम् । गृहीत्वा स्वयमाचामेत् न तेनाप्रयतो भवेदिति। संवर्तः – शूद्राशुद्धैकहस्तैश्च दत्ताभिर्न कदाचन । आरूढपादुको वाऽपि न शुध्येत द्विजोत्तम इति आचम्येति शेषः ।। पराशरः – शूद्राहृतैस्तु नाचामेदेकपाण्याहृतैरपि । न चैवावृतहस्तेन नापरिज्ञातहस्तत इति ।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- இடது கையினால் ஜலபாத்ரத்தை எடுத்துக் கொண்டு வலது கையினால் ஆசமனம் செய்யக்கூடாது. ஜலம் போடுவதற்கு வேறொருவன் இல்லாவிடில், இடது கையினாலெடுத்துக் கொள்ளப்பட்ட பாத்ரத்தினால் விடப்பட்ட ஜலத்தினாலும் ஆசமனம் செய்யலாம். ஆனால் அந்தப்பாத்ரம் மேல் சொல்லப்படும் பாத்ரங்களுள் ஒன்றாயிருக்க வேண்டும். தங்கம், வெள்ளி, தாம்ரம், மூங்கில், வில்வம், கல், தோல், சுரைக்காய், கட்டை, இலை, தேங்காய், விளாங்காய், புல்கட்டை இவைகளாலுள்ள ஜலபாத்ரங்கள் வேறொன்றினால் மறைக்கப்பட்ட மண்பாத்ரங்கள் இவைகளிலொன்றினால் இடது கையினாலெடுத்தாவது

ஆசமனம் செய்யலாம். அவைகளிலும் மண்பாத்ரத்திலுள்ள ஜலம் அசுத்தமாவதில்லை. கரகம் (இரண்டு முகமுள்ளது) முதலியதிலுள்ள தீர்த்த ஜலமும் எப்பொழுதும் சுத்தம். **மாதவீயத்தில்:-** சுரைக்காய், தாம்ரபாத்ரம், கரகம், (கெண்டி) கமண்டலு இவைகளை எடுத்துக்கொண்டால், தானாகவே வலது கையில் ஜலத்தைப் போட்டுக் கொண்டு ஆசமனம் செய்யலாம். அதனால் அசுத்தனாவதில்லை. **ஸம்வர்த்தர்:-** சூத்ரனாலும், அசுத்தனாலும், ஒருகையினாலும் விடப்பட்ட ஜலத்தினால் ஆசமனம் செய்தால் ஒருகாலும் சுத்தனாகான். பாதுகை தரித்து ஆசமனம் செய்தாலும் சுத்தனாகான். **பராசரர்:-** சூத்ரர்களால் கொண்டு வரப்பட்டதும், ஒரு கையால் விடப்பட்டதும், மறைக்கப்பட்ட கையினால் விடப்பட்டதும், அறியப்படாதவன் கையால் விடப்பட்டதுமான ஜலத்தால் ஆசமனம் கூடாது.

यमः – उद्धृत्य वामहस्तेन यत्पिबेद् ब्राह्मणो जलम्। सुरापानेन तत्तुल्यं मनुः स्वायम्भुवोऽब्रवीत् ।। कांस्यपात्रे च यत्तोयं यत्तोयं ताम्रभाजने । सौवर्णे राजते चैव नैवाशुद्धं तु कर्हिचिदिति ।। चन्द्रिकायाम् – करकालाबुकांस्येन ताम्रचर्मपुटेन च । स्वहस्ताचमनं कार्यं स्नेहलिप्तानि वर्जयेदिति ।। भारद्वाजः – ताम्रपात्राश्ववालैश्च नालिकेराश्मपत्रकैः । उपस्पृशेत् स्वहस्तस्थैरेतैरपि विचक्षण इति ।

**யமன்:-** ப்ராம்ஹணன் இடது கையினால் எடுத்த ஜலத்தால் ஆசமனம் செய்தால் அது ஸுராபானத்திற்கு ஸமமென்றார் ஸ்வாயம்புவமனு. அந்த ஜலம், வெண்கலம், தாம்ரம், ஸ்வர்ணம், வெள்ளி இவைகளாலான பாத்ரத்திலிருந்தால் ஒருகாலும் அசுத்தமாகாது. **சந்த்ரிகையில்:-** கெண்டி, சுரைக்கா, வெண்கலம், தாம்ரம், தோல், பாத்ரம் இவைகளில் எடுத்த ஜலமானால், தன் கையினாலும் விட்டுக்கொண்டு ஆசமனம் செய்யலாம். எண்ணெய் முதலியதால் பூசப்பட்டுள்ள பாத்ரங்களை வர்ஜிக்கவேண்டும். **பாரத்வாஜர்:-** தாம்ரபாத்ரம்,

குதிரைவால், தேங்காய்ஓடு, ஆச்மபத்ரம் (சிலாஜத்து) இவைகளாலாகிய பாத்ரமானுல் தன்கையாலும் விட்டுக்கொண்டு ஆசமனம் செய்யலாம்.

आपस्तम्बः – नाग्न्युदकशेषेण वृथा कर्माणि कुर्वीताचामेद्वा पाणिसंक्षुब्धेनोदकेनैकपाण्यावर्जितेन च नाचामेदिति ।। पाणिसंक्षुब्धेनेत्येतत् तटाकादिषु स्वयमाचमने। यदा पर आचामयति, तदा एकेन पाणिना यदावर्जितमुदकम्, तेन नाचामेत्। किन्तु उभाभ्यां हस्ताभ्यां करकादि गृहीत्वा यदावर्जितमुदकं, तेनाचामेत्। एवं च स्वयं वाम हस्तावर्जितेनापि नाचामेत्।। अलाबुपात्रेण नालिकेरजेन वैणवेन चर्ममयेन ताम्रमयेन वा पात्रेण स्वयमाचमनमाचरन्ति शिष्टा इति हरदत्त।

**ஆபஸ்தம்பர்:**- "அக்னி கார்யத்தில் பரிஷேசனம் முதலியது செய்து மீந்த ஜலத்தினுல் வீண் கார்யங்களைச் செய்யக்கூடாது. ஆசமனமும் செய்யக்கூடாது. கையினுல் கலக்கப்பட்ட ஜலத்தினுலும், பிறன் ஒருகையினுல் வார்த்த ஜலத்தினுலும் ஆசமனம் கூடாது என்ருர். இங்கு, 'கையால் கலக்கப்பட்டது' என்பது, குடம் முதலியதிலிருக்கும் ஜலம் கையினுல் கலக்கப் பட்டிருந்தால், அதனுல் ஆசமனம் கூடாது. குளம் முதலியதிலுள்ள ஜலத்தில் தானுக ஆசமனம் செய்யும் விஷயத்தில் இந்த நிஷேதமில்லை. எப்பொழுது பிறன் ஆசமனம் செய்விக்கின்ருனே, அப்பொழுது, அவன் ஒரு கையினுல் விட்ட ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது. இரண்டு கைகளாலும் கெண்டி முதலியதைப் பிடித்துக் கொண்டு விடும் ஜலத்தினுல் ஆசமனம் செய்ய வேண்டும். இவ்விதமிருப்பதால் தானுக இடது கையினுல் விடப்பட்ட ஜலத்தினுலும் ஆசமனம் கூடாது. சுரைக்காய், தேங்காய், மூங்கில், தோல், தாம்ரம் இவைகளால் செய்த பாத்ரத்தினுலெடுத்த ஜலத்தைத் தானுகவே இடது கையினுல் விட்டுக்கொண்டு சிஷ்டர்கள் ஆசமனம் செய்கின்றனர் என்ருர் ஹரதத்தர்.

आपस्तम्ब एव – 'भूमिगतास्वप्स्वाचम्य प्रयतो भवति। यं वा प्रयत आचामयेत्। न वर्षधारास्वाचामेत्। तथा प्रदरोदके। तप्ताभिश्चाकारणात् इति। प्रायत्यार्थमाचमनं भूमिगतास्वप्सु कुर्यात्। यं वा प्रयतोऽन्य आचमयेत्, सोऽपि प्रयतो भवति। सर्वथा स्वयं वामहस्तावर्जिताभिरद्भिराचमनं न भवति। ताम्रपात्रादिना तु वामहस्तावर्जिताभिरद्भिः स्वयमाचमनं भवति, स्मृत्यन्तरे विधानात्। न वर्षधारासु, प्रतिषेधात्। करकादिधारायां प्रायत्यार्थमाचमनं भवत्येव। प्रदरोदके - गर्तोदके भूमिगतेऽपि नाचामेत्। यत्तु - 'आपश्शुद्धा भूमिगता वैतृष्ण्यं यासु गोर्भवेत्। अव्याप्ताश्चेदमेध्येन गन्धवर्णरसान्विता इति मनुवचनम्, यदपि – 'शुचिगोतृप्ति कृत्तोयं प्रकृतिस्थं महीगतमिति याज्ञवल्क्यवचनम्, यदपि 'प्रदरादपि या गोस्तर्पणाय स्युरिति वसिष्ठवचनम्, तत्सर्वं 'गोतृप्तिशिष्टे पयसि शिष्टैराचमनक्रियेति कलिसमयनिषिद्धम्॥ तप्ताभिश्चाकारणात्। तप्ताभिरिति वचनात् शृतशीताभिरदोषः। तथा च उष्णानामेव प्रतिषेधः स्मृतिषु प्रायेण भवति। ज्वरादौ च कारणे उष्णाभिरपि न दोष इत्यर्थः॥

*ஆபஸ்தம்பரே:- சுத்திக்காகச் செய்யும் ஆசமனத்தைப் பூமியிலுள்ள ஜலத்தில் செய்தால் சுத்தனாகிறான். அல்லது சுத்தமான மற்றவன் எவனை ஆசமனம் செய்விக்கின்றானோ அவனும் சுத்தனாகிறான். எவ்விதத்திலும் தானாக இடது கையினால் விட்டுக் கொண்ட ஜலத்தினால் ஆசமனம் ஸித்திப்பதில்லை. தாம்ர பாத்ரம் முதலியதால் மட்டும் தன் இடது கையினால் விடப்பட்ட ஜலத்தினால் ஆசமனம் விஹிதமாகிறது, வேறு ஸ்ம்ருதியில் விதியிருப்பதால். மழை ஜலத்தின் தாரையில் ஆசமனம் கூடாது. ப்ரதிஷேதமிருப்பதால். கெண்டி முதலியவைகளின் தாரையில் சுத்யர்த்தமான ஆசமனம் விஹிதம் தான். தானாகப் பிளந்த பூமியின் ப்ரதேசம் 'ப்ரதரம்' எனப்படும். அதிலுள்ள ஜலத்தில், அது பூமிகதமானாலும், ஆசமனம்*

கூடாது. ''எவ்வளவு ஜலத்தில் ஒரு பசுவுக்குத் தாகம் தீருமோ அவ்வளவுள்ள ஜலம் பூமியிலிருந்து, அதற்கு இயற்கையான, கந்தம், வர்ணம், ரஸம் இவைகளுடன் கூடியதாய் அசுத்தவஸ்துவினுல் வ்யாபிக்கப்படாம லிருந்தால் சுத்தமாகிய தாகிறது'' என்ற மனுவசனமும், ''ஒரு பசுவிற்கு த்ருப்தியளிக்கக்கூடிய அளவுள்ள ஜலம், அதன் இயற்கையுடனிருந்து பூமியிலிருந்தால் அது சுத்தமாகியது'' என்ற யாக்ஞவல்க்ய வசனமும், ''பூமியின் வெடிப்பிலுள்ளதாயினும் பசுவிற்குத் திருப்தியை யளிப்பதாயிருந்தால் அந்த ஜலம் சுத்தமாகியது'' என்ற வஸிஷ்ட வசனமிருந்தாலும் அவையெல்லாம் கலியுக ஸமயத்தில் நிஷித்தமாகியவைகளாம். ''பசு குடித்துத் த்ருப்தி யடைந்து மீந்த ஜலத்தில் சிஷ்டர்கள் ஆசமனம் செய்வதும் கலியில் கூடாது'' என்றிருப்பதால். காரணமின்றி, சூடான ஜலத்தினுல் ஆசமனம் கூடாது. 'சூடான' என்றிருப்பதால், சூடாயிருந்து பிறகு ஆறியிருக்கும் ஜலத்தினுல் ஆசமனம் செய்வதில் தோஷமில்லை. அப்படியானதால், சூடாயிருக்கும் ஜலத்திற்குத்தான ப்ரதிஷேதம் ஸ்ம்ருதிகளில் மிகையாய் இருக்கிறது. ஜ்வரம் முதலிய காரணமிருந்தால் உஷ்ணமான ஜலத்தால் ஆசமனம் செய்வதிலும் தோஷமில்லை என்பது பொருள்.

मनुः – ब्राह्मेण विप्रस्तीर्थेन नित्यकालमुपस्पृशेत् । कायत्रैदशिकाभ्यां वा न पित्र्येण कदाचनेति ॥ ब्राह्मं हिरण्यगर्भदेवत्यम्। कायं प्राजापत्यम् । त्रैदशिकं - दैवम् । अत्र देवतातारतम्यवत् तीर्थतारतम्यं द्रष्टव्यम् । तानि पुनस्तीर्थानि कुत्रत्यानीत्यपेक्षायामाह स एव — 'अङ्गुष्ठमूलस्य तले ब्राह्मं तीर्थं प्रचक्षते। कायमङ्गुलिमूलेऽग्रे दैवं पित्र्यं तयोरध इति ॥ हस्ततलमध्ये या रेखा, तस्याः मूले ब्राह्मं तीर्थम्। अङ्गुलिमूलं - कनिष्ठामूलं, तलमध्ये प्रदेशः, तत्र हि मूलमङ्गुल्याः । तत्र कायं तीर्थम्। अग्रे - अङ्गुलीनां च

तिसृणामग्रे दैवं तीर्थम् । तयोः - अङ्गुष्ठाङ्गुल्योः अधः = प्रदेशिन्यङ्गुष्ठयोः मध्य इत्यर्थः। तत्र पित्र्यं तीर्थम्।

**மனு:**- ப்ராம்ஹணன் எப்பொழுதும் ப்ராம்ஹ தீர்த்தத்தால் ஆசமனம் செய்யவேண்டும். அல்லது, காயதீர்த்தத்தாலும், தைவதீர்த்தத்தாலும் செய்யலாம். ஒருகாலும் பித்ரு தீர்த்தத்தால் செய்யக்கூடாது. இங்கு, ப்ராம்ஹம் என்றது ஹிரண்யகர்ப்பனைத் தேவதையா யுடையது. காயம் என்பது ப்ரஜாபதியைத் தேவதையா யுடையது. த்ரைதசிகமென்பது தேவர்களைத் தேவதையா யுடையது. இங்கு, தேவதைகளின் தாரதம்யம்போல் தீர்த்தங்களுக்கும் தாரதம்யமறியத்தக்கது.

அந்தத் தீர்த்தங்கள் எங்கிருக்கின்றனவெனில் சொல்லுகிறார் **மனுவே:**- பெரு விரலினடியில் ப்ராம்ஹ தீர்த்தம். சுண்டுவிரலினடியில் காயதீர்த்தம். நான்கு விரல்களின் நுனியில் தைவ தீர்த்தம். ஆள்காட்டி விரல் பெரு விரல் இவைகளின் நடுவில் பித்ரு தீர்த்தம் என்கின்றனர். இதன் வ்யாக்யானம் - கையின் நடுவில் உள்ள ரேகையின் அடியில் ப்ராம்ஹ தீர்த்தம். சுண்டுவிரல் அடியென்பது கையின் நடுப்ரதேசம். அங்கேதான் சுண்டுவிரலின் அடி. அதில் காய தீர்த்தம். நான்கு விரல்களின் நுனியில் தைவ தீர்ததம். ஆள்காட்டி விரல் பெருவிரல் இவைகளின் நடுவில் பித்ரு தீர்த்தம் என்று.

तथा च याज्ञवल्क्यः – कनिष्ठादेशिन्यङ्गुष्ठमूलान्यग्रं करस्य च। प्रजापतिपितृब्रह्मदेवतीर्थान्यनुक्रमात् इति ।। कनिष्ठायास्तर्जन्या अङ्गुष्ठस्य च मूलानि करस्याग्रं च यथाक्रमं प्रजापतिपितृब्रह्मदेवतीर्थानीत्यर्थः। शङ्खलिखितौ – अङ्गुष्ठमूलस्यान्तरतः प्रागग्रायां रेखायां ब्रह्मतीर्थं प्रदेशिन्यङ्गुष्ठयोरन्तरा पित्र्यं कनिष्ठातलयोरन्तरा प्राजापत्यं कराग्रे दैवमिति ।। भारद्वाजः – दर्पणं देवतादिभ्यः स्वस्वतीर्थेन तर्पयेत् । पिबेदाचमने वारि वीक्षितं ब्रह्मतीर्थतः इति । स्मृतिरत्ने –

अङ्गुष्ठमूलेनाचामेदपो माषनिमज्जनीः । त्रिश्चतुर्वाऽप आचामेद्ध्यायन् वेदाननुक्रमादिति ।। व्यासः – अङ्गुष्ठमूलान्तरतो रेखायां ब्राह्ममुच्यते । अन्तराऽङ्गुष्ठदेशिन्योः पितॄणां तीर्थमुत्तमम् ।। कनिष्ठामूलतः पश्चात् प्राजापत्यं प्रचक्षते । अङ्गुल्यग्रे स्मृतं दैवं तथैवार्षं प्रकीर्तितम् ।। मूले वा दैवमार्षं स्यादाग्नेयं मध्यतः स्मृतम् । तदेव सौम्यकं तीर्थं तत् ज्ञात्वा न मुह्यति ।। ब्राह्मेणैव तु तीर्थेन द्विजो नित्यमुपस्पृशेत् । कायेन वाऽथ पित्र्येण न तु दैवेन च द्विज इति ।

அவ்விதமே **யாக்ஞவல்க்யர்**:- சுண்டு விரல், தர்ஜனீ விரல், பெருவிரல் இவைகளின் அடியும், கையின் நுனியும், முறையே ப்ரஜாபதி தீர்த்தம், பித்ரு தீர்த்தம், ப்ரம்ஹ தீர்த்தம், தேவ தீர்த்தம் எனப்படுகின்றன. **சங்கலிகிதர்கள்**:- பெரு விரலின் அடியில் கிழக்கு நுனியாயுள்ள ரேகையில் ப்ரம்ஹ தீர்த்தம்,; தர்ஜனீ, பெருவிரல் இவைகளில் நடுவில் பித்ரு தீர்த்தம்; சுண்டு விரல், உள்ளங்கை இவைகளின் நடுவில் ப்ரஜாபதி தீர்த்தம்; கையின் நுனியில் தைவ தீர்த்தம். **பாரத்வாஜர்**:- தேவர் முதலியவர்களின் பொருட்டுச் செய்யும் தர்ப்பணத்தை அவரவர் தீர்த்தத்தினுல் செய்ய வேண்டும். ஆசமனத்தில், பார்க்கப்பட்ட ஜலத்தை ப்ரம்ஹ தீர்த்தத்திஞல் பருகவேண்டும். **ஸ்ம்ருதிரத்னத்தில்**:- உளுந்து முழுகுமளவுள்ள ஜலத்தைப் பெருவிரலின் அடியிஞல் பருகவேண்டும். வேதங்களை முறையே த்யானித்துக் கொண்டு மூன்று, அல்லது நான்கு தடவை பருகவேண்டும். **வ்யாஸர்**:- பெரு விரலின் அடியிலுள்ள ரேகையில் ப்ராம்ஹ தீர்த்தம் சொல்லப்படுகிறது. பெருவில் ஆள்காட்டி விரல் இவைகளின் நடுவில் பித்ரு தீர்த்தம். சுண்டுவிரலின் அடியில் ப்ராஜாபத்ய தீர்த்தம். விரல்களின் நுனியில் தைவ தீர்த்தமும் ஆர்ஷ தீர்த்தமும். அல்லது விரல்களின் அடியில் தைவம் ஆர்ஷம் என்ற இரண்டு தீர்த்தங்களுமாம். விரல்களின் நடுவில் ஆக்னேய

தீர்த்தமும் ஸௌம்ய தீர்த்தமுமாம். இதைத் தெரிந்து கொண்டால் மோஹமடையமாட்டான். ப்ராம்ஹணன் எப்பொழுதும் ப்ராம்ஹ தீர்த்தத்தினுலேயே ஆசமனம் செய்ய வேண்டும். ப்ராஜாபத்ய தீர்த்தத்தினுலாவது, பித்ரு தீர்த்தினுலாவது, தைவ தீர்த்தத்தினுலாவது ஆசமனம் செய்யக்கூடாது.

स्मृत्यर्थसारे – कनिष्ठादेशिन्यङ्गुष्ठमूलतलेषु कायपित्र्य ब्रह्मतीर्थानि, कराग्रे दैवतं तीर्थम्, करमध्ये सौम्यमाग्नेयं च तीर्थम्। निर्वापणसंश्रपणलाजहोमान् कायेन कुर्यात्। अर्चनबलिप्रक्षेपपर्युक्षण मार्जनभोजननित्यहोमान् दैवेन। पैतृकं पित्र्येण। कमण्डलुना पानं दधिप्राशनं नवान्न प्राशनं स्रुग्ग्रहणञ्च सौम्येन। आग्नेयेन प्रतिग्रहं कुर्यादिति। बोधायनोऽपि – ब्राह्मण तीर्थेनाचामेदङ्गुष्ठमूलं ब्राह्मं तीर्थमिति। मनुः – त्रिराचामेदपः पूर्वं द्विः प्रमृज्यात्ततो मुखम्। खानि चोपस्पृशेदद्भिरात्मानं शिर एव चेति॥ मुखं - सलोमकावोष्ठौ अङ्गुष्ठमूलेन द्विः प्रमृज्यात्। ततः शीर्षण्यानि खानि - आस्यं चक्षुषी नासिके श्रोत्रे च पृथक् पृथक् अद्भिः सहोपस्पृशेत्। आत्मानं - हृदयं शिरश्च जलेन सहोपस्पृशेदित्यर्थः।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- சுண்டுவிரல், ஆள்காட்டிவிரல், பெருவிரல் இவைகளின் அடியில் முறையே ப்ராஜாபத்ய, பித்ர்ய, ப்ராம்ஹ தீர்த்தங்கள், கையின் நுனியில் தைவ தீர்த்தம். கையின் நடுவில் ஸௌம்ய தீர்த்தமும், ஆக்னேய தீர்த்தமுமாம். நிர்வாபணம், ச்ரபணம், லாஜஹோமம் இவைகளைக் காய தீர்த்தத்தாலும், அர்ச்சனம், பலிதானம், பர்யுக்ஷணம், மார்ஜனம், போஜனம், நித்யஹோமம் இவைகளைத் தைவ தீர்த்தத்தாலும், பித்ருகார்யத்தைப் பித்ரு தீர்த்தத்தாலும், கமண்டலுவினுல் ஜலத்தைப் பானம் செய்தல், தயிரைக் குடித்தல், புதியதான அன்னப்ராசனம், ஹோம ஸாதனமான, ஸ்ருக்கை க்ரஹித்தல் இவைகளை ஸௌம்ய

தீர்த்தத்தாலும், ப்ரதிக்ரஹத்தை ஆக்னேய தீர்த்தத்தாலும் செய்ய வேண்டும்.

**போதாயனரும்:-** ப்ராம்ஹ தீர்த்தத்தால் ஆசமனம் செய்ய வேண்டும். பெருவிரல் அடி ப்ராம்ஹ தீர்த்தமாம். **மனு:-** முதலில் மூன்று தடவை ஜலத்தைப் பருகவேண்டும். பிறகு இரண்டு தடவை முகத்தைத் துடைக்க வேண்டும். பிறகு இந்த்ரியங்களையும், ஆத்மாவையும், தலையையும் ஜலத்துடன் தொடவேண்டும். முகத்தை (ரோமங்களுடன் கூடிய உதடுகளை) பெருவிரலின் அடியால் இரண்டு தடவை துடைக்க வேண்டும். பிறகு, தலையிலுள்ள இந்த்ரியங்களை, அதாவது வாய், கண்கள், மூக்குகள், காதுகள் இவைகளைத் தனித்தனியாய் ஜலத்துடன் தொடவேண்டும். மார்பையும், தலையையும் ஜலத்துடன் தொடவேண்டும் என்பது பொருள்.

याज्ञवल्क्यः — 'त्रिः प्राश्यापो द्विरुन्मृज्य खान्यद्भिस्समुपस्पृशेदिति ।। व्यासः – त्रिःपिबेद्दक्षिणेनाम्बु द्विरोष्ठौ परिमार्जयेत् । अङ्गुष्ठमूलेन ततो मुखं वै समुपस्पृशेत् ।। अङ्गुष्ठानामिकाभ्यां तु स्पृशेन्नेत्र द्वयं ततः । तर्जन्यङ्गुष्ठयोगेन स्पृशेन्नासापुटद्वयम् ।। कनिष्ठाङ्गुष्ठ योगेन श्रवणे समुपस्पृशेत् । सर्वासामेव योगेन हृदयं तु तलेन वा ।। संस्पृशेद्वै शिरस्तद्वैदङ्गुष्ठेनाथ वा द्वयम् । त्रिः प्राश्नीयादपो यत्तु प्रीतास्तेनास्य देवताः ।। ब्रह्मा विष्णुश्च रुद्रश्च भवन्तीत्यनुशुश्रुम । गङ्गा च यमुना चैव प्रीयते परिमार्जनात् । संस्पृष्टयोर्लोचनयोः प्रीयते शशिभास्करौ । नासत्यसंज्ञौ प्रीयेते स्पृष्टे नासापुटद्वये । संस्पृष्टे हृदये चास्य प्रीयन्ते सर्वदेवताः । मूर्ध्नि संस्पृर्शनादेवः प्रीतस्तु पुरुषो भवेत् । य एवं ब्राह्मणो नित्यमुपस्पर्शनमाचरेत् । ब्रह्मादिस्तम्बपर्यन्तं जगत् स परितर्पयेदिति ।।

**யாக்ஞவல்க்யர்:-** ஜலத்தை மூன்று தடவை பருகி, இரண்டு தடவை துடைத்து, இந்த்ரியங்களை ஜலத்துடன் தொடவேண்டும். **வ்யாஸர்:-** வலது கையினால் மூன்று

தடவை ஜலத்தைப் பருகவேண்டும். உதடுகளை இரண்டு தடவை பெரு விரலின் அடியால் துடைக்க வேண்டும். பிறகு முகத்தைப் தொடவேண்டும். பெருவிரல் பவித்ரவிரல் இவைகளால் இரு கண்களையும், ஆள்காட்டிவிரல் இவைகளால் இரு மூக்குகளையும், சிறுவிரல் பெருவிரல் இவைகளால் இரண்டு காதுகளையம், எல்லா விரல்களாலும், அல்லது உள்ளங்கையினுல் மார்பையும், அவ்விதமே தலையையும் தொடவேண்டும். அல்லது பெருவிரலினுல் மார்பையும் தலையையும் தொடலாம். மூன்று முறை ஜலத்தைப் பருகுவதால் (ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர் என்ற) தேவர்கள் ப்ரீதியை அடைகின்றனர். முகத்தைத் துடைப்பதால் கங்கையும் யமுனையும், கண்களைத் தொடுவதால் சந்த்ரனும் ஸூர்யனும், மூக்குகளைத் தொடுவதால் அச்வினி தேவர்களும், காதுகளைத் தொடுவதால் அக்னியும் வாயுவும், மார்பைத் தொடுவதால் ஸகலதேவர்களும், தலையைத் தொடுவதால் புருஷனும் (பரமாத்மாவும்) ப்ரீதியையடைகின்றனர். இவ்விதம் ப்ரதிதினமும் ஆசமனம் செய்யும் ப்ராம்ஹணன், ப்ரம்ஹா முதல் ஸ்தம்பம் (புல்) வரையுள்ள உலகத்தை த்ருப்தமாகச் செய்கிறுன்.

गौतमः – वाग्यतो हृदयस्पृशस्त्रिश्चतुर्वाऽप आचामेत् द्विः परिमृज्यात् पादौ चाभ्युक्षेत् खानि चोपस्पृशेच्छीर्षण्यानि मूर्ध्नि च दद्यादिति ।। आपस्तंम्बः – आसीनस्त्रिराचामेद्धृदयङ्गमाभिरद्भिः, त्रिराष्ठौ परिमृजेत् द्विरित्येके सकृदुपस्पृशेत् द्विरित्येके दक्षिणेन पाणिना सव्यं प्रोक्ष्य पादौ शिरश्चेन्द्रियाण्युपस्पृशेच्चक्षुषी नासिके श्रोत्रे चाथाप उपस्पृशेदिति।।सकृदुपस्पृशेदिति मध्यमाभिस्तिसृभिरङ्गुलीभिरोष्ठावुप-स्पृशेत्। द्विरित्येक इति तुल्यविकल्पः। ओष्ठौ चात्र सलोमकौ। यदाह कण्वः – अथ वेदेतिहासपुराणानि ध्यायन् ब्राह्मेण तीर्थेन त्रिरपः पीत्वा सलोमकावोष्ठावुन्मृजेत् इति ।।

கௌதமர்:- மௌனியாய் மார்பை அடையும் ஜலத்தை மூன்று அல்லது நான்கு தடவை பருகவேண்டும். இரண்டு தடவை துடைக்க வேண்டும். கால்களையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். சிரஸ்ஸிலுள்ள இந்த்ரியங்களையும் தொடவேண்டும். தலையையும் தொடவேண்டும். **ஆபஸ்தம்பர்:-** உட்கார்ந்தவனாய், மார்பை அடையக்கூடிய ஜலத்தை மூன்று தடவை பருகவேண்டும். மூன்று தடவை உதடுகளைத் துடைக்க வேண்டும். இரண்டு தடவை என்று சிலர். ஒரு தடவை தொடவேண்டும். இருமுறை என்று சிலர். வலது கையினால் இடதுகையையும், கால்களையும், சிரஸ்ஸையும் ப்ரோக்ஷித்து, கண்கள், மூக்குகள், காதுகள் என்ற இந்த்ரியங்களைத் தொடவேண்டும். பிறகு கைகளை அலம்ப வேண்டும். 'ஒரு தடவை தொடவேண்டும்' என்றது, நடுவான மூன்று விரல்களாலும் உதடுகளைத் தொடவேண்டும் என்பதாம், 'இருமுறை என்று சிலர்' என்பது ஸமவிகல்பமாம். உதடுகளை என்பது ரோமத்துடன் கூடிய உதடுகளை என்பதாம். **கண்வர்:-** 'பிறகு வேதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள் இவைகளை த்யானித்துக் கொண்டு, ப்ராம்ஹ தீர்த்தத்தால் மூன்று தடவை ஜலத்தைப்பருகி, மயிருடன் கூடிய உதடுகளைத் துடைக்க வேண்டும்' என்பதால்.

दक्षः – संवृत्याङ्गुष्ठमूलेन द्विः प्रमृज्यात्ततो मुखम्। संहताभिश्च तिसृभिः पूर्वमास्यं सकृत् स्पृशेत् ।। अङ्गुष्ठेन प्रदेशिन्या घ्राणं स्पृश्यादनन्तरम्। अङ्गुष्ठानामिकाभ्यां तु चक्षुषी समुपस्पृशेत्।। श्रोत्रे कनिष्ठाङ्गुष्ठाभ्यां नाभिमङ्गुष्ठकेन वै। सर्वाभिस्तु शिरः पश्चाद्बाहू चाग्रेण संस्पृशेत् इति ।। संवृत्य - अलोमकदेशमिति शेषः । तिसृभिः - मध्यमाभिः । 'मध्यमाभिर्मुखं पूर्वं तिसृभिस्समुपस्पृशेत्' इति योगयाज्ञवल्क्यस्मरणात्।। अग्रेण - कराग्रेण ।।

*தக்ஷர்:-* பிறகு, உதடுகளை மூடிக்கொண்டு, ரோமமுள்ள ப்ரதேசத்தில் முகத்தை (உதடுகளை)ப் பெருவிரலின் அடியினால் இரண்டு தடவை துடைக்கவேண்டும். முதலில், சேர்ந்துள்ள (நடுவான) மூன்று விரல்களாலும் வாயைத் தொடவேண்டும். பிறகு, பெருவிரல் தர்ஜனி இவைகளால் மூக்கைத் தொடவேண்டும். பெருவிரல் பவித்ரவிரல் இவைகளால் கண்களைத் தொடவேண்டும். பெருவிரல் சுண்டுவிரல் இவைகளால் காதுகளைத் தொடவேண்டும். பெருவிரலால் தொப்புளைத் தொடவேண்டும். எல்லா விரல்களாலும் தலையையும், (கை) நுனியால் கைகளையும் தொடவேண்டும். இங்கு, ஸம்வ்ருத்ய என்பதற்கு, ரோமமில்லாத உதடுகளின் ப்ரதேசத்தை என்று பூர்த்தி செய்யவேண்டும். 'மூன்று விரல்களால்' என்பதில் 'நடுவான' என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். 'நடுவான மூன்று விரல்களால் முதலில் முகத்தைத் தொடவேண்டும்' என்று யோகயாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி யிருப்பதால். 'நுனியால்' கையின் நுனியால்.

तथा च व्याघ्रपादः – अंसौ स्पृष्ट्वा कराग्रेण तोयं स्पृष्ट्वा समाहितः। संस्मृत्य पद्मनाभं च विप्रस्सम्यग्विशुध्यति इति ।। अत्र 'ओङ्कारेण सह यज्ञपुरुषं मनसा स्मरेत् इति नारायणीये विशेषः ।। पैठीनसिः – सव्ये पाणौ शेषा अपो निनयेत् इति। शेषाः - आचमनशिष्टाः ।। भृगुः – त्रिः पीत्वाऽपो द्विरुन्मृज्य मुखं दक्षिण पाणिना। प्रोक्षयेद्वामहस्तं च पादौ मस्तकमेव च। स्रोतः स्थानानि सर्वाणि स्पृष्ट्वाऽन्ते तु जलं स्पृशेत् इति ।। आपस्तम्बोऽपि – अथाप उपस्पृशेत् इति ।। आचमनान्तरं हस्तौ प्रक्षालयेदित्यर्थः ।।

*அவ்விதமே வ்யாக்ரபாதர்:-* 'கையின் நுனியால் தோள்களைத் தொட்டு, ஜலத்தைத் தொட்டு, கவனமுடையவனாய், பத்மநாபனையும் ஸ்மரித்தால், ப்ராம்ஹணன் நன்றாய்ச் சுத்தனாகிறான் என்றார். இங்கு

'ஓங்காரத்துடன் யக்ஞபுருஷனை மனதினால் ஸ்மரிக்க வேண்டும் என்ற விசேஷம் நாராயணீயம் என்னும் க்ரந்தத்தில் உள்ளது. பைடீநஸி:- 'மீந்த ஜலத்தை இடது கையில் விடவேண்டும்' இங்கு 'மீந்த' என்பதற்கு ஆசமனத்தில் மீதி என்று பொருள் என்கிறார் ப்ருகு:- மூன்று தடவை ஜலத்தைப் பருகி, இரண்டு தடவை வலது கையினால் வாயைத் துடைத்து, இடது கை, பாதங்கள், தலை இவைகளை ப்ரோக்ஷிக்க வேண்டும். இந்த்ரியங்களையும் ஸ்பர்சித்து, முடிவில் ஜலத்தைத் தொடவேண்டும். ஆபஸ்தம்பரும்:- 'பிறகு ஜலத்தைத் தொடவேண்டும்' என்றார். ஆசமனத்திற்குப்பிறகு கைகளை அலம்பவேண்டுமென்றர்த்தம்.

प्रकारान्तरमाह शङ्खः – अङ्गुलीनां चतुष्केण स्पृशेन्मूर्द्धानमादितः। तर्जन्यङ्गुष्ठयोगेन स्पृशेन्नेत्रद्वयं पृथक् ॥ मध्यमानामिकाभ्यां तु स्पृशेन्नासापुटे क्रमात्। अङ्गुष्ठेन कनीयस्या कर्णौ तद्वच्च संस्पृशेत्। तर्जन्यङ्गुष्ठयोगेन नाभिं हृदि तलं न्यसेत् इति॥ वृद्धशङ्खः – तर्जन्यङ्गुष्ठयोगेन स्पृशेन्नासापुटद्वयम्। मध्यमाङ्गुष्ठयोगेन स्पृशेन्नेत्रद्वयं ततः॥ अङ्गुष्ठस्यानामिकाया योगेन श्रवणे स्पृशेत्। कनिष्ठाङ्गुष्ठयोगेन स्पृशेदंस द्वयं ततः॥ नाभिं च हृदयं तद्वत् स्पृशेत् पाणितलेन तु। संस्पृशेत्तु ततः शीर्षमयमाचमने विधिः' इति। पैठीनसिः – अग्निरङ्गुष्ठस्तस्मात्तेनैव सर्वाणि स्थानानि संस्पृशेत्' इति॥

சங்கர்:- வேறுப்ரகாரம் சொல்லுகிறார்:- 'முதலில் நாலுவிரல்களாலும் தலையைத் தொடவேண்டும். தர்ஜனீ, பெருவிரல் இவ்விரண்டையும் சேர்த்துக் கண்களைத் தனித்தனியே தொடவேண்டும். நடுவிரல் அநாமிகா இவ்விரண்டினாலும் இரு மூக்குகளையும் தொடவேண்டும். பெருவிரல் சுண்டு விரலிவைகளால் காதுகளைத் தொடவேண்டும். தர்ஜனீ அங்குஷ்டம் இவைகளைச் சேர்த்து நாபியைத் தொடவேண்டும். உள்ளங்கையை மார்பில்

வைக்க வேண்டும். என்று. வ்ருத்தசங்கர்:- தர்ஜனீ அங்குஷ்டம் இவைகளைச் சேர்த்து மூக்குகளையும், நடுவிரல் அங்குஷ்டம் இவைகளைச் சேர்த்துக் கண்களையும், அங்குஷ்டம் அநாமிகா இவைகளைச் சேர்த்துக் காதுகளையும், சிறுவிரல் அங்குஷ்டம் இவைகளைச் சேர்த்துத் தோள்களையும், உள்ளங்கையினால் நாபி, மார்பு, சிரஸ் இவைகளையும் முறையே தொடவேண்டும். இது ஆசமனத்திலுள்ள விதி. பைடீநஸி:- அக்னி அங்குஷ்டம் எனப்படுகிறார். ஆகையால், அதினாலேயே எல்லா ஸ்தானங்களையும் ஸ்பர்சிக்க வேண்டும்.

संवर्तः – हृद्गताभिरफेनाभिः त्रिश्चतुर्वाऽद्भिराचमेत्। परिमृज्य द्विरास्यं तु द्वादशाङ्गानि चालभेत्।। सोदकेन च हस्तेन खान्यास्यादीनि सप्त च। नाभिं तथा हृन्मूर्द्धानमन्ते बाहू तथैव च इति।। आत्मतुष्ट्यभि-प्रायेण त्रिश्चतुर्वेति विकल्पः। 'यत्र मन्त्रवदाचमनम्, तत्तेन सह चतुः, अन्यत्र त्रिः इति केचिद्व्यवस्थामाहुः।।

ஸம்வர்த்தர்:- மார்பை அடையக்கூடியதும், நுரையில்லாததுமான ஜலத்தை மூன்று அல்லது நான்கு தடவை பருகவேண்டும். வாயை இரண்டு தடவை துடைத்து, வாய் முதலியவை ஏழு, நாபி, மார்பு, தலை, கைகள் என்ற பன்னிரண்டு அங்கங்களையும், ஜலத்துடன் கூடிய கையினால் (முறையே) தொடவேண்டும். அவரவர் மனஸ்துஷ்டியைப் பொறுத்தாகின்றது, ''மூன்று அல்லது நான்கு தடவை பருகலாம்' என்ற விகல்பம். ''எந்த இடத்தில் மந்த்ரத்துடன் ஆசனமோ அங்கு அத்துடன் நான்கு தடவை, மற்ற விடத்தில் மூன்று தடவை'' என்று சிலர் வ்யவஸ்தை சொல்லுகிறார்கள்.

हारीतः – त्रिः पिबेद्वीक्षितं तोयमास्यं द्विः परिमार्जयेत्। पादौ शिरस्ततोऽभ्युक्ष्य त्रिभिरास्यमुपस्पृशेत्।। अङ्गुष्ठानामिकाभ्यां च चक्षुषी समुपस्पृशेत्। अङ्गुष्ठेन प्रदेशिन्या नासिके समुपस्पृशेत्।। तथाऽङ्गुष्ठकनिष्ठाभ्यां कर्णौ तु समुपस्पृशेत्। अङ्गुष्ठेन तु देशिन्या नाभिं

च समुपस्पृशेत् ।। तथैव पञ्चभिर्मूर्ध्नि स्पृशेदेवं समाहितः । अङ्गुष्ठोऽग्निरिति ख्यातः प्रोक्ता वायुः प्रदेशिनी ।। अनामिका तथा सूर्यः कनिष्ठा मघवा स्मृता । प्रजापतिर्मध्यमा तु ज्ञेया शुद्धिमभीप्सता' इति । बोधायनः – अशब्दं कुर्वंस्त्रिरपो हृदयङ्गमाः पिबेत् त्रिः परिमृजेत् द्विरित्येके सकृदुभयं शूद्रस्य स्त्रियाश्च खान्यद्भिस्संस्पृश्य पादौ नाभिं शिरस्सव्यं पाणिमन्ततः इति ।

**ஹாரீதர்**:- பார்க்கப்பட்ட ஜலத்தை மூன்று தடவை பருகவேண்டும். முகத்தை இருமுறை துடைக்க வேண்டும். பிறகு பாதங்களையும் சிரஸ்ஸையும் ப்ரோக்ஷித்துக் கொண்டு, மூன்று விரல்களால் முகத்தைத் துடைக்க வேண்டும். அங்குஷ்டம், அநாமிகை இவைகளால் கண்களையும், அங்குஷ்டம் தர்ஜனீ இவைகளால் மூக்கையும், அங்குஷ்டம் சுண்டு விரலிவைகளால் காதுகளையும், அங்குஷ்டம் தர்ஜனீ இவைகளால் நாபியையும், ஐந்து விரல்களாலும், தலையையும், கவனமுடையவனாய்த் தொடவேண்டும். அங்குஷ்டம் அக்னி என்றும், தர்ஜனீ வாயுவென்றும், அநாமிகா ஸூர்யனென்றும், சிறுவிரல் இந்த்ரனென்றும், நடுவிரல் ப்ரஜாபதியென்றும், சுத்தியை விரும்பியவன் அறியவேண்டும். **போதாயனர்**:- சப்தம் செய்யாமல், மார்பை அடையுமளவுள்ள ஜலத்தை மூன்று தடவை பருக வேண்டும். மூன்று தடவை வாயைத் துடைக்க வேண்டும். இரண்டு தடவை என்ச்சிலர். இவ்விரண்டும், சூத்ரனுக்கும் ஸ்த்ரீக்கும் ஒரு தடவை. இந்த்ரியங்களை ஜலத்துடன் தொட்டு, பாதங்களையும், நாபியையும், தலையையும், முடிவில் இடது கையையும் தொடவேண்டும்.

## आचमनप्रशंसा ।

प्रायश्चित्तप्रकरणे स एव —— ओं पूर्वाभिर्व्याहृतिभिः सर्वपापेष्वाचामेद्यत् प्रथममाचामति तेन ऋग्वेदं प्रीणाति यद्द्वितीयं तेन यजुर्वेदं प्रीणाति

यत्तृतीयं तेन सामवेदं यत् प्रथमं परिमार्ष्टि तेनाथर्ववेदं यद्वितीयं तेनेतिहासपुराणं यत् सव्यं पाणिं प्रोक्षति पादौ (च) शिरो हृदयं नासिके चक्षुषी श्रोत्रे नाभिं चोपस्पृशति तेनौषधिवनस्पतयः सर्वाश्च देवताः प्रीणात्या(प्नोति चा) चमनादेव सर्वस्मात् पापात् प्रमुच्यते इति।

ஆசமனத்தின் பெருமை:-

ப்ராயச்சித்தப்ரகரணத்தில் போதாயனர்:- ஓங்காரத்தை முன்னுடைய வ்யாஹ்ருதிகளால், எந்தப் பாபங்களிலும் ஆசமனம் செய்ய வேண்டும். முதல் தடவை பருகுவதால் ருக் வேதத்தையும், 2-ஆம் தடவை பருகுவதால் யஜுர் வேதத்தையும், 3-ஆம் தடவை பருகுவதால் ஸாமவேதத்தையும் ஸந்தோஷிப்பிக்கிறான். முதல் தடவை துடைப்பதால் அதர்வ வேத்தையும், 2-ஆம் தடவை துடைப்பதால் இதிஹாஸ புராணங்களையும், இடது கை பாதங்களை ப்ரோக்ஷிப்பதாலும், சிரஸ், மார்பு, மூக்குகள், கண்கள், காதுகள், நாபி இவைகளைத் தொடுவதாலும், ஒஷதிகள், வனஸ்பதிகள், ஸகல தேவர்கள் இவர்களைத் திருப்தியடைவிக்கிறான், அவர்களையும் அடைகிறான். ஆசமனத்தாலேயே ஸகல பாபங்களினின்றும் விடுபடுகிறான்.

तथा ब्रह्मयज्ञाधिकरणे श्रूयते — दक्षिणत उपवीयोपविश्य हस्ताववनिज्य त्रिराचामेद्द्विः परिमृज्य सकृदुपस्पृश्य शिरश्चक्षुषी नासिके श्रोत्रे हृदयमालभ्य यत्त्रिराचामति तेन ऋचः प्रीणाति यद्द्विः परिमृजति तेन यजूꣳषि यत् सकृदुपस्पृशति तेन सामानि तेनाथर्वाङ्गिरसो ब्राह्मणानीतिहासान् पुराणानि कल्पान् गाथा नाराशꣳसः प्रीणाति' इति। दक्षिणत उपवीयेति 'दक्षिणं बाहुमुद्धरतेऽवधत्ते सव्यमिति यज्ञोपवीत' मित्येतत् स्मार्यते ।। हस्तावननिज्य आमणिबन्धनात् प्रक्षाल्य, पादयोरप्युपलक्षणम् । द्विः परिमृज्य - ओष्ठाविति शेषः । सकृदुपस्पर्शनमोष्ठयोरेव । सुबोधमन्यत् ।। भरद्वाजः – ब्रह्मयज्ञे

विशेषोऽस्ति किञ्चिदाचमनक्रमे । पानत्रयं तथा कुर्यात्तथा द्विः परिमार्जनम् । उपस्पृशन् शिरश्चक्षुर्नासिकाद्वितयं ततः । श्रोत्र द्वयं च हृदयं पूर्वोक्तविधिनाऽऽलभेत् इति ।

அவ்விதமே ப்ரம்ஹயக்ஞ ப்ரகரணத்தில் கேட்கப்படுகிறது. தக்ஷிணத:உபவீய என்பது முதல் நாராஸம் ஸீ: ப்ரீணாதி என்பது வரையிலுள் ச்ருதியின் அர்த்தம் ஸ்பஷ்டமாயுள்ளதால் சிலவற்றிற்கு மட்டும் அர்த்தம் சொல்லப்படுகிறது. दक्षिणत उपवीय என்பதால் யக்ஞோபவீதம் செய்து கொள்ளும் முறை நினைப்பூட்டப்படுகிறது. கைகளை மணிக்கட்டு வரையில் அலம்பவேண்டும். இது கால்களை அலம்புவதையும் சொல்லும். இரண்டு தடவை துடைத்து என்பதில் உதடுகளை என்று கொள்ளவும். ஒருதடவை தொடவேண்டும் என்பது உதடுகளுக்கே மற்றவைகளின் பொருள் எளிதில் அறியக் கூடியதே.

भरद्वाजः – ब्रह्मयज्ञे विशेषोऽस्ति किञ्चिदाचमनक्रमे । पानत्रयं तथा कुर्यात्तथा द्विः परिमार्जनम् ।। उपस्पृशन् शिरश्चक्षुर्नासिकाद्वितयं ततः । श्रोत्र द्वयं च हृदयं पूर्वोक्तविधिनाऽऽलभेत्' इति ।।

**பரத்வாஜர்:-** ப்ரம்ஹயக்ஞத்தில் ஆசமனக்ரமத்தில் கொஞ்சம் விசேஷமிருக்கிறது. மூன்று தடவை ஜலத்தைப் பருகவேண்டும். இரண்டு தடவை துடைக்க வேண்டும். ஒரு தடவை தொடவேண்டும். தலை, இரண்டு கண்கள், இரண்டு மூக்குகள், இரண்டு காதுகள், மார்பு இவைகளை முன் சொல்லிய விதிப்படி தொடவேண்டும்.

शौनकः – प्रक्षाल्य पादौ हस्तौ च त्रिः पिबेदम्बु वीक्षितम् । माषमग्नं तु तद्वारि हृद्गतं तु विशुध्यति ।। संवृत्याङ्गुष्ठमूलेन द्विः प्रमृज्यात्तथौष्ठकौ । संहताङ्गुलिभिस्सम्यगवाचीनः स्पृशेन्मुखम् ।। अङ्गुष्ठानामिकाभ्यां तु चक्षुषी समुपस्पृशेत् । अङ्गुष्ठेन प्रदेशिन्या घ्राणं

स्पृश्यादनन्तरम् ।। कनिष्ठया चाङ्गुष्ठेन श्रोत्रे सम्यगुपस्पृशेत् । अङ्गुष्ठमध्यमाभ्यां तु बाहू सम्यक् स्पृशेत्ततः ।। अङ्गुष्ठाग्रेण नाभिं तु हृदयं तिसृभिस्ततः । सर्वाष्ठाग्रेण नाभिं तु हृदयं तिसृभिस्ततः । सर्वाभिस्तु शिरः पश्चादेवमाचमनं चरेत् ।। तदोङ्कारेणाचमनं यद्वा व्याहृतिभिर्भवेत् सावित्र्या वाऽपि कर्तव्यं यद्वा कार्यममन्त्रकम् इति ।। तीर्थे त्रिश्चतुर्वा पीत्वा हस्तौ प्रक्षाल्य ओष्ठौ सङ्कोच्य अङ्गुष्ठ मूलेन द्विः परिमृज्य संहताङ्गुलिभिरास्यं सलोम प्रदेशे स्पृष्ट्वा घ्राणादीनीन्द्रियाणि स्पृशेत् । सर्वत्र मध्ये मध्ये उपस्पृशेत् । अशक्तौ त्रिः पीत्वा मुखं प्रमृज्य खानि स्पृशेत् । अत्यन्ताशक्तौ पीत्वा श्रोत्रं स्पृशेत् इति ।। अत्र यथास्वशाखं व्यवस्था ।। येषां तु स्वशाखायामङ्गोपस्पर्शनमनाम्नातम्, तेषां विकल्पः। यत्रपुनः कतिपयाङ्गस्पर्शनमुक्तम्, तत्राविरुद्धवचनान्तरानु-सारादङ्गान्तरोप स्पर्शन मस्तीति स्मृतिचन्द्रिकादौ व्यवस्थापितम् ।।

சௌனகர்:- கால் கைகளை அலம்பி, கண்ணுல் பார்க்கப்பட்ட ஜலத்தை மூன்று தடவை பருகவேண்டும். உளுந்து முழுகுமளவுள்ள அந்த ஜலம் மார்பை அடைந்தால் சுத்தனுகச் செய்கிறது. உதடுகளை மூடிக்கொண்டு, பெருவிரல் அடியால் இரண்டு தடவை துடைக்க வேண்டும். சேர்ந்துள்ள விரல்களால் வாயைத் தொடவேண்டும். பெருவிரல் பவித்ரவிரல் இவைகளால் கண்களையும், பெருவிரல் தர்ஜனீ இவைகளால் மூக்கையும், பெருவிரல் சிறுவிரல் இவைகளால் காதுகளையும், பெருவிரல் நடுவிரல் இவைகளால் கைகளையும், பெருவிரல் நுனியால் நாபியையும், மூன்று விரல்களால் மார்பையும், எல்லா விரங்களாலும் தலையையும் தொடவேண்டும். ஆசமனமிவ்விதம் செய்ய வேண்டும். அந்த ஆசமனம் ஓங்காரத்திஞல், அல்லது வ்யாஹ்ருதிகளால், அல்லது காயத்ரியால் செய்யப்படவேண்டும். அல்லது மந்த்ரமில்லாமலும் செய்யப்படலாம். ஜலாசயத்தில் 3 அல்லது 4-தடவை

ஜலத்தைப் பருகி, கைகளை அலம்பி உதடுகளை மடக்கி பெரு விரலடியால் இரண்டு முறை, துடைத்து, சேர்ந்த விரல்களால் வாயை மயிருள்ள ப்ரதேசத்தில் தொட்டு மூக்கு முதலிய இந்த்ரியங்களைத் தொடவேண்டும். எல்லாவற்றிலும் நடுவில் நடுவில் ஜலத்தைத் தொடவேண்டும். சக்தியில்லாவிடில் மூன்று தடவை பருகி வாயைத் துடைத்து இந்த்ரியங்களைத் தொடவேண்டும். மிகவும் சக்தியில்லாவிடில் ஜலத்தைப் பருகிக்காதைத் தொடவேண்டும். இங்கு அவரவர் சாகையில் சொல்லியபடி வ்யவஸ்தை. எவர்களுக்குத் தம் சாகையில் அங்கங்களைத் தொடுவது சொல்லப் படவில்லையோ அவர்களுக்கு விகல்பம். எந்த சாகையில் சில அங்கங்களை மட்டில் தொடுவது சொல்லப் பட்டிருக்கின்றதோ அங்கு விரோதம் இல்லாத வேறு வசனங்களை அனுஸரித்து இதர அங்கங்களையும் தொடுவது உண்டு என்று ஸ்ம்ருதிசந்த்ரிகை முதலியவைகளில் வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கிறது.

जलमध्ये तिष्ठन्नप्याचामेदित्याह विष्णुः — जानोरूर्ध्वं जले तिष्ठन्नाचान्तः शुचितामियात्। अधस्ताच्छतकृत्वोऽपि समाचान्तो न शुध्यति इति ।। न तिष्ठन्नाचामेत् इत्यतत् स्थलविषयम् ।। अत एव गौतमः – न तिष्ठन्नुद्धृतोदकेनाचामेत् इति विशिनष्टि । व्यासः – नाचामेद्वर्षधाराभिः न तिष्ठन्नुद्धृतोदकैः इति ।

ஜலத்தின் நடுவில் நின்று கொண்டும் ஆசமனம் செய்யலாம் என்கிறார். விஷ்ணு:- முழங்கால்களுக்கு மேல் உள்ள ஜலத்தில் நின்று கொண்டு ஆசமனம் செய்தாலும் சுத்தனாகிறான். அதற்குக் கீழுள்ள ஜலத்தில் நின்று நூறு தடவை நன்கு ஆசமனம் செய்தாலும் சுத்தனாவதில்லை. நின்று கொண்டு ஆசமனம் செய்யக்கூடாது என்பது ஸ்தலத்தில் செய்யும் விஷயம். ஆகையினால்தான் கௌதமர்:- நின்றிருப்பவன் எடுத்து ஜலத்தினால் ஆசமனம் செய்யக்கூடாது என்று விசேஷிக்கின்றார். வ்யாஸரும்:-

மழை ஜலத்தில் தாரைகளால் ஆசமனம் கூடாது. நின்றிருப்பவன் எடுத்த ஜலத்தினுல் ஆசமனம் செய்யக்கூடாது.

स्मृतिरत्नेऽपि — जानुभ्यामूर्ध्वमाचम्य जले तिष्ठन्न दुष्यति। ताभ्यामधस्तथा तिष्ठन्नाचामेच्च विचक्षणः इति ॥ अध इत्यनेन जानुमात्रेऽप्यविरुद्धमित्युक्तम्, तथा च स्मृतिचन्द्रिकायाम् – जानुमात्रे जले तिष्ठन्नासीनः प्राङ्मुखः स्थले। सर्वतः शुचिराचान्तः तयोस्तु युगपत् स्थित इति ॥ यदा जानुमात्रजले स्थित्वाऽऽचामेत्, तदा जले क्रियमाणे कर्मण्यधिकृतो भवति। यदा तु स्थल एव आसीन आचामेत्, तदा स्थल एव क्रियमाणे कर्मणि। यदा पुनरुभयस्थः, तदोभयोरपि क्रियमाणेषु कर्मस्वधिकृतो भवतीत्यर्थः ॥ तथा च पैठीनसिः – अन्तरुदकमाचान्तोऽन्तरेव शुध्यति। बहिरुदकमाचान्तो बहिरेव शुध्यति। तस्मादन्तरेकं बहिरेकं च कृत्वा पादमाचामेत्। सर्वतः शुद्धो भवति इति ॥

**ஸ்ம்ருதிரத்னத்திலும்:-** முழங்கால்களுக்கு மேல் உள்ள ஜலத்தில் நின்றுகொண்டு ஆசமனம் செய்பவன் தோஷத்தை அடைவதில்லை. முழங்கால்களுக்கு கீழுள்ள ஜலத்தில் நின்று கொண்டு ஆசமனம் செய்யக்கூடாது. முழங்கால்களுக்குக் கீழ் என்றதினுல் முழங்கால் அளவு உள்ள ஜலத்திலும் விரோதமில்லை என்று சொல்லியதாகிறது. அவ்விதமே **ஸ்ம்ருதிசந்த்ரிகையில்:-** முழங்காலளவுள்ள ஜலத்தில்-நின்று ஆசமனம் செய்தால், ஜலத்தில் செய்யும் கர்மத்தில் யோக்யனுகிருன். ஸ்தலத்தில் கிழக்காய் உட்கார்ந்து ஆசமனம் செய்தால் ஸ்தலத்தில் செய்யக்கூடிய கர்மத்தில் மட்டில் அதிகாரியாகிருன். ஒரே தடவையில் இரண்டிலுமிருந்து ஆசமனம் செய்தால் இரண்டிலும் செய்யக்கூடிய கர்மங்களில் அதிகாரியாகிருனென்று பொருள். **அவ்விதமே பைடீநஸி:-** ஜலத்திற்குள்ளிருந்து ஆசமனம்

செய்தவன் ஜலத்தில் செய்யக்கூடிய கார்யத்தில் மட்டில் சுத்தனாகிறான். ஜலத்தின் வெளியிலிருந்து ஆசமனம் செய்தவன் வெளியில் செய்யக்கூடிய கார்யத்திலேயே சுத்தனாகிறான். ஆகையால் ஜலத்தினுள் ஒரு காலையும், வெளியிலொருகாலையும் வைத்துக் கொண்டு ஆசமனம் செய்ய வேண்டும். இரண்டிலும் சுத்தனாகிறான்.

शौनकः – पुष्करिण्यां ह्रदे वाऽपि जानुदघ्ने जलं पिबन्। शुद्धः स्याज्जानुनोऽधस्तादशुद्धस्स्यान्न संशयः ।। तत्तोयं यः पिबेद्विप्रः कामतो वाऽप्यकामतः । अकामान्नक्तभोजी स्यादहोरात्रं तु कामतः' इति ।। भरद्वाजः — 'जानोरूर्ध्वमथाचामन् जले तिष्ठन् शुचिर्भवेत् । अधस्ताच्छतकृत्वोऽपि समाचान्तो न शुध्यति । उदके तूदकस्थस्तु स्थलस्थस्तु स्थले शुचिः । पादौ कृत्वोभयत्रापि ह्याचम्योभयतः शुचिः इति ।

சௌனகர்:- புஷ்கரிணியிலோ, மடுவிலோ முழங்காலளவுள்ள ஜலத்தில் நின்று ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். அதற்குக் கீழளவுள்ள ஜலத்திலானால் அசுத்தனாவான். ஸம்சயமில்லை. அவ்விதம் ஆசமனம் செய்தவன் அறியாமல் செய்தால் பகல் முழுவதுமுபவாஸமிருந்து ராத்ரியில் புஜிக்க வேண்டும். அறிந்து செய்தால் இரண்டுவேளையிலுமுபவாஸம் செய்யவேண்டும். பரத்வாஜர்:- முழங்காலளவுக்கு மேலுள்ள ஜலத்தில் நின்றவனாய் ஆசமனம் செய்பவன் சுத்தனாகிறான். அதற்குக் கீழளவுள்ள ஜலத்தில் நின்றவன் நூறுதடவை ஆசமனம் செய்தால் ஜலத்தில் செய்யும் கார்யத்தில் மட்டில் சுத்தனாகிறான். ஸ்தலத்திலிருந்து ஆசமனம் செய்தால் ஸ்தலத்தில் செய்யும் கார்யத்தில் மட்டில் சுத்தனாகிறான். ஜலத்திலொரு பாதத்தையும், ஸ்தலத்திலொரு பாதத்தையும் வைத்துக் கொண்டு ஆசமனம் செய்தால் இரண்டிலும் சுத்தனாகிறான்.

यत्त्वापस्तम्ब आह— नाप्सु सतः प्रयमणं विद्यते इति जानोरूर्ध्वजले सतः - आसीनस्य प्रयमणं - येन प्रयतो भवति तत्प्रयमणम्, आचमनं नास्तीति तस्यार्थः ।। तथा च शौनकः - 'जानोरूर्ध्वं जले तिष्ठन् यदाऽऽचामेच्छुचिर्भवेत् । आसीनस्तु शयानो वा शतकृत्वो न शुध्यति इति ।। स्मृत्यर्थसारेऽपि – जानुमात्रे जले तिष्ठन्नाचामन्नहि दुष्यति । उपविश्य समाचामे ज्जानुमात्रादधोजले ।। जलाचान्तो जले शुध्येत् बहिराचमने बहिः । बहिरन्तस्थ आचामेत् सर्वत्र शुचिरेव सः ।। जलस्थो जलकार्येषु स्थलस्थः स्थलकर्मसु । उभयेषूभयत्रस्थस्त्वाचान्तः शुचितामियात् ।। वामं पादं स्थले न्यस्य दक्षिणं तु जले न्यसेत् । वामहस्तेन कं स्पृष्ट्वा ह्याचामेद्दक्षिणे न तु इति ।

'ஜலத்திலிருப்பவனுக்கு ஆசமன விதியில்லை' என்று ஆபஸ்தம்பர்:- சொல்லியுள்ளாரே எனில், 'முழங்காலுக்கு மேலுள்ள ஜலத்தில் உட்கார்ந்திருப்பவனுக்கு ஆசமனம் விதிக்கப்படுவதில்லை' என்று அந்த ஸூத்ரத்தினர்த்தமாம். அவ்விதமே சௌனகர்:- முழங்காலுக்கு மேலுள்ள ஜலத்தில் நின்றவனாய் ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். அவ்விதமின்றி உட்கார்ந்தவனாகவாவது, படுத்தவனாகவாவது நூறு தடவை ஆசமனம் செய்தாலும் சுத்தனாவதில்லை.

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- முழங்காலளவுள்ள ஜலத்தில் நின்றுகொண்டு ஆசமனம் செய்பவன் தோஷமடைவதில்லை. முழங்காலுக்கு கீழுள்ள ஜலத்திலானால் உட்கார்ந்து ஆசமனம் செய்ய வேண்டும். ஜலத்தில் மட்டிலிருந்து ஆசமனம் செய்தால் ஜலத்திலுள்ள கார்யங்களில் மட்டிலும் சுத்தனாகிறான். ஸ்தலத்தில் மட்டிலானால் ஸ்தலத்திலுள்ள கார்யங்களில் சுத்தனாகிறான். இரண்டிலுமிருந்து ஆசமனம் செய்தால் இரண்டிலும் சுத்தனாகிறான். இடது காலை ஸ்தலத்திலும், வலது காலை ஜலத்திலும் வைத்துக்கொண்டு,

இடதுகையால் ஜலத்தைத் தொட்டுக் கொண்டு வலது கையினாலாசமனம் செய்ய வேண்டும்.

अत्र हारीतः – आर्द्रवासा जले कुर्यात्तर्पणाचमनं जपम् । शुष्कवासाः स्थले कुर्यात्तर्पणाचमनं जपम् ।। आर्द्रवासाः स्थलस्थस्तु यद्याचामेन्नराधमः । वस्त्रनिश्च्योतनं तस्य प्रेतास्तस्य पिबन्ति हि ।। शुष्केणान्तर्जले चैव बहिरप्यार्द्रवाससा । स्नानं दानं जपो होमः सर्वं भवति निष्फलम् इति । संवर्तोऽपि – यज्जले शुष्कवस्त्रेण स्थले चैवार्द्रवाससा । सर्वं तद्राक्षसं विद्याद्बहिर्जानु च यत्कृतम् इति ।

இங்கு ஹாரீதர்:- ஈர வஸ்த்ரத்துடனிருப்பவன், தர்ப்பணம், ஆசமனம், ஜபம் இவைகளை ஜலத்திலிருந்து செய்ய வேண்டும். உலர்ந்த வஸ்த்ரத்துடனிருப்பவன், தர்ப்பணம், ஆசமனம், ஜபம் இவைகளை ஸ்தலத்தில் செய்ய வேண்டும். ஈரவஸ்த்ரத்துடனிருப்பவன் ஸ்தலத்திலிருந்து ஆசமனம் செய்தால், அவனின் வஸ்த்ர ஜலத்தை ப்ரேதர்கள் அருந்துகின்றனர். உலர்ந்த வஸ்த்ரத்துடனிருப்பவன் ஜலத்தின் நடுவிலும், ஈர வஸ்த்ரத்துடனிருப்பவன் ஜலத்திற்கு வெளியிலும் இருந்து செய்யும் ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம் எல்லா பலனற்றதாகின்றன. ஸம்வர்த்தரும்:- உலர்ந்த வஸ்த்ரத்துடன் ஜலத்திலும் ஈர வஸ்த்ரத்துடன் ஸ்தலத்திலும், முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டும், செய்த கார்யம் முழுவதும் ராக்ஷஸமென அறியத்தக்கதாம். "ஈர வஸ்த்ரத்துடன் ஸ்நானகாலமின்றி மற்றக்காலத்தில் ஸ்தலத்தில் செய்யவே கூடாது. உலர்ந்த வஸ்த்ரத்துடன் முழங்காலுக்குக் கீழுள்ள ஜலத்தில் நின்று கொண்டு செய்யக்கூடாது' என்பது பொருள். அவ்விதம் ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- உலர்ந்த வஸ்த்ரத்துடன் ஜலத்திலும், ஈர வஸ்த்ரத்துடன் ஸ்தலத்திலும் இருந்து ஆசமனாதி க்ரியைகளைச் செய்யக்கூடாது. முழங்காலுக்குக் கீழுள்ள ஜலத்திலிருந்து

ஒருகாலும் செய்யக்கூடாது. **விஷ்ணுவும்:-** உலர்ந்த வஸ்த்ரத்துடனிருப்பவன் முழங்காலுக்கு மேலுள்ள ஜலத்தில் நின்றுகொண்டு ஸந்த்யை, ஆசமனம் இவைகளைச் செய்தால் ஒருகாலும் தோஷத்தை யடைவதில்லை.

स्मृतिरत्ने – ब्राह्मस्नाने च सूर्यार्घ्ये जलोत्सर्जन तर्पणे। जलेष्टिहोमे शुष्केण जले कुर्वन्न दुष्यति इति। यत्तु संवर्तवचनम् – जलं स्थलस्थो नाचामेज्जलाचान्तो जले शुचिः। बहिरन्तस्थ आचामेदेवं शुद्धिमवाप्नुयात् इति। यदपि पराशरवचनम् – अवधूनोति यः केशान् स्नात्वा प्रस्रवते द्विजः। आचामेद्वा जलस्थोऽपि स बाह्यः पितृदैवतैः इति, प्रस्रवते = आर्द्रवस्त्रो मलमूत्रे विसृजति। बाह्यः - पैतृकं दैवकं चानुष्ठातुमनर्ह इत्यर्थः। यदपि व्यासवचनम् – सोपानत्को जलस्थो वा नोष्णीषी वाऽऽचमेद्बुधः इति, तत्सर्वं स्नानोत्तरकालाचमनविषयम्॥ यदाह दक्षः – स्नात्वाऽऽचामेद्यदा विप्रः पादौ कृत्वा जले स्थले। उभयोरप्यसौ शुद्धः ततः कर्मक्षमो भवेत् इति॥

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ப்ராம்ஹஸ்நானம், ஸூர்யார்க்யம், ஜலோத்ஸர்ஜனம், தர்ப்பணம்,, ஜலேஷ்டி (அவப்ருதம்) ஹோமம் இவைகளை உலர்ந்த வஸ்த்ரத்துடன் ஜலத்தில் செய்வதால் தோஷமில்லை. ஆனால், "ஸ்தலத்திலிருந்து ஜலத்தை ஆசமனம் செய்யக்கூடாது. ஜலத்திலிருந்து ஆசமனம் செய்பவன் ஜலத்தில் செய்யும் கார்யத்தில் மட்டில் சுத்தனாகிறான், ஆகையால் ஜலத்திலும், ஸ்தலத்திலுமிருந்து ஆசமனம் செய்ய வேண்டும். இவ்விதமாகில் சுத்தியையடைகிறான்" என்று **ஸம்வர்த்தவசனமும்,** "ஸ்நானம் செய்தவுடன் எவன் மயிர்களை உதறுகின்றானோ, ஈர வஸ்த்ரத்துடன் மல, மூத்ரங்களை விடுகின்றானோ, ஜலத்திலிருந்து ஆசமனம் செய்கின்றானோ அவன், பித்ருக்களையும், தேவர்களை யுமுத்தேசித்தச் செய்யும் கர்மங்களை அனுஷ்டிக்க

அர்ஹனுவதில்லே'' என்ற பராசரவசனமும், ''பாதரகைஷயுடன் கூடியவனுய், ஜலத்திலிருப்பவனுய், தலைப்பாகையுடையனுய் ஆசமனம் செய்யக்கூடாது'' என்ற வ்யாஸ வசனமும் விரோதிக்கின்றனவே எனில், அவையெலாம் ஸ்நானத்திற்குப்பிற்காலத்தில் செய்யுமாசமனத்தைப் பற்றியதாம். ஏனெனில், தக்ஷர்:- ''ப்ராம்ஹணன் எப்பொழுது ஸ்நானம் செய்தவுடன் ஆசமனம் செய்கின்றனே அப்பொழுது, பாதங்களை ஜலத்திலும், ஸ்தலத்திலும் வைத்துக்கொண்டு ஆசமனம் செய்யவேண்டும். அதனுல் இரண்டிலும் சுத்தனுகிறுன். எல்லாக் கர்மங்களிலும் யோக்யனுகிறுன்'' என்பதால்.

पराशरोऽपि – जले स्थलस्थो नाचामेज्जलस्थश्च बहिस्स्थले। उभे स्पृष्ट्वा समाचान्त उभयत्र शुचिर्भवेत् इति । एतच्च स्नात्वा य आर्द्रवस्त्रः, तद्विषयमिति माधवीये ।। व्यासः – कुशैः पूतं भवेत् स्नानं कुशेनोपस्पृशेद् द्विजः । कुशेन चोद्धृतं तोयं सोमपाने न संमितम् इति । भारद्वाजः – बद्धचूडः कुशकरो द्विजः शुचिरुपस्पृशेत् इति ।

பராசரரும்:- ''ஸ்தலத்திலிருந்து ஜலத்திலாசமனம் செய்யக் கூடாது, ஜலத்திலிருந்து வெளியான ஸ்தலத்திலாசமனம் செய்யக்கூடாது. இரண்டையும் ஸ்பர்சித்துக் கொண்டு ஆசமனம் செய்தவன் இரண்டிலும் சுத்தனுகிறுன்'' என்பதாலும். இதுவும் 'எவன் ஸ்நானம் செய்து, ஈர வஸ்த்ரத்துடனிருக்கின்றனே அவனைப் பற்றியது' என்று மாதவீயத்திலுள்ளது. வ்யாஸர்:- குசங்களுடன் செய்யும் ஸ்நானம் சுத்தமாயாகிறது. ப்ராம்ஹணன் குசத்துடன் ஆசமனம் செய்யவேண்டும். குசத்தினுலெடுக்கப்பட்ட ஜலத்தைப் பருகுவது ஸோமபானத்திற்குச் சமமாகும். பாரத்வாஜர்:- ப்ராம்ஹணன் குடுமியைக் கட்டி, குசத்தைக் கையிலுடையவனுய், சுத்தனுய் ஆசமனம் செய்ய வேண்டும்.

## कुशप्रशंसा ।

कुशप्रशंसामाह गोभिलः – कुशमूले स्थितो ब्रह्मा कुशमध्ये तु केशवः । कुशाग्रे शङ्करं विद्यात् सर्वे देवाः समन्ततः इति । हारीतोऽपि – कुशहस्तेन यज्जप्तं दानं चैव कुशैस्सह । कुशहस्तस्तु यो भुङ्क्ते तस्य सङ्ख्या न विद्यते । कुशमालां तु यः कण्ठे समावहति सर्वदा । लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ।। करे कण्ठे शिखायां च कर्णयोरुभयोरपि । पवित्रधारको यश्च न स पापेन लिप्यते ।। जपहोमहरा ये ते असुरा व्यक्तरूपिणः । पवित्रकृतहस्तस्य विद्रवन्ति दिशो दश इति ।।

### குசத்தின் பெருமை

குசத்தின் பெருமையைச் சொல்லுகிறார் கோபிலர்:- குசத்தின் அடியில் ப்ரம்ஹாவும், குசத்தின் மத்யத்தில் கேசவனும், குசத்தின் நுனியில் சங்கரனும், குசத்தின் நான்குபுறங்களிலும் ஸகல தேவர்களுமிருக்கிறார்களென்றறியவும். ஹாரீதரும்:- குசத்தை ஹஸ்தத்தில் தரித்துச் செய்த ஜபம், தானம், போஜனம் இவைகளின் புண்யத்திற்குக் கணக்கில்லை. எவன் கழுத்தில் குசமாலையை எப்பொழுதும் தரிக்கின்றானோ, அவன் தாமரையில் ஜலத்துடன் சேராதது போல் பாபத்தோடு சேரமாட்டான். கை, கழுத்து, குடுமி, இருகாதுகள் இவைகளில் பவித்ரத்தைத் தரித்திருப்பவனும் பாபத்துடன் ஸம்பந்தப்படுவதில்லை. ஜபம், ஹோமம் இவைகளை அபஹரிப்பவரும் கண்ணுக்குப் புலப்படாத உருவமுடையவருமான அஸுரர்களெவரோ, அவர்கள் பவித்ரத்தைக் கரையில் தரித்துள்ளவனைக் கண்டு பத்துத்திக்குகளிலும் ஓடுகின்றனர்.

गोभिलः – वज्रो यथा सुरेन्द्रस्य शूलं हस्ते हरस्य च । चक्रायुधं यथा विष्णोरेवं विप्रकरे कुशः ।। भूतप्रेतपिशाचाश्च ये चान्ये ब्रह्मराक्षसाः। विप्राङ्गुलिकुशान् दृष्ट्वा दूरं गच्छन्त्यधोमुखाः इति । मार्कण्डेयः –

कुशपाणिस्सदा तिष्ठेत् ब्राह्मणो डम्बवर्जितः । स नित्यं हन्ति पापानि तूलराशिमिवानलः इति ॥ कौशिकः – कुशासनं परं पूतं यतीनां तु विशेषतः । कुशासनोपविष्टस्य सिध्यते योग उत्तमः ॥ यथा पुष्करपर्णेषु अपां लेपो न विद्यते । एवं पवित्रहस्तस्य पापलेपो न विद्यते ॥ अपवित्रकरः कश्चित् ब्राह्मणो य उपस्पृशेत् । अपूतं तस्य तत्सर्वं भवत्याचमनं तथा इति ॥

**கோபிலர்:-** இந்த்ரனின் கையில் வஜ்ரம் போலவும், பரமேச்வரனின் கையில் சூலம் போலவும், விஷ்ணுவின் கையில் சக்ராயுதம்போலவும், ப்ராம்ஹணனின் கையில் குசமுள்ளது. பூதங்கள், ப்ரேதங்கள், பிசாசங்கள் ப்ரம்ஹராக்ஷஸர்கள் என்ற எல்லோரும் ப்ராம்ஹணன் கைவிரலிலுள்ள குசங்களைப் பார்த்தால் தலைகுனிந்தவர்களாய்த் தூரத்தில் செல்லுகின்றனர். **மார்க்கண்டேயர்:-** ப்ராம்ஹணன் எப்பொழுதும் குசபாணியாய் டம்பமில்லாமலிருக்கவேண்டும். அவ்விதமிருப்பவன், நித்யமும் தன் பாபங்களை, பஞ்சுக்குவியலை அக்னிபோல் பொசுக்குகிறான். **கௌசிகர்:-** குசத்தால் செய்த ஆஸனம் மிகச்சுத்தமாகியது. ஸன்யாஸிகளுக்கு விசேஷமாய்ச் சிறந்தது. குசாஸனத்திலுட்காருபவனுக்குச் சிறந்த யோகம் ஸித்திக்கின்றது. தாமரை இலைகளில் ஜலத்தின் பற்று எப்படி இல்லையோ, இவ்விதம் குசபவித்ரத்தைக் கையிலுடையவனிடம் பாபத்தின் பற்று இருப்பதில்லை. எந்த ப்ராம்ஹணன் பவித்ரத்தைக் கையில் தரியாமல் ஆசமனம் செய்கின்றானோ, அவனின் கார்யம் முழுவதும், ஆசமனமும் அசுத்தமாகின்றது.

व्यासः – अङ्गुष्ठानामिकाभ्यां तु छिन्नं पैतामहं शिरः । रुद्रेण तु ततः कालात् समारभ्य करोऽशुचिः ॥ पावनार्थं ततो हस्ते कुशकाञ्चनधारणम् इति । शातातपः – जपे होमे तथा दाने स्वाध्याये

पितृ तर्पणे। अन्यूनं तु करं कुर्यात् सुवर्ण रजतैः कुशैः ।। कौशेयं बिभृयान्नित्यं पवित्रं दक्षिणे करे। भुञ्जानस्तु विशेषेण नान्नदोषेण लिप्यते इति ।। अत्रिः – उभाभ्यामेव पाणिभ्यां विप्रैर्दर्भपवित्रके । धारणीयं प्रयत्नेन ब्रह्मग्रन्थिसमन्विते ।। यज्ञोपवीते मौञ्ज्यां च तथा कुशपवित्रके। ब्रह्मग्रन्थिं विजानीयादन्यत्र तु यथारुचि ।। ब्रह्मयज्ञे जपे चैव ब्रह्मग्रन्थिर्विधीयते। भोजने वर्तुलः प्रोक्त एवं धर्मो न हीयते इति ।।

வ்யாஸர்:- ருத்ரன் ப்ரம்ஹதேவனின் தலையைப் பெருவிரல் பவித்ரவிரல் இவைகளால் சேதித்தார். அக்காலம் முதல் கை அசுத்தமாகியது. ஆகையால், சுத்தமாக்குவதற்காகக் கையில் குசம் இவைகளைத் தரிப்பது விதிக்கப்பட்டுள்ளது.

சாதாதபர்:- ஜபம், ஹோமம், தானம், அத்யயனம், பித்ருதர்ப்பணம் இவைகள் செய்யும்பொழுது, பொன், வெள்ளி, குசம் இவைகளுடன் சேர்ந்ததாய்த் தன் கையைச் செய்து கொள்ள வேண்டும். கௌசேயத்ததாலாகிய பவித்ரத்தை நித்யமும் வலதுகையில் தரிக்கவேண்டும். போஜனம் செய்பவன் அவச்யம் தரிக்கவேண்டும். அவன் தோஷத்துடன் பற்றுவதில்லை. (கௌசேயம் -பட்டுநூல்)

அத்ரி:- ப்ராம்ஹணர்கள், ப்ரஹ்மக்ரந்தியுடன் கூடிய தர்ப்ப பவித்ரங்களை இரண்டு கைகளாலும் ப்ரயத்னத்துடன் தரிக்க வேண்டும். பூணூலிலும், மௌஞ்ஜியிலும், குசபவித்ரத்திலும் ப்ரம்ஹக்ரந்தியையே செய்ய வேண்டும். மற்றவைகளில் தன் இச்சைப்படி க்ரந்தியை செய்யலாம். ப்ரம்ஹ யக்ஞத்திலும் ஜபத்திலும் ப்ரம்ஹக்ரந்தியே விதிக்கப்படுகிறது. போஜன காலத்தில் வர்த்துளமாயுள்ள பவித்ரம் விதிக்கப்படுகிறது. இவ்விதம் செய்பவனுக்குப் புண்யம் குறைவதில்லை.

अत्राङ्गुलिनियमो दर्शितश्चन्द्रिकायाम् – धार्योऽनामिकया दर्भो ज्येष्ठानामिकयाऽपि वा। उभाभ्यामनामिकाभ्यां तु धार्यं दर्भपवित्रकम्

इति ।। संवर्तः – उभाभ्यामपि हस्ताभ्यां पवित्रं धारयेद्विजः । दैवे कर्मणि पित्र्ये च ब्रह्मग्रन्थिसमन्वितम् ।। अग्रं तु ब्रह्मदेवत्यं ग्रन्थिर्वैष्णव उच्यते । रज्जुरीशानदेवत्याऽनामिकायां तु योजयेत् इति ।। अत्रिः – उभाभ्यामेव हस्ताभ्यां विप्रैर्दर्भपवित्रके । ब्रह्मग्रन्थिसमायुक्ते पवित्रे मध्य पर्वणि । पाणिभ्यां सर्वदा धार्यो कर्मकाले विशेषतः । प्रथमं लङ्घयेत् पर्व द्वितीयं तु न लङ्घयेत् ।। द्वयोस्तु पर्वणोर्मध्ये पवित्रं धारयेद्बुधः । अग्र पर्वस्थितो दर्भस्तपोवृद्धिकरो हि सः ।। मध्ये चैव प्रजाकामो मूले सर्वार्थसाधकः इति ।। एतत् काम्यविषयम् ।।

இங்கு விரல்களின் நியமம் தெரிவிக்கப்பட்டுள்ளது சந்த்ரிகையில்:- பவித்ரவிரலால் தர்ப்பத்தைத் தரிக்க வேண்டும். அல்லது நடுவிரலால் தரிக்கலாம். அல்லது இரண்டு பவித்ரவிரல்களாலும் இரண்டு தர்ப்ப பவித்ரங்களைத் தரிக்கலாம். ஸம்வர்த்தர்:- தேவகர்மத்திலும், பித்ரு கர்மத்திலும், ப்ரம்ஹக்ரந்தியுள்ள பவித்ரத்தை இரண்டு கைகளாலும் தரிக்க வேண்டும். பவித்ரத்தின் நுனிக்கு ப்ரம்ஹாவும், முடிச்சுக்கு விஷ்ணுவும், அடிப்பாகத்திற்கு ஈசானனும் தேவதைகளாம். பவித்ரவிரலில் தரிக்க வேண்டும். அத்ரி:- ப்ராம்ஹணர்கள், ப்ரம்ஹக்ரந்தியுடன் கூடிய தர்ப்ப பவித்ரங்களை இரண்டு கைகளாலும் சுத்தமான நடுரேகையில் எப்பொழுதும் தரிக்க வேண்டும். கர்மானுஷ்டான காலத்தில் அவச்யம் தரிக்க வேண்டும். முதல் ரேகையைத் தாண்ட வேண்டும். இரண்டாவது ரேகையைத் தாண்டக்கூடாது. இரண்டு ரேகைகளில் நடுவில் பவித்ரத்தைக் தரிக்க வேண்டும். "நுனி ரேகையில் தரித்த தர்ப்பம் தபஸ்ஸை விருத்தி செய்வதாகும். ப்ரஜையை விரும்பியவன் நடுரேகையில் தரிக்கலாம். அடிரேகையில் தரித்த தர்ப்பம் ஸர்வார்த்தங்களையும் ஸாதிக்கக் கூடியது." இந்த வசனம் காம்யகர்ம விஷயம்.

वर्णभेदेन पर्वनियममाह स एव – अङ्गुलीमूलदेशे तु पवित्रं धारयेद्द्विजः। राज्ञां द्विपर्वके चैव विशामग्रे करस्य च इति। स्मृतिभास्करे – सप्तभिर्दर्भपुञ्जीलैः ब्राह्मणस्य पवित्रकम्। पञ्चभिः क्षत्रियस्यैव चतुर्भिश्च तथा विशः ॥ उभाभ्यामेव शूद्रस्य ह्यान्तराणां तथैव च इति ॥ आन्तराणां - अनुलोमानाम् ॥ स्मृत्यर्थसारे – सर्वेषां वा भवेद्द्वाभ्यां पवित्रं ग्रथितं तथा। सप्तपत्राः कुशाः शस्ता दैवे पित्र्ये च कर्मणि। अन्ततस्तरुणौ साग्रौ प्रादेशे तु पवित्रके इति ॥ काम्यपवित्रमुक्तं तत्रैव – त्रिभिर्दर्भैश्शान्तिकर्म पञ्चभिः पौष्टिकं तथा। चतुर्भिश्चाभिचाराख्यां कुर्यात्तत्र पवित्रकम् इति ॥ मार्कण्डेयस्तु नित्यपवित्रं प्रकारान्तरेणाह – चतुर्भिर्दर्भपुञ्जीलैर्ब्राह्मणस्य पवित्रकम्। एकैकन्यूनमुद्दिष्टं वर्णतस्तु यथाक्रमम् इति ॥

*வர்ணபேதத்தை அனுஸரித்து ரேகைகளின் நியமத்தைச் சொல்லுகின்றார், அத்ரி - விரலின் அடிப்ரதேசத்தில், பவித்ரத்தை ப்ராம்ஹணன் தரிக்க வேண்டும். க்ஷத்ரியர்களுக்கு இரண்டாவது பர்வத்திலும், வைச்யர்களுக்குக் கையின் நுனியிலும் தரிப்பதற்கு விதி.* **ஸ்ம்ருதிபாஸ்கரத்தில்:-** *ஏழு தர்பங்களால் ப்ராம்ஹணனுக்கும், ஐந்து தர்ப்பங்களால் க்ஷத்ரியனுக்கும், நான்கு தர்ப்பங்களால் வைச்யனுக்கும், இரண்டு தர்ப்பங்களால் சூத்ரர்களுக்கும், ஆந்தரர்களும் (அனுலோமர்களுக்கும்) பவித்ரம் விதிக்கப்படுகிறது.* **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** *அல்லது எல்லா வர்ணத்தாருக்குமே இரண்டு தர்ப்பங்களால் செய்யப்பட்ட பவித்ரம் விதிக்கப்படுகிறது. தேவகார்யத்திலும், பித்ருகார்யத்திலும், ஏழு குசங்களுள்ள பவித்ரம் ச்லாக்யமாகும். நுனியில் இளமையுள்தாயும், நுனியுடன் கூடியதாயும் ஒட்டையளவுள்ளதாயுமுள்ள இரண்டு தர்ப்பங்கள் பவித்ரங்களாகும். (இது உத்பவன பவித்ர விஷயமெனத் தெரிகிறது) காம்ய கர்ம்ங்களிலுள்ள*

பவித்ரம் சொல்லப்பட்டுள்ளது, ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலேயே:- சாந்தி கர்மத்தில் மூன்று தர்ப்பங்களாலும், பௌஷ்டிக கர்மங்களில் ஐந்து தர்ப்பங்களாலும், அபிசார கர்மங்களில் நான்கு தர்ப்பங்களாலும் பவித்ரம் செய்ய வேண்டும். மார்க்கண்டேயரோவெனில் நித்ய பவித்ரத்தை வேறு ப்ரகாரத்தால் சொல்லுகிறார்:- ப்ராம்ஹணனுக்கு நாலு தர்ப்பங்களால் பவித்ரம் விதிக்கப்படுகிறது. மற்ற மூன்று வர்ணங்களுக்கும் முறையே ஒவ்வொன்று குறைந்துள்ள தர்ப்பங்களால் பவித்ரம் விதிக்கப்படுகிறது.

शूद्रस्य ग्रन्थियुक्तपवित्रं निषेधति यमः – कुतूहलेन वा शूद्रः पवित्रं धारयेद्यदि । स तप्यते महाघोरैः सुचिरं नरकाग्निभिः ।। तस्मात् पवित्रं सततं द्विजैर्वेदपरायणैः । कर्मानुष्ठाननिरतैर्धार्यं नेतरजातिभिः इति । कात्यायनः – सप्त दर्भाः शुभा धार्यास्तिलक्षेत्रसमुद्भवाः । ते प्रशस्ता द्विजातीनां दैवे पित्र्ये च कर्मणि ।। अप्रसूताः स्मृता दर्भाः प्रसूतास्तु कुशाः स्मृताः । समूलाः कुतपाः प्रोक्ताः छिन्नाग्रास्तृणसंज्ञिताः ।। अच्छिन्नाग्रा ह्यशुष्काग्रा ह्रस्वाश्चैव प्रमाणतः । कुवपा इति विज्ञेयास्तैस्तु श्राद्धं समाचरेत् ।। छिन्नाग्रानपि वै दर्भा न मूलान् कोमलान् शुभान् । पितृदेवजपार्थं तु समादद्यात् कुशान् द्विजः । छिन्नमूला ग्रहीतव्याः प्रस्तरार्थं कुशोत्तमाः । अग्निकार्ये च यागे च समूलान् परिवर्जयेत् ।। हरिता यज्ञिया दर्भाः पीतकाः पाकयज्ञिकाः । समूलाः पितृदेवत्याः कल्माषा वैश्वदेविकाः इति ।। पितृदेवत्याः - पित्रर्थाः ।।

சூத்ரனுக்கு முடியுள்ள பவித்ரத்தை நிஷேதிக்கின்றார், யமன்:- சூத்ரன் (முடியுள்ள) பவித்ரத்தை ஆவலாலாவது தரிப்பானாகில், அவன் மிகப்பயங்கரமான நகரநெருப்புகளினால் வெகுகாலம் தாபத்தையடைவான். ஆகையால் வேதங்கள் ஓதுகின்றவரும், கர்மடர்களுமான மூன்று வர்ணத்தார்களே முடியுள்ள பவித்ரத்தைத் தரிக்கலாம். மற்ற ஜாதீயர்கள் (சூத்ரர்கள்) தரிக்கக் கூடாது.

**காத்யாயனர்:-** எள்விளையும் வயலிலுண்டாகிய சுபமான ஏழு தர்ப்பங்களைத் தரிக்க வேண்டும். ப்ராம்ஹணர்களுக்குத் தைவகர்மத்திலும், பித்ருகர்மத்திலும் அவைகளே சிறந்தவைகளாகும், பூவில்லாதவைகள் தர்ப்பங்களெனப் படும். பூவுள்ளவைகள் குசங்களெனப்படும். வேருடன் கூடியவை குதபங்களாம். நுனியில்லாதவை த்ருணங்களாம். நுனிவெட்டப்படாமலும் உலராமலும். குட்டையாயும், உள்ளவை குதபங்களெனப்படும். அவைகளாலேயே ச்ராத்தம் செய்ய வேண்டும். நுனிவெட்டப்பட்டதும். வேரில்லாததும், அழகியதுமான தர்ப்பங்களை, பித்ருகார்யம், தேவகார்யம், ஜபம் இவைகளில் உபயோகிக்க வேண்டும். ப்ரஸ்தரத்திற்காகும் குசங்களை வேர் இல்லாதவைகளாக க்ரஹிக்க வேண்டும். அக்னி கார்யம், யாகம் இவைகளில் வேருடன் கூடியவைகளை வர்ஜிக்க வேண்டும். பச்சை நிறமுள்ளவை யாகார்ஹங்கள். மஞ்சள் நிறமுள்ளவை பாகயக்ஞார்ஹங்கள். வேருடன் கூடியவை பித்ருகார்யயோக்யங்கள். பலநிறங்களுள்ளவை வைச்வதேவார்ஹங்களாம்.

तथा च यमः -समूलस्तु भवेद्दर्भः पितॄणां श्राद्धकर्मणि। मूलेन लोकान् जयति कुशस्य स महात्मनः इति। एतदेकोद्दिष्टश्राद्धविषयम्। यतः स एवाह – एकोद्दिष्टे कुशाः कार्याः समूला यज्ञकर्मणि। बहिर्लूनाः सकृल्लूनाः सर्वत्र पितृकर्मसु इति॥ बहिर्लूनाः - उपमूलं लूनाः - तथा च गोभिलः – उपमूलं लूनाः पितृकार्येषु इति।

**யமன்:-** பித்ருக்களின் ச்ராத்தத்தில் தர்ப்பம் மூலத்துடனிருக்க வேண்டும். குசத்தின் மூலத்தால் பல புண்ய லோகங்களை அவனடைகிறான். இது ஏகோத்திஷ்டவிஷயம். ஏனெனில், யமனே மேல் வருமாறு சொல்லுகிறார்:- 'ஏகோத்திஷ்டத்தில் குசங்களை வேருடனுபயோகிக்க வேண்டும். யாகத்திலும். பித்ருகர்மங்களெல்லாவற்றிலும் வெளியில்

நறுக்கப்பட்டவைகளாயும், ஒரே தடவையாய் நறுக்கப்பட்டவைகளாயுமிருக்க வேண்டும். இங்கு 'வெளியில்' என்பதற்கு வேரின் ஸமீபத்தில் என்று பொருள். அவ்விதமே கோபிலர்:- 'மூலத்திற்கு ஸமீபத்தில் நறுக்கப்பட்ட தர்ப்பங்களைப் பித்ருகார்யத்தில் உபயோகிக்க வேண்டும்' என்கிறார்.

चन्द्रिकायाम् – उपमूलं तथा लूनाः श्राद्धार्थं तु कुशाः सृताः । तथा श्यामाकनीवारौ दूर्वा च समुदाहृता इति ।। एकोद्दिष्टेतर-श्राद्धार्थमित्यर्थः ।। सपिण्डीकरणं यावदृजुदर्भैः पितृक्रिया । सपिण्डी-करणादूर्ध्वं द्विगुणैर्विधिवद्भवेत् ।। तर्पणादीनि कार्याणि पितॄणां यानि कानि चित् । तानि स्याद्विगुणैर्दर्भैः पवित्रैर्वा विशेषतः । तिलक्षेत्रोद्भवैर्दर्भैः प्रयत्नाद्विगुणी कृतैः । पितॄणां तर्पणं कुर्याद्देवानां तु यदृच्छया । पित्र्यं मूलेन मध्येन स्नानं दानं प्रयत्नतः । दैवं कर्म कुशाग्रेण कर्तव्यं भूतिमिच्छता इति ।। यदृच्छया तिलक्षेत्रोद्भवत्वादिनियमराहित्येनेत्यर्थः ।।

சந்த்ரிகையில்:- ச்ராத்தத்திற்காகிய குசங்கள் மூலத்திற்குச் சமீபத்தில் நறுக்கப்பட்டவைகளாயிருக்க வேண்டும். ச்யாமாகம், நீவாரம், அறுகு இவைகளுமவ்விதமேயிருக்க வேண்டும். இங்கு 'ச்ராத்தத்திற்கு' என்பதற்கு ஏகோத்திஷ்டம் தவிர மற்ற ச்ராத்தத்திற்கு என்று பொருள். ஸபிண்டீகரணம் வரையில் செய்யும் பித்ருக்ரியையை ருஜுவான தர்ப்பங்களால் செய்ய வேண்டும். ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு விதிப்படி இரண்டாய் மடித்த தர்ப்பங்களால் செய்ய வேண்டும். பவித்ரங்களுமப்படியே. பித்ருக்களை உத்தேசித்துச் செய்யும் எவ்விதமான கார்யங்களும், இரண்டாய் மடிக்கப்பட்ட தர்ப்பங்கள் பவித்ரங்கள் இவைகளால் செய்யப்பட வேண்டும். எள் வயலின் உண்டாகிய தர்ப்பங்களை இரண்டாய் மடித்து பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும். தேவகர்மங்களில் இஷ்டப்படி செய்யலாம். குசத்தின் அடியினால் பித்ருகர்மத்தையும்

தோஷமில்லையென்கிறார் மனு. ஸ்ம்ருத்யர்த்தஸார த்திலும்:- கசிவில்லாத மருந்தைச் சாப்பிடுவது, அங்கங்களில் பூசிக்கொள்ளுதல், தாம்பூலபக்ஷணம், பாக்கைத்தின்பது, சாப்பாட்டில் ஸம்பந்தித்த நெய் எண்ணெய் முதலியதின் பற்று, கரும்பு, எள், கிழங்கு, இலை, பூ, பழம், பட்டைகள், புல்கள் கட்டைகள், பக்குமல்லாதவஸ்து இவைகளைப் பக்ஷித்தால் ஆசமனம் வேண்டியதில்லை. மதுபர்க்கம் ஸோமபானம், ப்ராணாஹுதிகள், ஜலம் இவைகளிலும் வாயில் செய்யும் ஹோமங்களெல்லாவற்றிலும் ப்ராம்ஹணன் உச்சிஷ்டனாவதில்லை.

द्रव्यहस्तोच्छिष्टविषये मनुः – उच्छिष्टे न तु संस्पृष्टो द्रव्यहस्तः कथञ्चन । अनिधायैव तद्द्रव्यमाचान्तः शुचितामियात् इति ॥ द्रव्यमत्रानभ्यवहार्यं वस्त्रादि ॥ मार्कण्डेयोऽत्र विकल्पमाह – उच्छिष्टेन तु संस्पृष्टो द्रव्यहस्तो निधाय च । आचम्य द्रव्यमभ्युक्ष्य पुनरादातुमर्हति इति । व्यासोऽपि – यद्यमत्रं समादाय भवेदुच्छेषणान्वितः । अनिधायैव तद्द्रव्यमाचान्तः शुचितामियात् । तैजसं द्रव्यमादाय यद्युच्छिष्टो भवेद्द्विजः । भूमौ निक्षिप्य तद्द्रव्यमाचम्याभ्युक्षयेत्तु तत् ॥ वस्त्रादिषु विकल्पः स्यात् तत्स्पृष्ट्वावेवमेवहि इति ॥ वस्त्रादिसहितस्य उच्छिष्टस्पृष्टौ निधानमनिधानं वा कार्यमित्यर्थः ।

ஒருவஸ்துவைக் கையில் தரித்திருக்கும் பொழுது உச்சிஷ்டனானால், அவன் விஷயத்தில், மனு:- வஸ்த்ரம் முதலிய த்ரவ்யத்தைக் கையில் தரித்துள்ள ஒருவன் உச்சிஷ்டனான (அசுத்தனான) மற்றொருவனால் தொடப்பட்டால், அந்தத்ரவ்யத்தைக் கீழே வைக்காமலே ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். இங்கு த்ரவ்யம் என்பது சாப்பிடக்கூடாத வஸ்த்ரம் முதலியதாம். இங்கு விகல்பம் சொல்லுகிறார். மார்க்கண்டேயர்:-

த்ரவ்யத்தைக் கையிலுடைய ஒருவன், உச்சிஷ்டனால் ஸ்பர்சிக்கப்பட்டால், அந்த த்ரவ்யத்தைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து, அந்த த்ரவ்யத்தை ப்ரோக்ஷித்து மறுபடி எடுத்துக் கொள்ளவேண்டும்.

வ்யாஸரும்:- பாத்ரத்தைத் தரித்திருப்பவன் உச்சிஷ்டனானால் அந்த த்ரவ்யத்தைக் கீழேவைக்காமலே ஆசமனம் செய்து சுத்தனாகிறான். வெண்கலம் முதலிய தாதுத்ரவ்யத்தைத் தரித்திருப்பவன் உச்சிஷ்டனானால் அதைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து, அதை ப்ரோக்ஷிக்க வேண்டும். வஸ்த்ரம் முதலியதை வைத்திருப்பவன் உச்சிஷ்டனானாலும் இவ்விதமே ஆசமனம் செய்யவேண்டும். பூமியில் வைப்பதில்மட்டில் விகல்பம். பூமியில் வைத்தோ வைக்காமலோ ஆசமனம் செய்யலாமென்பதாம்.

बोधायनोऽपि – तैजसं चेदादायोच्छिष्टी स्यात् तदुदस्याचम्यादास्यन्नद्भिः प्रोक्षेदथ चेदन्नेनोच्छिष्टः स्यात् तदुदस्याचम्यादास्यन्नद्भिः प्रोक्षेदथ चेदद्भिरुच्छिष्टी स्यात्तदुदस्याचम्यादास्यन्नद्भिः प्रोक्षे देतदेव विपरीतमन्यत्र इति ।। उदस्य = निधायेत्यर्थः । विपरीतं = अनुदस्येति यावत् ।

போதாயனரும்:- தாது பாத்ரங்களைத் தரித்திருப்பவன் உச்சிஷ்டனானால் அதைக் கீழேவைத்துவிட்டு ஆசமனம் செய்து எடுக்கும்போது ஜலத்தால் ப்ரோக்ஷிக்க வேண்டும். அன்னத்தைத் தரித்திருக்கும்பொழுது உச்சிஷ்டனானாலும், ஜலத்தைத் தரித்திருக்கும்பொழுது உச்சிஷ்டனானாலும் அதைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து, எடுக்கும்பொழுது ஜலத்தால் ப்ரோக்ஷிக்க வேண்டும். அதாவது கீழே வைக்காமலே ஆசமனம் செய்யவேண்டும் என்பதாம்.

अभ्यवहार्यविषये वसिष्ठः – प्रचरन्नभ्यवहार्येषु उच्छिष्टं यदि संस्पृशेत् । भूमौ निधाय तद्द्रव्यमाचम्य प्रचरेत् पुनः इति ।। अभ्यवहार्येषु

- अन्नपानादिषु। प्रचरन् - परिवेषणं कुर्वन्नित्यर्थः। बृहस्पतिरपि – प्रचरन्नन्नपानेषु यदोच्छिष्टमुपस्पृशेत्। भूमौ निधाय तद्द्रव्यमाचान्तः प्रचरेत् पुनः इति ।। गौतमोऽपि – द्रव्य हस्त उच्छिष्टो निधायाचामेत् इति । द्रव्यं - अभ्यवहार्यम् ।। अत्र विशेषमाहतुः शङ्खलिखितौ – द्रव्यहस्त उच्छिष्टो निधायाचम्याभ्युक्षेद्द्रव्यम् इति।

*புஜிக்கக்கூடிய வஸ்துக்களின் விஷயத்தில்* **வஸிஷ்டர்:-** *புஜிக்கக்கூடிய அன்னம் முதலியவைகளைப் பரிமாறுகிறவன் அந்த வஸ்துக்களுடன், மற்றொரு உச்சிஷ்டனை ஸ்பர்சித்தாளுகில், அந்த த்ரவ்யத்தைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து மறுபடி பரிமாறலாம்.* **ப்ருஹஸ்பதியும்:-** *அன்னபானங்களைப் பரிமாறுகிறவன் உச்சிஷ்டனை ஸ்பர்சித்தாளுகில், அந்த த்ரவ்யத்தைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து மறுபடி பரிமாறலாம்.* **கௌதமரும்:-** *த்ரவ்யத்தைக் கையில் வைத்திருப்பவன் உச்சிஷ்டனுனால் அந்த த்ரவ்யத்தை பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்யவேண்டும். த்ரவ்யமென்பது புஜிக்கக்கூடிய வஸ்துவாம். இங்கு விசேஷத்தைச் சொல்லுகின்றனர்.* **சங்கலிகிதர்கள்:-** *த்ரவ்யத்தைக் கையிலுடையவன் உச்சிஷ்டனுனால் அந்த த்ரவ்யத்தை பூமியில்வைத்து ஆசமனம் செய்து, அந்த த்ரவ்யத்தை ப்ரோக்ஷிக்க வேண்டும், என்று.*

हारीतोऽपि – उच्छिष्टेन तु संस्पृष्टो द्रव्यहस्तः कथञ्चन। भूमौ निधाय तद्द्रव्यमाचम्याभ्युक्षणाच्छुचिः इति ।। द्रव्यस्यैव साक्षादुच्छिष्टत्वे परित्यागमाह वसिष्ठः - उच्छिष्टमगुरोरभोज्यं स्वयमुच्छिष्टोपहतं च इति । पक्वान्नमादाय मूत्रादिकरणे श्लोकापस्तम्बः – भूमौ निक्षिप्य तद्द्रव्यं शौचं कृत्वा यथा विधि । उत्सङ्गोपात्तपक्वान्न उपस्पृश्य ततः शुचिः इति ।। एतदापद्यशक्य निधानद्रव्यविषयम्। अरण्येऽनुदके रात्रौ चोरव्याघ्राकुले पथि। कृत्वा

मूत्रं पुरीषं वा द्रव्यहस्तो न दुष्यति इति बृहस्पतिस्मरणात्॥

ஹாரீதரும்:- த்ரவ்யத்தைக் கையிலுடையவன் உச்சிஷ்டனால் தொடப்பட்டால், அந்த த்ரவ்யத்தைப் பூமியில் வைத்து ஆசமனம் செய்து, த்ரவ்யத்தை ப்ரோக்ஷித்துச் சுத்தனாகிறான். த்ரவ்யத்திற்கே ஸாக்ஷாத்தாக உச்சிஷ்ட ஸ்பர்சமேற்பட்டால், த்ரவ்யத்தைப் பரித்யாகம் செய்யவேண்டுமென்கிறார், வஸிஷ்டர்:- குருவல்லாதவரின் உச்சிஷ்டம் புஜிக்கத் தகுந்ததல்ல. ஸாக்ஷாத் உச்சிஷ்ட ஸ்பர்சத்தால் அசுத்தமாகியதும் புஜிக்கத் தகுந்ததல்ல. பக்குவமான அன்னத்தை வைத்துக்கொண்டு, மூத்ராதி விஸர்ஜனம் செய்யும் விஷயத்தில் ச்லோகாபஸ்தம்பர்:- அந்த த்ரவ்யத்தைப் பூமியில் வைத்து விட்டு, விதிப்படி சௌசம் செய்து கொண்டு, மடியில் பக்வான்னத்தை வைத்துக்கொண்டு, பிறகு ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். இது ஆபத்காலத்தில் கீழேவைக்கமுடியாத த்ரவ்யத்தைப் பற்றியது. ஏனெனில் "காட்டிலும், ஜலமில்லாத விடத்திலும், இராத்திரியிலும், திருடர் புலியுள்ளமார்க்கத்திலும், த்ரவ்யத்தைக் கையில் வைத்துக்கொண்டு மூத்ரவிஸர்ஜனம், மலவிஸர்ஜனம் செய்தாலும் தோஷத்தையடைவதில்லை" என்று ப்ருஹஸ்பதி விதித்திருப்பதால்.

मार्कण्डेयस्तु शौचमप्यनिधायैव कार्यमित्याह – पक्वान्नेन गृहीतेन मूत्रोच्चारं करोति यः । अनिधायैव तद्द्रव्यमङ्के कृत्वा समाश्रितम्। शौचं कृत्वा यथान्यायमुपस्पृश्य यथाविधि । अन्नमभ्युक्षयेच्चैव मुद्धृत्यार्कस्य दर्शयेत्॥ त्यक्त्वा तद्ग्रासमात्रं वा शेषं शुद्धिमवाप्नुयात् इति । स्मृत्यर्थसारे – वस्त्रादिसहित उच्छिष्टश्चेत्तदालभ्याङ्के निधाय तत्सहित आचान्तः शुध्येत्। निधाय वाऽऽचम्य वस्त्रादि प्रोक्षेत्॥ अन्नपानादिहस्त उच्छिष्टश्चेन्निधाया चम्य प्रोक्षेदन्नादिरक्षाशक्तौ तदालभ्याङ्के निधाय वा शौचाचमने

कुर्यात्। परिवेषणं कुर्वन्नुच्छिष्टस्पृष्टौ अन्नं निधायाचम्य परिविष्यात्। परिवेषणं कुर्वन्मूत्राद्युच्छिष्टश्चेत् अन्नादि निधाय शौचाचमने कृत्वाऽन्नादि प्रोक्ष्य अग्निमर्कं वा संस्पृश्य परिविष्यात्। परिवेषणे रजोदृष्टौ तत्स्पृष्टान्नत्यागः इति।

**மார்க்கண்டேயரோவெனில்:-** த்ரவ்யத்தை வைக்காமலே சௌசமும் செய்ய வேண்டுமென்கிறார்:- பக்வான்னத்தை வைத்துக்கொண்டே மலமூத்ர விஸர்ஜனம் செய்தவன், அதைப் பூமியில் வைக்காமலே மடியில் வைத்துக்கொண்டு, ந்யாயப்படி சௌசம் செய்து, விதிப்படி ஆசமனம் செய்து, அன்னத்தை ப்ரோக்ஷித்து, அதை எடுத்து ஸூர்யனுக்குக் காண்பிக்க வேண்டும். அதில் கபளமாத்ரமாவது எடுத்து எறிந்து விட்டால் மீதியுள்ளது சுத்தமாகின்றது. **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** வஸ்த்ரம் முதலியதுகளுடன் கூடியவன் உச்சிஷ்டனானால், அதைத் தொட்டுக்கொண்டு, அல்லது மடியில் வைத்துக்கொண்டு அத்துடன் கூடியவனாய் ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். அல்லது அதைப் பூமியில் வைத்துவிட்டு ஆசமனம் செய்து, அந்த வஸ்த்ரம் முதலியதை ப்ரோக்ஷிக்க வேண்டும். அன்னபானம் முதலியதைக் கையிலுடையவனாய் உச்சிஷ்டனானால் அதைக்கீழே வைத்து ஆசமனம் செய்து ப்ரோக்ஷிக்க வேண்டும். அந்த அன்னபானாதிகளைக் கீழே வைத்து ரக்ஷிக்க முடியாவிடில் அதைத் தொட்டுக்கொண்டு, அல்லது மடியில் வைத்துக் கொண்டு, சௌசம் ஆசமனம் இவைகளைச் செய்யவேண்டும். பரிமாறுகிறவன் உச்சிஷ்டத்தால் ஸ்பர்சிக்கப்பட்டால் அன்னத்தை வைத்துவிட்டு ஆசமனம் செய்து பரிமாறவேண்டும். பரிமாறுகிறவன் மூத்ரவிஸர்ஜனாதிகளால் உச்சிஷ்டனானால், அன்னம் முதலியதை வைத்துவிட்டு, சௌசமுமாசமனமும் செய்து, அன்னம் முதலியதை ப்ரோக்ஷித்து, அக்னி அல்லது ஸூர்யனை ஸ்பர்சிக்கச்

செய்து பரிமாறவேண்டும். பரிமாறும்போது ஸ்த்ரீக்கு ரஜோதர்சனமானால் அவள் தொட்ட அன்னத்தைப் பரித்யாகம் செய்யவேண்டும்.

एवमुक्तलक्षणस्याचमनस्य प्रशंसामाह व्याघ्रपादः – य एवं ब्राह्मणो नित्यमुपस्पर्शनमाचरेत् । ब्रह्मादिस्तम्बपर्यन्तं जगत् स परितर्पयेत् इति ॥ आचमनाकरणे प्रत्यवायो दर्शितः स्मृतिचन्द्रिकायाम् – यः क्रियाः कुरुते मोहादनाचम्यैव नास्तिकः । भवन्ति हि वृथा तस्य क्रियाः सर्वा न संशयः इति ।

இவ்விதம் சொல்லிய லக்ஷணங்களையுடைய ஆசமனத்தின் ப்ரசம்ஸையைச் சொல்லுகிறார், வ்யாக்ரபாதர்:- எந்த ப்ராம்ஹணன் நித்யமும் இவ்விதம் ஆசமனம் செய்கிறானோ, அவன் ப்ரம்ஹா முதல் புழு வரையிலுள்ள உலகத்தை த்ருப்தமாய்ச் செய்கிறான். ஆசமனம் செய்யாவிடில் தோஷம் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ம்ருதிசந்த்ரிகையில்:- எவன் நாஸ்திகனாய் ஆசமனம் செய்யாமலே க்ரியைகளைச் செய்கிறானோ, அவனுடைய க்ரியைகளெல்லாம் வீணாக ஆகின்றன. ஸம்சயமில்லை.

## दन्तधावनविधिः ।

तत्रात्रिः —मुखे पर्युषिते नित्यं भवत्यप्रयतो नरः । तदार्द्रकाष्ठं शुष्कं वा भक्षयेद्दन्तधावनम् इति । भरद्वाजः – प्रक्षाल्य चरणौ हस्तौ मुखं चाथ यथाविधि । आचम्य प्राङ्मुखः स्थित्वा दन्तधावनमाचरेत् ॥ आयुरित्यादिमन्त्रोऽयमुक्तः शाखाभिमन्त्रणे । विनाऽभिमन्त्रणं तूष्णीं वृथा स्याद्दन्तधावनम् ॥ अस्य प्रजातिः ऋषिच्छन्दोऽनुष्टुब्वनस्पतिः । देवतेति हृदि स्मृत्वा मन्त्रारम्भे वदेद्बुधः इति ॥ बोधायनोऽपि – उत्थाय नेत्रे प्रक्षाल्य शुचिर्भूत्वा समाहितः । परिजप्य च मन्त्रेण भक्षयेद्दन्तधावनम् ॥ मन्त्रोऽपि – आयुर्बलं यशो वर्चः प्रजापशुवसूनि च । ब्रह्म प्रज्ञां च मेधां च त्वन्नो देहि वनस्पते इति । अभिमन्त्र्य हृतां

शाखां मन्त्रेणानेन वै द्विजः । अथ ऊर्ध्वक्रमेणैव धावयेच्छाखया तया ।। वामभागं समारभ्य प्रादक्षिण्यक्रमेण तु इति ।।

**பல்துலக்கும் முறை**

இனி பல்துலக்கும்விதி சொல்லப்படுகிறது. அதில் **அத்ரி**:- ப்ரதிதினமும், வாய் பழைமையுடையதாவதால் மனிதன் அசுத்தனுகிருன். ஆகையால், பச்சையல்லது காய்ந்த குச்சியால் பற்களைச் சுத்தமாக்க வேண்டும். **பரத்வாஜர்**:- பிறகு கால்கைகள் முகம் இவைகளை அலம்பி ஆசமனம் செய்து கிழக்கு நோக்கியவனுயிருந்து தந்ததாவனத்தைச் (பற்களின் சுத்தியை) செய்ய வேண்டும். தந்ததாவன காஷ்டத்தை அபிமந்த்ரிக்கும் மந்த்ரம் (ஆயு:) என்பதை முதலிலுடையது. அபிமந்த்ரணமில்லாமல் செய்த தந்ததாவனம் பயனற்றதாகும். இந்த மந்த்ரத்திற்கு ப்ரஜாபதி ருஷி, சந்தஸ் அனுஷ்டுப், வனஸ்பதி தேவதை, என்று மனதில் த்யானித்து மந்த்ராரம்பத்தில் சொல்லவேண்டும். **போதாயனரும்**:- எழுந்து கண்களை அலம்பி, சுத்தனுய், கவனமுடையவனுயிருந்து, மந்த்ரத்தை ஜபித்து, காஷ்டத்தால் தந்ததாவனம் செய்யவேண்டும். **மந்த்ரமும்**:- 'ஆயுர்பலம்'' என்பது முதலியது. ஓ குச்சியே எங்களுக்கு ஆயுள், பலம், யசஸ், தேஜஸ், ப்ரஜைகள், பசுக்கள், தனங்கள், வேதம், ப்ரஜ்ஞை, மேதை இவைகளை நீ கொடுக்க வேண்டும்' என்று. இந்த மந்த்ரத்தால் தந்தகாஷ்டத்தை அபிமந்த்ரித்து அதனுல் கீழ்மேல் என்ற க்ரமமாய் இடது பாகத்திலாரம்பித்து ப்ரதக்ஷிணமாய் தந்ததாவனம் செய்யவேண்டும்.

व्यासः – प्रक्षाल्य पादौ हस्तौ च मुखं चाद्भिस्समाहितः । दक्षिणं बाहुमुद्धृत्य कृत्वा जान्वन्तरं ततः ।। आचम्य प्राङ्मुखः पश्चाद्दन्तधावनमाचरेत् इति ।। शाण्डिल्यः – बाहू जान्वन्तरा कृत्वा कुक्कुटासनमास्थितः । तर्पणाचमनोल्लेख्यदन्तशुद्धीः समाचरेत् इति ।।

याज्ञवल्क्यः – शरीरचिन्तां निर्वर्त्य कृतशौचविधिर्द्विजः । प्रातस्सन्ध्यामुपासीत दन्तधावनपूर्वकम् ।। कण्टकिक्षीरिवृक्षोत्थं द्वादशाङ्गुलसम्मितम् । कनिष्ठिकाग्रवत् स्थूलं पूर्वार्धकृतकूर्चकम् ।। दन्तधावनमुद्दिष्टं जिह्वालेखनिका तथा इति ।। विष्णुः – वितस्तिमात्र मृजु च कीटाग्निभिरदूषितम् । प्राङ्मुखश्चोपविष्टस्तु भक्षयेद्वाग्यतोऽत्वरः इति ।। स्मृत्यन्तरे – शाखां विदार्य तस्यास्तु भागेनैकेन मार्जयेत् । जिह्वां ततो द्वितीयेन गृहस्थश्च यतिस्तथा इति ।।

**வ்யாஸர்:-** கால், கைகள், முகம் இவைகளை ஜலத்தால் அலம்பி, கவனமுடையவனாய், முழங்கால்களுக்கு நடுவில் கையை வைத்துக்கொண்டு உபவீதியாய் ஆசமனம் செய்து, பிறகு கிழக்கு நோக்கியவனாய் தந்ததாவனம் செய்யவேண்டும். **சாண்டில்யர்:-** குக்குடாஸனத்திலிருப்பவனாய், கைகளை முழங்கால்களுக்கு நடுவில் வைத்துக்கொண்டு, தர்ப்பணம், ஆசமனம், உல்லேகனம், தந்ததாவனம் இவைகளைச் செய்யவேண்டியது. **யாக்ஞவல்க்யர்:-** ப்ராம்ஹணன் மலமூத்ரவிஸர்ஜனம் செய்து, சௌசம் செய்துகொண்டு, தந்ததாவனம் செய்து காலை ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டும். முள்ளுள்ளது, அல்லது பாலுள்ளதான மரத்திலுண்டாகியதும், பன்னிரண்டு அங்குலம் நீளமுள்ளதும், சுண்டுவிரலின் நுனியளவு பருமனுள்ளதும், முன்பாகத்தில் தட்டப்பட்டதுமாய், தந்ததாவனகாஷ்டமிருக்க வேண்டும். நாக்கைச் சுத்தம் செய்யும் காஷ்டமும் அதுபோலவே இருக்க வேண்டும். **விஷ்ணு:-** ஒட்டைநீளமுள்ளதும், ருஜுவானதும், புழுக்களாலும், நெருப்பினாலும் கெடுக்கப்படாததுமான காஷ்டத்தை க்ரஹித்து, கிழக்குமுகமாய் உட்கார்ந்து கொண்டு, மௌனியாய், மெதுவாய் தந்ததாவனம் செய்யவேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** க்ருஹஸ்தனும். யதியும், தந்ததாவனகாஷ்டத்தை

இரண்டாய் ஒடித்து, ஒன்றினால் தந்ததாவனத்தையும், மற்றதால் நாக்கின் சுத்தியையும் செய்து கொள்ளவேண்டும்.

## दन्तधावनकाष्ठानि ।

हारीतः – सर्वे कण्टकिनः पुण्याः क्षीरिणश्च यशस्कराः । अष्टाङ्गुलेन मानेन दन्तकाष्ठमिहोच्यते ।। प्रादेशमात्रमथ वा तेन दन्तान् विशोधयेत् । खदिरश्च कदम्बश्च करञ्जः करजस्तथा ।। त्रसिनी वेणुः पृथ्वी च जम्बूर्निम्बस्तथैव च । अपामार्गश्च बिल्वश्च अर्कश्चोदुम्बरस्तथा ।। एते प्रशस्ताः कथिताः दन्तधावनकर्मणि इति ।। शौनकः – विज्ञातवृक्षं क्षुण्णाग्रं मृजुदुर्गन्धवर्जितम् । सत्वक्तु दन्तकाष्ठं स्यात्तदग्रेण प्रधावयेत् इति ।। अङ्गिराः – आम्र पुन्नागबिल्वानामपामार्ग शिरीषयोः । भक्षयेत् प्रातरुत्थाय वाग्यतो दन्तधावनम् इति ।।

### பல்துலக்குவதற்குரிய குச்சிகள்

*ஹாரீதர்:-* முள்ளுள்ள எல்லா வ்ருக்ஷங்களும் புண்யம் தரும். பாலுள்ளவைகளெல்லாம் கீர்த்தியைத்தரும். அந்த வ்ருக்ஷங்களினுடையதும், எட்டு அங்குலமளவுள்ளதும், அல்லது ஒட்டையளவுள்ளதுமாயிருக்க வேண்டும். அந்த பற்குச்சியால் அதனால் தந்ததாவனம் செய்யவேண்டியது. காதிரம் (கருங்காலி) கதம்பம் (கடம்பை) கரஞ்சம் (புங்கு) கரஜம் (சாரடை) த்ரஸினீ (களா) வேணு (மூங்கில்) ப்ருத்வீ (வெண்மந்தாரை) ஜம்பு (நாவல்) நிம்பம் (வேம்பு) அபாமார்கம் (நாயுருவி) பில்வம், அர்க்கம் (எருக்கு) உதும்பரம் (அத்தி) இந்த வ்ருக்ஷங்கள் தந்ததாவனத்திற்குச் சிறந்தவைகள்.

*சௌனகர்:-* தெரிந்த வ்ருக்ஷத்தினுடையதும், நசுக்கப்பட்ட நுனியுடையதும், ருஜுவாகியதும்,

துர்கந்தமில்லாததும், தோலுடன் கூடியதுமாய் தந்தகாஷ்டமிருக்க வேண்டும். அதன் நுனியினுல் துலக்கவேண்டும். **அங்கிரஸ்:-** மா, புன்னை, பில்வம், நாயுருவி, வாகை இவைகளின் காஷ்டத்தால், காலையிலெழுந்து மௌனியாய், தந்ததாவனம் செய்யவேண்டும்.

व्यासः – प्रक्षाल्य दन्तकाष्ठं वै भक्षयेत्तु विधानतः । मध्याङ्गुलि समस्थौल्यं द्वादशाङ्गुलसंमितम् ।। सत्वचं दन्तकाष्ठं स्यात्तस्याग्रेण तु धावयेत् । क्षीरिवृक्ष समुद्भूतं मालतीसम्भवं शुभम् ।। अपामार्गं च बिल्वं च करवीरं विशेषतः ।। तिक्तं कषायकटुकं सुगन्धि कटुकान्वितम् । क्षीरिणो वृक्षगुल्मादीन् भक्षयेद्दन्तधावनम् । वर्जयित्वा निषिद्धानि गृहीत्वैवं यथोदितम् ।। परिहृत्य दिनं पापं धावयेत्तु विधानतः । नोत्पाटयेद्दन्तकाष्ठं नाङ्गुल्या धावयेत् क्वचित् ।। प्रक्षाल्य भुक्त्वा तज्जह्याच्छुचौ देशे समाहितः इति ।। अत्रिः – अङ्गुल्या दन्तकाष्ठं च प्रत्यक्षलवणं तथा । मृत्तिकाभक्षणं चैव तुल्यं गोमांसभक्षणे इति ।। उशना – नाङ्गुलीभिर्दन्तान् प्रक्षालयेत् इति ।।

**வ்யாஸர்:-** தந்தகாஷ்டத்தை அலம்பி அதனுல் விதிப்படி தாவனம் செய்யவேண்டும். தந்தகாஷ்டம் நடுவிரல் பருமனுள்ளதும், பன்னிரண்டு அங்குலநீளமுள்ளதும், தோலுடன் கூடியதுமாயிருக்க வேண்டும். அதன் நுனியால் துலக்கவேண்டும். பாலுள்ள மரத்திலுண்டாகியதும், மாலதீ, (ஜாதிமல்லிகை) யுடையதும் சுபமாகும். நாயுருவி, பில்வம், அலரி இவைகளினுடையதும் மிகச்சுபம், துவர்ப்பு, கஷாயம், கடுப்பு உள்ளதும், நல்லவாஸனையுள்ளதும் சிறந்தது. பாலுள்ள மரம், கொடி இவைகளால் தந்ததாவனம் செய்ய வேண்டும். நிஷித்தமான குச்சி தள்ளி விஹிதமானதை க்ரஹித்து நிஷித்த தினங்களைப் பரிஹரித்து விதிப்படி துலக்க வேண்டும். தந்தகாஷ்டத்தைப் பிளக்கக்கூடாது.

ஒருகாலும் விரலினுல் பல்துலக்கக்கூடாது. தந்தகாஷ்டத்தை அலம்பிப் பிறகு தந்ததாவனம் செய்து, அலம்பி, கவனமாய், சுத்தமான இடத்தில் அதைப்போட வேண்டும். **அத்ரி:-** விரலால் பல்துலக்குவதும், ப்ரத்யக்ஷமாய் லவணத்தை உபயோகித்தலும், மண்ணினுல் பல்துலக்குவதும் பசுவின் மாம்ஸத்தைப் பக்ஷிப்பதற்குச் சமமாகும். **உசநஸ்:-** விரல்களால் பற்களைத் துலக்கக்கூடாது.

विष्णुः—सुसूक्ष्मं सूक्ष्मदन्तस्य मध्यदन्तस्य मध्यमम् । स्थूलं विषमदन्तस्य त्रिविधं दन्तधावनम् । द्वादशाङ्गुलकं विप्रे काष्ठमाहुर्मनीषिणः । क्षत्रविट्छूद्रजातीनां नव षट्चतुरङ्गुलम् इति ।। गर्गः – दशाङ्गुलं तु विप्राणां क्षत्रियाणां नवाङ्गुलम् । अष्टाङ्गुलं तु वैश्यानां शूद्राणां सप्तसम्मितम् ।। चतुरङ्गुलमानं तु नारीणां नात्र संशयः इति ।। मार्कण्डेयः – वटासनार्कखदिरकरवीरांश्च भक्षयेत् । जातीं च बिल्वबदरं मूलं तु ककुभस्य च ।। अरिमेदं प्रियङ्गुं च कण्टकिन्यस्तथैव च इति ।। विष्णुरपि – वटासनार्कखदिर अरञ्जकरवीर वर्जडाडिमापामार्ग मालती ककुभ बिल्वाना मन्यतमम् इति ।। भक्षयेदिति शेषः ।।

**விஷ்ணு:-** சிறிய பற்களுக்குச் சிறியதும், நடுத்தரமான பற்களுக்கு நடுத்தரமாகியதும், பெரியபற்களுக்குப் பெரியதுமென தந்ததாவனம் மூன்று விதமாயிருக்க வேண்டும். ப்ராம்ஹணனுக்குப் பன்னிரண்டு அங்குலமும், க்ஷத்ரியனுக்கு ஒன்பது அங்குலமும், வைச்யனுக்கு ஆறு அங்குலமும், சூத்ரனுக்கு நாலு அங்குலமும், நீளம் உள்ளதாய், தந்தகாஷ்டமிருக்க வேண்டுமெனப் பெரியோர்கள் சொல்லுகின்றனர். **கர்கர்:-** ப்ராம்ஹணர்களுக்குப் பத்து அங்குலமும், க்ஷத்ரியர்களுக்கு ஒன்பது அங்குலமும், வைச்யர்களுக்கு எட்டு அங்குலமும், சூத்ரர்களுக்கு ஏழு அங்குலமும், ஸ்த்ரீகளுக்கு நாலு அங்குலமும் நீளமுள்ளதாய், தந்தகாஷ்டமிருக்க வேண்டும். இதில்

ஸம்சயமில்லை. மார்க்கண்டேயர்:- ஆல், வேங்கை, எருக்கு, கருங்காலி, அலரி, ஜாதிமல்லிகை, பில்வம், இலந்தை, மருதையின்வேர், கருவேல், செஞ்சந்தனம், முள்ளுள்ளவைகள் இவைகளின் காஷ்டத்தை உபயோகிக்கலாம். விஷ்ணுவும்:- ஆல், வேங்கை, எருக்கு, கருங்காலி, புங்கு, அலரி, நருமாமரம், மாதுளை, நாயுருவி, ஜாதிமல்லி, மருதை, பில்வம் இவைகளுள் ஒன்றைத் தந்ததாவனகாஷ்டமாய் உபயோகிக்கலாம்.

एतेषु फलमाह गर्गः – सर्जे धैर्यं वटे दीप्तिः करञ्जे विजयो रणे। प्लक्षे चैवार्थसंपत्तिः बदर्यां मधुरस्वनः ॥ खदिरे चैव सौगन्ध्यं बिल्वे तु विपुलं धनम्। औदुम्बरे वाक्यसिद्धिः मधूके च दृढा श्रुतिः ॥ पौण्ड्रे च कीर्तिसौभाग्यं पालाशे सिद्धिरुत्तमा। कदम्बे च तथा लक्ष्मीराम्रे चारोग्यमेव च ॥ अपामार्गे धृतिर्मेधा प्रज्ञा शक्तिर्वपुः श्रुतिः। आयुः शीलं यशो लक्ष्मीः सौभाग्यं चोपजायते ॥ अर्केण हन्ति रोगांस्तु बीजपूरेण तु व्यथाम्। ककुभेन तथाऽऽयुष्मान् भवेत् पलितवर्जितः ॥ डाडिमे सिन्दुवारे च कुब्जके ककुभे तथा। जाती च करमर्दा च दुस्वप्नं चैव नाशयेत् इति ॥

இவைகளின் பயனைச் சொல்லுகிறார். கர்கர்:- நருமாமரத்தினால் தைர்யமும், ஆலினால் காந்தியும், புங்கினால் யுத்தத்தில் ஜயமும், இச்சியால் பணப்பெருக்கும், இலந்தையால் இனியகுரலும், கருங்காலியால் நல்ல வாஸனையும், பில்வத்தால் அதிகப்பணமும், அத்தியால் வாக்கின் ஸித்தியும், இலுப்பையினால், த்ருடமான செவியும், நாமக்கரும்பால் நற்கீர்த்தியும், புரசினால் சிறந்த ஸித்தியும், கடம்பையால் லக்ஷ்மியும், மாவினால் ஆரோக்யமும், நாயுருவியினால் தைர்யம், மேதை, ப்ரக்ஞை, சக்தி, நல்ல சரீரம், செவி, ஆயுள், சீலம், யசஸ், லக்ஷ்மி, அழகு இவைகளும் உண்டாகும். எருக்கினால் ரோகங்களைப் போக்குவான். மாதுளையால் வருத்தத்தைப் போக்குவான். மருதையினால்

நீண்ட ஆயுளுள்ளவனும், நரையில்லாதவனுமாவான். மாதுளை, நொச்சில், கருவை, வெட்பாலை, ஜாதி, களா இவைகளால் துஸ்வப்னத்தைப் போக்கிக் கொள்வான்.

मार्कण्डेयः – सर्वे कण्टकिनः पुण्याः क्षीरिणश्च यशस्विनः । उदुम्बरेण वाक्सिद्धिं लभेत् प्लक्षेण वै धनम् ।। अर्जुनेन निरोगत्वं वटेन महतीं श्रियम् । अपामार्गेण सर्वर्द्धिं स्त्रीवश्यं च प्रियङ्गुभिः ।। वेणुना चाप्नुयाद्वा वै राजवृक्षाज्जयं लभेत् । चूतेन नृपपूजा स्यात् सौभाग्यं पनसेन तु ।। दीर्घायुर्जम्बुना चेष्टसिद्धिः स्यादणुजम्बुना । जयं कण्टकवृक्षात्तु बलं वैकङ्कताल्लभेत् ।। आरोग्यं कर्णिकारेण पारन्त्या शौर्यमुत्तमम् । अशोकेन विशोकः स्यात् लवङ्गाद् ब्रह्मवर्चसम् ।। खादिरादस्विलान् कामान् लभेदतियशो महत् । वाग्यतो निमृजेद् दन्तान् दन्तमांसमपीडयन् ।। जिह्वामलं समुदितं दन्तान्तरितमेव च । राक्षस्या मुत्सृजेत् काष्ठं दिशि निर्मृज्य तच्छुचौ । दन्तधावनकाष्ठं तु येनोत्सृष्टं तदन्ततः । स मृष्टाहारमाप्नोति पतत्यभिमुखं यदि इति ।

**மார்க்கண்டேயர்:-** முள்ளுள்ளவைகளெல்லாம் புண்யத்தையளிக்கும். பாலுள்ளவைகளெல்லாம் கீர்த்தியையளிக்கும். அத்தியினால் வாக்கின் ஸித்தியை யடைவான். இச்சியால் தனத்தையடைவான். மருதையால் ஆரோக்யத்தையும் ஆலினால் அளவற்ற செல்வத்தையும், நாயுருவியினால் ஸகலஸம்ருத்தியையும், கட்டுமாவினால் ஸ்த்ரீகளின் வசீகரணத்தையும், மூங்கிலினால் பசுக்களையும் கொன்றையினால் ஜயத்தையும், மாவினால் ராஜஸம்மானத்தையும், பலாவினால் ஸௌபாக்யத்தையும், நாவலினால் நீண்ட ஆயுளையும், சிறுநாவலினால் இஷ்டஸித்தியையும், முள்வ்ருக்ஷத்தால் ஜயத்தையும், சொத்தைக் களாவினால் பலத்தையும், கோங்கிலவினால் (கர்ணிகாரத்தால்) ஆரோக்யத்தையும், பாரந்தியால் சிறந்த சௌர்யத்தையும், அசோகத்தால் சோகமின்மையையும், லவங்கத்தால் ப்ரம்ஹ

வர்ச்சஸத்தையும், கருங்காலியால் எல்லாக்கர்மங்களையும் மிகுந்தயசஸ்ஸையும் அடைவான். தந்தமாம்ஸத்தைப் பீடிக்காமல் மௌனியாய், பல் துலக்க வேண்டும். நாக்கினின்றும், பற்களினின்றும் வெளிவந்த அழுக்குகளை நிர்ருதிதிக்கில் துப்பவேண்டும். பற்குச்சியையும், அதேதிக்கில் சுத்தமானவிடத்தில் போடவேண்டும். கடைசியில் எறிந்த பற்குச்சியானது எதிராய் விழுந்தால் அவன் நல்ல ஆஹாரத்தை யடைவான்.

व्यासोऽपि – प्रक्षाल्य तच्छुचौ देशे दन्तधावनमुत्सृजेत्। पतितेऽभिमुखे सम्यग्भोज्यमाप्नोत्यभीप्सितम् इति । स एव – वर्जयेद्दन्तकाष्ठानि वर्जनीयानि नित्यशः। वर्जयेच्छास्त्रदृष्टानि पर्वस्वपि च वर्जयेत् इति। वर्जनीयान्याह मार्कण्डेयः – शाल्मल्यश्वत्थभव्यानां जवकिंशुकयोरपि । कोविदारशमीपीलुश्लेष्मातकविभीतकान् ॥ वर्जयेद्दन्तकाष्ठेषु गुग्गुलं क्रमुकं तथा इति ॥ उशना — दक्षिणाभिमुखो नाद्यान् नीलबन्धुकदम्बकम्। तिन्दुकेङ्गुदबन्धूकमोचामरजबल्बजम् ॥ कार्पासदन्तकाष्ठं च विष्णोरपि हरेच्छ्रियम्। न भक्षयेत पालाशं कार्पासं शाकमेव च। एतानि भक्षयेद्यस्तु क्षीणपुण्यः स वै नरः इति ॥

**வ்யாஸரும்:-** அந்தப் பற்குச்சியையலம்பி சுத்தமானவிடத்தில் போடவேண்டும். அது எதிராய் விழுந்தால் நல்ல இஷ்டமான ஆஹாரத்தையடைவான். **வ்யாஸர்:-** நிஷித்தங்களான தந்தகாஷ்டங்களை தவிர்க்கவேண்டும். காலநியமமின்றி எப்பொழுதும் தவிர்க்க வேண்டும். சாஸ்த்ரவிஹிதமானவைகளையும் பர்வகாலங்களிலும் தவிர்க்க வேண்டும். தவிர்க்கக்கூடிய தந்தகாஷ்டங்களைச் சொல்லுகிறார். **மார்க்கண்டேயர்:-** இலவு, அரசு, கடாரை, யவம், புரசு, கோவிதாரம், வன்னி, ஊவக்கை, நருவளி, தானி, குங்கிலி, கமுகு இவைகளை வர்ஜிக்கவேண்டும். **உசநஸ்:-** தெற்குநோக்கியவனாய், தந்ததாவனம் செய்யக்கூடாது. அவுரி, உச்சித்திலகம், கடம்பை, தும்பை, மணிப்புங்கு,

செம்பருத்தி, வாழை, கடகப்பூண்டு, விழல், பருத்தி இவைகளின் காஷ்டம் விஷ்ணுவின் லக்ஷ்மியையுமபஹரிக்கும். புரசு, பருத்தி, கும்பிமரம் இவைகளைத் தந்ததாவனத்திற்கு உபயோகிப்பவன் புண்யம் நசித்தவனாவான்.

हारीतोऽपि — कालेयपालाश कोविदार श्लेष्मातक बिल्वकाशार्कवृक्ष निर्गुण्डीशिखण्डिशिरीषमालती करवीर बदरी करजवेणुवर्जम् इति। गर्गः – कुशं काशं पलाशं च शिंशुपां यस्तु भक्षयेत्। तावद्भवति चण्डालो यावद्गां नैव पश्यति इति ॥ वसिष्ठः – अज्ञातपूर्वाणि न दन्तकाष्ठान्यद्यान्न पत्रैश्च समन्वितानि । न युग्मपर्णानि न पाटितानि न चार्द्रशुष्काणि नचात्वचानि इति ॥ चन्द्रिकायाम् – त्याज्यं सपत्रमज्ञातमूर्ध्वशुष्कं च पाटितम्। त्वक्हीनं ग्रन्थिसंयुक्तं तथा पालाशशिंशुपाम् इति ॥

ஹாரீதரும்:- காரை, புரசு, மாம்பழக்கொன்றை, முருங்கை, நறுவிலி, பில்வம், நாணல், எருக்கு, நொச்சில் குன்றிமணி, மலைமல்லி, வாகை, ஜாதிமல்லி, அலரி, இலந்தை, கரஜம், மூங்கில் இவைகள் வர்ஜிக்கத் தகுந்தவை. கர்கர்:- குசம், நாணல், புரசு, அகில் இவைகளால் தந்ததாவனம் செய்பவன், பசுவைத்தர்சனம் செய்யாதவரையில் சண்டாளனாயிருக்கிறான். வஸிஷ்டர்:- முன் அறியப்படாததும், இலைகளுடன் கூடியதும், இரட்டை இலைகளுடையதும், பிளந்ததும், ஒருபுறம் ஈரமும் ஒருபுறம் காய்ந்ததும், தோலில்லாததுமான தந்தகாஷ்டத்தை வர்ஜிக்க வேண்டும். சந்த்ரிகையில்:- இலையுடன் கூடியதும், அறியாததும், நுனி காய்ந்ததும், பிளந்ததும், தோலில்லாததும், முடிச்சுள்ளதும், புரசு, அகில், இவைகளினுடையதுமான காஷ்டத்தை வர்ஜிக்க வேண்டும்.

स्मृत्यर्थसारे – शाल्मल्यरिष्ट भव्यकिंशुकपीलुकविभीतक गुग्गुलारुवाकाम्बष्ठ तिन्दुकमधूकेङ्गुद धुस्तूर पारिभद्राम्लिकाश्च वर्ज्या इति ॥ आसने शयने याने पादुके दन्तधावने । पलाशाश्वत्थकौ वर्ज्यौ सर्वकुत्सितकर्मसु इति च ॥ देवलः – आसनानि न कुर्वीत मृत्तिकाश्वत्थगोमयैः । पालाशेन विशेषेण दन्तधावनमेव च इति ॥ आपस्तम्बोऽपि – पालाशमासनं पादुके दन्तप्रक्षालनमिति च वर्जयेत् इति ॥ एतेषु केषुचिद्विहितत्वात् प्रतिषिद्धत्वाच्च विकल्पो वेदितव्यः ॥ तथा च स्मृत्यर्थसारे — कोविदारशमीक्षारश्लेष्मातकपलाशकाः । निर्गुण्डीशिशपाशाकाः कदम्बकरुभावटाः ॥ विहिताः प्रतिषिद्धाः स्युः इमे तस्माद्विकल्पिताः इति ॥

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** *இலவு, நாணல், பூலா, புரசு, ஊவக்கை, தாணி, குங்கிலி, சேரா, புங்கம்பாளை, தும்பை, இலுப்பை, மணிப்புங்கு, ஊவத்தை, பவழமல்லிகை, புளி இவைகள் வர்ஜிக்கத் தகுந்தவைகள். ஆஸனம், சயனம், பாதுகை, தந்ததாவனம் இவைகளிலும், மற்றத்தாழ்ந்த கர்மங்களிலும், புரசு, அரசு, இவைகளை வர்ஜிக்கவேண்டும்.* **தேவலர்:-** *மண், அரசு, சாணம், புரசு இவைகளால் ஆஸனமும் தந்ததாவனமும் செய்யக்கூடாது.* **ஆபஸ்தம்பரும்:-** *புரசுவ்ருக்ஷத்தை ஆஸனம், பாதுகை, தந்ததாவனம் இவைகளில் உபயோகிக்கக்கூடாது. இவைகளுள் சிலவற்றில் விதியும், ப்ரதிஷேதமுமிருப்பதால் விகல்பமென்றறியவேண்டும். அவ்விதமே,* **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** *மாம்பழக்கொன்றை, வன்னி, சாம்பல், நறுவிளி, புரசு, நொச்சில், அகில், கீரை, கடம்பு, ஆல் இவை சிலரால் விதிக்கப்பட்டும் சிலரால் நிஷேதிக்கப்பட்டுமிருக்கின்றன. ஆகையால் இவைகள் விகல்பவிஷயங்களாம். க்ரஹித்தாலும் க்ரஹிக்கலாம். தவிர்த்தாலும் தவிர்க்கலாம்.*

पारिजाते- तृणराजसमुत्पन्नैः न कुर्याद्दन्तधावनम् । नरश्चण्डालयोनिः स्यात् यावद्गां नैव पश्यति ।। गुडाकतालहिन्ताल-केतक्यश्च महावटः । खर्जूरो नालिकेरश्च सप्तैते तृणराजकाः इति ।। स्मृत्यन्तरे — तृणराजाह्वयस्तालो नालिकेरश्च लाङ्गली । खर्जूरः केतकी पूगो हिन्तालश्च महावटः इति ।।

**பாரிஜாதத்தில்:-** *த்ருணராஜவ்ருக்ஷங்களின் காஷ்டங்களால் தந்ததாவனம் செய்யக்கூடாது. செய்தால் அவன் பசுவைத்தர்சனம் செய்யாதவரையில் சண்டாளனுவான். பத்திரி, பனே, கூந்தற்பனே, ஊமத்தை, பேரீச்சு, தென்னே இந்த ஏழும் த்ருணராஜங்களெனப்படும்.* **மற்ருருஸ்மிருதியில்:-** *பனே, தென்னே, திப்பிலி, பேரீச்சை, தாழை, கமுகு, கூந்தற்பனே, ஊமத்தை இவை த்ருணராஜமெனப்படும்.*

अत्र दिङ्नियममाह मार्कण्डेयः – उदङ्मुखः प्राङ्मुखो वा कषायं तिक्तकं तथा इति ।। दन्तकाष्ठं भक्षयेदिति शेषः । आश्वलायनः – प्राग्वोदङ्मुख आसीनः प्रागुदङ्मुख एव वा इति ।। शौनकः – दन्तानां धावनं कुर्यात् वाग्यतस्सोमदिङ्मुखः । प्रक्षाल्य भक्त्वा तज्जह्याच्छुचौ देशे समाहितः इति ।। मार्कण्डेयः – प्रतीचीं दक्षिणाशां च वर्जयेद्दन्तधावने इति ।। कात्यायनः – पूर्वामुखे धृतिं विद्यात् शरीरारोग्यमेव च । दक्षिणेन तथा क्रौर्यं पश्चिमेन पराजयम् । उत्तरेण गवां नाशं स्त्रीणां परिजनस्य च । पूर्वोत्तरे तु दिग्भागे सर्वान् कामानवाप्नुयात् इति ।।

*இங்கு திக்குகளின் நியமத்தைச் சொல்லுகிருர்.* **மார்க்கண்டேயர்:-** *வடக்கு அல்லது கிழக்கு நோக்கியவனுய், கசப்பு அல்லது துவர்ப்புள்ள பற்குச்சியால் தந்ததாவனம் செய்யவேண்டும்.* **ஆச்வலாயனர்:-** *கிழக்கு, அல்லது வடக்கு, வடகிழக்கு*

நோக்கியவனாய், உட்கார்ந்தவனாய் (தந்ததாவனம் செய்யவேண்டும்.) **சௌனகர்:-** வடக்குநோக்கியவனாய், மௌனியாய், தந்ததாவனம் செய்யவேண்டும். பிறகு கவனமுடையவனாய், பற்குச்சியை அலம்பி ஒடித்து சுத்தமான இடத்தில் போடவேண்டும். **மார்க்கண்டேயர்:-** மேற்கு, தெற்கு இந்த இரண்டுதிக்கு நோக்கியவனாய், தந்ததாவனம் செய்யக்கூடாது. **காத்யாயனர்:-** கிழக்குநோக்கி, தந்ததாவனம் செய்தால் தைர்யமும் சரீராரோக்யமுமுண்டாகும். தெற்குநோக்கினால் க்ரூரனாவான். மேற்கு நோக்கினால் அபஜயமுண்டாகும். வடக்கு நோக்கினால் பசுக்கள், ஸ்த்ரீகள், பரிஜனங்கள் இவர்களுக்கு நாசமுண்டாகும். வடகிழக்குநோக்கினால் ஸகல காமங்களையுமடைவான்.

कालनियममाह मार्कण्डेयः – प्रातर्भङ्क्त्वा च यतवाग्भक्षयेद्दन्तधावनम्। प्रक्षाल्य भक्षयेत् पूर्वं प्रक्षाल्यैव च सन्त्यजेत् इति ।। यत्तु व्यासेनोक्तम् – यो मोहात् स्नानवेलायां भक्षयेद्दन्तधावनम्। निराशास्तस्य गच्छन्ति देवताः पितृभिस्सहेति, तन्मध्याह्नस्नान-विषयम्, प्रातःस्नानं तु कुर्वीत दन्तधावनपूर्वकमिति दक्षस्मरणात् ।।

காலத்தின் நியமத்தைச் சொல்லுகிறார், **மார்க்கண்டேயர்:-** ப்ராத:காலத்தில் தந்தகாஷ்டத்தை ஒடித்து மௌனியாய், தந்ததாவனம் செய்யவேண்டும். பற்குச்சியை முதலில் அலம்பியே தந்ததாவனம் செய்ய வேண்டும். பிறகு அலம்பியே அதைவிட வேண்டும். ஆனால், ''எவன் அறியாமையால் ஸ்நானகாலத்தில் தந்ததாவனம் செய்கின்றானோ, அவனின் தேவர்கள் பித்ருக்களுடன் ஆசையற்றவர்களாய்ச் செல்லுகிறார்கள்'' என்று வ்யாஸரால் சொல்லப்பட்டிருக்கின்றதேயெனில், அது மாத்யாஹ்னிக ஸ்நானத்தைப்பற்றியது. ஏனெனில், ''தந்ததாவனத்தை முன்செய்து பிறகு ப்ராதஸ்நானம் செய்யவேண்டும்'' என்று தக்ஷர் சொல்லியிருப்பதால்.

अत्र वर्ज्यकालमाह विष्णुः – प्रतिपत्पर्वषष्ठीषु चतुर्दश्यष्टमीषु च। नवम्यां सङ्क्रमे चैव दन्तकाष्ठं विवर्जयेत् इति ।। चतुर्दश्यष्टमी दर्शः पूर्णिमा सङ्क्रमो रवेः। एषु स्त्रीतैलमांसानि दन्तकाष्ठं च वर्जयेत् इति ।। चन्द्रिकायाम् – प्रतिपद्दर्शषष्ठीषु नवम्यामष्टमीतिथौ । दन्तानां काष्ठसंयोगो दहत्यासप्तमं कुलम् । श्राद्धे जन्मदिने चैव विवाहेऽजीर्णदूषितः । व्रते चैवोपवासे च वर्जयेद्दन्तधावनम् इति । व्यासोऽपि – श्राद्धे यज्ञे च नियमे पत्यौ च प्रोषिते रवेः । वारे पाते च सङ्क्रान्तौ नन्दाभूताष्ट पर्वसु ।। तैलाभ्यङ्गं रतिं मांसं दन्तकाष्ठं च वर्जयेत् इति ।। स्मृत्यन्तरे – अष्टम्यां च चतुर्दश्यां पञ्चदश्यां त्रिजन्मनि । तैलं मांसं व्यवायं च दन्तकाष्ठं च वर्जयेत् इति ।।

*தந்ததாவனத்தின் தள்ளக்கூடியகாலத்தைச் சொல்கிறார் விஷ்ணு:- ப்ரதமை, பர்வங்கள் (அமை பூர்ணிமை) ஷஷ்டீ, சதுர்தசீ, அஷ்டமீ, நவமீ, ஸங்க்ரமணம் இக்காலங்களில் தந்ததாவனத்தில் காஷ்டத்தை உபயோகிக்கக்கூடாது. யமனும்:- சதுர்தசீ, அஷ்டமீ, அமா, பூர்ணிமா, ஸௌர்யஸங்க்ரமணம் இக்காலங்களில் ஸ்த்ரீ, எண்ணெய், மாம்ஸம், தந்தகாஷ்டம் இவைகளை வர்ஜிக்கவேண்டும். சந்த்ரிகையில்:- ப்ரதமை, அமா, ஷஷ்டீ, நவமீ, அஷ்டமீ இந்தத் திதிகளில் குச்சியால் தந்ததாவனம் செய்தால் அது, ஏழுதலைமுறைவரையில் குலத்தை எரிக்கும். ச்ராத்ததினம், பிறந்தநாள், விவாஹதினம், அஜீர்ண தோஷம், வ்ரதம், உபவாஸம் இக்காலங்களில் காஷ்டத்தால் தந்ததாவனத்தை வர்ஜிக்கவேண்டும். வ்யாஸரும்:- ச்ராத்தம், யாகம், வ்ரததினம், பர்த்தா வெளியூர் சென்றிருக்கும் காலம், ஸௌர்யவாரம், வ்யதீபாதம், அஷ்டமீ, பர்வங்கள் இக்காலங்களில், எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல், ஸ்த்ரீஸம்ஸர்க்கம், மாம்ஸபோஜனம், பற்குச்சி இவைகளை*

வர்ஜிக்கவேண்டும். மற்றொருஸ்ம்ருதியில்:- அஷ்டமீ, சதுர்தசீ, பர்வங்கள், த்ரிஜன்மநக்ஷத்ரங்கள் இக்காலங் களில் தைலம், மாம்ஸம் ஸ்த்ரீஸங்கம், பற்குச்சி இவைகளை வர்ஜிக்கவேண்டும்.

माधवीये – श्राद्धे यज्ञे च नियमे नाद्यात् प्रोषितभर्तृका । श्राद्धे कर्तुर्निषेधोऽत्र न तु भोक्तुः कदाचन इति ।। स्मृत्यन्तरे – उपवासदिने यो वै दन्तधावनकृन्नरः । स घोरं नरकं याति व्याघ्रभक्षश्चतुर्युगम् इति ।। स्त्रिया विशेषमाह मनुः – पुष्पालङ्कारवस्त्राणि स्त्रिया धूपानुलेपनम् । उपवासे न दुष्यन्ति दन्तधावनमञ्जनम् इति ।। वसिष्ठः – उपवासे तथा श्राद्धे न खादेद्दन्तधावनम् । दन्तानां काष्ठसंयोगो हन्ति सप्तकुलानि च इति ।।

மாதவீயத்தில்:- ச்ராத்தம், யாகம், வ்ரதம், இக்காலங்களில் தந்தகாஷ்டம் கூடாது, பர்த்தா வெளியூர்போயிருந்தால் ஸ்த்ரீ தந்தகாஷ்டத்தை உபயோகிக்கக்கூடாது. ச்ராத்தத்தில் சொல்லிய நிஷேதம் கர்த்தாவுக்கே தவிர, போக்தாவுக்கு ஒருகாலுமில்லை. மற்றொருஸ்ம்ருதியில்:- எவன் உபவாஸதினத்தில் காஷ்டத்தால் தந்ததாவனம் செய்கின்றானோ அவன், புலிக்கு ஆஹாரமாகியவனாய், நான்கு யுகங்கள்வரை பயங்கரமான நரகத்தையடைகிறான். ஸ்த்ரீகளுக்கு விசேஷத்தைச் சொல்லுகிறார். மனு:- உபவாஸ தினத்திலும், ஸ்த்ரீகளுக்குப் புஷ்பம், அலங்காரம், வஸ்த்ரம், தூபம், சந்தனம், தந்ததாவனம், மைதீட்டல் இவைகள் தோஷத்தைக் கொடுப்பதில்லை. வஸிஷ்டர்:- உபவாஸதினம், ச்ராத்ததினம் இவைகளில் தந்ததாவனம் கூடாது. தந்தங்களுக்குப் பற்குச்சியின் சேர்க்கை யுண்டானால் அது ஏழு குலங்களைத் தஹிக்கும்.

दन्तधावने प्रायश्चित्तमुक्तं विष्णुरहस्ये — गायत्र्याः शतसम्पूतमम्बु प्राश्य विशुध्यति इति । गार्ग्यः — दन्तकाष्ठे

त्वमावास्या तैलाभ्यङ्गे चतुर्दशी । अष्टमी ग्राम्यधर्मे च ज्वलन्तमपि पातयेत् ।। ग्राम्य धर्मः - मैथुनम् । स्त्रीसङ्गं खादनं पानं स्वाध्यायं क्षुरकर्म च । न कुर्याद्दन्तकाष्ठं च तैले तु शिरसि स्थिते इति ।। व्यासः — नद्यां देवालये गोष्ठे श्मशाने जलमध्यके । यागस्थाने शुचौ देशे न कुर्याद्दन्तधावनम् इति ।। शौनकः – अमायां तु न चाश्नीयात् दन्तकाष्ठं कथञ्चन । दन्तान् प्रक्षाल्य विसृजेत् गृहे चेत्तदमन्त्रकम् अलाभे दन्तकाष्ठानां प्रतिषिद्धदिनेष्वपि । अपां द्वादशगण्डूषैः मुख शुद्धिर्भविष्यति इति ।।

*தந்ததாவனத்தில் ப்ராயச்சித்தம் சொல்லப் பட்டுள்ளது. **விஷ்ணுரஹஸ்யத்தில்** :- ச்ராத்த தினத்திலும், உபவாஸதினத்திலும், தந்ததாவனம் செய்தால், காயத்ரீயை 100 முறை ஜபித்து அதனுல் சுத்தமான ஜலத்தைப்பருகினுல் சுத்தனுவான்.*

***கார்க்யர்:-*** *அமாவாஸ்யையில் பற்குச்சியும் சதுர்த்தசியில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலும், அஷ்டமியில் ஸ்த்ரீ ஸம்ஸர்க்கமும் கூடாது. செய்பவன் அக்னிக்குச் சமமானுலும், பதிதனுவான், தலையில் எண்ணெய் இருக்கும்போது, ஸ்த்ரீ ஸங்கம், தின்பது, குடிப்பது, அத்யயனம், க்ஷெளரம், தந்ததாவனம் இவைகளைச் செய்யக்கூடாது. **வ்யாஸர்:-** நதியிலும், தேவாலயத்திலும், மாட்டுக் கொட்டிலிலும், ச்மசானத்திலும், ஜலத்தின் நடுவிலும், யாக ப்ரதேசத்திலும், சுத்தமானவிடத்திலும் தந்ததாவனம் செய்யக் கூடாது. **சௌனகர்:-** அமாதினத்தில் எக்காரணத்தாலும் தந்தகாஷ்டத்தை உபயோகிக்கக் கூடாது. பற்களை அலம்பிவிடவேண்டும். வீட்டிலானுல் அதை மந்த்ரமில்லாமல் செய்யவேண்டும். பற்குச்சி கிடைக்காவிடினும், பற்குச்சியை விலக்கவேண்டிய தினங்களிலும் 12-தடவை ஜலத்தைக் கொப்பளித்தால் வாய் சுத்தமாகின்றது.*

व्यासः — प्रतिपद्दर्शषष्ठीषु नवम्यां दन्तधावनम्। पर्णैरन्यत्र काष्ठैस्तु जिह्वोल्लेखस्सदैव तु इति ॥ अन्यत्र - अनिषिद्धदिनेषु ॥ सदा - निषिद्धेष्वनिषिद्धेष्वपि काष्ठेनैव जिह्वोल्लेखः कार्य इत्यर्थः ॥ पैठीनसिः — तृणपर्णोदकेनाङ्गुल्या वा दन्तान् धावयेत् प्रदेशिनीवर्जम् इति ॥ अङ्गुल्या - अङ्गुष्ठानामिकाभ्याम् ॥ तथा च वृद्धयाज्ञवल्क्यः — इष्टकालेष्ट पाषाणैरितराङ्गुलिभिस्तथा। मुक्त्वा चानामिकाङ्गुष्ठौ वर्जयेद्दन्तधावनम् इति।

एवञ्च नाङ्गुलीभिर्दन्तान् प्रक्षालयेदित्यादीनि वचनान्यनामिकाङ्गुष्ठव्यतिरिक्तविषयाणि । अङ्गुल्या वा दन्तान् धावयेत् प्रदेशिनीवर्जम् इति प्रदेशिनीग्रहणं निषिद्धाङ्गुल्युपलक्षणार्थमित्यविरोध इति स्मृतिचन्द्रिकायां वयवस्थापिकम् ॥

**வ்யாஸர்:-** ப்ரதமா, அமா, ஷஷ்டீ, நவமீ இக்காலங்களில் இலைகளால் தந்ததாவனம் செய்ய வேண்டும். நிஷேதமில்லாத தினங்களில் காஷ்டங்களால் தந்ததாவனம் செய்யலாம், நிஷித்த தினங்கள், அநிஷித்த தினங்கள் எல்லாவற்றிலும் குச்சியால் நாக்கை சுத்தி செய்து கொள்ளலாம். **பைடீநஸி:-** புல், இலை, ஜலம், விரல் இவைகளில் ஒன்றினுல் தந்ததாவனம் செய்யலாம். தர்ஜநீ விரலால் கூடாது. இங்கு விரலினுல் என்றதற்குப் பெருவிரலால், பவித்ரவிரலால் என்று பொருள். அவ்விதமே, **வ்ருத்தயாக்ஞவல்க்யர்:-** செங்கல், மண்கட்டி, கல், பவித்ரவிரல், பெருவிரல் தவிர்த்து மற்றவிரல்கள் இவைகளால் தந்ததாவனம் கூடாது. இவ்விதமிருப்பதால் "விரல்களால் தந்ததாவனம் கூடாது" என்பது முதலிய வசனங்கள் பவித்ரவிரல் பெருவிரலைத் தவிர்த்து மற்றவிரல்களைப்பற்றியதாம். 'தர்ஜனீ விரலைத்தவிர்த்த விரலால் தந்ததாவனம் செய்யலாமெ'ன்ற வசனம் நிஷித்தமான விரல்களைச் சொல்லுவதற்காக என்பதால் விரோதமில்லை என்று ஸ்ம்ருதிசந்த்ரிகையில் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது.

स्मृत्यर्थसारे तु — अङ्गुल्या धावयेद्दन्तान् वर्जयेत्तु प्रदेशिनीम्। मध्यमानामिकाङ्गुष्ठैः दन्तधावो भवत्यपि इति। कालादर्शे – अलाभे वा निषेधे वा काष्ठानां दन्तधावनम्। पर्णेनैव विशुद्धेन जिह्वोल्लेखं च कारयेत् इति। स्मृत्यन्तरे – तृणपर्णैस्सदा कुर्यात् अमामेकादशीं विना। तयोरपि च कुर्वीत जम्बूप्लक्षाम्रपर्णकैः ॥ विधवाकन्यकाब्रह्मचारिणां नास्यशोधनम् इति ॥ भरद्वाजः – यावन्तो नियमाः प्रोक्ताः द्विजश्रेष्ठस्य भुञ्जतः। तावन्तः प्रेक्ष्य कर्तव्या दन्तधावनकर्मणि ॥ मुखशुद्धिं प्रयत्नेन कृत्वैवाहरहर्द्विजः। प्रातस्सन्ध्यामुपासीत तां विना न शुचिर्भवेत् इति ॥

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** *விரலினால் தந்ததாவனம் செய்யலாம். ஆள்காட்டிவிரலை வர்ஜிக்கவேண்டும். நடுவிரல், பவித்ரவிரல், பெருவிரல் இவைகளால் தந்ததாவனம் செய்யலாம்.* **காலாதர்சத்தில்:-** *பற்குச்சிகள் கிடைக்காத காலத்திலும் நிஷேதகாலத்திலும், சுத்தமான இலையினால் தந்ததாவனம், நாக்கின்சுத்தி இவைகளைச் செய்யலாம்.* **மற்றொருஸ்ம்ருதியில்:-** *புல், இலை இவைகளில் எப்பொழுதும் தந்ததாவனம் செய்யலாம். அமா, ஏகாதசீ இவைகளில் கூடாது. அவைகளிலும், நாவல், இச்சி, மா, இவைகளின் இலைகளினால் செய்யலாம், விதவைகள், கன்யகைகள், ப்ரம்ஹசாரிகள் இவர்களுக்குப் பற்குச்சியால் தந்ததாவனம் விதிக்கப்படவில்லை.* **பரத்வாஜர்:-** *ப்ராம்ஹணனுக்குப் போஜனத்தில் எவ்வளவு நியமங்கள் சொல்லப் பட்டுள்ளனவோ அவ்வளவு நியமங்களையும் கவனித்து தந்ததாவனத்திலனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணன் ப்ரதிதினமும் முகசுத்தி செய்துகொண்டே காலை ஸந்த்யாவந்தனத்தை அனுஷ்டிக்க வேண்டும். முகசுத்தி செய்துகொள்ளாவிடில் சுத்தனாவதில்லை.*

—★—

## अथ स्नानविधिः

तत्र शौनकः—प्रातराचमनं कृत्वा शौचं कृत्वा यथार्थवत्। दन्तशौचं ततः कृत्वा प्रातः स्नानं समाचरेत् इति ॥ अत्राचमनं कृत्वेति दन्तशौचेऽपि संबध्यते ॥ तथा च कूर्मपुराणम्—प्रातस्तु दन्तकाष्ठं वै भक्षयित्वा विधानतः। आचम्य प्रयतो नित्यं प्रातःस्नानं समाचरेत् इति। व्यासोऽपि – प्रातःकाले तु सम्प्राप्ते कृत्वा चावश्यकं बुधः। स्नायान्नदीषु शुद्धासु शौचं कृत्वा यथाविधि इति ॥ जाबालिः—सततं प्रातरुत्थाय दन्तधावनपूर्वकम्। आचरेदुषसि स्नानं तर्पयेद्देवमानुषान् इति।

### ஸ்நானவிதி

*இனி ஸ்நானவிதி சொல்லப்படுகிறது. அதில்* **ஸௌனகர்**:- *காலையில் விதிப்படி ஸௌசாசமனங்களைச் செய்து பிறகு தந்தசுத்தி செய்துகொண்டு காலையில் ஸ்நானம் செய்யவேண்டும். இங்கு 'ஆசமனம் செய்து' என்பதை தந்த ஸௌசத்திலும் சேர்க்கவேண்டும். அவ்விதமே,* **கூர்மபுராணம்**:- *காலையில் விதிப்படி தந்ததாவனம் செய்து ஆசமனம் செய்து சுத்தனாய், ப்ரதிதினமும் ப்ராதஸ்நானம் செய்யவேண்டும்.* **வ்யாஸரும்**:- *ப்ராத:காலம் வந்தவுடன் அறிந்தவன் ஆவச்யக கார்யத்தைச் செய்து ஸௌசமும் செய்து, சுத்தமான நதிகளில் விதிப்படி ஸ்நானம் செய்யவேண்டும்.* **ஜாபாலி**:- *எப்பொழுதும் காலையிலெழுந்து தந்த தாவனத்தைச் செய்து, விடியற்காலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். தேவமனுஷ்யர்களைத் தர்பிக்க வேண்டும்.*

स्नानं प्रशंसति योगयाज्ञवल्क्यः— अगम्यागमनात् स्तेयात् पापेभ्यश्च प्रतिग्रहात्। रहस्याचरितात् पापान्मुच्यते स्नानमाचरन् ॥ मनः प्रसादजनक रूपसौभाग्यवर्द्धनम्। शोकदुःस्वप्नहं स्नानं मोक्षदं

ह्लादनं तथा ।। स्नानमूलाः क्रियाः सर्वाः श्रुतिस्मृत्युदिता नृणाम् । तस्मात् स्नानं निषेवेत श्रीपुष्ट्यारोग्यवर्द्धनम् ।। याम्यां हि यातनां दुःखं प्रातःस्नायी न पश्यति इति ।।

*ஸ்நானத்தைப் புகழ்கிறார்- **யோகயாக்ஞவல்க்யர்**:- சேரக்கூடாத ஸ்த்ரீயைச் சேர்ந்த பாபம், திருடியபாபம், பாபிகளிடமிருந்து ப்ரதிக்ரஹத்தாலுண்டான பாபம், ரஹஸ்யத்தில் செய்த பாபம் இவைகளினின்றும், ப்ராத:ஸ்நானம் செய்பவன் விடுபடுவான். ப்ராத:ஸ்நானம், மனதிற்குத் தெளிவைப் பண்ணுவதும், ரூபம், பாக்யமிவைகளை வளப்பதும், துக்கம் துஸ்வப்ன மிவைகளை யகற்றுவதும், மோக்ஷத்தையளிப்பதும், களிக்கச் செய்வதும் ஆகும். மனிதர்களின் ச்ருதி ஸ்ம்ருதி விஹித கர்மங்களெல்லாம் ஸ்நானத்தையே மூலமாயுடையனவாகும். ஆகையால், ஸம்பத்து, புஷ்டி, ஆரோக்யமிவைகளை வளர்க்கும் ஸ்நானத்தைச் செய்யவேண்டும். ப்ராத:ஸ்நானம் செய்யும் சீலமுடையவன் யமனுலுண்டாகும் கொடிய துக்கத்தைப் பார்ப்பதில்லை.*

सत्यव्रतोऽपि — बलं रूपं यशो धर्मं ज्ञानमायुः सुखं धृतिम् । आरोग्यं परमाप्नोति सम्यक् स्नानेन मानवः इति । दक्षः – क्षुभ्यन्ति हि सुषुप्तस्य इन्द्रियाणि स्रवन्ति च । अङ्गानि समतां यान्ति ह्युत्तमान्यधमैः सह ।। अत्यन्त मलिनः कायः नवच्छिद्रसमन्वितः । स्रवत्येव दिवारात्रं प्रातःस्नानं विशोधनम् ।। प्रातःस्नानं प्रशंसन्ति दृष्टादृष्टकरं हि तत् । अस्नात्वा नाचरेत् कर्म जपहोमादि किञ्चन ।। सर्वमर्हति शुद्धात्मा प्रातः स्नायी जपादिकम् । प्रातरुत्थाय यो विप्रः सन्ध्यास्नानं समाचरेत् । सप्तजन्मकृतं पापं त्रिभिर्वर्षैर्व्यपोहति ।। गुणा दश स्नानपरस्य साध्या रूपञ्च तेजश्च बलञ्च शौचम् । आयुष्यमारोग्यमलोलुपत्वं दुःस्वप्ननाशश्च धृतिश्च मेधा ।। उषस्युषसि

यत् स्नानं सन्ध्यायामुदितेऽपि वा । प्राजापत्येन तत्तुल्यं महापातकनाशनम् इति ॥

ஸத்யவ்ரதரும்:- மனிதன் நன்றாய் ஸ்நானம் செய்வதால், பலம், ரூபம், கீர்த்தி, தர்மம், ஞானம், ஆயுள், ஸுகம், தைர்யம், சிறந்த ஆரோக்யம் இவைகளையடைகிறான். தக்ஷர்:- தூங்குகின்றவனின் இந்த்ரியங்கள் கலங்குகின்றன; ஒழுகுகின்றன; சிறந்த அங்கங்கள் தாழ்ந்த அங்கங்களுடன் ஸமத்தன்மையை யடைகின்றன. மிக்க அழுக்குடையதும், ஒன்பது த்வாரங்களுடையதுமாகிய சரீரம், பகலிலுமிரவிலும் ஒழுகுகின்றதே. (அதற்கு) ப்ராத:ஸ்நானம் சுத்தி செய்வதாயுள்ளது. (அறிந்தவர்) ப்ராத:ஸ்நானத்தைப் புகழ்கின்றனர். அது, புலப்படும் பல ரூபாதிகளையும், புலப்படாத பாபநிவ்ருத்தி முதலியதையும் செய்யக் கூடியதல்லவோ. ஜபம், ஹோமம் முதலிய எதையும் ஸ்நானம் செய்யாமல் செய்யக்கூடாது. ப்ராத:ஸ்நானம் செய்து சுத்தனாகியவன், ஜபம் முதலிய எல்லாவற்றையும் செய்ய அர்ஹனாகிறான். எந்த ப்ராம்ஹணன் காலையிலெழுந்து ஸந்த்யாஸ்நானம் செய்கின்றானோ அவன் முன் ஏழுஜன்மங்களில் செய்த பாபங்களை மூன்று வர்ஷங்களில் போக்குகிறான். நியமமாய் ப்ராத:ஸ்நானம் செய்யும் மனிதனுக்குப் பத்துக்குணங்கள் உண்டாகின்றன. அவையாவன:- ரூபம், தேஜஸ், பலம், சௌசம், ஆயுஸ், ஆரோக்யம், பேராசையின்மை, துஸ்ஸ்வப்ன நிவ்ருத்தி, தைர்யம், மேதை இவைகளாம், உஷ:காலத்திலோ, ஸந்த்யாகாலத்திலோ, ஸூர்யோதயத்திலோ செய்யப்படும் ஸ்நானம், ப்ரஜாபத்ய க்ருச்ரத்திற்குச் சமமாயும், மஹாபாபங்களைய கற்றுவதுமாகும்.

अत्रिः—अस्नाताशी मलं भुङ्क्ते ह्यजपः पूयशोणितम् । अहुताशी क्रिमिं भुङ्क्ते ह्यदाता विषमश्नुते इति ॥ व्यासोऽपि – प्रातःस्नानेन

संशुद्धा येऽपि पापकृतो जनाः । तस्मात् सर्वप्रयत्नेन स्नानं प्रातः समाचरेत् ॥ ऋषीणामृषिता नित्यं प्रातः स्नानान्न संशयः ॥ मुखे सुप्तस्य सततं लालाद्याः संस्रवन्ति हि। ततो वै नाचरेत् कर्माण्यकृत्वा स्नानमादितः। अलक्ष्मीः कालकण्ठी च दुःस्वप्नं दुर्विचिन्तनम् । प्रातःस्नानेन पापानि पूयन्ते नात्र संशयः । न हि स्नानं विना पुंसां प्रायत्यं कर्मसु स्मृतम् ॥ होमे जप्ये विशेषेण ततः स्नानं समाचरेत् इति ।

*அத்ரி:- ஸ்நானம் செய்யாமல் புஜிப்பவன் மலத்தைப் புஜிக்கிருன். ஜபிக்காமல் புஜிப்பவன் சீழ், ரக்தம் இவைகளைப் புஜிக்கிருன். ஹோமம் செய்யாமல் புஜிப்பவன் புழுவைப் புஜிக்கிருன். கொடாமல் புஜிப்பவன் விஷத்தைப் புஜிக்கிருன். வ்யாஸரும்:- பாபம் செய்யும் மனிதர் எவர்களாயினும், ப்ராத:ஸ்நானத்தால் சுத்தராகின்றனர். ஆகையால் எல்லா முயற்சியுடனும் காலையில் ஸ்நானம் செய்யவேண்டும். ருஷிகளுக்கு ருஷித்தன்மை நித்யமும் ப்ரா:ஸ்நானத்தினுலேயே உண்டாகியது. ஸந்தேஹமில்லை. தூங்குகின்றவருக்கு முகத்தில் எப்பொழுதும் உமிழ்நீர் கண்ணீர் முதலியவை பெருகுகின்றன. ஆகையால் முதலில் ஸ்நானம் செய்யாமல் கர்மங்களைச் செய்யக்கூடாது. மூதேவீ, காலகண்டீ (க்ரஹசாரதோஷம்) துஷ்டஸ்வப்னம், துஷ்டநினைவு இவைகள் ப்ராத:ஸ்நானத்தால் போக்கப்படுகினறன. இதில் ஸந்தேஹமில்லை. மனிதர்களுக்கு ஸ்நானமில்லாவிடில் கர்மங்களைச் செய்வதில் சுத்தி கிடையாது. ஹோமத்திலும் ஜபத்திலும் விசேஷமாய்ச் சுத்தி கிடையாது. ஆகையால் ஸ்நானம் செய்யவேண்டும்.*

स्मृत्यर्थसारेऽपि—संशोध्य दन्तानाचम्य विधिवत् स्नानमाचरेत् । स्नानमूलाः क्रियाः सर्वाः श्रुतिस्मृत्युदिता नृणाम् । अस्नातस्तु पुमान्नार्हः जपहोमादिकर्मसु ॥ प्रातर्मध्याह्नयोः स्नानं वान

प्रस्थगृहस्थयोः । यतेस्त्रिषवणं स्नानं सकृच्च ब्रह्मचारिणाम् ।। सर्वे वाऽपि सकृत् कुर्युरशक्तौ चोदकं विना । सामर्थ्ये चाम्बुसद्भावे यथाशास्त्रं हि तद्भवेत् ।। स्नानं च सर्ववर्णानां कार्यं शौचपुरस्सरम् इति ।। वैयाघ्रपादोऽपि – प्रातःस्नायी भवेन्नित्यं मध्यस्नायी द्विजो भवेत् इति ।। शौनकः – उभयोः सन्ध्ययोःस्नानं ब्राह्मणैश्च गृहाश्रितैः । तिसृष्वपि च सन्ध्यासु स्नातव्यं तु तपस्विनाम् इति ।। कात्यायनोऽपि – यथाऽहनि तथा प्रातर्नित्यं स्नायादतन्द्रितः । दन्तान् प्रक्षाल्य नद्यादौ गृहे चेत्तदमन्त्रकम् इति ।। अमन्त्रकमिति मन्त्रसंक्षेपोऽभिप्रेतः । यतः स एवाह अल्पत्वाद्धोमकालस्य बहुत्वात् स्नानकर्मणः । प्रातः संक्षेपतः स्नानं होमलोपो विगर्हितः इति ।।

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலும்:-** *தந்ததாவனம் செய்து ஆசமனம் செய்து விதிப்படி ஸ்நானம் செய்யவேண்டும். மனிதர்களுக்கு வேதங்களாலும், ஸ்ம்ருதிகளாலும் விதிக்கப்பட்டுள்ள கர்மங்களெல்லாம் ஸ்நானத்தையே ஆதியாகவுடையவை. ஸ்நானம் செய்யாத மனிதன் ஜபம், ஹோமம் முதலிய கர்மங்களில் யோக்யனுவதில்லே. வானப்ரஸ்தன், க்ருஹஸ்தன் இவ்விருவருக்கும் காலேயிலும், மத்யான்ஹத்திலும் ஸ்நானம் விதிக்கப் பட்டுள்ளது. ஸன்யாஸிக்கு மூன்று காலங்களிலும், ப்ரம்ஹசாரிக்கும் காலேயிலும் ஸ்நானம் விதிக்கப் பட்டுள்ளது. சக்தியில்லாவிடினும், ஜலமில்லாவிடினும் எல்லா ஆச்ரமிகளும் ஒருமுறை செய்யலாம். சக்தியிருந்தாலும், ஜலமிருந்தாலும் சாஸ்த்ரப்படி ஸ்நானம் செய்யவேண்டும். எல்லா வர்ணத்தினர்களும் சௌசத்தை முன்செய்து ஸ்நானம் செய்யவேண்டும்.* **வையாக்ரபாதரும்:-** *ப்ராம்ஹணன் ப்ராத:காலத்திலும் மத்யான்ஹத்திலும் ஸ்நானம் செய்பவனுயிருக்க வேண்டும்.* **சௌனகர்:-** *க்ருஹஸ்தர்களான ப்ராம்ஹணர்கள் இரண்டு ஸந்த்யைகளிலும், யதிகள்*

மூன்று ஸந்த்யைகளிலும் ஸ்நானம் செய்யவேண்டும். **காத்யாயனரும்:-** மத்யான்ஹத்திலெப்படியோ அப்படியே காலையிலும் சோம்பலின்றி, தந்தசோதனம் செய்து கொண்டு ப்ரதிதினமும் நதி முதலியவைகளில் ஸ்நானம் செய்யவேண்டும். வீட்டில் செய்தால் அதை மந்த்ரமின்றிச் செய்யலாம். இங்கு 'மந்த்ரமில்லாமல்' என்பதற்கு மந்த்ரங்களைச் சுருக்கிக்கொள்ளலாமென்ற அபிப்ராயம். ஏனெனில், அவரே சொல்லுகிறார்- 'ஹோமகாலம் அல்பமாயிருப்பதாலும், ஸ்நானகர்மம் விஸ்தாரமுள்ளதாயிருப்பதாலும், காலையில் சுருக்கமாய் ஸ்நானம் செய்யலாம், ஹோமத்தை லோபம் செய்வது நிந்திதமாகும்' என்று.

व्याघ्रपादः—प्रातः संक्षेपतःस्नानं शौचार्थं तु तदिष्यते । मन्त्रैस्तु विधिवत् कार्यं मध्याह्ने तु सविस्तरम् इति ॥ स्नानप्रकारश्चतुर्विंशतिमते दर्शितः—स्नानमब्देवतैर्मन्त्रैः वारुणैश्च मृदा सह । कुर्याद्व्याहृतिभिर्वाऽथ यत्किंचेदमृचाऽपि वा । द्रुपदादिति वा स्नायाज्जुम्बकायेति वा पुनः । पुण्यानि च स्मरेत्तीर्थान्युशना-मुनिरब्रवीत् इति ॥ शौनकः – जलमध्ये स्थितो विप्रश्शुद्धभावो हरिं स्मरेत् । स्नात्वाऽऽचान्तो वारिमग्नः त्रिः पठेदघमर्षणम् ॥ ध्यायेन्नारायणं देवं स्नानादिषु च कर्मसु । प्रायश्चित्तेषु सर्वेषु मुच्यते दुष्कृतात् पुमान् इति ॥

**வ்யாக்ரபாதர்:-** காலையில் சுருக்கமாய் ஸ்நானம் செய்ய வேண்டும், அது சுத்திக்கானதால், மத்யான்ஹத்தில் விதிப்படி, விஸ்தாரமாய் மந்த்ரங்களுடன் செய்யவேண்டும். **சதுர்விம்சதிமதத்தில்:-** ஜலதேவதாகமாகவும், வருணதேவதாகமாகவும் உள்ள மந்த்ரங்களால் ம்ருத்திகையுடன் ஸ்நானம் செய்ய வேண்டும். அல்லது வ்யாஹ்ருதிகளால், அல்லது 'யத்கிஞ்ச' என்ற ருக்கினால், அல்லது 'த்ருபதாத்' என்பதால், அல்லது 'ஜும்பகாய' என்பதால் செய்யலாம்.

புண்ய தீர்த்தங்களையும் ஸ்மரிக்கவேண்டும், என்று உசநஸ் முனிவர் சொன்னார். சௌனகர்:- ப்ராம்ஹணன் ஜலத்தின் நடுவில் நின்றவனாய், சுத்தமான மனமுடையவனாய் விஷ்ணுவை த்யானிக்க வேண்டும். ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து, ஜலத்தினுள் மூழ்கியவனாய் மூன்றுமுறை அகமர்ஷண மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். ஸ்நானம் முதலிய கர்மங்களிலும், எல்லா ப்ராயச்சித்தங்களிலும் தேவனாகிய நாராயணனை த்யானிக்க வேண்டும். இவ்விதம் செய்பவன் பாபத்தினின்றும் விடுபடுகிறான்.

दक्षोऽपि—ध्यायेन्नारायणं देवं स्नानादिषु च कर्मसु । ब्रह्मलोकमवाप्नोति न चेहाजायते पुनः इति ॥ हारीतोऽपि – सोऽन्तर्जलं प्रविश्याथ वाग्यतो नियमेन हि । हरिं संस्मृत्य मनसा मज्जयेच्चोरवज्जले इति ॥ मज्जयेत् - शरीरमिति शेषः ॥ व्यासोऽपि – आपो नारा इति प्रोक्तास्ता यदस्यायनं पुनः । तस्मान्नारायणं देवं स्नानकाले स्मरेद्बुधः इति । अखण्डादर्शे – अप्रायत्यं निहन्त्येव स्नानेनैकेन मानवः । द्वितीयेन निमज्जेन निर्मलत्वं भजेद्ध्रुवम् ॥ तृतीये नातितृप्तिः स्यान्निमज्जनफलं त्विदम् इति ।

தக்ஷரும்:- நாராயணனெனும் தேவனை ஸ்நானம் முதலிய கர்மங்களில் த்யானிக்க வேண்டும். த்யானிப்பவன் ப்ரம்ஹலோகத்தையடைகிறான். இப்புவியில் மறுபடி பிறப்பதில்லை. ஹாரீதரும்:- பிறகு அவன் ஜலத்தின் நடுவையடைந்து மௌனியாய், நியமத்துடன், மனதால் ஹரியை ஸ்மரித்து ஜலத்தில் சரீரத்தைத் திருடன் போல் முழுக்கவேண்டும். வ்யாஸரும்:- ஜலம் நாரம் எனச்சொல்லப்பட்டுள்ளது. அது இவனுக்கு இருப்பிடமானதால், நாராயணனெனும் தேவனை ஸ்நானகாலத்தில் அறிவுடையவன் ஸ்மரிக்க வேண்டும். அகண்டாதர்சத்தில்:- மனிதன் முதல் ஸ்நானத்தால் அசுத்தியைப் போக்குகிறான். இரண்டாவது

*ஸ்நானத்தால் அழுக்கில்லாத் தன்மையுண்டாகும்; நிச்சயம். மூன்றாவது ஸ்நானத்தால் அதிகமான த்ருப்தியுண்டாகும். இது ஸ்நானத்தின் பயனும்.*

आचारसारे—प्रातस्तीर्थविगाहनमल्पेन वाक्येन मार्जनं च व्याहृतिभिरेव प्राणायामो द्रुपदया वा इति ।। स्मृत्यन्तरे – सङ्कल्पस्सूक्तपठनं मार्जनं चाघमर्षणम् । देवतातर्पणं चैव स्नानं पञ्चाङ्गमुच्यते इति ।। 'इदमापः प्रवहतेति व्याहृतिभिः जलाभिमन्त्रणम् । आपोहिष्ठेति मार्जनम् । द्रुपदादिर्वेद्गायत्री तद्विष्णोः प्रणवैरघमर्षणेन स्नानत्रयमिति ।। स्मृत्यर्थसारे – प्रातः स्नानं सदा कुर्यादुष्णेनैवातुरः सदा । पादौ हस्तौच प्रक्षाल्य सावित्रीं प्रणवं स्मरेत् । शिखां बध्वाऽऽचम्य तटं प्रक्षाल्य दर्भान्निधाय दर्भपाणिर्जलं नत्वा प्रयताञ्जलिः प्राङ्मुखोऽवगाह्य कक्षादि निमृज्य स्नात्वा द्विराचम्य दर्भपाणिरापोहिष्ठाद्यैरब्दैवतैः मार्जनं कृत्वाऽऽघमर्षणं कुर्यात् । पुनः स्नात्वा द्विराचम्य तर्पणं कुर्यात् इति ।। अप्रवाहोदकस्नानं विप्रपादावनेजनम् । गायत्री जपमर्घ्यं च आदित्याभिमुखश्चरेत् ।। स्रोतसोऽभि मुखःस्नायान्मार्जने चाघमर्षणे । अन्यत्रार्कमुखो रात्रौ प्रागुदङ्मुख एव वा ।। सन्ध्यामुखस्तु सन्ध्यायां दैवे देवोन्मुखस्तथा इति ।

*ஆசாரஸாரத்தில்:- காலையில் ஸ்நானத்தை ஸ்வல்பமந்த்ரங்களால் செய்யலாம். மார்ஜனமும் வ்யாஹ்ருதிகளால், ப்ராணாயாமமும், செய்யவேண்டும். அல்லது 'த்ருபதா' என்ற மந்த்ரத்தினால் மார்ஜனம். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஸங்கல்பம், ஸூக்தபடனம், மார்ஜனம், அகமர்ஷணம், தேவதாதர்ப்பணம் என்று ஐந்து அங்கங்களுடையது ஸ்நானம் என்று சொல்லப்படுகிறது. 'இதமாப:' வ்யாஹ்ருதிகள் இவைகளால் ஜலத்தை அபிமந்த்ரிக்கவேண்டும். 'ஆபோஹிஷ்டா' என்பதால் மார்ஜனம் செய்யவேண்டும். த்ருபதாதிவ, காயத்ரீ,*

தத்விஷ்ணோ:, ப்ரணவம், அகமர்ஷணம் இவைகளால் மூன்று முறை ஸ்நானம். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- எப்பொழுதும் காலையில் ஸ்நானம் செய்யவேண்டும். வ்யாதியுள்ளவன் எப்பொழுதும் உஷ்ணோதகத்தாலேயே செய்யலாம். கால்களையும் கைகளையும் அலம்பி, காயத்ரீயையும், ப்ரணவத்தையும் ஸ்மரிக்க வேண்டும். குடுமியை முடிந்துகொண்டு, ஆசமனம் செய்து, கரையை அலம்பி, தர்ப்பங்களை வைத்து, தர்ப்பங்களைக் கையில் தரித்து, ஜலத்தை நமஸ்கரித்து, அஞ்ஜலியுடன் கிழக்கு நோக்கியவனாய் முழுகி, கக்ஷம் முதலியவைகளைத் துடைத்து, ஸ்நானம் செய்து, இருமுறை ஆசமனம் செய்து, தர்ப்பங்களைத் தரித்தவனாய், 'ஆபோஹிஷ்டா' முதலிய ஜலதேவதாக மந்த்ரங்களால் மார்ஜனம் செய்து, அகமர்ஷணம் செய்யவேண்டும். மறுபடி ஸ்நானம் செய்து, இருமுறை ஆசமனம் செய்து, தர்ப்பணம் செய்யவேண்டும். ப்ரவாஹமல்லாத ஜலத்தில் ஸ்நானம், ப்ராம்ஹணர்கள் கால அலம்புவது, காயத்ரீஜபம், அர்க்யதானம் இவைகளை ஸூர்யனுக்கு எதிராய் நின்று செய்யவேண்டும். ப்ரவாஹத்தில் அதற்கு நேராய் இருந்து ஸ்நானம் செய்யவேண்டும். மார்ஜனத்திலும், அகமர்ஷணத்திலுமப்படியே. மற்ற ஜலத்தில் ஸ்நானத்தை ஸூர்யனுக்கு எதிராயிருந்து செய்யவேண்டும். தேவஸம்பந்தமான ஜலத்தில் தேவாபிமுகமாயிருந்து செய்யவேண்டும்.

कालनियममाह जाबालिः—आचरेदुषसि स्नानं तर्पयेद्देवमानुषान् इति ।। विष्णुरपि – प्रातःस्नायादरुणकरग्रस्तां प्राचीमवलोक्य इति ।। अरुणोदयलक्षणमाह नारदः –चतस्रो घटिकाः प्रात ररुणोदयनिश्चयः इति ।। स्कन्दोऽपि – उदयात् प्राक्चतस्रस्तु नाडिका अरुणोदयः । तत्र स्नानं प्रशस्तं स्यात् स हि पुण्यतमः स्मृतः इति ।।

காலநியமத்தைப்பற்றி, ஜாபாலி:- உஷ:காலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். தேவர், மனுஷ்யர் இவர்களைக் குறித்துத் தர்ப்பணம் செய்யவேண்டும். விஷ்ணுவும்:- காலையில் அருணனின் கிரணங்களால் வ்யாபிக்கப் பட்டிருக்கும் கிழக்குத் திக்கைப் பார்த்தபிறகு ஸ்நானம் செய்யவேண்டும். அருணோதயத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார் நாரதர்:- காலையில் ஸூர்யோதயத் திற்குமுன் நான்கு நாழிகைகள் அருணோதயமென்று ஸித்தாந்தம். ஸ்கந்தரும்:- உதயத்திற்குமுன் நான்கு நாழிகைகள் அருணோதயம். அக்காலத்தில் ஸ்நானம் செய்வது சிறந்ததாகும். அக்காலம் வெகுபுண்யமென்று சொல்லப்பட்டுள்ளது.

यत्तु चतुर्विंशतिमतेऽभिहितम्—उपर्युषसि यत्स्नानं सन्ध्यायामुदितेऽपि वा। प्राजापत्येन तत्तुल्यं सर्वपापप्रणाशनम् इति, तस्यार्थः स्मृतिचन्द्रिकामाधवीययोर्वर्णितः – यत्सन्ध्यायां स्नानं तदुपरि उषसि, यदि वा उदिते - उदयाभिमुख इत्यर्थः । उदयस्याप्युपरि स्नानश्चेत् सन्ध्याऽपि उत्कृष्येत, स्नानपूर्वकत्वात् सन्ध्यायाः ।। यदाह विष्णुः – स्नातोऽधिकारी भवति दैवे पित्र्ये च कर्मणि । पवित्राणां तथा जप्ये दाने च विधिचोदिते इति ।। योगयाज्ञवल्क्यः – प्रातः सह गोमयेन कुर्यान्मृदा मध्यन्दिने सायं शुद्धाभिरद्भिः। न प्रातः स्नानात् प्राक्सन्ध्यामुपासीत इति।। दक्षोऽपि – स्नानमूलाः क्रियास्सर्वाः सन्ध्योपासनमेव च। तस्मात् सर्वप्रयत्नेन स्नानं कुर्यात्समाहितः इति ।। यद्येवं तर्ह्येतद्वचनबलादेव सन्ध्याऽप्युत्कृष्यताम् ।। मैवम् । 'सन्धौ सन्ध्यामुपासीत नास्तगे नोद्गते रवा'विति योगयाज्ञवल्क्येन तन्निषेधस्मरणात् ।। तथा – 'रात्र्यन्तयामनाडी द्वे सन्ध्यादिः काल उच्यते। दर्शनाद्रविरेखायाः तदन्तो मुनिभिः स्मृतः' इति दक्षेण कालनियमाच्च ।। रविरेखाया दर्शनादुपलक्षितः कालः सन्ध्यान्त इत्यर्थः। अत 'उदितेऽपि वेत्यस्य उदयाभिमुख इत्येवार्थो युक्त इति।।

ஆனால், சதுர்விம்சதிமதத்தில்:- "உஷ: காலத்திலோ, ஸந்த்யாகாலத்திலோ, ஸூர்யோதயத் திற்குப் பிறகோ செய்யப்படும் ஸ்நானம், ப்ராஜாபத்யக்ருச்ரத்திற்குச் சமமாகியதும், எல்லாப் பாபங்களையும் போக்கக்கூடியதுமாகும்" என்றிருக்கிறதே யெனில், அதற்குப் பொருள், ஸ்ம்ருதிசந்த்ரிகை, மாதவீயம் என்னும் க்ரந்தங்களில் வருமாறு சொல்லப்பட்டுள்ளது. "ஸந்த்யையில் செய்யப்படும் ஸ்நானமும், அதற்குப்பின் உஷ:காலத்தில், அல்லது ஸூர்யன் உதயத்தை நோக்கியுள்ளவனாயிருக்கும் பொழுது (உதயத்திற்கு முன்) என்று பொருள். உதயத்திற்குப் பிறகு ஸ்நானம் என்றால், ஸந்த்யாவந்தனத்தையும் பிறகு செய்யவேண்டியதாகும். ஸ்நானத்திற்குப் பிறகே ஸந்த்யையைச் செய்ய வேண்டியதால். ஏனெனில், **விஷ்ணு**:- 'தேவகர்மம், பித்ருகர்மம், சுத்திகரமான மந்த்ரங்களை ஜபித்தல், சாஸ்த்ரத்தால் விதிக்கப்பட்ட தானம் இவைகளில் ஸ்நானம் செய்தவன் அதிகாரியாகிறான்' என்றதாலும், **யோகயாக்ஞவல்க்யர்**:- 'காலையில் கோமயத்துடன் ஸ்நானம் செய்யவேண்டும். மத்யான்ஹத்தில் ம்ருத்திகை யுடனும், மாலையில் சுத்த ஜலத்தாலும் ஸ்நானம் செய்ய வேண்டும்; ப்ராத:ஸ்நானத்திற்குமுன் ஸந்த்யோபாஸனம் செய்யக்கூடாது' என்றதாலும், **தக்ஷரும்**:- 'எல்லாக் கர்மங்களும், ஸந்த்யோபாஸனமும் ஸ்நானத்தை மூலமாயுடையவை, ஆகையால் எவ்விதத்தாலும் கவனமுள்ளவனாய் ஸ்நானம் செய்யவேண்டும்' என்று சொல்லி யிருப்பதாலும், 'இவ்விதமிருப்பின், அப்பொழுது இந்த வசனங்களின் பலத்ினாலேயே ஸந்த்யையையும் இழுக்கலாமே எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. (ஏனெனில்) 'ஸந்த்யாகாலத்தில் ஸந்த்யோபாஸனம் செய்யவேண்டும். ஸூர்யன் அஸ்தமித்தபிறகும், உதித்தபிறகும் ஸந்த்யோபாஸனம் கூடாது' என்று **யோகயாக்ஞவல்க்யர்** அதை

நிஷேதித்திருப்பதாலும், அவ்விதம் 'இரவின் கடைசியாமத்தின் இரண்டு நாழிகைகள் ஸந்த்யையின் ஆரம்பகாலம், ஸூர்யபிம்பத்தின் ரேகையைப் பார்ப்பதால் ஸந்த்யையின் முடிவு என்பது முனிகளால் விதிக்கப்பட்டுள்ளது' என்று தக்ஷர் காலத்தை விதித்திருப்பதாலும், ஸூர்யரேகையைக் காணும் காலம் ஸந்த்யையின் முடிவு என்பது பொருள். ஆகையால் (சதுர்விம்சதிமதத்திலுள்ள) உதிதேऽபிவா என்பதற்கு ஸூர்யன் உதயாபிமுகனாயிருக்கும் பொழுது என்பதே யுக்தமான அர்த்தம்' என்று.

दक्षः—स्नात्वाऽऽचामेद्यदा विप्रः पादौ कृत्वा जले स्थले । उभयोरप्यसौ शुद्धः ततः कर्मक्षमो भवेत् ।। विन्यस्य दक्षिणं पादं जले वामपदं बहिः । उपवीती समाचामेत् विधिरेषु सनातनः इति ।।

தக்ஷர்:- ப்ராம்ஹணன் எப்பொழுது ஸ்நானம் செய்த பிறகு ஆசமனம் செய்வானோ அப்பொழுது, கால்களை ஜலத்திலும் ஸ்தலத்திலும் வைத்துக் கொண்டு ஆசமனம் செய்யவேண்டும். இரண்டிலும் இவன் சுத்தனாகிறான். பிறகு கர்மங்களில் அதிகாரியாகிறான். வலது காலை ஜலத்திலும், இடதுகாலை ஸ்தலத்திலும் வைத்துக்கொண்டு உபவீதியாய் ஆசமனம் செய்யவேண்டும். இந்த விதி எப்பொழுதுமுள்ளதாகியது.

स्नानाङ्गतर्पणमुक्तं माधवीये—नित्यं नैमित्तिकं काम्यं त्रिविधं स्नानमुच्यते । तर्पणं तु भवेत्तस्य चाङ्गत्वेन प्रकीर्तितम् इति ।। चतुर्विंशतिमतेऽपि – स्नानादनन्तरं तावत् तर्पयेत् पितृदेवताः इति ।। व्याघ्रोऽपि – स्नाने चैव तु सर्वत्र तर्पयेत् पितृदेवताः । काम्येनित्ये विशेषेण प्रकुर्यात् तत्प्रयत्नतः इति ।। अकरणे दोषोऽपि वसिष्ठेन दर्शितः – नास्तिक्यभावा द्यस्तांस्तु न तर्पयति वै पितॄन् । पिबन्ति देहनिस्रावं पितरोऽस्य जलार्थिनः' इति । देहनिस्रावः - रुधिरम् ।।

ஸ்நாநாங்கமான தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது, **மாதவீயத்தில்:-** ஸ்நானத்திற்குப் பிறகு பித்ருக்களுக்கும், தேவதைகளுக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும். **வ்யாக்ரரும்:-** ஸ்நானங்களெல்லாவற்றிலும் பித்ருக்களையும், தேவர்களையும், தர்ப்பிக்கவேண்டும். காம்யஸ்நானம், நித்யஸ்நானம் இவைகளில் அவச்யம் செய்யவேண்டும். செய்யாவிடில் தோஷமுண்டென்பது **வஸிஷ்டரால்** காண்பிவிக்கப்பட்டிருக்கிறது:- எவன் நாஸ்திக்யத்தன்மையால் பித்ரு தர்ப்பணம் செய்யவில்லையோ, அவனின் பித்ருக்கள் (முன்னோர்கள்) ஜலத்தை விரும்பியவர்களாய் இவனின் ரக்தத்தைப் பருகுகின்றனர்.

यत्त्वापस्तम्बेनोक्तम् – अस्पृश्यस्पर्शने वान्तौ त्वश्रुपाते क्षुरे तथा । स्नानं नैमित्तिकं ज्ञेयं देवर्षिपितृवर्जितम् इति, यदपि स्मृत्यर्थसारवचनम् – 'अस्पृश्यस्पर्शनस्नाने नाघमर्षणतर्पणे इति, तदस्पृश्यस्पर्शादिनिमित्तप्राथमिकस्नाने तर्पण निषेधपरम् ॥ 'शवानुगमने क्षौरे पुनः स्नानं विधीयते इत्युक्तपुनःस्नाने, 'स्नानार्हस्तु निमित्तेन त्रयोदश निमज्ज्य च । आचम्य प्रयतः पश्चात् स्नानं विधिवदाचरेत्' इत्युक्ते त्रयोदशनिमज्जनानन्तर स्नाने च तर्पणं भवत्येव। 'स्नाने चैव हि सर्वत्र तर्पयेत्' इति स्मरणात्॥

''தீண்டக்கூடாதவரைத் தீண்டல்'', வாந்தி, கண்ணீர்விடுதல், க்ஷெளரம் என்ற நிமித்தங்களில் செய்யும் ஸ்நானம் நைமித்திகமென்றறியவும். இந்த ஸ்நானத்திற்கு தேவருஷிபித்ரு தர்ப்பணம் இல்லை'' என்று **ஆபஸ்தம்பர்** சொல்லியதும், 'தீண்டக்கூடாதவனைத் தீண்டியதற்கான ஸ்நானத்தில் அகமர்ஷணமும் தர்ப்பணமுமில்லை' என்ற ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலுள்ள வசனமும், தீண்டக்கூடாதவனைத் தீண்டியது முதலிய நிமித்தத்தால் செய்யும் முதல் ஸ்நானத்தில் தர்ப்பணத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யமுள்ளதாம். 'பிணத்திற்குப் பின்

செல்வது, க்ஷௌரம் இவைகளில் மறுபடி ஸ்நானம் விதிக்கப்படுகிறது' என்றதால் சொல்லப்பட்ட புன:ஸ்நானத்திலும், 'நிமித்தத்தால் ஸ்நானத்திற் குரியவன் 13-தடவை மூழ்கி, ஆசமனம் செய்து, சுத்தனாய், பிறகு விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும்' என்று சொல்லப்பட்டுள்ள 13-முழுக்குக்குப் பிறகு செய்யப்படும் ஸ்நானத்திலும் தர்ப்பணம் ஆவச்யகமே. 'ஸ்நானமெல்லா வற்றிலும் தர்ப்பணம் செய்ய வேண்டும்' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

द्वौ हस्तौ युग्मतः कृत्वा पूरयेदुदकाञ्जलिम्। गोशृङ्गमात्रमुद्धृत्य जलमध्ये जलं क्षिपेत् इति। यत्तु व्याघ्रेणोक्तम् – उभाभ्यमपि हस्ताभ्या मुदकं यः प्रयच्छति। स मूढो नरकं याति कालसूत्रमवाक्छिराः इति, तच्छ्राद्धादावुदकदानविषयम् ॥ यदाह कार्ष्णाजिनिः – श्राद्धे विवाहकाले च पाणिनैकेन दीयते। तर्पयेत्तूभयेनैव विधिरेष पुरातनः इति॥ स्नातश्चार्द्रवासा जलस्थ एव देवर्षिपितृतर्पणं कुर्यात्॥ तथा च नारायणः – उपवीती बद्ध शिखः समाचम्य यथाविधि। देवर्षीं स्तर्पयेदप्सु पितॄंश्चैव समाहितः इति॥ अप्सु स्थित्वा तर्पयेदित्यर्थः॥ विष्णुः – स्नातश्चार्द्रवासा देवर्षिपितृतर्पणमम्भःस्थ एव कुर्वीत इति॥

**யமன்:-** இரண்டு கைகளையும் சேர்த்துக் கொண்டு ஜலத்தால் நிரப்ப வேண்டும். பசுவின் கொம்பளவு உயரத்தூக்கி ஜலத்தின் நடுவில் ஜலத்தை விட வேண்டும். **வ்யாக்ரர்:-** 'எவன் இரண்டு கைகளாலும் ஜலத்தைக் கொடுக்கின்றானோ, அந்த மூடன் தலைகீழாய், காலஸூத்ரமெனும் நரகத்தை அடைவான்' என்று சொல்லியுள்ள வசனம் ச்ராத்தம் முதலியவைகளில் செய்யும் ஜலதானத்தைப் பற்றியது. ஏனெனில்,

कार्ष्णाजिनिः—नाभिमात्रजले स्थित्वा चिन्तयन्नूर्ध्वमानसः। देवान् देवगणांश्चापि ऋषीनृषिगणानपि ॥ अथ काण्ड ऋषीनेतानुकाञ्जलिभिः शुचिः। अव्यग्रस्तर्पयेन्नित्यं मन्त्रैरेव

स्वनामभिः ।। पितॄन् पितृगणांश्चापि नित्यं सन्तर्पयेत्ततः इति ।। भरद्वाजः – तर्पणं देवतादिभ्यः स्वस्वतीर्थेन तर्पयेत् । गोशृङ्गमात्रमुद्धृत्य तर्पणे जलमुत्सृजेत् ।। येन तीर्थेन गृह्णीयात् तेन दद्याज्जलाञ्जलिम् । अन्यतीर्थेन गृह्णीयात् तत्तोयं रुधिरं भवेत् ।। पूर्वाशाभिमुखो देवानुत्तराभिमुखस्त्वृषीन् । पितॄंस्तु दक्षिणास्यस्तु जलमध्ये तु तर्पयेत् इति ।।

**கார்ஷ்ணாஜினி:**- 'ச்ராத்தத்திலும், விவாஹகாலத்திலும் ஒரு கையால் கொடுக்க வேண்டும். தர்ப்பணத்தை இரண்டு கைகளாலுமே செய்ய வேண்டும். இது ப்ராசீனமான விதி' என்று சொல்லியிருப்பதால், ஸ்நானம் செய்தவன் ஈரவஸ்த்ரத்துடன் ஜலத்திலிருந்தே தேவருஷி பித்ரு தர்ப்பணத்தை செய்ய வேண்டும். அவ்விதமே, **நாராயணர்:**- உபவீதியாய் சிகையைக் கட்டிக் கொண்டு விதிப்படி ஆசமனம் செய்து கவனமுடையவனாய் ஜலத்தில் நின்று தேவருஷி பித்ருக்களைத் தர்பிக்க வேண்டும். **விஷ்ணு:**- நாபியளவு ஜலத்திலிருந்து மேல் மனதுடையவனாய் த்யானித்து, தேவர்கள் தேவ கணங்கள், ருஷிகணங்கள், காண்டருஷிகள் இவர்களைச் சுத்தனாய், கவனமாய் அவரவரின் நாம மந்த்ரங்களால் நித்யமும் தர்ப்பிக்க வேண்டும். **பரத்வாஜர்:**- தேவர் முதலியவர்களுக்குத் தர்ப்பணத்தை அவரவர் தீர்த்தத்தினால் செய்ய வேண்டும். தர்ப்பணத்தில் பசுவின் கொம்பளவு உயர எடுத்து ஜலத்தை விட வேண்டும். எந்தத் தீர்த்தத்தால் எடுக்கின்றானோ அதனாலேயே விட வேண்டும். வேறு தீர்த்தத்தாலெடுத்தால் அந்தத் தீர்த்தம் ரக்தமாகும். கிழக்கு முகமாய்த் தேவர்களையும், வடக்குமுகமாய் ருஷிகளையும், தெற்குமுகமாய் பித்ருக்களையம் ஜலத்தின் நடுவில் தர்ப்பிக்க வேண்டும்.

व्यासोऽपि—तर्पणं तु शुचिः कुर्यात् प्रत्यहं स्नातकस्त्विह । देवेभ्योऽथ ऋषिभ्योऽथ पितृभ्यश्च यथा क्रमम् ।। आदावोङ्कारमुच्चार्य

नाम्नोऽन्ते तर्पयामि च । देवान् ब्रह्मऋषींश्चैव तर्पयेदक्षतोदकैः ।। पितॄंस्तिलोदकैः स्वोक्तविधिना तर्पयेद्द्विजः । यज्ञोपवीती देवानां निवीती ऋषितर्पणे ।। प्राचीनावीती पित्र्येषु स्वेन तीर्थेन तर्पयेत् इति ।। विष्णुपुराणे – शुचिव(र्व)स्त्रधरः स्नातो देवर्षिपितृतर्पणम् । तेषामेव हि तीर्थेन कुर्वीत सुसमाहितः ।। त्रिरपः प्रीणनार्थाय देवानामपवर्जयेत् । तथर्षीणां यथान्यायं सकृच्चापि प्रजापतेः ।। पितॄणां प्रीणनार्थाय त्रिरपः पृथिवीपते । पितामहेभ्यश्च तथा प्रीणयेत् प्रपितामहान् ।। मातामहाय तत्पित्रे तत्पित्रे च समाहितः इति ।।

**வ்யாஸரும்:**- க்ருஹஸ்தன் சுத்தனாய் தேவர்கள் ருஷிகள் பித்ருக்கள் இவர்களுக்கு ப்ரதிதினமும் க்ரமமாய்த் தர்ப்பணம் செய்ய வேண்டும். முதலில் ஓங்காரத்தைச் சொல்லி, பிறகு நாமத்தின் முடிவில் தர்ப்பயாமி என்று சேர்த்து, தேவர்கள், ப்ரம்ஹருஷிகள் இவர்களுக்கு அக்ஷதையுடன் கூடிய ஜலத்தால் தர்ப்பணம் செய்ய வேண்டும். பித்ருக்களுக்குத் திலோதகங்களால் சொல்லிய விதிப்படி தர்ப்பணம் செய்ய வேண்டும். உபவீதியாய்த் தேவர்களுக்கும், நிவீதியாய் ருஷிகளுக்கும், ப்ராசீனாவீதியாய்ப் பித்ருக்களுக்கும் அவரவர் தீர்த்தத்தால் தர்ப்பணம் செய்ய வேண்டும். **விஷ்ணு புராணத்தில்:**- சுத்தனாய் வஸ்த்ரம் தரித்தவனாய் அவரவர் தீர்த்தத்தால் கவனமுடன் தேவருஷி பித்ரு தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். தேவர்களுக்குத் தர்ப்பணத்திற்காக மூன்றுதடவை ஜலத்தை விடவேண்டும். ரிஷிகளுக்குமப்படியே. ப்ரஜாபதிக்கு ஒரு தடவை. அரசே! பித்ருக்களுக்கு தர்ப்பணத்திற்காக மூன்று தடவை ஜலத்தை விட வேண்டும். பிதாமஹர்களுக்கும், ப்ரபிதாமஹர்களுக்கும், மாதாமஹனுக்கும், அவர் பிதாவுக்கும், அவர் பிதாவுக்கும் மூன்று தடவை தர்பிக்க வேண்டும்.

वृद्धमनुः—मनुष्यतर्पणे स्नानवस्त्रनिष्पीडने तथा। निवीती तु भवेद्विप्रः तथा मूत्रपुरीषयोः । मानुषेष्वंसयोः सक्तं मैथुने पृष्ठभागिकम्। तर्पणेऽङ्गुष्ठयोः सक्तं निवीतं त्रिविधं स्मृतम् इति ॥ प्रयोगपारिजाते – प्राङ्मुख उपवीती ब्रह्मादीन् देवान्सकृत्सकृत्तर्पयित्वाऽथोदङ्मुखो निवीती सयवाभिरद्भिः प्राजापत्येन तीर्थेन ऋषीन् द्विर्द्विस्तर्पयित्वाऽथ दक्षिणामुखः प्राचीनावीती पितृतीर्थेन सतिलाभिरद्भिः (त्रिस्त्रिस्तर्पयित्वा) 'सोमः पितृमान् यमोऽङ्गिरस्वानग्निः कव्यवाहन इत्यादयो ये' इति त्रिस्तर्पयेदेतत् स्नानाङ्गतर्पणम् इति।

*வ்ருத்தமனு:- மனுஷ்ய தர்ப்பணத்திலும், ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழிவதிலும், மூத்ரமல விஸர்ஜன காலத்திலும் ப்ராம்ஹணன் நிவீதியாய் இருக்க வேண்டும். மானுஷகார்யத்தில் தோள்களிலிருக்க வேண்டும். மைதுன காலத்தில் முதுகிலிருக்க வேண்டும். தர்ப்பண காலத்தில் இரண்டு கைப்பெருவிரல்களில் இருக்க வேண்டும். இவ்விதம் நிவீதம் மூன்று விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது.* **ப்ரயோகபாரிஜாதத்தில்:-** *கிழக்கு முகமாய் உபவீதியாய், ப்ரம்ஹாதி தேவர்களை ஒவ்வொரு தடவை தர்ப்பித்து, பிறகு வடக்கு முகமாய் நிவீதியாய் யவையுடன் கூடிய ஜலத்தால் ருஷிகளை ப்ராஜாபத்ய தீர்த்தத்தால் இரண்டு இரண்டு முறை தர்ப்பித்து, பிறகு தெற்கு முகமாய் ப்ராசீனா வீதியாய், பித்ரு தீர்த்தத்தால் திலங்களுடன் கூடிய ஜலத்தால் பித்ருக்களை மும்மூன்று தடவை தர்ப்பித்து 'ஸோம:பித்ருமான்' என்ற மந்த்ரத்தால் மூன்று தடவை தர்ப்பிக்க வேண்டும். இது ஸ்நானாங்க தர்ப்பணம்.*

पितृतर्पणं प्रकृत्य कार्ष्णाजिनिः – नाभिमात्रजले स्थित्वा चिन्तयेदूर्ध्वमानसः। आगच्छन्तु मे पितरो गृह्णन्त्वेतान्जलाञ्जलीन्॥ पितॄणामम्बरस्थानाम्भःस्थो दक्षिणामुखः । त्रींस्त्रीन् जलाञ्जलीन्

दद्यात् उच्चैरुच्चतरान् बुधः इति ।। 'गृह्णन्त्वेतान् जलाञ्जलीन्' इति चिन्तयेदिति सम्बन्धः ।। सुमन्तुः – आकाशे निक्षिपेद्वारि जलस्थो दक्षिणामुखः । पितॄणां स्थानमाकाशं दक्षिणा दिक्तथैव च इति ।।

*பித்ரு தர்ப்பணத்தைக் குறித்து, **கார்ஷ்ணாஜினி:-** நாபியளவுள்ள ஜலத்திலிருந்து மேலான மனதுடன் 'எனது பித்ருக்கள் வரவேண்டும், இந்த ஜலாஞ்ஜலிகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும்' என்று த்யானிக்க வேண்டும். ஜலத்தில் தெற்குமுகமாயிருந்து ஆகாசத்திலிருக்கும் பித்ருக்களுக்கு மும்மூன்று ஜலாஞ்ஜலிகளை வரவர உயர்ந்திருக்கும்படி கொடுக்க வேண்டும். **ஸுமந்து:-** ஜலத்தில் தெற்குமுகமாயிருந்து ஆகாசத்தில் ஜலத்தை விடவேண்டும். பித்ருக்களுக்கு ஆகாசம் இருப்பிடம். தெற்குத்திக்கும் ஸ்தானம்.*

स्मृत्यर्थसारे — शुक्लैस्तिलैः देवानुपवीती देवतीर्थेन प्राङ्मुखस्तर्पयेत् । शबलैस्तिलैः ऋषीन्निवीती कायेनोदङ्मुखस्तर्पयेत् । आचार्यान् पितॄन् प्राचीनावीती पित्र्येण कृष्णतिलैर्दक्षिणामुखस्तर्पयेत् । यद्वा – शुद्धोदकैर्देवान्, ऋषींश्च पितॄंस्तिलैः, सर्वान्वा सर्वतिलैस्तर्पयेत्। यद्वा देवानक्षतैः, तण्डुलैः ऋषीन्, तिलैः पितॄन् । देवानामेकैकमञ्जलिं दद्यात् ऋषीणां द्वौ द्वौ । पितॄणां त्रींस्त्रीन् । स्वाचारप्राप्तैः मन्त्रैः । तिलाभावे स्वर्णरूप्यताम्रदर्भयुतोदकैः । खड्गमौक्तिकहस्तेन कार्यं वा पितृतर्पणम् ।। न जीवपितृकः कृष्णतिलैस्तर्पणमाचरेत् । हस्ताभ्यां रविवारे च जन्मर्क्षदिवसेषु च । गृहे निषिद्धं सतिलं तर्पणं तद्बहिर्भवेत् । शोभनगृहे शोभनदिने न तिलतर्पणम्। विवाहोपनयनचौलेषु यथाक्रमं वर्षमर्धं तदर्धं च नैत्यकं न तिलतर्पणम् इति ।।

*ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- தேவர்களுக்குத் தர்ப்பணம் வெளுப்பான எள்களால உபவீதியாய், கிழக்கு*

முகமாய், தேவ தீர்த்தத்தால் செய்ய வேண்டும். ருஷிகளுக்குப் பலநிறமுள்ள எள்களால் நிவீதியாய் வடக்கு முகமாய் ப்ராஜாபத்ய தீர்த்தத்தால் செய்ய வேண்டும். ஆசார்யர்கள் பித்ருக்களிவர்களுக்குப் ப்ராசீனு வீதியாய், தெற்கு முகமாய், கறுப்பு எள்களால் பித்ரு தீர்த்தத்தால் செய்ய வேண்டும். அல்லது, சுத்த ஜலத்தால், தேவர்களுக்கும், ருஷிகளுக்கும், பித்ருக்களுக்கும் திலங்களாலும், அல்லது எல்லோருக்கும் எல்லா எள்களாலும் செய்யலாம். அல்லது, தேவர்களுக்கு அக்ஷதங்களாலும், தண்டுலங்களால் ருஷிகளுக்கும் திலங்களால் பித்ருக்களுக்கும் செய்யலாம். தேவர்களுக்கு ஒவ்வொரு அஞ்ஜலியும், ருஷிகளுக்கு இரண்டு இரண்டு அஞ்ஜலிகளும், பித்ருக்களுக்கு மூன்று மூன்று அஞ்ஜலிகளும் கொடுக்க வேண்டும். அவரவர் ஆசாரப்படி வந்த மந்த்ரங்களால் செய்ய வேண்டும். திலமில்லாவிடில் ஸ்வர்ணம், அல்லது வெள்ளி, தாம்ரம், தர்ப்பம் இவைகளிலொன்றுடன் கூடிய ஜலத்தால் தர்ப்பிக்கலாம். காண்டாம்ருகத்தின் கொம்பு. அல்லது முத்துடன் கூடிய கையினுல் பித்ரு தர்ப்பணம் செய்யலாம். பிதா ஜீவித்திருப்பவன் கறுப்பு எள்ளால் தர்ப்பணம் செய்யக் கூடாது. இருகைகளாலும் பித்ருதர்ப்பணம் செய்யக் கூடாது. பானுவாரத்திலும் ஜன்மநக்ஷத்ர தினங்களிலும் திலதர்ப்பணம் கூடாது. க்ருஹத்தில் திலதர்ப்பணம் நிஷித்தமாம். அதை வீட்டிற்கு வெளியில் செய்ய வேண்டியது. சுபகார்யம் செய்யும் க்ருஹத்திலும், சுபகார்யம் செய்த தினத்திலும் திலதர்ப்பணம் கூடாது. விவாஹம் உபநயனம் சௌளம் இவைகள் செய்த பிறகு, முறையே ஒருவருஷம். ஆறுமாதம். மூன்றுமாதம் வரையில் நித்யதர்ப்பணத்தைத் திலத்துடன் செய்யக் கூடாது.

अत्र विशेषमाह कौशिकः— प्रातःस्नाने विशेषोऽयं तद्भिनैव तिलैर्युतम् । नैमित्तिकं च काम्यं च तिलैरेव विधीयते इति ॥ देवर्षिपितृतर्पणानन्तरं तीरे यक्ष्मतर्पणं विहितं स्मृत्यन्तरे – देवर्षितर्पणं

कृत्वा यक्ष्माणं तर्पयेत्तटे ॥ यन्मया दूषितं तोयं शरीरमलसञ्चयात्। तद्दोषपरिहाराय यक्ष्माणं तर्पयाम्यहम् इति ॥ दक्षोऽपि – स्नानाङ्गं तर्पणं कृत्वा यक्ष्मणो जलमाहरेत्। अन्यथा कुरुते यस्तु स्नानं तस्याफलं भवेत् इति ॥

*இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார், கௌசிகர்:- ப்ராத:ஸ்நானத்திலுள்ள விசேஷமிது. அந்த ப்ராத:ஸ்நான தர்ப்பணத்தைத் திலத்துடன் செய்யக் கூடாது. நைமித்திக ஸ்நான தர்ப்பணங்களைத் திலத்துடனேயே செய்ய வேண்டும். தேவருஷி பித்ரு தர்ப்பணத்திற்குப் பிறகு கரையில் யக்ஷ்ம தர்ப்பணம் விதிக்கப்பட்டுள்ளது. **மற்றொரு ஸ்ம்ருதியில்**:- தேவருஷி தர்ப்பணம் செய்து பிறகு யக்ஷ்மா என்ற தேவனைக் கரையில் தர்ப்பிக்க வேண்டும். அதன் மந்த்ரம் - 'யன்மயாதூஷிதம் + தர்ப்பயாம்யஹம்' என்று. இதன் பொருள் - 'நான் என் தேகத்திலுள்ள மலங்களால் ஜலத்தைக் கெடுத்த தோஷத்தைப் போக்குவதற்காக யக்ஷ்மா என்னும் தேவனைத் தர்ப்பிக்கின்றேன்' என்பது. **தக்ஷரும்**:- ஸ்நானாங்க தர்ப்பணம் செய்த பிறகு யக்ஷ்ம தேவதைக்கு ஜலத்தைக் கொடுக்க வேண்டும். எவன் மாறிச் செய்கின்றானோ அவனது ஸ்நானம் பலனற்றதாகும்.*

योगयाज्ञवल्क्यः—यावद्देवानृषींश्चैव पितॄन् वै यो न तर्पयेत्। तावन्न पीडयेद्वस्त्रं येन स्नातो भवेन्नरः ॥ निराशाः पितरो यान्ति स्नानवस्त्रे निपीडिते। तस्मान्न पीडयेद्वस्त्रमकृत्वा पितृतर्पणम् इति ॥ वृद्धवसिष्ठः – स्नानार्थमभिगच्छन्तं देवाः पितृगणैस्सह। वायुभूतास्तु गच्छन्ति तृषाऽऽर्ताः सलिलार्थिनः ॥ निराशास्ते निवर्तन्ते वस्त्रनिष्पीडने कृते इति ॥ शौनकः – देवादींस्तर्पयेत् पूर्वं वस्त्रं सम्पीडयेत् परम् । उदकस्याप्रदानाद्धि स्नानवस्त्रं न पीडयेत् ॥ निष्पीडयति यः पूर्वं स्नानवस्त्रं तु तर्पणात्। निराशाः पितरस्तस्य यान्ति देवाः सहर्षिभिः इति ॥

**யோகயாக்ஞவல்க்யர்:-** தேவர், ருஷிகள், பித்ருக்கள், இவர்களைத் தர்ப்பிப்பதற்குமுன், எந்த வஸ்த்ரத்துடன் ஸ்நானம் செய்தானோ அந்த வஸ்த்ரத்தைப் பிழியக் கூடாது. பிழிந்தால் பித்ருக்கள் ஆசையற்றுச் செல்லுகின்றனர் ஆகையால் பித்ரு தர்ப்பணம் செய்யாமல் ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழியக் கூடாது. **வ்ருத்த வஸிஷ்டர்:-** ஸ்நானத்திற்காகச் செல்லும் மனிதனை, தேவர்கள், பித்ருகணங்களுடன் வாயுரூபர்களாய், தாகத்தால் வருந்தியவராய், ஜலத்தை விரும்பியவராய், தொடர்ந்து செல்லுகின்றனர். தர்ப்பணம் செய்யாமல் வஸ்த்ரத்தைப் பிழிந்தால் அவர்கள் ஆசையற்றுத் திரும்பிச் செல்கின்றனர். **சௌனகர்:-** முதலில் தேவர் முதலியவர்க்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். பிறகு வஸ்த்ரத்தைப் பிழிய வேண்டும். தர்ப்பணத்திற்கு முன் வஸ்த்ரத்தைப் பிழியக் கூடாது. பிழிந்தால் தேவர் ருஷிகள் பித்ருக்கள் எல்லோரும் ஆசையற்றுச் செல்லுகின்றனர்.

जलोत्तरणानन्तरकृत्यमाह भरद्वाजः — वस्त्रोदकमपेक्षन्ते ये मृता दासकर्मिणः । तस्मात् सर्वप्रयत्नेन जलं भूमौ निपातयेत् इति ।। उत्तीर्य कंचित् कालं तिष्ठेदित्यर्थः ।। तथा च सङ्ग्रहे – स्नात्वाऽदूराज्जले तिष्ठेत् प्राचीनावीतवान् द्विजः । यावत् स्रवति देहाम्बु तूर्ष्णीं भूतादि तृप्तये ।। स्नात्वाऽनाच्छाद्य यस्तिष्ठेत् तस्याकंपयतस्तदा । ब्रह्महत्त्यादिपापानि कंपयन्ति न संशयः इति ।। अत्रावस्थाने च विशेष उक्तः – सुराबिन्दुसमाः प्रोक्ताः पृष्ठतः केशबिन्दवः । त एव पुरतः प्रोक्ताः सर्वतीर्थोपमा बुधैः इति ।।

ஜலத்தினின்றும் வெளியேறிய பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார். **பரத்வாஜர்:-** தாஸர்களாயிருந்து இறந்தவர் எவரோ அவர்கள் ஸ்நான வஸ்த்ரத்தின் ஜலத்தை விரும்புகின்றனர். ஆகையால் எவ்விதத்தாலும் ஜலத்தைப் பூமியில் விழச்செய்ய வேண்டும். அதாவது கரையில் ஏறிய பிறகு சிறிது காலம்

நிற்க வேண்டுமெனபது பொருள். அவ்விதமே, **ஸங்க்ரஹத்தில்:-** ப்ராம்ஹணன் ஜலத்தில் ஸ்நானம் செய்து கரையின் ஸமீபத்தில் ப்ராசீனு வீதியாய், தேஹத்திலுள்ள ஜலம் வடியும் வரையில் மௌனியாய்ப் பூதங்கள் முதலியதின் த்ருப்திக்காக நிற்க வேண்டும். ஸ்நானம் செய்த பிறகு போர்த்திக் கொள்ளாமலும் தேஹத்தை அசைக்காமலும் நிற்பவனின் பிரம்ஹத்யை முதலில் பாபங்கள் நடுங்குகின்றன, ஸம்சயமில்லே. இங்கு நிற்பதில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது - நிற்பவனின் தலேமயிரின் ஜலத்துளிகள் பின்புறத்தில் விழுந்தால் அவை கள்ளுக்குச் சமமென்று சொல்லப்பட்டுள்ளன. அவையே முன் புறத்தில் விழுந்தால் ஸகல தீர்த்த ஜலத்திற் கொப்பானவை என்று அறிவுள்ளவரால் சொல்லப்பட்டுள்ளன.

चन्द्रिकायाम्— अवमृज्यान्न च स्नातो गात्र्याण्यम्बर-पाणिभिः। न च निर्धुनुयात् केशान् वासश्चैव न निर्धुनेत् इति ।। अत्र हेतुमाह व्यासः – तिस्रः कोट्योऽर्द्धकोटी च यावन्त्यङ्गरुहाणि वै । स्रवन्ति सर्वतीर्थानि तस्मान्न परिमार्जयेत् इति ।। गोभिलः – पिबन्ति शिरसो देवाः पिबन्ति पितरो मुखात् । मध्यतः सर्वगन्धर्वा अधस्तात् सर्वजन्तवः । सुराबिन्दुसमं चाम्भः शिखायाः पृष्ठपातितम् । तदेव पुरतोवर्ति गङ्गाबिन्दुसमं भवेत् इति । स्मृत्यन्तरे – शिरोवारि शरीराम्बु वस्त्रतोयं यथा क्रमात् । पिबन्ति देवा मुनयः पितरो ब्राह्मणस्य तु इति ।

**சந்த்ரிகையில்:-** ஸ்நானம் செய்தவன் அங்கங்களே வஸ்த்ரத்திலுலாவது கைகளாலாவது துடைக்கக் கூடாது. தலேமயிர்களே உதறக் கூடாது. வஸ்த்ரத்தையும் உதறக் கூடாது. இங்கு, காரணத்தைச் சொல்லுகிறுர், **வ்யாஸர்:-** மூன்றரைக் கோடி ரோமங்கள் தேகத்தில் எவ்வளவு உள்ளனவோ அவ்வளவு ஸகல தீர்த்தங்களும் ரோம கூபங்களினின்று வெளிவருகின்றன. ஆகையால் துடைக்கக் கூடாது. **கோபிலர்:-** சிரஸினின்றும் விழும்

ஜலத்தைத் தேவர்களும், முகத்தினின்று பித்ருக்களும், மத்யபாகத்தினின்று ஸகல கந்தர்வர்களும், கீழ்ப்பாகத்தினின்று ஸகல ஜந்துக்களும் ஜலத்தைப் பருகுகின்றனர். குடுமியின் ஜலம் பின்புறத்தில் விழுந்தால் ஸுரைக்குச் சமமாகும். அதுவே முன் புறத்தில் விழுந்தால் கங்கா ஜலத்திற்குச் சமமாகும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ப்ராம்ஹணனின் தலையின் ஜலம் சரீரத்தின் ஜலம், வஸ்த்ரத்தின் ஜலம் இவைகளை முறையே தேவர் முனிவர் பித்ருக்கள் என்ற இவர்கள் பருகுகின்றனர்.

जाबालिः — स्नानं कृत्वाऽऽर्द्रवासास्तु विण्मूत्रं कुरुते यदि। प्राणायामत्रयं कृत्वा पुनः स्नानेन शुध्यति इति ।। ततः स्नानवस्त्रं निष्पीडयेत् ।। तथा च पुलस्त्यः – कृत्वा तर्पणमेवं तु समुत्तीर्य जलाशयात् । पीडयेत् स्नानशाटीं तु तट एव विचक्षणः इति । चतुर्विंशतिमते – स्नानादनन्तरं यावत् तर्पयेत् पितृदेवताः । उत्तीर्य पीडयेद् वस्त्रं सन्ध्याकर्म ततः परम् इति।

ஜாபாலி:- ஸ்நானம் செய்த பிறகு ஈர வஸ்த்ரத்துடன் மல மூத்ர விஸர்ஜனம் செய்வானாகில், மூன்று ப்ராணா யாமங்கள் செய்து மறுபடி ஸ்நானத்தால் சுத்தனாகிறான். பிறகு ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழியவேண்டும். அவ்விதமே, புலஸ்த்யர்:- அறிந்தவன் இவ்விதம் தர்ப்பணம் செய்து ஜலாசயத்திலிருந்து வெளியேறி, ஸ்நான வஸ்த்ரத்தைக் கரையிலேயே பிழியவேண்டும். சதுர்விம்சதிமதத்தில்:- ஸ்நானத்திற்குப் பிறகு பித்ருக்களையும் தேவதைகளையும் தர்ப்பிக்க வேண்டும். கரையிலேறி வஸ்த்ரத்தைப் பிழியவேண்டும். பிறகு ஸந்த்யா வந்தனத்தைச் செய்ய வேண்டும்.

तत्र स्मृत्यर्थसारे विशेषोऽभिहितः – जलादुत्तीर्य वस्त्रप्रान्तं निष्पीड्यापः स्पृष्ट्वा परिधानोत्तरीये धृत्वा स्नानवस्त्रं निष्पीड्याचम्य सन्ध्यामुपासीत इति ।। स्मृत्यन्तरेऽपि – चतुः संवेष्ट्य वासोऽन्तं

स्नातो निष्पीडयेत् स्थले । ये के चास्मत् कुले जाता इति मन्त्रेण मानवः इति । मन्त्रश्च कार्ष्णाजिनिनोक्तः – ये के चास्मत् कुले जाता अपुत्रा गोत्र (गोत्रिणो)जा मृताः । ते गृह्णन्तु मया दत्तं वस्त्रनिष्पीडनोदकम् इति। संवर्तः – उत्तीर्य पीडयेद्वस्त्रं अपसव्यं यथाविधि इति ।। वृद्धमनुः – वस्त्रं त्रिगुणितं यस्तु निष्पीडयति मूढधीः । वृथा स्नानं भवेत्तस्य यश्चैवादशमम्बुनि इति । यश्च वस्त्रमदशं यथा भवति तथा निष्पीडयति, अम्बुनि च निष्पीडयति तस्य स्नानं वृथेत्यर्थः ।।

இங்கு **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. ஜலத்தினின்றும், வெளியேறி, வஸ்த்ரத்தின் நுனியைப் பிழிந்து, ஆசமனம் செய்து, அந்தரீயம் உத்தரீயம் இவைகளைத் தரித்து, இடுப்பு வஸ்த்ரத்தைப் பிழித்து, ஆசமனம் செய்து ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** வஸ்த்ரத்தை நான்காய் மடித்து, நுனியை ஸ்தலத்தில் 'யேகேசாஸ்மத்' என்ற மந்த்ரத்தால் பிழியவேண்டும். 'என் குலத்திலோ கோத்ரத்திலோ புத்ரனற்ற எவர் இறந்தனரோ அவர்கள் என்னால் கொடுக்கப்பட்டுள்ள வஸ்த்ரத்தைப் பிழிந்த ஜலத்தை க்ரஹித்துக் கொள்ள வேண்டும்' என்பது மந்த்ரத்தின் பொருளாம். **ஸம்வர்த்தர்:-** கறையேறி ப்ராசீனாவீதியாய் வஸ்த்ரத்தை விதிப்படி பிழியவேண்டும். **வ்ருத்தமனு:-** மூட புத்தியாகிய எவன் வஸ்த்ரத்தை மூன்றாய் மடித்துப் பிழிகின்றானோ, எவன் தலைப்பு இல்லாமல் பிழிகின்றானோ, எவன் ஜலத்தில் பிழிகின்றானோ அவனது ஸ்நானம் பலனற்றதாகும்.

तथा च प्रदीपिकायाम् – जलमध्ये यदा कश्चिद् ब्राह्मणो ज्ञानदुर्बलः । निष्पीडयति वस्त्राणि स्नानं तस्य वृथा भवेत् । वस्त्रं चतुर्गुणीकृत्य निष्पीड्य च जलाद्बहिः । वामप्रकोष्ठे निक्षिप्य द्विराचम्य विशुध्यति इति ।। जाबालिः – निष्पीडितं धौतवस्त्रं यदा स्कन्धे

विनिक्षिपेत्। तदासुरं भवेत् कर्म पुनः स्नानं विशोधनम्॥ अमङ्गलानि सर्वाणि आर्द्रवस्त्राणि यानि च। तस्मात् स्कन्धे कचिद्धीमा नार्द्रवस्त्रं न धारयेत् इति ॥ स्मृत्यन्तरेऽपि – पादे न स्थापयेद्वस्त्रं स्कन्धे न स्थापयेत्तथा। ब्राह्मणो द्वितयं चैव वर्जयेद्वस्त्रपीडने इति।

*அவ்விதமே* **ப்ரதீபிகையில்**:- *எவனொரு ப்ராம்ஹணன் ஜ்ஞானமில்லாதவனாய் ஜலத்தின் நடுவில் வஸ்த்ரங்களைப் பிழிகின்றானோ அவனது ஸ்நானம் வீணாகும். வஸ்த்ரத்தை நான்காக மடித்து, ஜலத்திற்கு வெளியில் பிழிந்து, இடதுகையின் மணிக்கட்டுக்கு மேல் வைத்துக் கொண்டு இருமுறை ஆசமனம் செய்து சுத்தனாகிறான்.* **ஜாபாலி**:- *பிழிந்த வஸ்த்ரத்தைத் தோளில் வைத்துக் கொண்டால் அந்தக் கர்மம் ஆஸுரமாகும். அவனுக்கு மறுபடி ஸ்நானம் சுத்திகரமாகும். ஈரமான வஸ்த்ரங்களெலாம் அசுபங்களாம். ஆகையால் புத்தியுள்ளவன் ஈர வஸ்த்ரத்தைத் தோளில் தரிக்கக் கூடாது.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்**:- *காலில் வஸ்த்ரத்தை வைக்கக் கூடாது. தோளிலும் வைக்கக் கூடாது. ப்ராம்ஹணன் இவ்விரண்டையும் வஸ்த்ரத்தைப் பிழிவதில் வர்ஜிக்க வேண்டும்.*

वसिष्ठः—स्नानशाट्यां च दातव्या मृदस्तिस्रो विशुद्धये। उत्तीर्य तां च निष्पीड्य ततः शेषं समापयेत् इति ॥ स्मृतिसङ्ग्रहे – निमज्य देवर्षिपितॄन् सन्तर्प्याचम्य वाससः। खण्डद्वयेन क्रमशः शिरोऽङ्गं परिमार्जयेत् ॥ स्नातो नाङ्गानि संमृज्यात् स्नानशाट्या न पाणिना। न च निर्धुनुयात् केशान् न तिष्ठन् परिमार्जयेत् इति ॥ व्यासः – मार्जयेद्वस्त्रशेषेण नोत्तरीयेण वा शिरः। यदि प्रमादान्मृज्येत स पितॄन् पातयत्यधः इति ॥ शौनकः – स्नानवस्त्रेण यो विप्रः शरीरं परिमार्जयेत्। स्नानं वृथैव भवति पुनः स्नानेन शुध्यति इति। संवर्तः – स्नानवस्त्रेण हस्तेन यो द्विजोऽङ्गं प्रमार्जयेत्। वृथा भवति तत् स्नानं पुनः स्नानेन शुध्यति इति ॥

**வஸிஷ்டர்:-** ஸ்நான வஸ்த்ரத்தில் சுத்திக்காக மூன்று ம்ருத்திகைகள் கொடுக்க வேண்டும். வெளியேறி வஸ்த்ரத்தைப் பிழிந்து பிறகு மீதியுள்ளதை முடிக்க வேண்டும். **ஸ்ம்ருதிஸங்க்ரஹத்தில்:-** ஸ்நானம் செய்து, தேவருஷி பித்ரு தர்ப்பணம் செய்து, ஆசமனம் செய்து, இரண்டு வஸ்த்ரத் துண்டுகளால் முறையே தலையையும் அங்கங்களையும் துடைத்துக் கொள்ள வேண்டும். ஸ்நானம் செய்தவன் ஸ்நான வஸ்த்ரத்தால் அங்கங்களைத் துடைக்கக் கூடாது. கையினாலும் துடைக்கக் கூடாது. மயிர்களை உதறக் கூடாது. நின்றவனாய்த் துடைக்கக் கூடாது. **வ்யாஸர்:-** வஸ்த்ரத்தின் ஒரு பாகத்தினாலாவது, உத்தரீயத்தினாலாவது தலையைத் துடைக்கக் கூடாது. கவனமில்லாமல் துடைத்தால், அவன் பித்ருக்களைக் கீழே (நரகத்தில்) தள்ளுகின்றான். **சௌனகர்:-** எந்த ப்ராம்ஹணன் ஸ்நான வஸ்த்ரத்தால் சரீரத்தைத் துடைக்கின்றானோ அவனது ஸ்நானம் வீணாகிறது. அவன் மறுபடி ஸ்நானத்ததால் சுத்தனாகிறான். **ஸம்வர்த்தர்:-** ஸ்நான வஸ்த்ரத்தினாலாவது கையினாலாலாவது எவன் அங்கத்தைத் துடைக்கின்றானோ அவனது ஸ்நானம் வீணாகிறது. மறுபடி ஸ்நானத்தால் சுத்தனாகிறான்.

—★—

## वासःपरिधानम् ।

स्नानानन्तरं वासः परिदध्यात् । तथा च मत्स्य पुराणम् – एवं स्नात्वा ततः पश्चादाचम्य तु विधानतः । उत्थाय वाससी शुक्ले शुद्धे तु परिधाय वै इति ॥ द्विराचामेदिति शेषः ॥ तथा च व्याघ्रः – ततो वस्त्रद्वयं शुद्धं गृहीत्वा द्विरुपस्पृशेत् इति ॥ तत्र विशेषमाह व्यासः – नोत्तरीयमधः कुर्यान्नोपर्यधस्त्यमम्बरम् । नान्तर्वासो विना जातु निवसेद्वसनं बुधः इति ॥

**வஸ்த்ரதாரணம்**

ஸ்நானத்திற்குப் பிறகு வஸ்த்ரம் தரிக்க வேண்டும். அவ்விதமே, **மத்ஸ்ய புராணம்**:- 'இவ்விதம் ஸ்நானம் செய்து அதற்குப் பிறகு விதிப்படி ஆசமனம் செய்து எழுந்து, சுத்தமான இரண்டு வெளுப்பு வஸ்த்ரங்களைத் தரித்து' என்றுள்ளது. இங்கு இருமுறை ஆசமனம் செய்ய வேண்டுமென்பது மீதி. அவ்விதமே, **வ்யாக்ரர்**:- பிறகு சுத்தமான இரண்டு வஸ்த்ரங்களைத் தரித்து இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார், **வ்யாஸர்**:- உத்தரீயத்தைக் கீழ் வஸ்த்ரமாய்த் தரிக்கக் கூடாது. இடுப்பு வஸ்த்ரத்தை மேலே (உத்தரீயமாக) தரிக்கக் கூடாது. அறிந்தவன் அந்தர் வஸ்த்ரமில்லாமல் வேறு வஸ்த்ரத்தைக் தரிக்கக் கூடாது.

चन्द्रिकायाम्—न चानु लिंपेदस्नात्वा स्नातो वासो न निर्धुनेत्। आर्द्र एव तु वासांसि स्नात्वा सेवेत मानवः इति ।। अत्र जाबालिः – स्नात्वा निरस्य वस्त्रं तु जङ्घे शोध्ये मृदम्भसा । अपवित्रीकृते ते हि कौपीनास्राववारिणा इति । अत्र हेत्वभिधानात् जङ्घाग्रहणं अपवित्रीकृताङ्गोपलक्षणार्थम् ।। अत एव योगयाज्ञवल्क्यः – स्नात्वैवं वाससी धौते अच्छिन्ने परिधाय च । प्रक्षाल्योरू मृदद्भिश्च हस्तौ प्रक्षालयेत् ततः इति । हारीतोऽपि – जलात्तीरं समासाद्य तत्र शुक्ले च वाससी । परिधायोत्तरीयं च कुर्यात् केशान्न धूनयेत् ।। ततः प्रक्षालयेत्पादौ मृत्तोयेन विचक्षणः इति । आर्द्रवस्त्रविसर्जने विशेष उक्तः सङ्ग्रहे – स्नानं कृत्वाऽऽर्द्रवासस्तु ऊर्ध्वमुद्धृत्य निक्षिपेत् । स्नानवस्त्रमधस्ताच्चेत् पुनः स्नानेन शुध्यति इति । स्मृत्यन्तरे – नद्यादिदेवखातेषु स्नानवस्त्रमधस्त्यजेत् । अन्यत्र तु त्यजेदूर्ध्वं स्नानवस्त्रं द्विजोत्तमः इति ।।

**சந்த்ரிகையில்**:- ஸ்நானம் செய்யாமல் அனுலேபனம் செய்யக் கூடாது. ஸ்நானம் செய்தவன்

வஸ்த்ரத்தை உதறக் கூடாது. ஸ்நானம் செய்த பிறகு ஈரமாயுள்ளவனுகவே வஸ்த்ரங்களைத் தரிக்க வேண்டும். இங்கு, ஜாபாலி:- ஸ்நானம் செய்து ஈரவஸ்த்ரத்தைத் தள்ளி, முழங்கால்களை மண், ஜலமிவைகளால் சுத்தி செய்ய வேண்டும். ஏனெனில், அவை கௌபீனத்தினின்றும் வடியும் ஜலத்தால் அசுத்தமாக்கப்பட்டவை. இங்கு காரணம் சொல்லியதால், முழங்கால்கள் என்றது அசுத்தமான வேறு அங்கத்தையும் சொல்வதற்காம். ஆகையால்தான், யோகயாக்ஞவல்க்யர்:- இவ்விதம் ஸ்நானம் செய்து கிழியாத இரண்டு வெளுப்பு வஸ்த்ரங்களைத் தரித்து, மண்ணாலும் ஜலத்தாலும் துடைகளையலம்பி பிறகு கைகளை அலம்ப வேண்டும் என்றார். ஹாரீதரும்:- ஜலத்தினின்றும் கரையையடைந்து, அங்கு இரண்டு வெளுப்பு வஸ்த்ரங்களைத் தரித்து, உத்தரீயத்தையும் தரிக்க வேண்டும். மயிர்களை உதறக்கூடாது. பிறகு அறிஞன், மண் ஜலமிவைகளால் கால்களை அலம்ப வேண்டும். ஈர வஸ்த்ரத்தை விழுப்பதில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. ஸங்க்ரஹத்தில்:- ஸ்நானம் செய்து, ஈர வஸ்த்ரத்தை மேலில் எடுத்துப் போடவேண்டும். ஸ்நான வஸ்த்ரத்தைக் கீழாகப் போட்டால் புன:ஸ்நானத்தால் சுத்தனுவான். மற்றொரு ஸ்ம்ருதியில்:- நதி முதலியதிலும், தேவர்களால் தோண்டப்பட்டதிலும் ஸ்நானம் செய்தால் ஸ்நான வஸ்த்ரத்தைக் கீழாகப் போட வேண்டும். மற்ற இடங்களில் ஸ்நானம் செய்தால் ஸ்நான வஸ்த்ரத்தை மேலாக எடுத்துப் போட வேண்டும்.

वस्त्रविषये विशेषमाह भृगुः – ब्राह्मणस्य सितं वस्त्रं नृपते रक्तमुल्बणम् । पीतं वैश्यस्य शूद्रस्य नीलं मलवदिष्यते इति ॥ याज्ञवल्क्यः – शुक्लाम्बरधरो नीचकेशश्मश्रुनखः शुचिः इति ॥ भवेदिति शेषः ॥ हारीतः – न रक्तमुल्बणं वासो न नीलं च प्रशस्यते । मलाक्तं गन्धहीनं च वर्जयेदम्बरं बुधः इति ॥ आपस्तम्बः – सर्वान्

रागान् वाससि वर्जयेत् कृष्णं च स्वाभाविकमनूद्भासि वासो वसीताप्रतिकृष्टं च शक्तिविषये इति ।। अस्यार्थः – कुसुम्बादयः सर्वे रागा वाससि वर्जनीयाः । न केनचिद्रक्तं वासो बिभृयात् । यच्च स्वभावतः कृष्णं कम्बलादि, तदपि न वसीत । उद्भासनशीलमुद्भासि उल्बणम् । ततोऽन्यत् अनूद्भासि । छान्दसो दीर्घः । एवं भूतं वासः वसीत - आच्छादयेत् । प्रति कृष्टं - निकृष्टं जीर्णं मलवत् स्थूलञ्च । तद्विपरीतं अप्रतिकृष्टं, तादृशं च वासो वसीत, शक्तौ सत्याम् इति । गौतमोऽपि – न रक्तमुल्बण मन्यधृतं वा वासो बिभृयात् इति ।। मनुः न जीर्णमलवद्वासा भवेच्च विभवे सति इति ।।

வஸ்த்ர விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், **ப்ருகு:-** ப்ராம்ஹணனுக்கு வெளுப்பு வஸ்த்ரமும், க்ஷத்ரியனுக்கு நல்ல சிவப்பு வஸ்த்ரமும், வைச்யனுக்கு மஞ்சள் நிறமுள்ள வஸத்ரமும், சூத்ரனுக்கு அழுக்குள்ள கருப்பு வஸ்த்ரமும் விதிக்கப்படுகிறது. **யாக்ஞவல்க்யர்:-** வெளுப்பு வஸ்த்ரம் தரித்தவனும், சிறியதான மயிர், மீசை, நகம் இவைகளையுடையவனையம், சுத்தனுயும் இருக்க வேண்டும்.

**ஹாரீதர்:-** அதிகச் சிவப்புள்ளதும், கருப்பு நிறமுள்ளதுமான வஸ்த்ரம் ப்ரசஸ்தமல்ல. அழுக்குடையதும், வாஸனையற்றதுமான வஸ்த்ரத்தை அறிவுடையவன் வர்ஜிக்க வேண்டும். **ஆபஸ்தம்பர்:-** குஸூம்பம் முதலிய சாயங்களெல்லாவற்றையும் வஸ்த்ரத்தில் வர்ஜிக்க வேண்டும். எவ்விதமான சாயமுடைய வஸ்த்ரத்தையும் வர்ஜிக்க வேண்டும். இயற்கையில் கருப்பான கம்பளம் முதலியதையும் உடுக்கக் கூடாது. அதிகப் பளபளப்பில்லாததை உடுக்க வேண்டும். ஜீர்ணமாயும் அழுக்குடையதாயும் தடிப்பாயுமில்லாத வஸ்த்ரத்தை தரிக்க வேண்டும் சக்தி இருக்குமானல். **கௌதமரும்:-** சிவப்பானதும், அதிக ப்ரகாசமுள்ளதும், பிறர் உடுத்தியதுமான வஸ்த்ரத்தை

உடுத்தக் கூடாது. மனு:- தனமிருக்கும் பக்ஷத்தில் ஜீர்ணமும் அழுக்குடையதுமான வஸ்த்ரத்தை தரித்தவனுகக் கூடாது.

प्रजापतिः— क्षौमं वासः प्रशंसन्ति तर्पणे सदशं यथा। काषायं धातुरक्तं वा नोल्बणं वाऽपि कर्हिचित् इति ।। उशना – न वेष्टितशिराः कृष्णकाषायवासा वा देव पितृकार्याणि कुर्यात् इति ।। यत्तु अहतं धातुरक्तं च तत्पवित्रमिति स्मृतम् इति स्मर्यते, तदनुल्बणरक्ताभिप्रायम् ।। देवलः – स्वयं धौतेन कर्तव्या क्रिया धर्म्या विपश्चिता। न तु नेजकधौतेन नहतेन न कुत्रचित् इति ।। नहतेनेति समस्तपदम् ।।

ப்ரஜாபதி:- தர்ப்பணத்தில் தலைப்புடைய க்ஷௌம வஸ்த்ரத்தை எப்படி ச்லாகிக்கின்றனரோ அப்படி, சாயமுள்ளதையும், தாதுக்களால் சாயமுள்ளதையும், அதிக ப்ரகாசமுள்ளதையும் ஒருக்காலும் ச்லாகிப்பதில்லை. உசனஸ்:- தலையில் வஸ்த்ரத்தைச் சுற்றிக் கொண்டாவது, கருப்பு அல்லது சாயமுள்ள வஸ்த்ர முடையவனுகவாவது, தேவபித்ரு கார்யங்களைச் செய்யக் கூடாது. 'அஹதமும் தாதுவினுல் சாயமுடையதும் சுத்தமெனச் சொல்லப்பட்டுள்ளது', என்ற ஸ்மிருதி வசனம் அதிகச் சாயமில்லாத தென்றபிப்ராயமுடையது. தேவலர்:- 'தன்னுல் சுத்தம் செய்யப்பட்ட வஸ்த்ரத்துடன் தர்மகார்யங்களை அறிந்தவன் செய்ய வேண்டும். வண்ணுனுல் வெளுக்கப்பட்டதும் அஹதமானதுமான வஸ்த்ரத்துடன் செய்யக் கூடாது.

अहतस्य लक्षणमाह पुलस्त्यः – ईषद्धौतं नवं श्वेतं सदशं यन्न धारितम्। अहतं तद्विजानीयात् सर्वकर्मसु पावनम् इति ।। धौतम् - प्रक्षालितम् ।। अहतस्य विषयविशेषं दर्शयति सत्यतपाः – अहतं यन्त्रनिर्मुक्तमुक्तं वासः स्वयंभुवा। शस्तं तन्माङ्गलिक्येषु तावत्कालं न सर्वदा इति ।। माङ्गलिक्यं - विवाहादि ।। अधौतं कारुधौतं च कर्मकाले

विवर्जयेत्। चण्डालनिर्मितं वस्त्रं सर्वदा परिवर्जयेत् इति च ।। उशना – स्नात्वाऽनुपहतं वस्त्रं परिदध्याद्यथाविधि। अभावे पूर्ववस्त्रं च सम्प्रोक्ष्य प्रणवेन तु इति ।। जातुकर्णिः – काषायं कृष्णवस्त्रं वा मलिनं केशदूषितम्। छिन्नाग्रं चोपवस्त्रं च कुत्सितं धर्मतो विदुः इति ।।

அஹதத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிருர். **புலஸ்த்யர்:**- கொஞ்சம் அலம்பப்பட்டதும், புதிதாயும், வெளுப்பாயும், தலைப்புடையதும், உடுக்கப் படாததாய் உள்ளதை அஹதமென்றிய வேண்டும். அது ஸகல கர்மங்களிலும் சுத்தமாம், அஹதத்தை உபயோகிக்கும் விஷயத்தைச் சொல்லுகிருர், **ஸத்யதபஸ்:**- தரியிலிருந்து புதிதாய் எடுக்கப்பட்ட வஸ்த்ரம் 'அஹதம்' எனப்பட்டது ஸ்வயம்புவினுல். அது விவாஹாதி மங்களங்களில் அப்பொழுது மட்டில் ச்லாக்யமாகும். எப்பொழுதுமல்ல. நனைக்காததும், வண்ணுனுல் வெளுக்கப்பட்டதுமான வஸ்த்ரத்தை கர்மகாலத்தில் வர்ஜிக்க வேண்டும். சண்டாளன் நெய்த வஸ்த்ரத்தை எப்பொழுதும் தவிர்க்க வேண்டும், என்ருர். **உசநஸ்:**- ஸ்நானம் செய்து தரிக்கப்படாத வஸ்த்ரத்தை விதிப்படி தரிக்க வேண்டும். வேறு வஸ்த்ர மில்லாவிடில் முன் தரித்த வஸ்த்ரத்தையே ப்ரணவத்தால் ப்ரோக்ஷித்து தரிக்கலாம்.

இங்கு அனுகல்பத்தைச் சொல்லுகிருர், **யோகயாக்ஞவல்க்யர்:**- வெளுத்த வஸ்த்ரமில்லாவிடில், சணல், வஸ்த்ரம், க்ஷௌமம் (நார்வஸ்த்ரம்) ஆவிகம் (ஆட்டின் மயிர்க் கம்பளி) இவைகளை தரிக்கலாம். வஸ்த்ரம் இல்லாமல் இருக்கக் கூடாது. குதபம், யோகபட்டம் இவைகளைத் தரிக்கலாம். குதபம் வெண்ணிறக் கம்பளி, யோகப்பட்ட நூலினுல் யக்ஞோப வீதம் போல் அகலமாயுள்ளதும் யோகிகள் தரிப்பதுமான பட்டை. **சந்த்ரிகையில்:**- ஓ அரசனே! படுக்கைக்கு வேறு வஸ்த்ரம் தரிக்க வேண்டும். வீதியில் செல்லும்போது வேறு வஸ்த்ரம். தேவர்களைப் பூஜிக்கும் போது வேறு

வஸ்த்ரம். ஜீவனத்திற்கான கார்யத்தில் வேறு வஸ்த்ரம். அரசனைப் பார்ப்பதற்கு வேறு வஸ்த்ரம் தரிக்க வேண்டும். ஜாது கர்ணி:- சாயமிட்டதும், கருப்பு நிறமுள்ளதும், அழுக்குள்ளதும், மயிருள்ளதும், நுனி நறுக்கப்பட்டதும், சிறிய துண்டும் ஆகிய வஸ்த்ரம் தர்மானுஷ்டானத்திற்கு அர்ஹமல்லாததாகும்.

भृगुः— न रक्तमुल्बणं वासो न नीलं च प्रशस्यते। दशाहीनं जलार्द्रं च वर्जयेदम्बरं बुधः ॥ अकच्छः पुच्छकच्छश्च तिर्यक्कच्छोर्ध्वकच्छकः। कटिसूत्रे बद्धकच्छो नग्नः पञ्चविधः स्मृतः॥ कटिसूत्रं विना श्रौतं स्मार्तं कर्म करोति यः। सर्वं तन्निष्फलं विद्यात् सोऽपि नग्न इति स्मृतः॥ नग्नो मलिनवस्त्रः स्यान्नग्नश्चार्द्रपटः स्मृतः। नग्नस्तु दग्धवस्त्रः स्यान्नग्नः सूतपटस्तथा ॥ विकच्छोऽनुत्तरीयश्च नग्नश्चावस्त्र एव च। श्रौतं स्मार्तं तथा कर्म न नग्नश्चिन्तयेदपि॥ मोहात् कुर्वन्नधो गच्छेत् तद्भवेदासुरं कृतम् इति ॥ स्मृतिरत्नावल्याम् – सप्तवाताहतं वस्त्रं शुष्कवत् प्रतिपादितम् । आर्द्रं वाऽपि द्विजातीनामादृतं गौतमादिभिः॥ जप्ये होमे तथा स्नाने दैवे पित्र्ये च कर्मणि। बध्नीयान्नासुरीं कक्ष्यां शेषकाले यथेच्छया। परिधानाद्बहिः कक्ष्या निबद्धा ह्यासुरी भवेत्। धर्म्ये कर्मणि विद्वद्भिः वर्जनीया प्रयत्नतः इति॥

ப்ருகு:- சிவப்புச் சாயமுடையதும், அதிக வெண்ணிறமுள்ளதும், கருப்பு நிறமுள்ளதுமான வஸ்த்ரம் ச்லாகிக்கப் படுவதில்லை. அறிந்தவன் தலைப்பில்லாததும், ஈரமுமான வஸ்த்ரத்தைத் தவிர்க்க வேண்டும். கச்சமில்லாதவனும், மூலைக்கச்சமுள்ளவனும், தலைப்பை விட்டு நடுவில் கச்சம் தரித்தவனும், உயர்ந்த கச்சமுடையவனும், இடுப்புக் கயிற்றில் கட்டிய கச்சமுடையவனும் நக்னர்களாம், கடிஸூத்ரம் (இடுப்புக்கயிறு) இல்லாமல் ச்ரௌத ஸ்மார்த்த

*கர்மங்களை எவன் செய்கின்றானோ அவனது கர்மம் முழுதும் வஸ்த்ரமுடையவனும் ஈரவஸ்த்ரம் உடையவனும் பொசுங்கிய வஸ்த்ரம் உடையவனும் தைக்கப் பட்ட வஸ்த்ரம் உடையவனும். கச்சமில்லாதவனும், உத்தரீயம் இல்லாதவனும், வஸ்த்ரம் இல்லாதவனும் நக்னனாவான். நக்னனாயிருப்பவன் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களை நினைக்கவும் கூடாது. அறியாமற் செய்தால் பதிதனாவான். செய்த கார்யமும் அஸுரர்களைச் சேர்ந்ததாகும்.* ஸ்ம்ருதி ரத்னாவளியில்:- *ப்ராம்ஹணர்களுக்கு, ஈரவஸ்த்ரம் ஆயினும் ஏழு தடவை காற்றினால் ஆற்றப்பட்டால் உலர்ந்த வஸ்த்ரம் போன்று என்று சொல்லப்பட்டுள்ளது. இது கௌதமர் முதலியவரால் ஆதரிக்கப்பட்டுள்ளது. ஜபம், ஹோமம், ஸ்நானம், தேவகர்மம், பித்ருகர்மம் இவைகளில் ஆஸுரக்கச்சையைக் கட்டக் கூடாது. மற்றக் காலத்தில் இஷ்டப்படி கட்டலாம், இடுப்பு வஸ்த்ரத்திற்கு வெளியில் கட்டப்பட்ட கக்ஷ்யை அஸுரருடையதாகும். தர்ம கார்யங்களில் வித்வான்கள் அதை அவச்யம் வர்ஜிக்க வேண்டும். (வஸ்த்ரம் நழுவாமல் இருப்பதற்காக அதன்மேல் கட்டிக் கொள்ளும் கச்சையைக் கக்ஷ்யை என்கின்றனர்.)*

गौतमः – सति विभवे न जीर्णमलवद्वासाः स्यात् इति ।। स्मृत्यर्थसारे – न सर्वरक्तं कृष्णं वा परिदध्यात् कदाचन। यज्ञोपवीत मन्यद्वा द्वितीयं तद्भवेदिह इति ।। स्मृत्यन्तरे – शुचीवो हव्यामरुत इत्युक्त्वा शुद्धमम्बरम्। सम्प्रोक्ष्य देवस्य त्वेति गृहीत्वा चावधूनयेत्।। अवधूत ऽरक्ष इत्यादित्यस्य प्रदर्शयेत् । तरणिरुदुत्यमिति वा अवहन्तीति छादयेत् इति ।। तथा च बोधायनः – देवानृषीन् पितॄंस्तर्पयित्वा शुचीवो हव्येति वस्त्रमद्भिः प्रोक्ष्य देवस्यत्वेति वस्त्रमादायावधूत ऽरक्ष इत्यवधूयोदुत्यं जातवेदसमिति वस्त्रमादित्यं दर्शयित्वाऽऽवहन्तीति वासः परिधाय द्विराचामेत् इति ।।

கௌதமர்:- விபவமிருக்கும் பொழுது பழைய வஸ்த்ரம் அழுக்கு வஸ்த்ரம் இவைகளை உடையவனாய் இருக்கக் கூடாது. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- முழுவதும் சிவப்பாயும், கறுப்பாயுமுள்ள வஸ்த்ரத்தை ஒருகாலும் தரிக்கக் கூடாது. இதன் ஸ்தானத்தில் வேறு யக்ஞோபவீதமாவது இரண்டாவதாக இருக்கலாம். மற்றொரு ஸ்ம்ருதியில்:-'சுசீவ:' என்ற மந்த்ரத்தால் சுத்தமான வஸ்த்ரத்தை ப்ரோக்ஷித்து, 'தேவஸ்யத்வா' என்ற மந்த்ரத்தால் எடுத்து, அவதூதம்ரக்ஷ:' என்ற மந்த்ரத்தால் உதறி, 'தரணி:' அல்லது 'உதுத்யம்' என்ற மந்த்ரத்தால் ஸூர்யனுக்குக் காண்புவித்து, 'ஆவஹந்தீ' என்ற மந்த்ரத்தால் தரிக்க வேண்டும். அவ்விதமே, போதாயனர்:- தேவர்கள், ருஷிகள், பித்ருக்கள் இவர்களைத் தர்ப்பித்து, 'சுசீவ:' என்பதால் வஸ்த்ரத்தை ப்ரோக்ஷித்து, 'தேவஸ்யத்வா' என்பதால் எடுத்து, 'அவதூதம்' என்பதாலுதறி, 'உதுத்யம்' என்பதால் ஸூர்யனுக்கு காண்புவித்து, 'ஆவஹந்தீ' என்பதால் தரித்துக் கொண்டு இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும்.

पूर्वमनिवेशितवासोविषयो मनुरित्याह पारस्करः— वासश्छत्रोपानहश्चा पूर्वाश्चेन्मन्त्रः इति। यं तस्मादपि साधुपरिगृहीतं सर्वत एव गाङ्गम् इति ।। विवस्वानपि – एकतः सर्वतीर्थानि जाह्नव्येकैव चान्यतः। ब्रह्मलोकेशशिरसः पतिता या महीतले इति।। मरीचिरपि – भूमिष्ठमुद्धृतं वाऽपि शीतमुष्णमथापि वा। गाङ्गं पयः पुनात्याशु पापमामरणान्तिकम् इति ।। योगयाज्ञवल्क्यः — त्रिरात्रफलदा नद्यो याः काश्चिदसमुद्रगाः। समुद्रगास्तु पक्षस्य मासस्य सरितांपतिः इति।।

முன் உபயோகிக்கப்படாத வஸ்த்ர விஷயம் மந்த்ரம் என்கிறார். பாரஸ்கரர்:- வஸ்த்ரம், குடை, பாதரக்ஷை இவைகள் முன் உபயோகிக்கப்படாதவைகளாகில்

மந்த்ரம் உச்சரிக்கப்பட வேண்டும். **போதாயனர்:-** அத்யயனம், மலமூத்ராதி விஸர்க்கம், தானம், போஜனம், ஆசமனம் என்ற இந்த ஐந்து கார்யங்களிலும் உத்தரீயத்தைத் தரிக்க வேண்டும். இது எல்லாக் கர்மங்களையும் சொல்வதற்காம். (ஏனெனில்) 'கச்சமில்லாதவனும், உத்தரீயம் இல்லாதவனும் எக்கார்யத்தையும் செய்யக் கூடாது' என்று நிஷேதிக்கப்பட்டிருப்பதால். **யோகயாக்ஞவல்க்யரும்:-** ப்ராம்ஹணன் ஒரு வஸ்த்ரத்துடன், ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம், அத்யயனம், தர்ப்பணம், ச்ராத்தம், போஜனம் நற்கார்யங்கள் இவைகளைச் செய்யக் கூடாது. **கோபிலரும்:-** ஒரு வஸ்த்ரத்துடன் இருப்பவன், போஜனம், தேவபூஜை, ப்ராம்ஹண பூஜை, ஹோமம் இவைகளைச் செய்யக் கூடாது.

पराशरः—होमदेवार्चनाद्यासु क्रियासु पठने तथा । नैकवस्त्रः प्रवर्तेत द्विज आचमने जपे इति ।। एकवस्त्रस्य लक्षणमाह स एव – सव्यादंसाद्भ्रष्टपटं कटिदेशधृताम्बरम् । एकवस्त्रं तु तं विद्यात् दैवे पित्र्ये च वर्जयेत् इति । सव्येऽसे पटहीनं कटिदेश एव धृतमम्बरं येन स तथोक्तम् ।। आपस्तम्बः – नित्यमुत्तरं वासः कार्यमपि वा सूत्रमेवोपवीतार्थे इति ।। जातुकर्ण्यः – वस्त्रोत्तरीयभावे द्व्यङ्गुलं त्र्यङ्गुलं चतुरङ्गुलं वा सूत्रैः वस्त्राकृति परिमण्डलं तदुत्तरीयं कुर्यात् इति ।। तथा चन्द्रिकायाम् – यज्ञोपवीते द्वे धार्ये श्रौते स्मार्ते च कर्मणि । तृतीयमुत्तरीयं च वस्त्राभावे तदिष्यते इति ।।

**பராசரர்:-** ஹோமம் தேவபூஜை முதலிய கர்மங்கள், வேதம் முதலியதைப் படிப்பது, ஆசமனம், ஜபம் இவைகளில், ப்ராம்ஹணன் ஒரு வஸ்த்ரத்துடன் ப்ரவர்த்திக்கக் கூடாது. ஒரு வஸ்த்ரம் உடையவனின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார். **பராசரர்:-** இடது தோளினின்று நழுவிய வஸ்த்ரமுடையவனையும்,

இடுப்பில் தரிக்கப்பட்ட உத்தரீயம் உடையவனையும் ஏகவஸ்த்ரம் என்றறியவும். அவனைத் தேவ கார்யத்திலும், பித்ரு கார்யத்திலும் தவிர்க்க வேண்டும். **ஆபஸ்தம்பர்:-** நித்யமும், (எப்பொழுது) உத்தரீயத்தைத் தரிக்க வேண்டும், அல்லது உத்தரீயத்திற்காக நூலையாவது தரிக்கலாம். **ஜாதுகர்ண்யர்:-** வஸ்த்ரமான உத்தரீயம் இல்லாவிடில் இரண்டு அங்குலம் அல்லது மூன்றங்குலம், நான்கங்குலம் அகலம் உடையதாய் நூல்களால் நெய்யப்பட்ட வஸ்த்ரம் போலுள்ளதும் வளைவாயுமுள்ளதை உத்தரீயமாய்ச் செய்து கொள்ளலாம். அவ்விதம், **சந்த்ரிகையில்:-** ச்ரௌத கர்மத்திலும் ஸ்மார்த்த கர்மத்திலும் இரண்டு உபவீதங்களைத் தரிக்க வேண்டும். மூன்றாவதை உத்தரீயத்திற்காகத் தரிக்க வேண்டும். வஸ்த்ரம் இல்லாவிடில் அது விதிக்கப்படுகிறது.

वृद्धमनुः – निष्पीड्य स्नानवस्त्रं तु पश्चात् सन्ध्यां समाचरेत्। अन्यथा कुरुते यस्तु स्नानं तस्याफलं भवेत्।। प्रातः सन्ध्यामुपासीत वस्त्रसंशोधनात् परम्। उपास्य मध्यमां सन्ध्यां वस्त्रसंशोधनं भवेत्।। वस्त्रं चतुर्गुणीकृत्य निष्पीड्य च जलाद्बहिः। वामप्रकोष्ठे निक्षिप्य द्विराचम्य विशुध्यति इति।। त्यक्तवस्त्रनिष्पीडने विशेषमाह हारीतः – वस्त्रनिष्पीडनं तोयं श्राद्धे तूच्छिष्टभागिनाम्। भागधेयं श्रुतिः प्राह तस्मान्निष्पीडयेत् स्थले।। उच्छिष्टभागिनो दासा ये मृतास्ते त्वमन्त्रकाः। तृप्यन्तु तरु(नु)तां प्राप्ता मम सम्बन्धिनो मृताः।। इति स्नात्वाऽऽर्द्रवसनं शुचौ देशे प्रपीडयेत् इति।। भरद्वाजोऽपि – वस्त्रोदकमपेक्षन्ते श्राद्धे तूच्छिष्ट(भोजि) भागिनः। तस्मात् सर्वप्रयत्नेन जलं भूमौ निपातयेत् इति।।

**வ்ருத்தமனு:-** ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழிந்து, பிறகு ஸந்த்யா வந்தனம் செய்ய வேண்டும். எவனிதை மாறிச் செய்கிறானோ அவனது ஸ்நானம் வீணாகும். காலை ஸந்த்யா

வந்தனத்தை வஸ்த்ரத்தைப் பிழிந்த பிறகு அனுஷ்டிக்க வேண்டும். மாத்யாஹ்னிக ஸந்த்யா வந்தனத்தைச் செய்து பிறகு வஸ்த்ரத்தைப் பிழிய வேண்டும். ஸ்நான வஸ்த்ரத்தை நான்காய் மடித்து ஜலத்திற்கு வெளியில் பிழிந்து இடதுகையின் மணிக்கட்டுக்கு மேல் வைத்துக் கொண்டு இருமுறை ஆசமனம் செய்து சுத்தனுகிறுன். விடுத்த வஸ்த்ரத்தைப் பிழிவதில் விசேஷத்தைச் சொல்லுகிறுர்.

ஹாரீதர்:- வஸ்த்ரத்தைப் பிழிந்த ஜலம், ச்ராத்தத்தில் உச்சிஷ்டத்தைப் பெறும் சிலருக்குப் பாகமென வேதம் சொல்லுகிறது. ஆகையால் ஸ்தலத்தில் பிழிய வேண்டும். 'உச்சிஷ்ட + ம்ருதா:' என்ற மந்த்ரத்தால் ஸ்நான வஸ்த்ரத்தைச் சுத்தமான ஸ்தலத்தில் பிழிய வேண்டும். ஷ மந்த்ரத்தின் அர்த்த மிதுவாம் - 'ச்ராத்தத்தில், உச்சிஷ்டத்தை அடைபவர்களான தாஸர்களும், மந்த்ரமில்லாமல் எவர் இறந்தவர்களோ அவரும், பாபத்தால் மரத்தன்மையை அடைந்தவரும், என்னைச் சேர்ந்தவர் எவர் இறந்தனரோ அவர்களும் த்ருப்தியை அடையக் கடவர்' என்று. பரத்வாஜரும்:- ச்ராத்தத்தில் உச்சிஷ்டத்தை அடைபவர்கள் வஸ்த்ர ஜலத்தை அபேக்ஷிக்கின்றனர். ஆகையால் எவ்விதத்தாலும் வஸ்த்ர ஜலத்தைப் பூமியில் விட வேண்டும்.



## ॥ स्नानभेदाः ॥

प्रातः स्नानप्रसङ्गेन स्नानान्तराण्युच्यन्ते ॥ तत्र शङ्खः – स्नानं तु द्विविधं प्रोक्तं गौणमुख्यभेदतः । तयोस्तु वारुणं मुख्यं तत्पुनष्षड्विधं भवेत् ॥ नित्यं नैमित्तिकं काम्यं क्रियाङ्गं मलकर्षणम् । क्रियास्नानं तथा षष्ठं षोढा स्नानं प्रकीर्तितम् इति ॥ एतेषां लक्षणमाह स एव – अस्नातस्तु पुमान्नार्हो जप्याग्निहवनादिषु । प्रातः स्नानं तदर्थं तु नित्यस्नानं प्रकीर्तितम् । चण्डालशवधूपादि स्पृष्ट्वाऽस्नातां रजस्वलाम् ।

स्नानार्हस्तु यदा स्नाति स्नानं नैमित्तिकं हि तत्। पुष्यस्नानादिकं यत्तु देवज्ञविधिचोदितम्। तद्धि काम्यं समुद्दिष्टं नाकामस्तत् प्रयोजयेत्॥ दैवज्ञः - ज्योतिर्वित्॥ जप्तुकामः पवित्राणि ह्यर्चिष्यन् देवताः पितॄन्। स्नानं समाचरेद्यत्तु क्रियाङ्गं तत् प्रकीर्तितम्॥ मलापकर्षणं नाम स्नानमभ्यङ्ग पूर्वकम्॥ मलापकर्षणार्थाय प्रवृत्तिस्तस्य नान्यथा। सरस्सु देवखातेषु तीर्थेषु च नदीषु च। क्रियास्नानं समुद्दिष्टं स्नानं तत्र मता क्रिया इति॥ स्नानमेव तत्र क्रिया = कार्यतया विहितेत्यर्थः॥ गोभिलोऽपि – नित्यं सततनिर्वर्त्यं काम्यं कामाय यद्धितम्। निमित्तादुपजातं तु स्नानं नैमित्तिकं स्मृतम् इति॥ अनेन मध्यन्दिनस्नानस्यापि नित्यत्वमुक्तम्। तस्यापि सततनिर्वर्त्यत्वात्॥ तदिदानीं प्रसङ्गेनाभिधीयते॥

### ஸ்நானபேதங்கள்

*ப்ராத:ஸ்நான ப்ரஸங்கத்தால் மற்ற ஸ்நானங்களும் சொல்லப்படுகின்றன. அதில், சங்கர் கௌணம், முக்யம் என்ற பேதத்தால் ஸ்நானம் இருவிதமாகும். அவைகளுள் வாருண ஸ்நானம் முக்யமெனப்படும். அது ஆறுவிதமாகும். நித்யம், நைமித்திகம், காம்யம், க்ரியாங்கம், மலாபகர்ஷணம், க்ரியா ஸ்நானம் என்று ஆறுவிதமாய் ஸ்நானம் சொல்லப்பட்டுள்ளது. இவைகளின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார். சங்கரே:- ஸ்நானம் செய்யாத மனிதன் ஜபம் அக்னி ஹோமம் முதலியவைகளில் அர்ஹனுவதில்லை. அதற்காகக் காலையில் செய்யப்படும் ஸ்நானம் நித்ய ஸ்நானம் எனப்பட்டது. சண்டாளன், பிணத்தின் புகை முதலியது, ஸ்நானம் செய்யாத ரஜஸ்வலை இவர்களைத் தொட்டால் ஸ்நானத்திற்கு உரியவனாகி எப்பொழுது ஸ்நானம் செய்கிறானோ அந்த ஸ்நானம் நைமித்திகம் எனப்படுகிறது. புஷ்யஸ்நானம் முதலியதும், ஜ்யௌதிஷிகன் விதியால் விதிக்கப்பட்டதுமான*

ஸ்நானம் காம்யம் எனப்பட்டது. காமமில்லாதவன் அதைச் செய்ய வேண்டியதில்லை. சுத்தமான மந்த்ரம் முதலியவைகளை ஜபிக்க விரும்பியவனும், தேவதைகளை, அல்லது பித்ருக்களை ஆராதிக்கப் போகிறவனும் செய்யும் ஸ்நானம் க்ரியாங்க ஸ்நானமெனச் சொல்லப்பட்டது. அப்யங்கத்தை முன் செய்து கொண்டு, அதற்காகச் செய்யும் ஸ்நானம் மலாபகர்ஷண ஸ்நானம் எனப்படும். அழுக்கைப் போக்குவதற்காகவே அந்த ஸ்நானம், வேறு ப்ரயோஜனத்திற்கல்ல என்று. ஸரஸ்ஸுகளிலோ, தேவர்களால் வெட்டப்பட்ட குளங்களிலோ, தீர்த்தங்களிலோ. நதிகளிலோ செய்யும் ஸ்நானம் க்ரியா ஸ்நானம் எனப்படும். அதில் ஸ்நானமே க்ரியையானதால் = கார்யமாய் விஹிதமானது. கோபிலரும்:- ப்ரதிதினமும் செய்ய வேண்டிய ஸ்நானம் நித்யமெனப்படும். இஷ்டத்தை அடைவதற்கு அனுகூலமாகியது காம்யம் எனப்படும். நிமித்தத்தால் உண்டாகியது நைமித்திக ஸ்நானமெனப்படும். இதனால் மாத்யாஹ்னிக ஸ்நானமும் நித்யமெனச் சொல்லப்பட்டது. அதுவும் ப்ரதிதினமும் செய்யப்பட வேண்டியதானதால். அதை இப்பொழுது ப்ரஸங்கத்தால் சொல்லுகிறோம்.



## माध्याह्निकस्नानम् ।

तत्र बोधायनः – ततो मध्याह्नसमये पुनःस्नानं समाचरेत् ।। सूर्यस्य चाप्युपस्थानं जपहोमादिकं ततः इति ।। वसिष्ठः – पवित्रकर एकाग्रः पार्श्वाननवलोकयन् । अरुग्दिवा चरेत् स्नानं मध्याह्नात् प्राग्विशेषतः इति ।। अरुक् - रोगरहितः ।। व्यासः – स्नानं मध्यन्दिने कुर्यात् सुजीर्णेऽन्ने निरामयः । न भुक्त्वाऽलङ्कृतो रोगी स्नायादम्भसि नाकुलः इति ।। विष्णुः – प्रातःस्नातोऽपि विधिवत् स्नानं मध्यन्दिने चरेत् । शक्तश्चेदन्यथा रोगी छाया सम्मार्जनं चरेत् इति ।। अनेन प्रातः स्नातस्य माध्याह्निकस्नानाशक्तौ कापिलस्नानमनुज्ञायते ।।

**மாத்யாஹ்னிகஸ்நானம்**

*அதில்* **போதாயனர்:-** *பிறகு மத்யாஹ்ன காலத்தில் மறுபடி ஸ்நானம் செய்ய வேண்டும். ஸௌர்யோபஸ் தானத்தையும், ஜபம், ஹோமம் முதலியதையும் பிறகு செய்ய வேண்டும்.* **வஸிஷ்டர்:-** *ரோகமில்லாதவன், பகலில் மத்யாஹ்னத்திற்கு முன், கையில் பவித்ரம் உடையவனுய், கவனமுடையவனுய்ப் பக்கங்களைப் பாராமல் ஸ்நானம் செய்ய வேண்டும்.* **வ்யாஸர்:-** *வ்யாதி இல்லாதவன், அன்னம் நன்ருய் ஜீர்ணமான பிறகு, மத்யாஹ்னத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். போஜனம் செய்த பிறகும், அலங்காரம் உடையவனுகவும், ரோகமுள்ளவனுயும், வ்யாகுலனுயும் ஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது.* **விஷ்ணு:-** *சக்தியுள்ளவனுகில், ப்ராத:ஸ்நானம் செய்தவனும் மத்யாஹ்னத்தில் விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். சக்தியில்லாவிடில் ரோகமுள்ளவன் ஈர வஸ்த்ரத்தால் துடைத்துக் கொள்ள வேண்டும். இதனுல், ப்ராத:ஸ்நானம் செய்தவனுக்கு மாத்யாஹ்னிக ஸ்நானத்தில் சக்தியில்லாவிடில் காபிலஸ்நானம் ஒப்புக் கொள்ளப்படுகிறது.*

व्यासः—मन्त्रपूतैर्जलैः स्नानं प्राहुः स्नाद्दफलदम् । न वृथावारिमग्नानां यादसामिव तत्समम् इति ।। याज्ञवल्क्यः – मत्स्यकच्छपमण्डूकास्तोये मग्ना दिवानिशम् । न तेषां हि स्नानफलं तथैव विधिवर्जितम् इति ।। कौशिकः – विधिदृष्टं तु यत्कर्म करोत्यविधिना तु यः । फलं न किञ्चिदाप्नोति क्लेशमात्रं हि तस्य तत् इति । विवस्वान् – अविदित्वैव यः स्मार्तं विधानं स्नानमाचरेत् । स याति नरकं घोरमिति धर्मस्य शासनम् इति ।। विष्णुः – ब्रह्मक्षत्रविशां चैव मन्त्रवत् स्नानमिष्यते ।। तूष्णीमेव हि शूद्रस्य स्त्रीणां च कुरुनन्दन इति ।। बोधायनः – अपोऽवगाहनं स्नानं विहितं सार्ववर्णिकम् । मन्त्रवत् प्रोक्षणं चापि द्विजातीनां विशिष्यते इति ।।

**வ்யாஸர்:-** மந்த்ரங்களால் சுத்தமான ஜலங்களால் செய்யப்படும் ஸ்நானமே ஸ்நான பலனைத் தருமென்பர். மந்த்ரமில்லாவிடில் செய்யும் ஸ்நானம் வீணாகும். அந்த ஸ்நானம் ஜலத்திலேயே முழுகியுள்ள ஜலசர ஜந்துக்களின் ஸ்நானத்திற்கு ஸமமாகும். **யாக்ஞவல்க்யர்:-** மீன், ஆமை, தவளை இவைகள் பகலிலும் இரவிலும் ஜலத்தில் மூழ்கியிருக்கின்றன. அவைகளுக்கு ஸ்நான பலனில்லை. விதியில்லாது செய்த ஸ்நானம் இவ்விதமேயாம், **கௌசிகர்:-** விதியுடன் செய்ய வேண்டிய கர்மத்தை விதியின்றி எவன் செய்கின்றானோ அவன் ஸ்வல்ப பலனையும் அடைவதில்லை. அந்தக் கர்மம் ச்ரமத்தை மட்டில் பலனாக உடையதாம். **விவஸ்வான்:-** ஸ்ம்ருதியிற் சொல்லிய விதியை அறியாமலே எவன் ஸ்நானத்தைச் செய்கிறானோ, அவன் பயங்கரமான நரகத்தை அடைவான் என்று தர்ம தேவதையின் ஆக்ஞை. **விஷ்ணு:-** ஓ குருநந்தன! ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன் இவர்களுக்கே மந்த்ரத்துடன் ஸ்நானம் விதிக்கப்பட்டுள்ளது. சூத்ரனுக்கும், ஸ்த்ரீகளுக்கும் மந்த்ரமில்லாமலே விதிக்கப்பட்டுள்ளது. **போதாயனர்:-** ஜலத்தில் மூழ்குவதான ஸ்நானம் எல்லா வர்ணங்களுக்கும் விதிக்கப்பட்டுள்ளது. மந்த்ரத்துடன் ப்ரோக்ஷணமும் மூன்று வர்ணத்தாருக்கும் விசேஷமாய் விதிக்கப்படுகிறது.

—★—

## स्नानार्हजलानि ॥

नदीषु देवखातेषु तटाकेषु सरस्सु च । स्नानं समाचरेन्नित्यं गर्तप्रस्रवणेषु च इति ॥ मनुष्यैरखातो जलाशयो देवखातः । मनुष्यैः खातः - तटाकः । ऋषिसेवितं - सरः । गर्तः - कुल्या । प्रस्रवणं - निर्झरः ।

गर्तलक्षणमुक्तं शौनक कात्यायनाभ्याम् – धनुः सहस्राण्यष्टौ तु गतिर्यासां न विद्यते। न ता नदीशब्दवहा गर्तास्ताः परिकीर्तिताः इति।। अनेनार्थात् नदीलक्षणमप्युक्तं भवति ।। विष्णुपुराणेऽपि — नदीनदतटाकेषु देवखातजले च। नित्यक्रियार्थं स्नायीत गिरिप्रस्रवणेषु च।। कूपेषूद्धृततोयेन स्नानं कुर्वीत वा भुवि इति ।। मार्कण्डेयोऽपि – पुराणानां नरेन्द्राणां ऋषीणां च महात्मनाम्। स्नानं कूपतटाकेषु देवतानां समाचरेत्। भूमिष्ठमुद्धृतात् पुण्यं ततः प्रस्रवणोदकम्। ततोऽपि सारसं पुण्यं तस्मान्नादेयमुच्यते। तीर्थतोयं ततः पुण्यं गाङ्गं पुण्यं तु सर्वतः।। तीर्थतोयं = साधुजुष्टजलम्।।

### ஸ்நானத்திற்குரிய ஜலங்கள்

*இனி ஸ்நானத்திற்குரிய ஜலங்கள் சொல்லப்படுகின்றன. அதில்,* **மனு:-** *நதிகள், தேவகாதங்கள், தடாகங்கள், ஸரஸ்ஸுகள், கர்த்தங்கள், ப்ரஸ்ரவணங்கள் இவைகளிலொன்றில் ப்ரதிதினமும் ஸ்நானம் செய்ய வேண்டும். மனுஷ்யர்களால் வெட்டப்படாத ஜலாதாரம் தேவகாதம். மனுஷ்யர்களால் வெட்டப்பட்ட ஜலாதாரம் தடாகம் ருஷிகளால் ஸேவிக்கப்பட்டது* **ஸரஸ்.** *வாய்க்கால் கர்த்தமெனப் படும். ப்ரஸ்ரவணம் என்பது மலையருவி. கர்த்தத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது.* **சௌனகராலும், காத்யாயனராலும்:-** *எண்ணுயிரம் விற்கிடைதூரம் எவைகளுக்கு ஓட்டமில்லையோ அவைகள் நதீசப்தத்தை அடைவதில்லை. அவை கர்த்தமெனச் சொல்லப் பட்டுள்ளன. இதனுல் பொருளால் நதீலக்ஷணமும் சொல்லப்பட்டதாயாகிறது.* **விஷ்ணுபுராணத்திலும்:-** *நதீ, நதம் தடாகம், தேவகாதம், மலையருவி இவைகளில் நித்யகர்மத்திற்காக ஸ்நானம் செய்ய வேண்டும். அல்லது கிணறுகளிலிருந்து எடுக்கப்பட்ட ஜலத்தினுல் கரையி லிருந்து ஸ்நானம் செய்யலாம்.* **மார்க்கண்டேயரும்:-** *முன்னோர்களான அரசர்களுடையவும், மஹான்களான*

ருஷிகளுடையவும், தேவர்களுடையவும் கிணறுகளிலும், தடாகங்களிலும் ஸ்நானம் செய்யலாம். எடுக்கப்பட்ட மலையருவி ஜலம், புண்யம். அதைவிட ஸரோஜலம் புண்யம். அதைவிட நதீஜலம் புண்யம். அதைவிட தீர்த்த ஜலம் புண்யம். எல்லாவற்றிலும் கங்கா ஜலம் புண்யம். தீர்த்த ஜலம் என்பதற்கு ஸாதுக்களால் (ருஷிகளால்) ஸேவிக்கப்பட்ட ஜலம் என்று பொருள்.

विष्णुः – उद्धृतात् पुण्यं भूमिष्ठमुदकं तस्मान्नादेयं तस्मादपि साधुपरिगृहीतं सर्वत एव गाङ्गम् इति ।। विवस्वानपि – एकतः सर्वतीर्थानि जाह्नव्येकैव चान्यतः । ब्रह्मलोकेशशिरसः पतिता या महीतले इति ।। मरीचिरपि – भूमिष्ठमुद्धृतं वाऽपि शीतमुष्णमथापि वा । गाङ्गं पयः नयत्याशु पापमामरणान्तिकम् इति ।। योगयाज्ञवल्क्यः – त्रिरात्रफलदा नद्यो याः काश्चिदसमुद्रगाः । समुद्रगास्तु पक्षस्य मासस्य सरितां पतिः इति ।।

**விஷ்ணு:**- எடுத்த ஜலத்தைவிடப் பூமியிலுள்ளது புண்யமானது. அதைவிட நதீ ஜலமும், அதைவிட ஸாதுக்களால் ஸேவிக்கப்பட்டதும், எல்லாவற்றிலும் கங்காஜலமும் புண்யமாம். **விவஸ்வானும்:**- ஸகல தீர்த்தங்களும் ஒரு பக்கத்தில், கங்கையொன்றே மற்றொரு பக்கத்தில். எந்தக் கங்கை ப்ரம்ஹலோகத்தினின்றும் ஈசனின் தலையினின்றும் பூமியில் வந்துள்ளதோ. **மரீசியும்:**- பூமியிலிருப்பதாயினும், எடுக்கப்பட்டதாயினும், சீதமாயினும், உஷ்ணமாயினும், கங்காஜலம் மரணம் வரையுள்ள பாபத்தை உடனே போக்குகிறது. **யோகயாக்ஞவல்க்யர்:**- ஸமுத்ர ஸங்கமமில்லாத நதிகள் எல்லாம் மூன்றுநாள் (க்ருச்ரானுஷ்டானம் செய்த) பலனைக் கொடுக்கும். ஸமுத்ர ஸங்கமமுள்ள நதிகள் ஒரு பக்ஷத்தின் பலத்தைக் கொடுப்பனவாம். ஸமுத்ரம் ஒருமாத பலனைக் கொடுப்பதாகும்.

भरद्वाजः – महानदीनदस्रोतः सरस्त्रिदशखातकाः । नालस्तटाकः कुण्डं च धारा कूपस्त्वमी दश ।। चान्द्रायणं त्रयः कृच्छ्रा गायत्र्या अयुतत्रयम् । आप्लावनं महानद्यां तुल्यमेतच्चतुष्टयम् । उद्भूत्वा भूधरेऽम्भोधिं प्रविशत्यम्बुसन्ततिः । या सा महानदी ज्ञेया सर्वपापप्रणाशिनी ।। उद्भूता पूर्वदिग्भागे शैले सलिलसन्ततिः । या प्रत्यक्सागरं याति सा नदस्त्विति कथ्यते ।। भूधरे भुवि वोद्भूता या मेघरससन्ततिः । नदीं विशति सा स्रोतः स्वयं वा यत्र लीयते । पर्वतस्य तटे वाऽग्रे वृत्ताकारं जलास्पदम् । अशोष्यं यत् सरस्तत् स्यात् प्रविशालं सुपङ्कजम् ।। भुव्यद्रौ वा तटस्पर्शमशोष्यं यज्जलाशयम् । विशालमविशालं वा देवखात इति स्मृतः ।। ग्रामार्थं वाऽथ सस्यार्थं नृभिस्सृष्टाऽम्बुपद्धतिः। या नद्याद्यम्बुधामभ्यस्सा नालाख्यमिति स्मृतम् ।। अर्धचन्द्राकृतिर्यस्य संस्थानस्य तु वारिणः । ग्रामे वनेऽपि वा शैले तत्तटाकमिति स्मृतम् ।। चतुरश्रं शिलाबद्धं ससोपान मधोजलम् । विशाल मविशालं वा तत्तत्कुण्डमिति स्मृतम् ।। गिरिरन्ध्राद्विनिर्गत्य या पतत्यम्बुसन्ततिः । अनाधारमधो भूमौ सा धारेत्यभिधीयते । पञ्चहस्तविशालं यत् खातं वृत्तमधोजलम् । दार्विष्टकादिघटितं यत्तत् कूप इति स्मृतः इति ।।

பரத்வாஜர்:- *மஹாநதீ, நதம், ஸ்ரோதஸ், ஸரஸ், தேவகாதம், நாளம், தடாகம், குண்டம், தாரை, கூபம் என்ற இவை பத்துள் ஜலாசயங்கள். சாந்த்ராயணம், மூன்று க்ருச்ரங்கள், முப்பதினாயிரம் காயத்ரீ ஜபம், மஹாநதியில் ஸ்நானம் என்ற இந்த நான்கும் ஸமமாகும். மலையில் உண்டாகி ஸமுத்ரத்தையடையும் ஜலப்ரவாஹம், ஸகல பாபங்களையும் அகற்றும் 'மஹாநதீ' என்றறியப்பட வேண்டும். கிழக்கிலுள்ள மலையிலுண்டாகி மேற்கு ஸமுத்ரத்தையடையும் ஜலப்ரவாஹம் 'நதம்' எனச் சொல்லப்படுகிறது.*

மலையிலாவது, பூமியிலாவது உண்டாகிய ஜலப்பெருக்கு நதியையடைவதும், அல்லது பூமியிலேயே எங்காவது மறைவதும் 'ஸ்ரோதஸ்' எனப்படும். மலையின் தாழ்வரையிலோ, உச்சியிலோ வட்டமாயும், வற்றுததாயும், விசாலமாயும், தாமரை உடையதுமான ஜலாசயம் 'ஸரஸ்' எனப்படும். பூமியிலாவது மலையிலாவது கரைகளுள்ளதும், வற்றுததுமான ஜலாசயம் விசாலமாயினும், சிறியதாயினும் 'தேவகாதம்' எனப் படும். க்ராமத்திற்காகவாவது, பயிர்களுக் காகவாவது, நதீ முதலிய ஜலாசயங்களினின்றும் மனிதர்களால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜலப்பெருக்கு 'நாளம்' எனப்படும். எந்த ஜலாசயத்தின் ஆதாரம் பாதியாயுள்ள சந்த்ரன் போலுள்ளதோ, அது க்ராமத்திலோ, வனத்திலோ, மலையிலோ இருப்பின் 'தடாகம்' எனப்படும். நான்கு மூலைகளுள்ளதும், கருங்கற்களால் கட்டப்பட்டதும், படிகளுடையதும், கீழே ஜலமுடையதும். விசாலமாகவோ, சிறியதாகவோ இருப்பதுமான ஜலாசயம் 'குண்டம்' எனப்படும். மலையின் சந்திலிருந்து வெளியாகி ஆதாரமில்லாமல் கீழ்ப்பூமியில் விழும் ஜலப்பெருக்கு 'தாரை' எனப்படுகிறது. ஐந்துமுழமகலமுள்ளதும், வட்டமானதும், அடியில் ஜலமுள்ளதும், வெட்டப்பட்டதும், கட்டை செங்கல் முதலியவைகளால் கட்டப்பட்டதுமான ஜலாசயம் 'கூபம்' (கிணறு) எனப்படும்.

व्यासः— न मेहेत जलद्रोण्यां स्नातुं च न नदीं तरेत् । नातिक्रमेद्वृथा सिन्धुं नानुष्ठातुं नदीं तरेत् इति ।। सिन्धुं नदीं अनाचम्य न लङ्घयेदित्यर्थः ।। मनुः – परकीयनिपानेषु न स्नायाद्धि कदाचन । निपान कर्तुः स्नात्वा तु दुष्कृतांशेन लिप्यते ।। यानशय्यासनान्यस्य कूपोद्यानगृहाणि च । अदत्तान्युपयुञ्जान एनसः स्यात्तुरीयभाक् ।। अस्य - परस्य । तुरीयभाक् - तुरीयांशभाक् ।। नद्याद्यलाभविषये स एव – अलाभे देवखातानां सरसां सरितां तथा । उद्धृत्य चतुरः पिण्डान्

पारक्ये स्नानमाचरेत्। इति ।। अनेनैवाभिप्रायेण शौनकोऽपि – वापी कूपतटाकेषु यदि स्नायात् कदाचन । उद्धृत्य मृत्तिकापिण्डान् दश पञ्चाथवा क्षिपेत् इति ।।

**வ்யாஸர்:-** ஓடத்திலிருந்து மலமூத்ர விஸர்ஜனம் செய்யக் கூடாது. ஸ்நானம் செய்வதற்காக நதியைத் தாண்டிச்செல்லக் கூடாது. ஆசமனம் செய்யாமல் நதியைத் தாண்டக் கூடாது. அனுஷ்டானத்திற்காக நதியைத் தாண்டிச் செல்லக் கூடாது. **மனு:-** பிறருடையதான ஜலாசயங்களில் ஒருகாலும் ஸ்நானம் செய்யக் கூடாது. செய்தால் ஜலாசயத்தைச் செய்தவனின் பாபத்தின் கால்பாகத்தோடு ஸம்பந்தப்படுகிறான். பிறனின் வாஹனம், படுக்கை, ஆஸனம், கிணறு, பூந்தோட்டம், வீடு இவைகளை அனுமதியின்றி உபயோகித்துக் கொள்ளுகின்றவன் (சொந்தக்காரனின்) பிறனின் பாபத்தின் நாலிலொரு பாகத்தை அடைவான். (தர்மத்திற்காக விடப்பட்டிருந்தால் தோஷமில்லை.) நதீ முதலியவை கிடைக்காத விஷயத்தில், **மனுவே:-** தேவகாதங்கள், ஸரஸ்ஸுகள், நதிகள் இவை கிடைக்காவிடில், பிறருடைய ஜலாசயத்தில், நான்கு மண் உருண்டைகளை எடுத்து வெளியில் போட்டு விட்டு ஸ்நானம் செய்யலாம். இதே அபிப்ராயத்துடன். **சௌனகரும்:-** வாபீ, கூபம், தடாகம் இவைகளில் எப்பொழுதாவது ஸ்நானம் செய்தால், அதிலிருந்து, பத்து அல்லது ஐந்து மண்ணுருண்டைகளை வெளியில் போடவேண்டும்.

जाबालिः – न पारक्ये जले स्नायात् न भुञ्जीत महानिशि । नार्द्रमेकं च वसनं परिदध्यात् कदाचन ।। पञ्च पिण्डान् समुद्धृत्य पारक्ये स्नानमाचरेत् इति ।। याज्ञवल्क्यः – पञ्चपिण्डाननुद्धृत्य न स्नायात् परवारिषु । स्नायान्नदीदेवखातह्रदप्रस्रवणेषु च । इति उदकप्रवाहाभिघातकृतः कूलमध्ययोः सजलो महानिम्नप्रदेशो ह्रदः ।।

नदीमहानदीस्रोतः कूलमध्य प्रदेशयोः । सर्वदा यो जलप्रायो ह्रदः स परिकीर्तितः इति भरद्वाजस्मरणात् ॥ योगयाज्ञवल्क्योऽपि – परकीयनिपानेषु यदि स्नायात् कदाचन । सप्त पिण्डांस्ततोद्धृत्य ततः स्नानं समाचरेत् इति ॥

ஜாபாலி:- *பிறருடைய ஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது. மஹாராத்ரியில் போஜனம் செய்யக் கூடாது. ஒரு வஸ்த்ரத்தை மட்டில் தரித்திருக்கக் கூடாது. பிறர் ஜலத்தில் ஸ்நானம் செய்தால் ஐந்த மண்ணுருண்டைகளைக் எடுத்து வெளியிற் போட்டு விட்டு ஸ்நானம் செய்ய வேண்டும்.* **யாக்ஞவல்க்யர்:-** *பிறர் ஜலாசயங்களில், ஐந்து மண்ணுருண்டைகளை எடுத்துப் போடாமல் ஸ்நானம் செய்யக் கூடாது. நதீ, தேவகாதம், ஹ்ரதம், ப்ரஸ்ரவணம் இவைகளில் மண்ணெடுத்துப் போடமலே ஸ்நானம் செய்யலாம். ஜலப்ரவாஹ வேகத்தால் செய்யப்பட்டு, நதியின் கரையிலோ, நடுவிலே அதிக ஆழமுள்ள ஸ்தலம் ஹ்ரதம் எனப்படும். 'நதீ, மஹாநதீ இவைகளின் ப்ரவாஹத்தின் கரையிலோ, நடுவிலோ எப்பொழுதும் ஜலமுள்ள ப்ரதேசம் ஹ்ரதம் எனப்படுகிறது' என்று பரத்வாஜர்சொல்லியிருக்கிறுர்,* **யோகயாக்ஞவல்க்யர்:-** *பிறருடைய ஜலாசயங்களில் ஒரு காலத்தில் ஸ்நானம் செய்தால் ஏழு கை மண்ணுருண்டைகளை அதிலிருந்து எடுத்து வெளியில் போட்டு விட்டு பிறகு அதில் ஸ்நானம் செய்யலாம்.*

शौनकः—निरुद्धासु न कुर्वीरन्नंशम्भाक्तत्र सेतुकृत् । तस्मात्परकृतान् सेतून् कूपांश्च परिवर्जयेत् ॥ उद्धृत्य वाऽपि त्रीन् पिण्डान् कुर्यादापत्सु नो सदा ॥ निरुद्धासु तु मृत्पिण्डान् कूपात्तु त्रीन् घटांस्तथा । अनुद्धृत्य तु यत्स्नानं परकीयजलाशये । वृथा भवति तत्स्नानं कर्तुः पापेन लिप्यते ॥ कूपतोयैरपि स्नायात् सर्वालाभे समुद्धृतैः ॥ स्नानं तु न घटैः कुर्यान्नासाच्छिद्र विवर्जितैः इति ॥ कूपात्त्रीन् घटानुद्धृत्य

अमृन्मय पात्रावर्जितैर्जलैः स्नायादित्यर्थः ।। तथा अखण्डादर्शे – शूर्पवायुर्नखाग्राम्बु स्नानवस्त्रं घटोदकम् । मार्जनीरेणुकेशाम्बु हन्ति पुण्यं पुरातनम्' इति ।। उत्सृष्टेषु सर्वार्थत्वात् अनुद्धरणेष्वपि न दोषः ।। यदाह व्यासः – अनुत्सृष्टे तु न स्नायात् तथैवासंस्कृतेष्वपि । आत्मीयेष्वपि न स्नायात् तथैवाल्पजलेषु तु इति ।। सर्वसत्वोद्देशेनाकृतमनुत्सृष्टम् । असंस्कृतं - अप्रतिष्ठितम् ।। अत्र विज्ञानेश्वरोऽपि – सर्वसत्वोद्देशेनात्यक्तेषु तटाकादिषु पञ्चपिण्डाननुद्धृत्य न स्नायात् । आत्मीयोत्सृष्टाभ्यनुज्ञातेषु तु पिण्डोद्धरणमन्तरेणापि स्नानमभ्यनुज्ञातम्' इति ।। अत्र स्वशक्त्यनुसारेण पिण्डसङ्ख्याव्यवस्था द्रष्टव्या ।।

**சௌனகர்:-** 'பிறனால் தேக்கப்பட்ட ஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது. அணையைச் செய்தவன் ஸ்நான பலத்தில் பாகத்தை அடைவான். ஆகையால் பிறரால் கட்டப்பட்ட அணைகளையும், பிறரின் கிணறுகளையும் தவிர்க்க வேண்டும். அல்லது மூன்று கை மண்ணுருண்டைகளை எடுத்துப் போட்டு விட்டு ஸ்நானம் செய்யலாம். இது ஆபத்காலத்தில் மட்டும், எப்பொழுது மல்ல. தேக்கப்பட்ட ஜலத்தில் மூன்று மண்ணுருண்டைகளையும், கிணற்றிலிருந்து 'மூன்றுகுடம் ஜலத்தையும் எடுத்து வெளியிடாமல் பிறரின் ஜலாதாரத்தில் ஸ்நானம் கூடாது. செய்தால் அந்த ஸ்நானம் வீணாகும். ஜலாசயத்திற்கு உடையவனின் பாபத்தோடு ஸம்பந்திப்பான். மற்ற ஜலங்கள் கிடைக்காவிடில் வெளியிலெடுக்கப்பட்ட கிணற்றின் ஜலத்தாலும் ஸ்நானம் செய்யலாம். மூக்கில்லாத குடங்களால் ஸ்நானம் செய்யக் கூடாது' என்றார். 'கிணற்றினின்றும் மூன்று குடம் ஜலமெடுத்து வெளியில் விட்டு மண்பாத்ரமல்லாத பாத்ரத்தால் விடப்பட்ட ஜலத்தால் ஸ்நானம் செய்ய வேண்டும்.' என்பது பொருள். அவ்விதம். **அகண்டாதர்சத்தில்:-** முறத்தின்காற்று, நகத்தின் நுனி

ஜலம், ஸ்நான வஸ்த்ரம், குடத்து ஜலம், துடைப்பத்தாலெழும்பும், புழுதி, மயிர்ஜலம் இவை (ஸ்பர்சிக்கப்பட்ட) பூர்வபுண்யத்தைப் போக்கும். எல்லோருக்குமென்று விடப்பட்ட ஜலாசயங்களில் மண்ணுருண்டைகளை எடுக்காவிடினும் தோஷமில்லை. அவை எல்லோருக்குமென்பர். வ்யாஸர்:- பிறர் பயன்படுத்த விடப்படாததில் ஸ்நானம் செய்யக் கூடாது. ஸம்ஸ்காரம் (ப்ரதிஷ்டை) இல்லாதவைகளிலும் ஸ்நானம் கூடாது. தன்னுடையதாயினும் ஸம்ஸ்கார மற்றதில் ஸ்நானம் கூடாது. ஸ்வல்பஜல முள்ளவை களிலும் ஸ்நானம் கூடாது. எல்லாப்ராணிகளையும் உத்தேசித்துச் செய்யப்படாதது, அனுத்ஸ்ருஷ்டம்' எனப்படும். 'அஸம்ஸ்க்ருத' என்பதற்கு ப்ரதிஷ்டை யில்லாதது என்று பொருள். இதில், விக்ஞானேச்வரரும்:- எல்லா ப்ராணிகளையும் உத்தேசித்து விடப்படாத தடாகம் முதலியவைகளில் ஐந்து மண்ணுருண்டைகளை எடுத்துப் போடாமல் ஸ்நானம் செய்யக் கூடாது. தன்னுடையதும் பிறருபயோகத்திற்கு விடப்பட்டு உத்தரவளிக்கப் பட்டதுமான தடாகாதிகளில் மண்ணுருண்டை எடுத்துப் போடுவதன்றியும் ஸ்நானம் செய்யலாமென்று சொல்லப்பட்டுள்ளது. இதில் தனது சக்திக்குத் தகுந்தபடி மண்ணுருண்டைகளின் கணக்கில் வ்யவஸ்தை அறியத்தக்கது.

वृद्धमनुः—अन्यायोपात्तवित्तस्य पतितस्य च वार्धुषेः । न स्नायादुदपानेषु स्नात्वा कृच्छ्रं समाचरेत् इति ।। शौनकः – अन्त्यजैः खानिताः कूपास्तटाका वाप्य एव वा । तेषु स्नात्वा च पीत्वा च प्राजापत्येन शुध्यति । अकामाद् ब्राह्मणः शुध्येद् ब्रह्मकूर्चोपवासतः इति ।। यत्तु शातातपवचनम् – अन्त्यैरपि कृते कूपे सेतौ वाप्यादिके तथा । तत्र स्नात्वा च पीत्वा च प्रायश्चित्तं न विद्यते इति, तदत्यन्तापद्विषयम् ।। चन्द्रिकायाम् – नद्यां तु विद्यमानायां न स्नायादन्यवारिषु । न स्नायादल्पतोये तु विद्यमाने बहूदके इति ।।

**வ்ருத்தமனு:-** அன்யாய மார்க்கத்தால் சேர்க்கப்பட்ட பணமுடையவன், பதிதன், வார்த்துஷி (வட்டியால் ஜீவிப்பவன்) இவரின் ஜலாசயங்களில் ஸ்நானம் செய்யக் கூடாது. செய்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். **சௌனகர்:-** சண்டாளர்களால் வெட்டுவிக்கப்பட்ட கிணறுகள், தடாகங்கள், வாபிகள் இவைகளில் ஸ்நானம் செய்தாலும் ஜலபானம் செய்தாலும் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் சுத்தனுகிறுன். அக்ஞானத்தால் செய்தால் ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்ய ப்ராசனம், உபவாஸம் இவைகளால் சுத்தனுவான். **சாதாதபர்:-** 'சண்டாளர்களால் செய்யப்பட்ட கிணறு, ஸேது (தேக்கம்), வாபி முதலியவைகளால் ஸ்நான பானங்கள் செய்தாலும் ப்ராயச் சித்தமில்லை' என்று சொல்லியுள்ள வசனமோவெனில் அதிக ஆபத்விஷயமாம். **சந்த்ரிகையில்:-** நதியிருந்தால் மற்ற ஜலங்களில் ஸ்நானம் செய்யக் கூடாது. அதிக ஜலமிருந்தால் ஸ்வல்பஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது.

शौनकोऽपि—प्रभूते विद्यमाने च उदके तु मनोहरे। नाल्पोदके द्विजः स्नायान्नदीं चोत्सृज्य कृत्रिमे इति ।। यत्तु आपस्तम्बेनोक्तम् – सशिरावमज्जनमप्सु वर्जयेत् इति तत्तटाकादिस्थावरविषयम्, अल्पजलविषयं, समुद्रविषयं च ।। तथा चन्द्रिकायाम् – स्रवन्नदीषु च स्नायात् प्रविश्यान्तः स्थितो द्विजः । तटाकादिषु तोयेषु प्रत्यक्षस्नानमाचरेत् इति ।। शङ्खोऽपि – नाल्पोदके निमज्जेन्न समुद्रोदकमवगाहेत इति । स्मृत्यन्तरे – गृहस्थस्तु स्रवन्तीषु निमज्ज्य स्नानमाचरेत् । अन्यत्रासिच्य हस्ताभ्यामितरेषां तु मज्जनम् ।। नाल्पाम्भसि शिरो मज्जेन्नावगाहेन्महोदधौ । क्रियास्नाने शिरो मज्जेदन्यत्रापि सरित्सु च इति। अन्यत्र - स्थावरोदके ।।

**சௌனகரும்:-** மனதிற்கு இனியதாயும் அதிகமாயுமுள்ள ஜலமிருக்கும் பொழுது,

ஸ்வல்பஜலத்தில் ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்யக் கூடாது. நதியிருந்தால் அதைவிட்டு, மனிதரால் செய்யப்பட்ட குளம் முதலியதில் முழுகக்கூடாது. 'ஜலத்தில் தலையுடன் ஸ்நானம் செய்யக் கூடாது' (தலையை முழுக்கக் கூடாது, கைகளினுல் இறைத்த ஜலத்தால் தலையை நனைக்க வேண்டும் என்பது பொருள்) என்ற ஆபஸ்தம்ப வசனமோவெனில் தடாகம் முதலிய ஸ்தாவரஜலத்தின் விஷயமும், ஸ்வல்பஜல விஷயமும், ஸமுத்ரஜல விஷயமுமாம். அவ்விதமே, சந்த்ரிகையில்:- ஓடும் நதிகளில் இறங்கி ஜலத்திலுள்ளிருந்து ஸ்நானம் செய்ய வேண்டும். தடாகம் முதலிய ஜலாசயங்களில் ப்ரத்யக்ஷ ஸ்நானம் செய்ய வேண்டும். (முழுகக் கூடாது) சங்கரும்:- ஸ்வல்ப ஜலத்தில் முழுகக் கூடாது, ஸமுத்ரத்தில் முழுகக் கூடாது. மற்றொருஸ்ம்ருதியில்:- க்ருஹஸ்தன் நதிகளில் தலையை முழுகி ஸ்நானம் செய்ய வேண்டும். மற்றவிடங்களில் கைகளால் இறைத்து ஸ்நானம் செய்ய வேண்டும். மற்றவர்களுக்கு முழுகுதல் விஹிதமாகும். ஸ்வல்ப ஜலத்தில் தலையை முழுக்கக் கூடாது. ஸமுத்ரத்தில் தலையை முழுக்கி ஸ்நானம் செய்யக் கூடாது. க்ரியா ஸ்நானத்தில் தலையை முழுக்கலாம். ஸ்தாவர ஜலாசயத்திலும், நதிகளிலும் தலையை முழுக்கலாம்.



## समुद्रस्नानम्

समुद्रस्नानं तु पर्वकाले विहितम्, महाभारते— अश्वत्थसागरौ सेव्यौ न स्प्रष्टव्यौ कदाचन। अश्वत्थं मन्दवारे तु सागरं पर्वणि स्पृशेत्। अन्यदा तु कुरुश्रेष्ठ देवयोनिरपांपतिः ।। कुशाग्रेणापि कौन्तेय न स्प्रष्टव्यो महोदधिः ।। आजन्मशतसाहस्रे यत्पापं कुरुते क्वचित् ।। मुच्यते सर्वपापेभ्यः स्नात्वैव लवणाम्भसि ।। गर्भिणी गृहिणी यस्य दूरयात्रां स वर्जयेत्। वपनं सागरस्नानं शववाहं च वर्जयेत् इति ।।

भरद्वाजः – क्षौरं च सागरस्नानं न कुर्याद्गर्भिणीपतिः । कृतवान् यदि चेत्तस्याः प्रजा न भवति ध्रुवम् ।। सौरारवारयोरब्धौ पर्वणोरुभयोरपि । सन्तानकामी न स्नायात् कुर्यात्तु ग्रहणे तयोः इति ।।

### ஸமுத்ரஸ்நானம்

ஸமுத்ரஸ்நானம் பர்வகாலத்தில் விதிக்கப் பட்டுள்ளது, **மஹாபாரதத்தில்:-** அச்வத்தவ்ருக்ஷம், ஸமுத்ரம் இவ்விருவரையும் ஸேவிக்க வேண்டுமே அல்லாது தொடக் கூடாது. அச்வத்தத்தை சனிக்கிழமையிலும், ஸமுத்ரத்தைப் பர்வகாலத்திலும் தொடலாம். ஓ கௌந்தேய ! மற்றக் காலத்தில் ஸமுத்ரத்தைக் குசத்தின் நுனியாலும் கூடத் தொடக் கூடாது. ஒரு முறை ஸமுத்ரத்தில் ஸ்நானம் செய்வானுகில், லக்ஷம் ஜன்மங்களில் செய்த பாபம் முழுவதினின்றும் விடுபடுகிருன். எவனின் பார்யை கர்ப்பிணியோ அவன், தூரதேசப்ரயாணத்தையும், வபனத்தையும், ஸமுத்ர ஸ்நானத்தையும் சவ வஹனத்தையும் வர்ஜிக்க வேண்டும். **பரத்வாஜர்:-** கர்ப்பிணியின் பதியாயுள்ளவன், க்ஷௌரம், ஸமுத்ர ஸ்நானம் இவைகளை செய்யக் கூடாது. செய்வானுகில் அவளுக்குக் குழந்தை தரித்திராது, நிச்சயம். பானுவாரம், அங்காரகவாரம் இவைகளில் பர்வங்கள் நேர்ந்தாலும் புத்ரனை விரும்பியவன் ஸ்நானம் செய்யக் கூடாது. க்ரஹணம் நேர்ந்தால் அவைகளில் செய்யலாம். இவ்விதம் சொல்லியது சுத்தமான பர்வங்களைப் பற்றியது. வித்தமான பர்வங்களிலோவெனில், **பரத்வாஜரே:-** சதுர்தசியால் வித்தமான பர்வத்தில் ஸமுத்ரத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது. அந்தச் சதுர்தசீ அங்காரக வாரத்தில் நேர்ந்தால், அந்தச் சதுர்தசியை அதிக்ரமித்த பர்வகாலத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். சதுர்தசியின் காலத்தை விட்டு, பர்வகாலத்திலேயே ஸமுத்ர ஸ்நானம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்பவன் கங்கா ஸ்நானத்தால் உண்டாகும் பலனையடைவான். **ஸங்க்ரஹத்திலும்:-** பௌம

வாரத்துடன் க்ருஷ்ண சதுர்தசியேது வோ அதில் பர்வ காலமே ஸ்நானத்திற்கு யோக்யமானது. அதிலேயே ஸ்நானம் செய்தால் முன் ஜன்மங்களில் ஸம்பாதித்துள்ள பாபங்களை உடனே போக்குவான். **பரத்வாஜர்:-** க்ருஷ்ணாங்காரக சதுர்தசியில் எவன் ஸமுத்ர ஸ்நானம் செய்கின்றானோ அவனது முன் ஜன்மங்கள் பலவற்றில் செய்யப்பட்ட எல்லாப் பாபங்களும் நசிக்கின்றன. இந்த வசனம் பர்வஸம்பந்தம் இல்லாத சதுர்தசியைப் பற்றியதாம்.

पुराणे—सेतौ कवेरकन्याया गङ्गायाश्चापि सङ्गमे । न वारदोषमीक्षेत पर्वसु स्नानमाचरेत् इति ।। जैमिनिः – सेतुर्नापेक्षते कालं नित्यं स्नानं प्रशस्यते । निषेधः कालभेदस्य सेतोरन्यत्र कर्हिचित् इति ।। पराशरः – अग्निचित् कपिला सत्री राजा भिक्षुर्महोदधिः । दृष्टमात्राः पुनन्त्येते तस्मात् पश्येत्तु नित्यशः इति ।। अत्रोदकान्तरेणैवाचमनं कार्यम् । न समुद्रोदकेन, 'अक्षाराभिराचामेत्' इति स्मरणात् ।। उक्तञ्च तैत्तिरीय श्रुतौ – तस्मात्समुद्रस्य न पिबन्ति इति । तर्पणादिकं तेनैव कार्यम् । निषेधाभावादिति चन्द्रिकायाम् ।।

**புராணத்தில்:-** ராமஸேதுவிலும், காவேரீ ஸங்கமத்திலும், கங்கா ஸங்கமத்திலும், வார தோஷத்தைப் பார்க்க வேண்டாம். பர்வங்களில் ஸ்நானம் செய்யலாம். **ஜைமினி:-** ஸேது காலத்தை அபேக்ஷிப்பதில்லை. ப்ரதிதினமும் ஸ்நானம் புகழப் படுகிறது. காலபேதத்திற்கு நிஷேதமென்பது ஸேதுவைத் தவிர்த்த மற்ற விடங்களைப் பற்றியது. **பராசரர்:-** அக்னி சயனம் செய்தவன், காராம்பசு, யாகத்தில் தீக்ஷிதன், அரசன், ஸன்யாஸீ, ஸமுத்ரம் இவர்கள் பார்ப்பதாலேயே (பார்ப்பவரை) சுத்தராக்குகின்றனர். ஆகையால் ப்ரதிதினமும் பார்க்க வேண்டும். ஸமுத்ர ஸ்நானத்தில் வேறு ஜலத்தாலேயே ஆசமனம் செய்ய வேண்டும்.

ஸமுத்ர ஜலத்தால் ஆசமனம் கூடாது. 'உப்பில்லாத ஜலத்தால் ஆசமனம் செய்ய வேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். **தைத்திரீய ச்ருதியிலும்** சொல்லப் பட்டுள்ளது :- 'ஆகையால் ஸமுத்ரத்தைப் பருகுவதில்லை' என்று. தர்ப்பணம் முதலியதை ஸமுத்ர ஜலத்தாலேயே செய்ய வேண்டும். நிஷேதம் இல்லாததால், என்று **சந்த்ரிகையில்** சொல்லப்பட்டுள்ளது.

योगयाज्ञवल्क्यः – नद्यामस्तमिते स्नानं वर्जयेत्तु सदा बुधः । नद्यां स्नात्वा नदीमन्यां न प्रशंसेत धर्मवित् इति । शौनकोऽपि – न नदीषु नदीं ब्रूयात् पर्वतेषु न पर्वतम् । नान्यत् प्रशंसेत् तत्रस्थस्तीर्थेष्वायतनेषु च इति ।। देवलः – एकां नदीं समासाद्य नान्यां स्नाने नदीं स्मरेत् । यदि स्मरेत्तस्य सम्यक्तस्य पुण्यं प्रणश्यति इति । व्यासः – कुरुक्षेत्रं गयां गङ्गां प्रभासं नैमिशं तथा । तीर्थान्येतानि सर्वाणि स्नानकाले स्मरेद्बुधः इति ।। सङ्ग्रहेऽपि – गङ्गागयाकुरुक्षेत्र-प्रयोगादधिसङ्गमान् । तीर्थान्येतानि संस्मृत्य ततो मज्जेज्जलाशये इति ।।

**யோகயாக்ஞவல்க்யர்:-** அறிந்தவன், எப்பொழுதும் ஸூர்யாஸ்தமயத்திற்குப் பிறகு நதியில் ஸ்நானத்தைத் தவிர்க்க வேண்டும். தர்மம் அறிந்தவன் நதியில் ஸ்நானம் செய்து விட்டு, (அங்கே) மற்றொரு நதியைப் புகழக் கூடாது. **சௌனகரும்:-** ஒரு நதியிலிருந்து மற்றொரு நதியைப் புகழக் கூடாது. ஒரு மலையிலிருந்து மற்றொரு மலையைப் புகழக் கூடாது. ஒரு தீர்த்தத்திலிருந்து மற்றொரு தீர்த்தத்தையும், ஒரு தேவாலயத்திலிருந்து மற்றொரு தேவாலயத்தையும் புகழக் கூடாது. **தேவலர்:-** ஒரு நதியை அடைந்து ஸ்நானம் செய்யும் பொழுது மற்றொரு நதியை ஸ்மரிக்கக் கூடாது. ஸ்மரித்தானாகில் அப்பொழுது அவனது புண்யம் நசிக்கின்றது. **வ்யாஸர்:-** குருக்ஷேத்ரம், கயை, கங்கை, ப்ரபாஸம், நைமிசம் இந்த தீர்த்தங்கள் எல்லாவற்றையும் அறிந்தவன் ஸ்நான காலத்தில் ஸ்மரிக்க வேண்டும். **ஸங்க்ரஹத்திலும்:-** கங்கை, கயை,

குருக்ஷேத்ரம், ப்ரயாகம், ஸமுத்ரஸங்கமம் இந்தத் தீர்த்தங்களை ஸ்மரித்துப் பிறகு ஜலாசயத்தில் முழுக வேண்டும்.

## वर्ज्योदकम्

आह व्यासः— नद्या यच्च परिभ्रष्टं नद्या यच्च विनिस्सृतम्। गतप्रत्यागतं यच्च तत्तोयं परिवर्जयेत् इति ॥ परिभ्रष्टं विच्छिन्नम् ॥ विनिः सृतं - अविच्छिन्नम् ॥ गर्गः – प्रत्यावृत्तेऽम्भसि स्नानं वर्जनीयं द्विजातिभिः इति ॥ बोधायनोऽपि – अधोवर्णोदके स्नानं वर्ज्यं नद्यां द्विजातिभिः। नद्यां रजकतीर्थं तु दशहस्तेन वर्जयेत्। स्नानं रजकतीर्थे तु भोजनं गणिकागृहे। पश्चिमोत्तरशायित्वं शक्रादपि हरेच्छ्रियम् इति ॥

### பரிஹரிக்கத்தகுந்த ஜலம்

*தவிர்க்கத் தகுந்த ஜலங்களைச் சொல்லுகிறார், வ்யாஸர்:- நதியினின்றும் வெளிவந்து தொடர்ந்துள்ளதும், ஓடித்திரும்பி வருவதுமான ஜலத்தை தவிர்க்க வேண்டும். கர்கர்:- திரும்பி வந்து கொண்டிருக்கும் ஜலத்தில் ஸ்நானத்தை த்விஜர்கள் (மூன்று வர்ணத்தார்) தவிர்க்க வேண்டும். போதாயனரும்:- கீழ்வர்ணத்தானின் ஜலத்தில் (துரையில்) த்விஜர்கள் ஸ்நானத்தை தவிர்க்க வேண்டும். நதியில் வண்ணான் துரையைப் பத்துமுழம் தூரம் வரையில் தவிர்க்க வேண்டும். வண்ணான் துரையில் ஸ்நானமும், வேச்யையின் க்ருஹத்தில் போஜனமும், மேற்கு வடக்கு திக்குகளில் தலையை வைத்துப்படுப்பதும், இந்த்ரனின் ஸம்பத்தையும் அபஹரிக்கும்.*

शाण्डिल्यः—ग्राहादिसेविते रूक्षे नीचावाससमीपगे । श्मशानपार्श्वगेऽज्ञाते न स्नायान्नोपरोधिते ॥ न स्नायात् सह शूद्रेण न स्त्रीभिर्न च नास्तिकैः । न पाषण्डैश्च बालैश्च न रोग्यशुचिभिर्नरैः ॥ योगयाज्ञवल्क्यः – अग्राह्यास्त्वधमा आपः नद्याः प्राथमवेगिकाः । प्रक्षोभिता वा केनापि याश्च तीर्थविनाकृताः इति ॥ कात्यायनः –याः

शोषमुपगच्छन्ति ग्रीष्मे कुसरितो भुवि। तासु प्रावृषि न स्नायात् अपूर्णे दशवासरे।। दशरात्रेण शुध्यन्ति भूमिष्ठं च नवोदकम् इति।।

சாண்டில்யர்:- முதலே முதலியது உள்ளதும், கடுமையுள்ளதும், சண்டாளாதிகளின் வாஸத்திற்குச் சமீபத்திலிருப்பதும், ச்மசானத்திற்குச் சமீபத்திலுள்ளதும், அறியப்படாததும், தடுக்கப் பட்டதுமான ஜலத்தில் ஸ்நானம் கூடாது. சூத்ரனுடனும், ஸ்த்ரீகளுடனும், நாஸ்திகர்களுடனும், பாஷண்டர்களுடனும், பாலர்களுடனும், ரோகிகளும், அசுத்தருமான மனிதருடனும் சேர்ந்து ஸ்நானம் செய்யக் கூடாது. யோகயாக்ஞவல்க்யர்:- நதியின் பெருக்கில் முதல் வேகத்திலுள்ள ஜலம் அதமமானதால் அதை க்ரஹிக்கக் கூடாது. எவனுலாவது கலக்கப்பட்டதையும் க்ரஹிக்கக் கூடாது. துரையில்லாத இடத்திலிருந்தும் க்ரஹிக்கக் கூடாது. காத்யாயனர்:- எந்தச் சிறிய நதிகள் கோடைகாலத்தில் ஜலமற்று வற்றுகின்றனவோ அவைகளில், மழைகாலத்தில் புதுஜலத்தில் பத்துநாட்கள் பூர்ணமாகாத வரையில் ஸ்நானம் செய்யக் கூடாது. அவை பத்து நாட்களுக்குப் பிறகு சுத்தமாகின்றன. பூமியில் (குளம் முதலியதில்) உள்ள புது ஜலமும் அவ்விதமே.

उष्णोदकं निषेधति शङ्खः – स्नातस्य वह्नितप्तेन तथैव परवारिणा। शरीरशुद्धिर्विज्ञेया न तु स्नानफलं लभेत् इति।। याज्ञवल्क्यः – वृथा तूष्णोदकस्नानं वृथा जप्यमवैदिकम्। वृथा त्वश्रोत्रिये दानं वृथा भुक्तमसाक्षिकम् इति।। यत्तूष्णोदकविधानम् – आप एव सदा पूताः तासां वह्निर्विशोधकः। तस्मात् सर्वेषु कालेषु उष्णाम्भः पावनं स्मृतम् इति, यदपि षट्त्रिंशन्मते – आपः स्वभावतो मेध्याः किं पुनर्वह्निसंयुताः। तेन सन्तः प्रशंसन्ति स्नानमुष्णेन वारिणा इति, यदपि स्मृत्यन्तरे – आदित्यकिरणैः पूतं पुनः पूतं तु वह्निना। स्नानं सन्तः प्रशंसन्ति तस्मादुष्णेन वारिणा इति, तदातुरस्नानविषयम्।।

உஷ்ணோதகத்தை நிஷேதிக்கின்றார். சங்கர்:- உஷ்ணோதகத்தாலும், பிறருக்குச் சொந்தமான ஜலத்தினாலும் ஸ்நானம் செய்தவனுக்குச் சரீர சுத்திமட்டிலுண்டு. அவன் ஸ்நான பலத்தை அடைய மாட்டான். யாக்ஞவல்க்யர்:- உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்வது வீண். வேதஸம்பந்தமில்லாத ஜபம் வீண், வேதத்தைக் கற்காதவனிடம் கொடுக்கும் தானம் வீண், ஸாக்ஷியில்லாத போஜனமும் வீணாகும். 'ஜலம் எப்பொழுதும் சுத்தம், அதற்கு அக்னி தூய்மை தரும். ஆகையால் எக்காலத்திலும் உஷ்ணோதகம் சுத்திகரமென்று சொல்லப் பட்டுள்ளது' என்று உஷ்ணோதகவிதியும், ஷட்த்ரிம்சன்மதத்தில் உள்ள 'ஜலம் இயற்கையிலேயே சுத்தம்; அக்னியுடன் சேர்ந்தால் அதிக சுத்தம்; ஆகையால் உஷ்ணோதக ஸ்நானத்தை ஸாதுக்கள் புகழ்கின்றனர்' என்ற வசனமும், மற்றொரு ஸ்ம்ருதியிலுள்ள 'ஸௌர்யகிரணங்களால் சுத்தமாயும், மறுபடி அக்னியால் சுத்தமாயுமுள்ளது உஷ்ணோதகம், ஆகையால் ஸாதுக்கள் உஷ்ணோதகத்தால் ஸ்நானத்தைப் புகழ்கின்றனர் என்ற வசனமும் வ்யாதியுள்ளவன் விஷயமாம்.

तथा च यमः— आदित्यस्य करैः पूतं पुनः पूतं च वह्निना। आम्नातमातुरस्नाने प्रशस्तं तु शृतोदकम् इति ।। यदा तु नद्यादिकं न लभ्यते, तदाऽनातुरस्याप्युष्णोदकस्नानमनिषिद्धमित्याह यमः— नित्यं नैमित्तिकं चैव क्रियाङ्गं मलकर्षणम् । तीर्थाभावे तु कर्तव्य मुष्णोदकपरोदकैः इति ।। यत्तु वृद्धमनुनोक्तम्– मृते जन्मनि सङ्क्रान्तौ श्राद्धे जन्मदिने तथा । अस्पृश्यस्पर्शने चैव न स्नायादुष्णवारिणा । सङ्क्रान्त्यां भानुवारे च सप्तम्यां राहुदर्शने । आरोग्यपुत्रवित्तार्थी न स्नाया दुष्णवारिणा ।। पौर्णमास्यां तथा दर्शे यः स्नायादुष्णवारिणा । स गोहत्याकृतं पापं प्राप्नोत्येव न संशयः इति, एतेन उक्तेषु मरणादिषु

तीर्थाभावेऽपि नोष्णोदकैः स्नायात्, अपि तु परकीयैरुद्धृतैः कूपोदकैर्वा स्नायादित्युक्तमित्यविरोध इति चन्द्रिकामाधवीययोः ॥

**யமன்:**- ஸூர்யகிரணங்களால் சுத்தமாயும், மறுபடி அக்னியால் சுத்தமாயுமுள்ளது உஷ்ணோதகம். ஆகையால் அந்த உஷ்ண ஜலம் வ்யாதியுள்ளவன் ஸ்நானத்தில் ச்லாக்யமாகியது எக்காலத்தில் நதி முதலியது கிடைக்க வில்லையோ அப்பொழுது வ்யாதி இல்லாதவனுக்கும் உஷ்ணோதக ஸ்நானம் நிஷித்தமல்ல என்கிறார். **யமன்:**- தீர்த்தம் இல்லாவிடில், நித்யம் நைமித்திகம், க்ரியாங்கம், மலாபகர்ஷணம் என்ற ஸ்நானங்களை உஷ்ணோத கத்தாலும், பிறருடைய ஜலத்தாலும் செய்யலாம்.

**வ்ருத்தமனு:**- "இறப்பு, பிறப்பு, ஸங்க்ரமணம், ச்ராத்தம், ஜன்மதினம், தொடக் கூடாதவரின் ஸ்பர்சம் இந்த நிமித்தங்களுக்கான ஸ்நானத்தை உஷ்ணோதகத்தால் செய்யக் கூடாது. ஸங்க்ரமணம், பானுவாரம், ஸப்தமீ, க்ரஹணம் இவைகளில் ஆரோக்யம், புத்ரன், தனம் இவைகளை விரும்புகிறவன் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்யக் கூடாது. எவன் பௌர்ணமாஸியிலும், அமையிலும் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்கின்றானோ, அவன், கோவதத்தால் உண்டாகும் பாபத்தை அடைகிறான், ஸம்சயமில்லை" என்றார். 'இதனால், சொல்லிய மரணம் முதலியவைகளில் தீர்த்தம் இல்லாவிடினும் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் கூடாது. ஆனால், பிறருடைய ஜலங்களினாலாவது, கிணற்றிலிருந்து வெளியில் எடுக்கப்பட்ட ஜலங்களினாலாவது ஸ்நானம் செய்ய வேண்டும் என்று சொல்லியதாகிறது என்பதால் விரோதமில்லை' என்று, சந்த்ரிகையிலும் மாதவீயத்திலும் சொல்லப்பட்டுள்ளது.

उष्णोदकस्नाने विशेषमाह व्यासः – शीतास्वप्सु निषिच्योष्णा मन्त्रसम्भारसंभृताः । गेहेऽपि शस्यते स्नानं तद्धीनफलं बहिः इति ॥ सम्भाराः – मृदादयः ॥ बहिः - तटाकादौ ॥ विवस्वान् –

मन्त्रसम्भारसंयुक्त मुपस्पर्शन मुच्यते । स्नानेऽवगाहने चैव प्लवनं विधिवर्जितम् इति ।। स्मृत्यर्थसारे – सर्वदा नित्यकर्मार्थं स्नायादेव कथञ्चन । विना मृत्तिकया वाऽपि सकृदुष्णेन वाऽम्बुना इति ।। गौतमः – शिवलिङ्गसमीपेतु यत्तोयं पुरतः स्थितम् । शिवगङ्गेति विज्ञेया तत्र स्नात्वा शि(दि)वं व्रजेत् ।। जलं शुद्धमशुद्धं वा विष्णुवास्तुसमीपतः । विष्णुगङ्गासमं तोयं महापातकनाशनम् इति ।।

உஷ்ணோதக ஸ்நானத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், **வ்யாஸர்:**- குளிர்ந்த ஜலத்தில் உஷ்ண ஜலத்தைச் சேர்த்து மந்த்ரங்களுடனும், ம்ருத்திகை முதலியதுடன் சேர்ந்த அந்த ஜலத்தினால் செய்யும் ஸ்நானம் வீட்டிலானாலும் புகழப்படுகிறது. மந்த்ரங்களும் ஸம்பாரங்களும் இல்லாமல் வெளியில் தடாகம் முதலியதில் செய்தாலும் அது பலனற்றது. **விவஸ்வான்:**- மந்த்ரங்களுடனும், ஸம்பாரத்துடனும் கூடியதே ஸ்நானம் எனப்படுகிறது. அவையில்லாத ஸ்நானமும் அவகாஹனமும் மிதப்பது போலாகும். **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:**- எப்பொழுதும், நித்ய கர்மத்திற்காக எவ்விதமாயாவது ஸ்நானம் செய்ய வேண்டும். ம்ருத்திகையில்லாமலாவது உஷ்ணோதகத்திலாவது ஒருமுறை ஸ்நானம் செய்ய வேண்டும். **கௌதமர்:**- சிவலிங்கத்தின் ஸமீபத்தில் எதிரில் எந்த ஜலமிருக்கின்றதோ, அது சிவகங்கை என்று அறியத்தக்கது. அதில் ஸ்நானம் செய்தால் சிவனை அடைவான். விஷ்ணுவின் ஆலயத்திற்குச் சமீபத்திலுள்ள ஜலம் சுத்தமாயினும், அசுத்தமாயினும், அது விஷ்ணு கங்கைக்குச் சமமானதும், மஹா பாபங்களை அகற்றுவதாயுமாகும்.

—★—

## ।। अथ मृदाद्याहरणम् ।।

चतुर्थे च तथा भागे स्नानार्थं मृदमाहरेत् । तिलपुष्पकुशादीनि स्नानं चाकृत्रिमे जले इति ।। याज्ञवल्क्यः – मृत्तिकां गोमयं दर्भान् पुष्पाणि सुरभीणि च । आहरेत् स्नानकाले तु स्नानार्थं प्रयतः शुचिः इति । शातातपः – शुचिदेशात्तु सङ्ग्राह्या शर्कराश्मविवर्जिता । रक्ता गौरा तथा श्वेता मृत्तिका त्रिविधा स्मृता ।। वल्मीकाखूत्करा-लिप्ताज्जलाच्च पथि वृक्षयोः। कृतशौ चावशिष्टाच्चसप्त मृत्तिकाः ।। मृत्तिकां गोमयं चापि न निशायां समाहरेत् । न गोमूत्रं प्रदोषे तु गृह्णीयाद्बुद्धिमान्नरः ।। न प्रातर्मृत्तिकास्नानं न च भौमार्कवारयोः । मध्यन्दिने तु कर्तव्यं नातिमध्यन्दिने रवौ इति ।।

### ம்ருத்திகை முதலியதைக் கொண்டு வருதல்

*தக்ஷர்:- எட்டாய்ப் பிரிக்கப்பட்ட பகலின் நான்காவது பாகத்தில், ஸ்நானத்திற்கு ம்ருத்திகை, எள், புஷ்பம், குசம் முதலியதைக் கொண்டு வரவேண்டும். மனிதரால் கொண்டு வரப்படாத ஜலத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். **யாக்ஞவல்க்யர்:-** ஸ்நானத்திற்காக ம்ருத்திகை, கோமயம், தர்ப்பங்கள், வாஸனையுள்ள புஷ்பங்கள் இவைகளை ஸ்நான காலத்தில் சுத்தனாய்க் கொண்டு வரவேண்டும். **சாதாதபர்:-** சுக்கான், கல் இவையில்லாத மண்ணை சுத்தமான ப்ரதேசத்திலிருந்து க்ரஹிக்க வேண்டும். சிவப்பு, மஞ்சள், வெள்ளை என்ற மூன்று விதமுள்ளது ம்ருத்திகை. புற்று, எலி வளை, பூசப்பட்ட இடம், ஜலம், வழி, வ்ருக்ஷம், சௌசம் செய்து மீதியுள்ளது என்ற ஏழு இடங்களிலிருந்து ம்ருத்திகையை க்ரஹிக்கக் கூடாது. ம்ருத்திகையையும், கோமயத்தையும், ராத்ரியில் கொண்டு வரக் கூடாது. புத்தியுள்ள மனிதன் கோமூத்ரத்தை ப்ரதோஷத்தில் க்ரஹிக்கக் கூடாது. காலையில் ம்ருத்திகா ஸ்நானத்தைச் செய்யக் கூடாது. மங்களவாரம், பானுவாரம் இவைகளிலும் கூடாது.*

மத்யந்தினத்தில் செய்ய வேண்டும். மத்யந்தினத்திற்குப் பிறகும் செய்யக் கூடாது.

व्यासः—ततो मध्याह्नसमये स्नानार्थं मृदमाहरेत्। पुष्पाक्षतान् कुशतिलान् गोमयं गन्धमेव च इति ॥ गृह्यपरिशिष्टे – शुद्धदेशे खनित्रेण भुवं गायत्र्या (स्त्रेण) खात्वा उपरिमृदं चतुरङ्गुलामुदस्याधस्तान्मृदं तथा खात्वा गायत्र्याऽऽदाय मृदमुपात्तां शुचौ तीरे निधाय गायत्र्या प्रोक्षेत् इति । योगयाज्ञवल्क्यः – गत्वोदकान्तं विधिवत् स्थापयेत् तत्पृथक् क्षितौ । त्रिधा कुर्यान्मृदं तां तु गोमयं च विचक्षणः । अधमोत्तममध्यानामङ्गानां मृदसङ्करः इति ॥ शौनकः – प्रयतो मृदमा२दाय दूर्वापामार्गगोमयम्। गत्वोदकान्तं विधिवत् स्थापयेत्तत् पृथक् क्षितौ इति ॥ माधवीये – दशाहीनेन वस्त्रेण स्नायात् कौपीनकादृते। नान्यदीयेन नार्द्रेण न सूच्या ग्रथितेन च ॥ जलं देवगृहं चैव शयनं च द्विजालयम्। निर्णिक्तपादः प्रविशेन्नानिर्णिक्तः कथंचन इति ॥

**வ்யாஸர்:-** பிறகு மத்யாஹ்ன காலத்தில் ஸ்நானத்திற்காக, ம்ருத்திகை, புஷ்பம், அக்ஷதை, குசம், திலம், கோமயம், கந்தம் இவைகளைக் கொண்டு வரவேண்டும். **க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:-** சுத்தமான ஸ்தலத்தில் மண் வெட்டியால், காயத்ரீ மந்த்ரத்தால் பூமியைப் பறித்து, மேலுள்ள மண்ணை நாலங்குல அளவு தள்ளி, அடியிலுள்ள மண்ணை அப்படியே பறித்து, காயத்ரியால் எடுத்து, எடுத்து மண்ணைச் சுத்தமான ஜலக்கரையில் வைத்து, காயத்ரியால் ப்ரோக்ஷிக்கவும்.

**யோகயாக்ஞவல்க்யர்:-** ஜலத்தின் சமீபத்திற்குச் சென்று, அதைத் தனியாய்ப் பூமியில் வைக்கவும். அந்த மண்ணையும், கோமயத்தையும் மூன்று பாகமாய்ப் பிரிக்க வேண்டும். தாழ்ந்த அங்கம், மத்யமமான அங்கம், உத்தமமான அங்கம் இவைகளுக்காக மண்ணைச்

சேர்க்காமல் வைக்க வேண்டும். சௌனகர்:- சுத்தனுய் ம்ருத்திகை, அறுகு, நாயுருவி, கோமயம் இவைகளை எடுத்து ஜலஸமீபத்திற்சென்று, அவைகளை விதிப்படி பூமியில் வைக்கவும். மாதவீயத்தில்:- தலைப்பில்லாத வஸ்த்ரத்துடனும், கௌபீனமில்லாமலும், பிறரின் வஸ்த்ரத்துடனும், ஈர வஸ்த்ரத்துடனும், ஊசியால் தைக்கப்பட்ட வஸ்த்ரத்துடனும் ஸ்நானம் செய்யக் கூடாது. ஜலம், தேவாலயம், படுக்கை, ப்ராம்ஹணக்ருஹம் இவைகளில் கால்களை அலம்பியே ப்ரவேசிக்க வேண்டும். எக்காரணத்தாலும், கால்களை அலம்பாமல் ப்ரவேசிக்கக் கூடாது.

वसिष्ठः – मृदैकया शिरः क्षाल्य द्वाभ्यां नाभेस्तथोपरि । अधश्चतसृभिः क्षाल्यः षड्भिः पादौ तथैव च ।। प्रक्षाल्य सर्वकायं तु द्विराचामेद्यथाविधि इति ।। व्यासः – षड्भिः पादौ चतुर्भिश्च जङ्घे नाभिं कटिं त्रिभिः । मृदैकया शिरः क्षाल्य ततः कुर्यात् प्रमार्जनम् ।। मृत्तिका च समादिष्टा त्वार्द्रामलकमात्रतः । गोमयस्य प्रमाणं तत्तेनाङ्गं लेपयेत्ततः ।। प्रक्षाल्याचम्य विधिवत्ततः स्नायात् समाहितः इति ।। दक्षः – मृद्गोमयादिभिर्देहो मलदिग्धो विशुध्यति । स्नानकाले तथा विप्रः स्निग्धं लेपं विवर्जयेत् । प्रक्षाल्य यज्ञसूत्रं तु मृद्भिरद्भिः शनैः शनैः। आपादमस्तकं देहं तथैव क्षालयेद्बुधः इति ।।

வஸிஷ்டர்:- ஒரு மண்ணால் தலையையும், இரண்டு மண்களால் நாபிக்கு மேலும், நான்கு மண்களால் நாபிக்குக் கீழும், ஆறு மண்களால் பாதங்களையும் அலம்பி, தேஹம் முழுவதையும் அலம்பி, விதிப்படி இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். வ்யாஸர்:- ஆறு மண்களால் கால்களையும், நான்கு மண்களால் முழங்கால்களையும், நாபி, இடுப்பு இவைகளை மூன்று மண்களாலும், ஒரு மண்ணினால் சிரஸ்ஸையும் அலம்பி, பிறகு ஜலத்தால் அலம்ப வேண்டும். மண்ணின் அளவு ஈர நெல்லிக்கனியளவு என்று சொல்லப்பட்டுள்ளது.

கோமயத்திற்கும் அதே ப்ரமாணம். பிறகு கோமயத்தால் தேஹத்தைப் பூசவேண்டும். பிறகு அலம்பி, ஆசமனம் செய்து விதிப்படி கவனமுள்ளவனாய் ஸ்நானம் செய்ய வேண்டும். தக்ஷர்:- அழுக்கால் பூசப்பட்ட தேஹம், மண் கோமயம் முதலியவைகளால் சுத்தமாகிறது. ப்ராம்ஹணன் ஸ்நான காலத்தில் பசையுள்ள பூச்சை வர்ஜிக்க வேண்டும். யக்ஞோப வீதத்தை மண்ணாலும் ஜலத்தாலும் மிக மெதுவாய் அலம்ப வேண்டும். கால் முதல் தலை வரையிலுள்ள தேஹத்தை அவ்விதமே அலம்ப வேண்டும்.

कायक्षालनानन्तरकृत्यमाह शौनकः – गायत्र्याऽवदायाभ्युक्ष्यातोदेवा इति मृदमभिमन्त्रयेत्। ततो यत इन्द्र स्वस्तिदाविशस्पतिः विरक्षो विमृध इदं सुमेजनितरिति प्रतिमन्त्रं प्रतिदिशं क्षिपेत् पूर्वादिक्रमेण। ततः सम्मार्जनं कुर्यान्मृदा पूर्वं तु मन्त्रवित्।। अश्वक्रान्त इत्यादयो मृद्ग्रहण मन्त्रा यजुर्वेदप्रसिद्धाः। पुनश्च गोमयेनैवमग्रमग्रमिति ब्रुवन्।। अग्रमग्रं चरन्तीनामोषधीनां वनेवने। तासामृषभपत्नीनां सुरभीणां शरीरतः।। उत्पन्नं लोकसौख्यार्थं पवित्रं कायशोधनम्। त्वं मे रोगांश्च शोकांश्च पापानि नुद गोमय इति गोमयमन्त्रः।। काण्डात्काण्डादिति-द्वाभ्या मङ्ग मङ्गमुपस्पृशेत्। दूर्वयेति शेषः। अपपापमपकिल्बिषमप-कृत्यामपोरवः। अपामार्ग त्वमस्माकमपदुष्टं भयन्नुद स्वाहेत्यङ्ग-मपामार्गेणोपस्पृशेत्।। अथ हिरण्यशृङ्ग मापोदेवीरित्यप उपस्थाय सुमित्रा न आप इति अप उपस्पृश्य दुर्मित्रा इति बहिः क्षिपेत्।। तत इन्द्रः शुद्ध इत्यृचाऽपः प्रविश्य मनसा जपेत्।। तत्र गायेत सामानि अपि वा व्याहृतीर्जपेत् इति।।

தேஹத்தை அலம்பிய பிறகு கார்யத்தைச் சொல்லுகிறார். சௌனகர்:- காயத்ரியால் மண்ணை எடுத்து, ப்ரோக்ஷித்து, 'அதோ தேவா:' என்று அபிமந்த்ரித்து, பிறகு 'யதஇந்த்ர, ஸ்வஸ்திதா:, விரக்ஷ:, இதம் ஸுமே' என்ற

நான்கு மந்த்ரங்களால் ஒவ்வொரு மந்த்ரத்தால் ஒவ்வொரு திக்கிலும் கிழக்கு முதலாகப் போட வேண்டும். மந்த்ர மறிந்துள்ளவன் முதலில் ஒரு ம்ருத்திகையால் சுத்தி செய்து கொள்ள வேண்டும். 'அச்வக்ராந்தே' முதலிய மந்த்ரங்கள் யஜுர் வேதத்தில் ப்ரஸித்தங்கள். மறுபடி கோமயத்தால் 'அக்ரமக்ரம்' என்ற மந்த்ரத்தால் சுத்தி செய்து கொள்ளவும். 'அக்ரமக்ரம் + கோமய' என்பது கோமயமந்த்ரம். 'காண்டாத் காண்டாத்' என்ற இரண்டு மந்த்ரங்களால் அறுகினுல் ஒவ்வொரு அங்கத்தையும் தொட வேண்டும். 'அபபாபம் + நுதஸ்வாஹா' என்று நாயுருவியினுல் அங்கங்களைத் தொடவேண்டும். பிறகு ஹிரண்யச்ருங்கம், ஆபோதேவீ:' இவைகளால் ஜலோபஸ்தானம் செய்து, 'ஸுமித்ரா:' என்று ஜலத்தைத் தொட்டு, 'துர்மித்ரா:' என்று வெளியில் ஜலத்தை எறியவேண்டும். பிறகு 'இந்த்ரச்சுத்த:' என்ற ருக்கினுல் ஜலத்திலிறங்கி மனதால் ஜபிக்க வேண்டும். அங்கு ஸாமங்களைக் கானம் செய்ய வேண்டும். அல்லது வ்யாஹ்ருதிகளை ஜபிக்க வேண்டும்.

वसिष्ठः—ये ते शतमितिद्वाभ्यां तीर्थान्यावाहयेद्बुधः । कुरुक्षेत्रं गयां गङ्गां प्रभासं नैमिशं तथा ॥ देवांश्च वरदान् सर्वान् सर्वानप्सुषदस्तथा इति ॥ शङ्खः – प्रपद्ये वरुणं देव मम्भसां पतिमीश्वरम् । याचितं देहि मे तीर्थं सर्वपापापनुत्तये ॥ तीर्थमावाहयिष्यामि सर्वाघनिषूदनम् । सान्निध्यमस्मिंश्चित्तोये क्रियतां मदनुग्रहात् । रुद्रान् प्रपद्ये वरदान् सर्वानप्सुषदस्तथा ॥ अपः पुण्याः पवित्राश्च प्रपद्ये वरुणं तथा ॥ शमयन्त्वाशु मे पापं रक्षन्तु च सदैव माम् इति ॥ वसिष्ठः – आपो हिष्ठेदमापश्च द्रुपदादिव इत्यपि । तथा हिरण्यवर्णाभिः पावमानीभिरन्ततः । ततोऽर्कमीक्ष्य सोङ्कारं निमज्ज्यान्तर्जले बुधः । प्राणायामांश्च कुर्वीत गायत्रीं चाघमर्षणम् । प्रपद्यान्मूर्ध्नि च तथा महाव्याहृतिभिर्जलम् इति ॥

வஸிஷ்டர்:- 'யேதேசதம்' என்ற இரண்டு மந்த்ரங்களால் தீர்த்தங்களை ஆவாஹனம் செய்ய வேண்டும். குருக்ஷேத்ரம், கயை, கங்கை, ப்ரபாஸம், நைமிசம், இவைகளையும், வரத்தையளிக்கும் ஸகல தேவர்களையும், ஜலத்திலுள்ள எல்லோரையும் ஆவாஹனம் செய்ய வேண்டும். சங்கர்:- 'ப்ரபத்யே + ஸ்தைவமாம்' என்பவை மந்த்ரங்கள், இவைகளின் பொருள் -'ஜலாதிபதியான வருணைச் சரணடைகிறேன். பாபங்களையெல்லாம் போக்குவதற்காகத் தீர்த்தத்தைக் கொடுப்பீராக. தீர்த்தத்தை ஆவாஹனம் செய்கிறேன். இந்த ஜலத்தில் என்னை அருளவேண்டி ஸான்னித்யம் செய்ய வேண்டும். ருத்ரர்கள், ஜலத்திலிருப்பவர், ஜலங்கள், வருணன் இவர்களைச் சரணடைகிறேன். அவர்கள் உடனே என் பாபத்தைத் தணிக்க வேண்டும். எப்பொழுதுமே என்னைக் காக்க வேண்டும்.' என்பது.

வஸிஷ்டர்:- 'ஆபோஹிஷ்டா, இதமாப:, த்ருபதாதிவ, ஹிரண்யவர்ண:, பாவமானிகள்' இவைகளால் மார்ஜனம் செய்து, ஸூர்யனைப் பார்த்து, ஓங்காரத்துடன் ஜலத்தில் மூழ்கி, ப்ராண யாமங்கள் செய்து, காயத்ரீ, அகமர்ஷணம் இவைகளை ஜபித்து, மஹாவ்யாஹ்ருதிகளால் தலையில் ஜலத்தை விடவேண்டும்.

सङ्ग्रहे—सङ्कल्प्य सहस्रपरमा देवीति दूर्वां शिरसि निधाय 'अश्वक्रान्ते रथक्रान्त' इति मृदं गृहीत्वा 'उद्धृताऽसि वराहेणेति हस्तस्थां मृदमभिमन्त्र्य 'मृत्तिके हन मे पापमित्यादिना 'त्वयि सर्वं प्रतिष्ठित'मित्यन्तेन मृत्तिकामङ्गेष्वालिप्य 'गन्धद्वारामिति गोमयेनाङ्गमालिप्य प्रक्षाल्य सलिलमनुप्रविश्य तदधिष्ठातारं वरुणं तीर्थं याचेत 'हिरण्यशृङ्ग'मिति द्वाभ्यां ततः 'सुमित्रा न आप औषधयः सन्त्विति उदकाञ्जलिं शिरसि निधाय 'दुर्मित्रास्तस्मा' इति उदकाञ्जलिं नैर्ऋत्यां दिशि निरस्य जलस्थ एव नमोऽग्नयेऽप्सुमत इति

तीर्थं नमस्कृत्य उपस्थाय यदपां क्रूरमित्यमेध्यांशं दक्षिणतो निरस्य 'अत्याशना' दिति द्वाभ्यां पाणिना प्रदक्षिणमुदकमावर्त्य 'इमं मे गङ्ग' इति गङ्गाद्या दश नदीः स्वस्नानजल आवाहयेत्। अथ जले पिहित श्रोत्रदृङ्नासिकामुखो निमज्य ऋतञ्च सत्यञ्चेत्यृचमघमर्षण सूक्तं च प्राणायामेन त्रिर्जपेत्॥ अस्य सूक्तस्य माधुच्छन्दसाघर्मण ऋषिः। अनुष्टुप्छन्दः। भाववृत्तः परमात्मा देवता। भावस्य सत्तामात्रस्य ब्रह्मणो वृत्तं जगत्सृष्टिः सूक्तस्य प्रतिपाद्यम्। तत उत्तराभिस्तिसृभिः 'यत्पृथिव्या' मित्यादिभिः स्नात्वा 'आर्द्रं ज्वलती' त्यप आचम्य 'अकार्यकार्यवकीर्णीति पुनःस्नात्वा रहस्यकृतपापक्षयाय; 'रजोभूमि' रिति पुनःस्नात्वा 'आक्रान्थ्समुद्र' इति जपेत्॥ एष स्नानविधिः प्रोक्तः सर्वाघौघनिषूदनः इति॥

*ஸங்க்ரஹத்தில்:- ஸங்கல்ப்பித்து, 'ஸஹஸ்ரபரமா' என்று அறுகைத் தலையில் வைத்து, 'அச்வக்ராந்தே' என்று மண்ணை எடுத்து, 'உத்த்ருதாஸி' என்று கையிலுள்ள மண்ணை அபிமந்த்ரித்து, 'ம்ருத்திகேஹந + ப்ரதிஷ்டிதம்' என்று மண்ணைத் தேஹத்தில் பூசி, 'கந்தத்வாராம்' என்பதால் கோமயத்தால் தேஹத்தைப் பூசி, அலம்பி, ஜலத்திலிறங்கி, வருணனை 'ஹிரண்ய ச்ருங்கம்' என்ற இரண்டு மந்த்ரங்களால் தீர்த்தத்தை யாசிக்க வேண்டும். பிறகு 'ஸுமித்ராந:' என்பதால் ஜலாஞ்ஜலியைச் சிரஸில் விட்டு, 'துர்மித்ரா:' என்பதால் ஜலாஞ்சலியை நிர்ருதி திக்கில் எறிந்து, ஜலத்திலிருந்தே 'நமோக்னயே' என்பதால் தீர்த்தத்தை நமஸ்கரித்து, உபஸ்தானம் செய்து, 'யதபாம் க்ரூரம்' என்பதால் ஜலத்தின் அசுத்தாம் சத்தைத் தெற்கில் தள்ளி, 'அத்யாசநாத்' என்ற இரண்டு மந்த்ரங்களால் கையினால் ப்ரதக்ஷிணமாய் ஜலத்தைச் சுற்றி, 'இமம்மேகங்கே' என்பதால் கங்கை முதலிய பத்து நதிகளைத் தன் ஸ்நான ஜலத்தில் ஆவாஹனம் செய்ய வேண்டும். பிறகு காது, கண், மூக்கு, முகம் இவைகளை*

மூடிக்கொண்டு ஜலத்தில் மூழ்கி, 'ருதஞ்ச ஸத்யஞ்ச' என்ற ருக்கையும், அகமர்ஷண ஸூக்தத்தையும், ப்ராணாயாமத்துடன் மூன்று முறை ஜபிக்க வேண்டும். இந்த ஸூக்தத்திற்கு மாதுச்சந்தஸாகமர்ஷணர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், பாவவ்ருத்த: பரமாத்மா தேவதை, ஸத்தா மாத்ரமான ப்ரம்ஹத்தின் ஜகத்ஸ்ருஷ்டி இந்த ஸூக்தத்திற்கு ப்ரதிபாத்யமாம். பிறகு 'யத்ப்ருதிவ்யாம்' என்பது முதலான மூன்று ருக்குகளால் முழுகி, 'ஆர்த்ரம்+ஜுஹோமி ஸ்வாஹா' என்று ஜலத்தைப் பருகி, 'அகார்யகார்யவ +முச்யதே' என்று மறுபடி முழுகி, ரஹஸ்யக்ருத பாபக்ஷயத்திற்காக 'ரஜோபூமி + தீரா:' என்று மறுபடி முழுகி, 'ஆக்ரான் + இந்து:' என்று ஜபிக்க வேண்டும். இந்த ஸ்நானவிதி ஸகல பாபங்களையும் அகற்றுவதாகும் என்று சொல்லப்பட்டுள்ளது.

व्यासः—'अङ्गुष्ठाङ्गुलिभिश्चैव श्रोत्रदृङ्नासिकामुखम् । पीड्य मग्नः प्रतिस्रोतस्त्रिर्जपेदघमर्षणम् ।। द्रुपदानामगायत्री वेदे वाजसनेयके । सकृदन्तर्जले जप्त्वा ब्रह्महत्यां व्यपोहति इति ।। योगयाज्ञवल्क्योऽपि – हत्वा तु लोकानपि वा त्रिः पठेदघमर्षणम् । यथाऽश्वमेधावभृथ एवन्तन्मनुरब्रवीत् ।। अघमर्षण सूक्तस्य ऋषिरेकोऽघमर्षणः । छन्दोऽनुष्टुप्तथा देवो भाववृत्तस्तु कीर्तितः ।। ऋतश्चेति त्र्यृचस्यर्षिं मनस्येव विचिन्तयेत् । द्रुपदां नाम गायत्रीं यजुर्वेदप्रतिष्ठिताम् । अन्तर्जले त्रिरावर्त्य मुच्यते ब्रह्महत्यया । सव्याहृतीकां गायत्रीं प्रणवं वा जले जपेत् ।। ध्यायेन्नारायणं देवं सर्वपापप्रशान्तये । अपः पाणौ समादाय त्रिः पठेत् द्रुपदामृचम् । तत्तोयं मूर्ध्नि विन्यस्य सर्वपापैः प्रमुच्यते इति ।।

**வ்யாஸர்:-** பெருவிரல், மற்ற விரல்கள் இவைகளால் காது, கண், மூக்கு, வாய் இவைகளை மூடிக்கொண்டு ஜலத்தில் ப்ரவாஹத்திற்கெதிராய் முழுகிக் கொண்டு, அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று

முறை ஜபிக்க வேண்டும். வாஜஸநேய வேதத்தில் 'த்ருபதா' என்ற காயத்ரீ உள்ளது. அதை ஜலத்தினுள் முழுகி ஒரு முறை ஜபித்தால் ப்ரம்ஹ ஹத்யையும் போக்குகிறுன். யோகயாக்ஞவல்க்யரும்:- மூன்று உலகங்களையும் கொன்ருலும், அதைப் போக்குவதற்கு அகமர்ஷணத்தை மூன்று முறை ஜபிக்கலாம். அது அச்வமேதத்தின் அவப்ருதம் எவ்விதமோ அவ்விதம் என்று மனு சொன்னுர். அகமர்ஷண ஸூக்தத்திற்கு அகமர்ஷணர் ஒருவரே ருஷி, அனுஷ்டுப் சந்தஸ். பாவ வ்ருத்தர் தேவதை. 'ருதம்ச' என்பது முதலான மூன்று ருக்குகளுக்கும் ருஷியை மனதிலேயே சிந்திக்க வேண்டும். யஜுர்வேதத்திலுள்ள 'த்ருபதா' என்ற காயத்ரியை ஜலத்தினுள் முழுகி மூன்று முறை ஜபித்தால், ப்ரம்ஹ ஹத்யையாலும் விடுபடுவான். வ்யாஹ்ருதிகளுடன் கூடிய காயத்ரியை அல்லது ப்ரணவத்தை ஜலத்தினுள் இருந்து ஜபிக்க வேண்டும். அல்லது நாராயணனை ஸகல பாபங்களையும் அழிக்க த்யானிக்க வேண்டும். ஜலத்தைக் கையில் எடுத்து, 'த்ருபதாத்' என்ற ருக்கை மூன்று முறை ஜபிக்க வேண்டும். அந்த ஜலத்தைத் தலையில் விட்டுக் கொண்டால் ஸகல பாபங்களாலும் விடுபடுவான்.

गौतमः—गायत्रीं पच्छोऽर्द्धर्चशः समस्तामपि त्रिरन्तर्जले जपन् सर्वस्मात् पापात् प्रमुच्यते। अपि वा प्रणवं त्रिरन्तर्जले जपन् सर्वस्मात्पापात् प्रमुच्यते इति ॥ सुमन्तुरपि – हंसः शुचिषदित्येतामृचं त्रिरन्तर्जले जपन् सर्वस्मात् पापात् प्रमुच्यते। अपि वा व्याहृतीः त्रिरन्तर्जले जपन्सर्वस्मात् पापात् प्रमुच्यते इति ॥ यमः – अन्तर्जले जपेन्मग्नः त्रिः कृत्वस्त्वघमर्षणम्। द्रुपदां वाऽऽवर्तयेत् त्रिः इयं गौरिति वा ऋचम्॥ सव्याहृतिं सप्रणवां गायत्रीं त्रिर्जपेत्तथा। आवर्तयेद्वा प्रणवं स्मरेद्वा विष्णुमव्ययम् ॥ ध्यायेन्नारायणं देवं स्नानादिषु च कर्मसु। प्रायश्चित्तं हि सर्वस्य दुष्कृतस्येति वै श्रुतिः इति ॥

**கௌதமர்:-** காயத்ரியை, பாதங்களாயும், பாதி ருக்காயும், முழுவதாயும் மூன்று முறை ஜலத்தினுள் முழுகி ஜபித்தால், அல்லது ப்ரணவத்தை மூன்று முறை ஜபித்தால் ஸகல பாபத்தினின்றும் விடுபடுவான். **ஸுமந்துவும்:-** 'ஹம்ஸச்சுசிஷத்' என்ற இந்த ருக்கை ஜலத்தினுள் முழுகி மூன்று முறை ஜபிப்பவன் ஸகல பாபத்தினின்றும் விடுபடுவான். அல்லது வ்யாஹ்ருதிகளை ஜலத்தினுள் மூன்று முறை ஜபிப்பவன் ஸகல பாபத்தினின்றும் விடுபடுவான். **யமன்:-** ஜலத்தினுள் முழுகி அகமர்ஷணத்தை, அல்லது த்ருபதையை, அல்லது 'ஆயங்கௌ:' என்ற ருக்கை, அல்லது வ்யாஹ்ருதிகளுடனும் ப்ரணவத்துடனும் கூடிய காயத்ரியை மூன்று முறை ஜபிக்க வேண்டும். அல்லது ப்ரணவத்தையாவது ஆவ்ருத்தி செய்யலாம். அல்லது விஷ்ணுவையாவது ஸ்மரிக்க வேண்டும். ஸ்நானம் முதலிய கர்மங்களில் நாராயணனை ஸ்மரிக்க வேண்டும். இது ஸகல பாபங்களும் ப்ராயச்சித்தம் என்கிறது வேதம்.

याज्ञवल्क्यः—जलमध्ये स्थितो विप्रः शुद्धभावो हरिं स्मरेत् । तद्विष्णोरिति मन्त्रेण मज्जेदप्सु पुनः पुनः ॥ गायत्री वैष्णवी ह्येषा विष्णोः संस्मरणाय वै इति ॥ चन्द्रिकायाम् – विष्णोरायतनं ह्यापः सह्यपांपतिरुच्यते । तस्यैव सूनवस्त्वापस्तस्मात्तं ह्यप्सु संस्मरेत् ॥ आपो हिष्ठेति तिसृभिर्यथावदनुपूर्वशः । हिरण्यवर्णा इति च ऋग्भिश्चतसृभिस्तथा ॥ शन्नोदेवीरिति तथा शन्न आपस्तथैव च । इदमापः प्रवहतेत्येवं च समुदीरयेत् ॥ एवं सम्मार्जनं कृत्वा छन्द आर्षं च दैवतम् । अघमर्षणसूक्तस्य संस्मरेत् प्रयतः सदा ॥ ततोऽम्भसि निमग्नस्तु त्रिः पठेदघमर्णम् । प्रदद्यान्मूर्द्धनि तथा महाव्याहृतिभिर्जलम् इति ॥

**யாக்ஞவல்க்யர்:-** ப்ராம்ஹணன் ஜலத்தின் நடுவிலிருந்து சுத்தசித்தனாய் ஹரியை ஸ்மரிக்க

வேண்டும். 'தத்விஷ்ணோ:' என்ற மந்த்ரத்தால் அடிக்கடி முழுகவேண்டும். இந்த வைஷ்ணவ காயத்ரீ, விஷ்ணுவின் ஸ்மரணத்திற்கு ஆகியதாம். சந்த்ரிகையில்:- ஜலம் விஷ்ணுவின் இருப்பிடமாம், அவர் ஜலத்திற்கு அரசனெனப்படுகிறார். அவருடைய குழந்தைகளாம் ஜலங்கள். ஆகையால் அவரை ஜலத்தில் ஸ்மரிக்க வேண்டும். 'ஆபோஹிஷ்டா' முதலிய மூன்று ருக்குகள், 'ஹிரண்யவர்ணா:' முதலிய நான்கு ருக்குகள், 'சன்னோதேவீ:' 'சன்னஆப:' 'இதமாப: ப்ரவஹத' என்ற மந்த்ரங்கள் இவைகளை ஜபிக்க வேண்டும். இவ்விதம் மார்ஜனம் செய்து கொண்டு அகமர்ஷண ஸூக்தத்தின் ருஷி, சந்தஸ், தேவதை இவைகளை சுத்தனாய் ஸ்மரிக்க வேண்டும். பிறகு ஜலத்தில் முழுகியவனாய் அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். மஹாவ்யாஹ்ருதிகளால் தலையில் ஜலத்தில் விட வேண்டும்.

वसिष्ठः—आपोहिष्ठेदमापश्च द्रुपदादि च इत्यपि । तथा हिरण्यवर्णाभिः पावमानीभिरन्ततः ॥ ततोऽर्कमीक्ष्य सोङ्कारं निमज्ज्यान्तर्जले बुधः । प्राणायामांश्च कुर्वीत गायत्रीं चाघमर्षणम् ॥ योऽनेन विधिना स्नाति यत्र कुत्राम्भसि द्विजः । स तीर्थफलमाप्नोति तीर्थे तु द्विगुणं फलम् इति ॥ विष्णुरपि – ततोऽप्सु मग्नस्त्रिरघमर्षणं तद्विष्णोः परमं पदमिति वा सावित्रीं वा युञ्जते मन इत्यनुवाकं वा पुरुषसूक्तं वा जप्त्वाऽऽर्द्रवासा देवर्षिपितृतर्पणमम्भःस्थ एव कुर्यात् इति ॥

வஸிஷ்டர்:- 'ஆபோஹிஷ்ட' 'இதமாப:' 'த்ருபதா' 'ஹிரண்யவர்ணா:' 'பாவமானிகள்' இவைகளை ஜபித்து, ஸூர்யனைப் பார்த்து, ஓங்காரத்துடன் முழுகி, ஜலத்தினுள் ப்ராணாயாமங்களைச் செய்து, காயத்ரியையும், அகமர்ஷணத்தையும் ஜபிக்க வேண்டும். எந்த ப்ராம்ஹணன் இந்த விதியுடன் எந்த ஜலத்தில் ஸ்நானம்

செய்தாலும் அவன் புண்ய தீர்த்த ஸ்நான பலனை அடைகிறுன். புண்ய தீர்த்தத்தில் ஆனுல் இருமடங்கு பலனை அடைகிறுன். விஷ்ணுவும்:- பிறகு, ஜலத்தினுள் முழுகியவனுய் மூன்று முறை அகமர்ஷணத்தை, அல்லது 'தத்விஷ்ணோ:' என்பதை அல்லது காயத்ரியை, அல்லது 'யுஞ்ஜதேமன:' என்ற அனுவாகத்தை, அல்லது புருஷஸூக்த்தை ஜபித்து, ஸ்நானம் செய்து ஈரவஸ்த்ரம் உடையவனுய் தேவ ருஷி பித்ரு தர்ப்பணத்தை ஜலத்தில் இருப்பவனுகவே செய்ய வேண்டும்.

व्यासः—मृद्गोमयाभ्यामालिप्य तल्लिङ्गादेव मन्त्रतः । प्रक्षाल्याचम्य विधिवत् ततः स्नायात् समाहितः । प्रेक्ष्य सोङ्कारमादित्यं त्रिर्निमज्जेज्जलाशये । आचान्तः पुनराचामेन्मन्त्रेणोनेन मन्त्रवित् ॥ अन्तश्चरसि भूतेषु गुहायां विश्वतोमुखः । त्वं यज्ञस्त्वं वषट्कार आपो ज्योतीरसोऽमृतम् ॥ ततः सम्मार्जनं कुर्यात् आपोहिष्ठा मयो भुवः । इदमापः प्रवहत व्याहृतीभिस्तथैव च ॥ ततोऽभिमन्त्र्य तत्तीर्थं आपोहिष्ठादि मन्त्रकैः । अन्तर्जलगतो मग्नो जपेत् त्रिरघमर्षणम् ॥ द्रुपदां वा त्रिरभ्यस्येद्व्याहृतिं प्रणवादिकाम् । सावित्रीं वा जपेद्विद्वान् तद्विष्णोः परमं पदम् ॥ आवर्तयेद्वा प्रणवं देवं वा संस्मरेद्धरिम् ॥ द्रुपदा हि परो मन्त्रो यजुर्वेदे प्रतिष्ठितः ॥ अन्तर्जले त्रिरावर्त्य सर्वपापैः प्रमुच्यते ॥ यथाऽश्वमेधः क्रतुराट् सर्वपापप्रणोदनः । तथाऽघमर्षणं सूक्तं सर्वपापापनोदनम् इति ॥

வ்யாஸர்:- ம்ருத்திகை, கோமயம் இவைகளால், அவைகளின் மந்த்ரங்களால் தேஹத்தைப் பூசி அலம்பி, ஆசமனம் செய்து விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். ஓங்காரத்துடன் ஸூர்யனைப் பார்த்து, ஜலாசயத்தில் மூன்று முறை முழுக வேண்டும். ஆசமனம் செய்து, 'அந்தச் சரஸி - ரஸோம்ருதம்' என்ற மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகிப் பிறகு 'ஆபோஹிஷ்ட' 'இதமாப:'

வ்யாஹ்ருதிகள் இவைகளால் மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். பிறகு 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்களால் அந்தத் தீர்த்தத்தை அபிமந்த்ரித்து, ஜலத்தினும் முழுகியவனுய் அகமர்ஷணத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். 'த்ருபதா' மந்த்ரத்தையாவது மூன்று முறை ஜபிக்கலாம். ப்ரணவத்தை முதலாயுடைய வ்யாஹ்ருதியை ஆவது, ஸாவித்ரியை ஆவது, 'தத்விஷ்ணோ:' என்பதையாவது ஜபிக்கலாம். ப்ரணவத்தையாவது ஆவ்ருத்தி செய்யலாம். விஷ்ணுவையாவது ஸ்மரிக்கலாம். யஜுர்வேதத்திலுள்ள 'த்ருபதா' என்றது சிறந்த மந்த்ரம். அதை ஜலத்தினுள் மூன்று தடவை ஜபித்தால் ஸகல பாபங்களாலும் விடுபடுவான். யாகங்களுள் சிறந்த அச்வமேதம் எப்படி ஸகல பாபநாசனமோ, அப்படி அகமர்ஷண ஸூக்தம் ஸகல பாபநாசனமாம்.

बोधायनः—अथ हस्तौ प्रक्षाल्य कमण्डलुं मृत्पिण्डं च सङ्गृह्य तीर्थं गत्वा त्रिः पादौ प्रक्षालयते त्रिरात्मानमथ हैके ब्रुवते। श्मशानमपो देवगृहं गोष्ठं यत्र च ब्राह्मणा अप्रक्षाल्य तु पादौ तान्न प्रवेष्टव्यमिति। अथाऽभिप्रपद्यते हिरण्यशृङ्गं वरुणं प्रपद्य इति द्वाभ्यामथाञ्जलिनाऽप उपहरति सुमित्रा न आप औषधयस्सन्त्विति तां दिशं निरीक्षति यस्यां दिशि द्वेष्यो भवति 'दुर्मित्रास्तस्मै भूयासुः योस्मान् द्वेष्टि यञ्च वयं द्विष्म इत्यथाप उपस्पृश्य 'नमोऽग्नयेऽप्सुमत' इत्युपस्थाय त्रिः प्रदक्षिणमुदकमावर्तयति 'यदपां क्रूर'मिति 'इमं मे गङ्ग' इति तीर्थमावाह्याद्भिर्मार्जयत्यापोहिष्ठामयोभुव इति तिसृभिः 'हिरण्य-वर्णाः शुचयः पावका' इति चतसृभिः 'पवमानः सुवर्जन' इत्येतेनानुवाकेन च मार्जयित्वाऽन्तर्जलगतोऽघमर्षणेन त्रीन् प्राणायामान्धारयेद्दतश्च सत्यञ्चेत्येतदघमर्षणं त्रिरन्तर्जले पठेत् सर्वस्मात् पापात् प्रमुच्यते। 'आयं गौः पृश्निरक्रमी'त्येतां च त्रिरन्तर्जले पठन् सर्वस्मात् पापात् प्रमुच्यते ।

'हꣳसश्शुचिषदित्येतामृचं त्रिरन्तर्जले पठन् सर्वस्मात् पापात् प्रमुच्यते । अपि वा सावित्रीं गायत्रीं पच्छोऽर्द्धर्चशः समस्तामिति त्रिरन्तर्जले पठन् सर्वस्मात् पापात् प्रमुच्यते । अपि वा व्याहृतीर्व्यस्ताः समस्ताश्चेति त्रिरन्तर्जले पठन् सर्वस्मात् पापात् प्रमुच्यते । अपि वा प्रणवमेव त्रिरन्तर्जले पठन् सर्वस्मात् पापात् प्रमुच्यते' इति ॥

**போதாயனர்:-** பிறகு, கைகளை அலம்பி, கமண்டலுவையும், மண்கட்டியையும் எடுத்துக் கொண்டு தீர்த்தத்திற்குச் சென்று, மூன்று தடவை கால்களை அலம்ப வேண்டும், மூன்று முறை தன்னையும் சுத்தி செய்து கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் - 'ச்மசானம், ஜலம், தேவக்ருஹம், மாட்டுக் கொட்டில், ப்ராம்ஹணர் இருக்குமிடம் இவைகளில் கால்களை அலம்பாமல் ப்ரவேசிக்கக் கூடாது' என்று. பிறகு, 'ஹிரண்யச்ருங்கம்' என்ற இரண்டு மந்த்ரங்களால் ஜலத்தில் இறங்கவும். பிறகு 'ஸுமித்ராந:' என்ற மந்த்ரங்களால் ஜலாஞ் ஜலியை தன்மேல் சேர்த்து, 'துர்மித்ரா:' என்ற மந்த்ரங்களால் சத்ருவிருக்கும் திக்கில் ஜலாஞ்ஜலியை எறிந்து, ஜலத்தைத் தொட்டு, 'நமோக்னேயே' என்பதால் உபஸ்தானம் செய்து, 'யதபாம்' என்பதால் ஜலத்தை மூன்று முறை ப்ரதிக்ஷிணமாய்ச் சுற்றி, 'இமம்மே' என்பதால் தீர்த்தத்தை ஆவாஹனம் செய்து, ஜலத்தால் மார்ஜனம் செய்யவும். 'ஆபோஹிஷ்டா' முதல் மூன்று மந்த்ரங்கள், 'ஹிரண்யவர்ணா:' முதல் நான்கு மந்த்ரங்கள், 'பவமானஸ்ஸுவர்ஜன:' என்ற அனுவாகம் இவைகளால் மார்ஜனம் செய்து கொண்டு, ஜலத்தினுள் முழுகி அகமர்ஷணத்துடன் மூன்று ப்ராணாயாமங்கள் செய்ய வேண்டும். 'ருதம்ச ஸத்யம்ச' என்ற இந்த அகமர்ஷணத்தை ஜலத்தினுள் மூன்று முறை படித்தால், ஸகல பாபத்தினின்றும் விடுபடுவான். அல்லது

*'ஆயங்கௌ:' என்ற ருக்கை, அல்லது த்ருபதாதிவ' என்ற ருக்கை, அல்லது 'ஹம்ஸச்சுசிஷத்' என்ற ருக்கை, அல்லது காயத்ரியை பாதமாயும், பாதிருக்காயும், ஸமஸ்தமாயும், அல்லது வ்யாஹ்ருதிகளை தனியாயும், சேர்த்தும், அல்லது ப்ரணவத்தை ஜலத்தினுள் முழுகியவனாய் மூன்று தடவை படித்தால் ஸகல பாபத்தின்றும் விடுபடுவான்.*

मृत्तिकास्नानविधिरप्युक्तो बोधायनेन— अथातो मृत्तिकास्नानविधिं व्याख्यास्यामो ब्रह्मचारिगृहस्थवान प्रस्थपरिव्राजकानामश्वक्रान्ते सहस्रपरमा देवीति भूमिर्दूर्वे अभिमन्त्र्योद्धृताऽसीति नदीतटे लोष्टमादाय काण्डात् काण्डात् प्ररोहन्तीति द्वाभ्यां दूर्वामादाय मृत्तिके हन मे पापमिति दूर्वां लोष्टे प्रतिष्ठाप्य यत इन्द्र भयामहे स्वस्तिदाः स्वस्तिन इन्द्रो वृद्ध श्रवास्त्रातारमिन्द्रमावान्मन्युः परं मृत्यो अनुपरेहीति षड्भिः प्रतिमन्त्रं प्रतिदिशं लोष्टमुत्सृज्य गन्धद्वारामिति लोष्टमादाय उदुत्यं जातवेदसमिति लोष्टमादित्यं दर्शयित्वा श्रीर्मे भजत्वलक्ष्मीर्मे नश्यत्विति शिरः प्रदक्षिणीकृत्य सहस्रशीर्षेति शिर आलिप्य विष्णुमुखा इति भुजोग्रीवाभिरिति ग्रीवां महा॑ इन्द्रोवज्रबाहुरिति बाहू सोमान॑स्वरणमिति कक्षौ शरीरं यज्ञशमलमिति शरीरं नाभिर्मे चित्तं विज्ञानमिति नाभिमापान्तमन्युरिति कटिं विष्णोरराटमसीति पृष्ठं वरुणस्य स्तंम्भनमसीति मेढ्रमानन्दनन्दावित्यण्डा वूरुवो रोज इत्यूरू ऊरूअरत्नी इति जानुनी जङ्घाभ्यामिति जङ्घयोश्चरणं पवित्रमिति चरणयोरिदं विष्णुस्त्रीणिपदेति द्वाभ्यां पादौ सजोषा इन्द्रेति शेषं दूर्वासहितं लोष्टं शिरसि निधाय हिरण्यशृङ्गमिति तीर्थं गत्वा सुमित्रान आप औषधय इत्यात्मानमभिषिञ्चेदुदकाञ्जलिमादाय लोष्टदेशे निनीय दुर्मित्रास्तस्मै भूयासुरिति प्रथमं योऽस्मान् द्वेष्टीति द्वितीयं यञ्च वयं द्विष्म इति तृतीयमापो हिष्ठा मयोभुव इति तिसृभिर्हिरण्यवर्णाः शुचयः

पावका इति चतसृभिः पवमानः सुवर्जन इत्येतेनानुवाकेन च मार्जयित्वा नमोऽग्नयेऽप्सुमत इति नमस्कृत्य यदपां क्रूरमित्यद्भिस्त्रिरावर्त्य इमं मे गङ्ग इत्यपोऽभिमन्त्र्यर्तञ्च सत्यञ्चेत्यघमर्षणसूक्तेनापोऽवगाहेत देवानृषीन् पितृंस्तर्पयित्वा शुची वो हव्येति वस्त्रमद्भिः प्रोक्ष्य देवस्यत्वेति वस्त्रमादयावधूतꣳरक्ष इत्यवधूय उदुत्यंजात वेदसमिति वस्त्रमादित्यं दर्शयित्वाऽऽवहन्तीति वासः परिधाय द्विराचम्योत्क्रान्तः 'भूतप्रेतपिशाचा ये ये भूता ये निशाचराः । सर्वेषा मविरोधेन ब्रह्मकर्म समारंभे इति दर्भासनं प्रतिष्ठाप्य त्रिः प्राणानायम्याष्टोत्तरशतं गायत्रीं जपेद् ब्राह्मणः पूतो भवति । ब्रह्महत्या गोवध गुरुतल्पगमन स्वर्णस्तेय सुरापानादि सर्वपापप्रणाशनमिति विज्ञायते । हित्वैतद्देहं देवं नारायणं प्रपद्यत इत्याह भगवान् बोधायनः इति ।।

*ம்ருத்திகா ஸ்நான விதியும் போதாயனரால் சொல்லப்பட்டடுள்ளது. இனி ப்ரம்ஹசாரி க்ருஹஸ்த வானப்ரஸ்த ஸன்யாஸிகளுக்கு ம்ருத்திகா ஸ்நான விதியைச் சொல்லுகிறேன். 'அச்வக்ராந்தே' 'ஸஹஸ்ரபரமாதேவி' என்ற மந்த்ரங்களால், பூமியையும், அறுகையும் அபிமந்த்ரித்து, 'உத்த்ருதாஸி' என்ற மந்த்ரங்களால் நதிக்கரையில் மண்கட்டியை எடுத்து, 'காண்டாத் காண்டாத்' என்ற இரண்டு மந்த்ரங்ளால் அறுகை க்ரஹித்து, 'ம்ருத்திகே ஹநமேபாபம்' என்ற மந்த்ரத்தால் அறுகை மண்கட்டியின் மேல் வைத்து, 'யதஇந்த்ர' 'ஸ்வஸ்திதா:' 'ஸ்வஸ்திந இந்த்ர:' 'த்ராதாரம்' 'ஆபாந்தமன்யு:' 'பரம்ம்ருத்யோ' என்ற ஆறு மந்த்ரங்களால் முறையே ஒவ்வொரு திக்கிலும் மண்கட்டியை எறிந்து, 'கந்தத்வாராம் என்பதால் மண்கட்டியை எடுத்து, 'உதுத்யம்' என்பதால் மண்கட்டியை ஸூர்யனைக் காண்பிவித்து, 'ஸ்ரீர்மே' என்பதால் தலையைச் சுற்றி, 'ஸஹஸ்ரசீர்ஷா' என்பதால்*

தலையில் பூசி, 'விஷ்ணுமுகா:' என்பதால் முகத்தையும், 'ஓஜோக்ரீவாபி:' என்பதால் கழுத்தையும், 'மஹாம்இந்த்ர:' என்பதால் கைகளையும், 'ஸோமாநம்' என்பதால் கக்ஷங்களையும். 'சரீரம்யஜ்ஞ' என்பதால் சரீரத்தையும், 'நாபிர்மே' என்பதால் நாபியையும், 'ஆபாந்தமன்யு:' என்பதால் இடுப்பையும், 'விஷ்ணோரராடம்' என்பதால் முதுகையும், 'வருணஸ்ய' என்பதால் குஹ்யத்தையும், 'ஆனந்தநந்தௌ' என்பதால் பீஜங்களையும், 'ஊருவோரோஜ:' என்பதால் துடைகளையும், 'ஊரூ அரத்னீ' என்பதால் ஜானுக்களையும், ஜங்காப்யாம்' என்பதால் ஜங்கைகளையும், 'சரணம்' என்பதால் சரணங்களையும், 'இதம்விஷ்ணு:' 'த்ரீணிபதா' என்பவைகளால் பாதங்களையும், மண்ணினுல் பூசி, 'ஸஜோஷா இந்த்ர' என்பதால் மீதி மண்ணை அறுகுடன் சேர்த்து தலையில் வைத்து, 'ஹிரண்ய ச்ருங்கம்' என்பதால் ஜலத்திலிறங்கி, 'ஸுமித்ரா:' என்பதால் தனக்கு அபிஷேகம் செய்து கொண்டு, உதகாஞ்ஜலியை எடுத்து மண்கட்டி உள்ள ஸ்தலத்தில், 'துர்மித்ரா:' என்பதால், உதகாஞ்ஜலியை விட்டு, 'யோஸ்மாந்த்வேஷ்டி' என்பதால் இரண்டாவது தடவையும், 'யம்சவயம்த்விஷ்ம:' என்பதால் மூன்ருவது தடவையும் விட்டு, 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகள், 'ஹிரண்யவர்ணா:' என்பது முதல் நான்கு ருக்குகள், 'பவமான:' என்ற அனுவாகம் இவைகளால் மார்ஜனம் செய்து, 'நமோக்னயே' என்பதால் நமஸ்கரித்து, 'யதபாம்' என்பதால் மூன்று தடவை ஜலத்தை ஒதுக்கி, 'இமம் மே கங்கே' என்பதால் ஜலத்தை அபிமந்த்ரித்து, 'ருதம்ச' என்ற ஸூக்தத்தினுல் ஜலத்தில் முழுக வேண்டும். தேவ ருஷி பித்ரு தர்ப்பணத்தைச் செய்து, 'சுசீவ:' என்பதால் வஸ்த்ரத்தை ப்ரோக்ஷித்து, 'தேவஸ்யத்வா' என்பதால் வஸ்த்ரத்தை எடுத்து, 'அவதூதம்' என்பதால் உதற, 'உதுத்யம்' என்பதால் வஸ்த்ரத்தை ஸூர்யனுக்குக் காண்பித்து, 'ஆவஹந்தீ' என்று வஸ்த்ரத்தைத் தரித்து,

இருமுறை, ஆசமனம் செய்து, வெளிவந்து, 'பூத + ரபே' என்பதால் தர்ப்பாஸனத்தைப் பூமியில் வைத்து, மூன்று முறை ப்ராணாயாமம் செய்து, 108 முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். ப்ராம்ஹணன் சுத்தனாகிறான். ப்ரம்ஹஹத்யை, கோவதம், குருதல்பகமனம், ஸ்வர்ணஸ்தேயம், ஸுராபானம் முதலிய ஸகல பாபங்களையும் போக்குவதாமிது என்று தெரிகின்றது. இவ்வுடலை விட்டு நாராயணனை அடைகிறான் என்றார் பகவான் போதாயனர்.

अनुकल्पमाह याज्ञवल्क्यः – य एष विस्तरः प्रोक्तः स्नानस्य विधिरुत्तमः। असामर्थ्यान्न कुर्याच्चेत्तत्रायं विधिरुच्यते। स्नानमन्तर्जले चैव मार्जनाचमने तथा। जलाभिमन्त्रणं चैव तीर्थस्य परिकल्पनम्॥ अघमर्षणसूक्तेन त्रिरावृत्तेन नित्यशः। स्नानाचरणमित्येतदुपदिष्टं महात्मभिः इति॥

அனுகல்பத்தைச் சொல்லுகிறார், யாக்ஞவல்க்யர்:- விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டுள்ள சிறந்த இந்த ஸ்நான விதியை, சரீர ஸாமர்த்யம் இல்லாததால் செய்ய முடியாவிடில், அப்பொழுது, மற்றொரு விதி சொல்லப்படுகிறது. ஜலத்தினுள் ஸ்நானம், மார்ஜனம், ஆசமனம், ஜலாபி மந்த்ரணம், தீர்த்த பரிகல்ப்பனம், அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று முறை ஜபித்து நித்யமும் ஸ்நானம் செய்வது என்ற விதி மஹான்களால் உபதேசிக்கப்பட்டுள்ளது.

तीर्थपरिकल्पनमाह वसिष्ठः — चतुर्हस्तसमायुक्तं चतुरश्रं समन्ततः। प्रकल्प्यावाहयेद्गङ्गां मन्त्रेणानेन मन्त्रवित्। विष्णोः पादप्रसूताऽसि वैष्णवी विष्णुदेवता। त्राहि नस्त्वेनसस्तस्मादा-जन्ममरणान्तिकात्। तिस्रः कोट्योऽर्द्धकोटी च तीर्थानां वायुरब्रवीत्। दिवि भुव्यन्तरिक्षे च तानि मे सन्तु जाह्नवि इति। स्मृत्यन्तरे – चतुरश्रं तीर्थपीठं पाणिनोल्लिख्य वारिषु। आवाहयामि त्वां देवीत्यावाह्यात्रैव

जाह्नवीम् ।। इमं मे गङ्ग इत्युक्त्वा पुण्यतीर्थानि च स्मरेत् ।। स्नानं प्लवङ्गमस्येव कृतं विधिविनाकृतम् । वृथा द्विजन्मनस्तस्माद्विधिना स्नानमाचरेत् इति ।।

*தீர்த்த பரிகல்பனத்தைச் சொல்லுகிறார். **வஸிஷ்டர்:-** நான்கு முழம் சுற்றளவு உள்ளதாயும் நான்கு மூலைகளுள்ளதாயும் ஒரு பீடத்தை ஜலத்தில் கல்ப்பித்து மந்த்ரமறிந்தவன் இந்த மந்த்ரத்தால் கங்கையை ஆவாஹனம் செய்ய வேண்டும். மந்த்ரம் - 'விஷ்ணோ: + ஜாஹ்னவி' என்பது. இதன் பொருள் - ''ஓ கங்கையே ! நீ, விஷ்ணுவின் பாதத்தினின்றும் உண்டாகியவளும், விஷ்ணுவினுடையவளும், விஷ்ணுவைத் தேவதையாய் உடையவளுமாய் இருக்கின்றாய். ஆகையால் ஜன்மம் முதல் மரணம் வரையில் ஸம்பவிக்கும் பாபத்தினின்றும் எங்களைக் காக்க வேண்டும். ஆகாசத்திலும், பூமியிலும், அந்தரிக்ஷத்திலும், மூன்றரைக் கோடி தீர்த்தங்கள் இருக்கின்றன என்று வாயு சொன்னார். அத்தீர்த்தங்கள் எனக்காக இங்கு இருக்க வேண்டும்'' என்பதாம். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** நான்கு மூலையுள்ள தீர்த்த பீடத்தை ஜலத்தில் கையினால் எழுதி ''ஓ தேவி! உன்னை ஆவாஹனம் செய்கிறேன்'' என்று பீடத்தில் கங்கையை ஆவாஹனம் செய்து 'இமம்மேகங்கே' என்ற மந்த்ரத்தால் படித்துப் புண்ய தீர்த்தங்களையும் நினைக்கவேண்டும். விதியில்லாமல் செய்யப்பட்ட ஸ்நானம் குரங்கின் முழுக்குப் போல் வீணாகும். ஆகையால் விதியுடன் ஸ்நானம் செய்ய வேண்டும்.*

स्मृत्यर्थसारे—नान्योन्यं पृष्ठतो मज्जन्न लिम्पेत् पृष्ठतो मिथः । स्नात्वा न धावयेद्दन्तान् न मृज्याद्वाससा मुखम् ।। अवगाह्य जले नग्नो वस्त्रं यः परिशोधयेत् । क्रुद्धास्तत्र निवर्तन्ते देवताः पितृभिः सह इति ।। रत्नावल्याम् – दर्शे स्नानं न कुर्वीत मातापित्रोस्तु जीवतोः । कुर्वंस्तत्र निराचष्टे पित्रोरुन्नति जीविते ।। न रात्रौ मृत्तिकास्नानं नैव

भौमार्कवारयोः । सन्ध्ययोर्नैव गोमूत्रं न शुद्ध्यै गोमयं निशि ॥ दिवाऽम्बुगोशकृन्मूत्रैः शुद्धिर्निश्यम्बुभस्मभिः । नाम्बु हन्यान्न नन्देन्न तीर्थे तीर्थान्तरं स्मरेत् ॥ सङ्कल्प्यैव तथा कुर्यात् स्नान दानव्रतादिकम् । अन्यथा पुण्यकर्माणि निष्फलानि भवन्ति वै इति ॥

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:-** ஒருவன் பின் ஒருவனிருந்து முழுகக் கூடாது. ஒருவர்க்கொருவர் முதுகைத் துடைக்கக் கூடாது. ஸ்நானம் செய்து பிறகு பற்களைச் சுத்தி செய்யக் கூடாது. வஸ்த்ரத்தால் முகத்தைத் துடைக்கக் கூடாது. ஜலத்தில் அமிழ்ந்து கொண்டு வஸ்த்ரமில்லாதவனாய் எவன் வஸ்த்ரத்தைச் சுத்தி செய்கின்றானோ அவனிடத்தில் கோபமுடையவராய்த் தேவர்கள் பித்ருக்களுடன் திரும்பிச் செல்கின்றனர். **ரத்னாவளியில்:-** மாதாபிதாக்கள் ஜீவித்திருக்கும் பொழுது அமாவாஸ்யையில் ஸ்நானத்தைச் செய்யக் கூடாது. செய்பவன் மாதாபிதாக்களின் உயர்வு, உயிர் இவைகளை மறுக்கிறான். இரவில் ம்ருத்திகா ஸ்நானம் கூடாது. பௌமவாரத்திலும், பானுவாரத்திலும் கூடாது. ஸந்த்யா காலங்களில் கோமூத்ரத்தை உபயோகிக்கக் கூடாது. ராத்திரியில் சுத்திக்காகக் கோமயத்தை உபயோகிக்கக் கூடாது. பகலில் ஜலம், கோமயம், கோமூத்ரம் இவைகளாலும், இரவில் ஜலம், பஸ்மம் இவைகளாலும் சுத்தி சொல்லப்பட்டுள்ளது. ஜலத்தை அடிக்கக் கூடாது. நிந்திக்கக் கூடாது. ஒரு தீர்த்தத்திலிருந்து மற்றொரு தீர்த்தத்தை ஸ்மரிக்கக் கூடாது. ஸ்நானம், தானம், வ்ரதம் முதலியதை ஸங்கல்பம் செய்து கொண்ட பிறகே செய்ய வேண்டும். அவ்விதம் இல்லாவிடில் புண்ய கர்மங்கள் பயனற்றவைகளாய் ஆகின்றன.

भरद्वाजः – सङ्कल्परहितं कर्म यच्छ्रुतिस्मृतिचोदितम् । यतो यद्यफलं तत् स्यात् सङ्कल्प्यातः समाचरेत् । हस्तौ पादौ च प्रक्षाल्य समुपस्पृश्य वाग्यतः । प्राङ्मुखोदङ्मुखो वाऽपि स्थित्वा दर्भासने

शुचिः । सदर्भहस्तौ जानूर्ध्वे दक्षिणे दक्षिणोत्तरौ । कृत्वा वारादि संस्मृत्य एतत् कर्म करोति यत् ।। स्वमानसे संस्मरणं तत् सङ्कल्प इतीरितः ।। स्नानमर्दितनेत्रस्य कर्णरोगातिसारिषु । आध्मानपीन-साजीर्णभुक्तवत्सु च गर्हितम् । अनार्तश्चोत्सृजेद्यस्तु स विप्रः शूद्रसम्मितः। प्रायश्चित्ती भवे देव लोके भवति निन्दितः इति ।।

**பரத்வாஜர்:-** ச்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டுள்ள கர்மம் ஸங்கல்ப்பம் இல்லாவிடில் வீணாகின்றது. ஆகையால் ஸங்கல்ப்பித்துக் கொண்டே செய்ய வேண்டும். கால்களையும், கைகளையும் அலம்பி, ஆசமனம் செய்து, மௌனியாய், கிழக்கு அல்லது வடக்கு நோக்கியவனாய்த் தர்ப்பாஸனத்தில் அமர்ந்து, சுத்தனாய், தர்ப்பங்களுடன் கூடிய கைகளை வலது முழங்காலின் மேல் வலதுகை மேலிருக்கும் படி செய்து, வாரம் முதலியதை ஸ்மரித்து, எந்தக் கர்மத்தைச் செய்கின்றானோ அதை மனதில் ஸ்மரிப்பது ஸங்கல்ப்பம் எனப்படுகிறது. கண்ரோகம் உள்ளவனுக்கும், காது ரோகமுள்ளவனுக்கும், அதிஸாரமுள்ளவனுக்கும், வயிற்று உப்புசம், பீனஸம், அஜீர்ணம் உள்ளவனுக்கும், புஜித்தவனுக்கும் ஸ்நானம் நிஷித்தமாகும். வ்யாதியில்லாத எந்த ப்ராம்ஹணன் ஸ்நானத்தை விடுவானோ அவன் சூத்ரனுக்குச் சமனாவான். ப்ராயச் சித்தார்ஹனாவான். உலகில் நிந்திதனாய் ஆவான்.

भृगुः—नैकवासो न च द्वीपे नान्तराले कदाचन । श्रुतिस्मृत्युदितं कर्म न कुर्यादशुचिः क्वचित् इति ।। तत्र ग्राह्यद्वीपमाह स एव — 'वृषभैकशतं यत्र गवां तिष्ठत्यसंशयम् । न तद्धर्महतं द्वीपमिति ब्रह्मविदो विदुः इति ।। मनुः —नित्यं स्नात्वा शुचिः कुर्यात् देवर्षिपितृतर्पणम् इति ।। जाबालिः – देवान् ब्रह्मऋषींश्चैव तर्पये दक्षतोदकैः । तर्पयेत्तु पितॄन् भक्त्या सतिलोदकचन्दनैः इति । यमः–

तिलदर्भसमायुक्तं स्वधया यत् प्रदीयते । तत् सर्वममृतं भूत्वा पितॄणामुपतिष्ठते इति ॥

ப்ருகு:- ச்ருதியாலும், ஸ்ம்ருதியாலும் சொல்லப்பட்டுள்ள கர்மத்தை, ஒரு வஸ்த்ரமுடையவனும், தீவிலும், நடுவிலும், அசுத்தனும் ஓரிடத்திலும், ஒருகாலும் செய்யக் கூடாது. அங்கு, க்ரஹிக்கத் தகுந்த தீவினைச் சொல்லுகிறார், பிருகுவே:- எந்தத் தீவில் ஒரு எருதுடன் கூடிய நூறு பசுக்கள் இருக்கின்றனவோ அந்தத்தீவு தர்மத்திற்கு நிஷித்தமான தீவாய் ஆகாது, ஸம்சயமில்லை என்று வேதமுணர்ந்தவர் உரைக்கின்றனர். மனு:- ப்ரதிதினம் ஸ்நானம் செய்து, சுத்தனாய் தேவர், ருஷிகள், பித்ருக்கள் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஜாபாலி:- தேவர்கள், ப்ரம்ஹ ருஷிகள் இவர்களுக்கு அக்ஷதங்களுடன் கூடிய ஜலங்களாலும், பித்ருக்களுக்குத் திலம், சந்தனம் இவைகளுடன் கூடிய திலோதகங்களாலும் தர்ப்பணம் செய்ய வேண்டும். யமன்:- திலங்கள், தர்ப்பங்கள் இவைகளுடன் கூடிய எந்த வஸ்து, 'ஸ்வதா' சப்த்துடன் கொடுக்கப்படுகிறதோ, அது முழுவதும் அம்ருதமாயாகிப் பித்ருக்களை அடைகின்றது.

—★—

## नैमित्तिकस्नानम् ।

अथ नैमित्तिकस्नानम् । स्मृत्यर्थसारे – उच्छिष्टाद्युपघातेषु अस्पृश्यस्पर्शनेषु च । ग्रहसंक्रमणादौ च स्नानं नैमित्तिकं स्मृतम् ॥ चण्डालादिस्पर्शने तु कार्यं वारुणमेव तु । काम्यं मलापकर्षं च क्रियास्नानं च वारुणम् ॥ इतराणि यथायोग्यं देशकालाद्यपेक्षया इति ॥ गार्ग्यः – कुर्यान्नैमित्तिकं स्नानं शीताद्भिः काम्यमेव च । नित्यं याद‍ृच्छिकं चैव यथारुचि समाचरेत् इति ॥ मनुः – दिवाकीर्तिमुदक्यां च सूतिकां पतितं तथा । शवं तत्स्पृष्टिनं चैव स्पृष्ट्वा स्नानेन शुध्यति

इति ।। दिवाकीर्तिः चण्डालः ।। उदक्या - रजस्वला ।। अङ्गिराः – शवस्पृशमथोदक्यां सूतिकां पतितं तथा। स्पृष्ट्वा स्नानेन शुद्धिः स्यात् सचेलेन न संशयः इति ।। गौतमोऽपि – पतितचण्डालसूतिकोदक्या-शवस्पृष्टि तत्स्पृष्ट्युपस्पर्शने सचेलोदकोपस्पर्शनाच्छुध्येत् इति ।।

### நைமித்திக ஸ்நானம்

இனி நைமித்திக ஸ்நானம் சொல்லப்படுகிறது. **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்**:- உச்சிஷ்டம் முதலியதின் ஸ்பர்சத்திலும், தீண்டக் கூடாதவரின் ஸ்பர்சத்திலும், க்ரஹணம், ஸங்க்ரமணம் முதலியதிலும் செய்யப்படும் ஸ்நானம் நைமித்திகம் எனப்படுகிறது. சண்டாளர் முதலியவரின் ஸ்பர்சத்தில் வாருண ஸ்நானத்தையே செய்ய வேண்டும். காம்யம், மலாபகர்ஷணம், க்ரியா ஸ்நானம் என்ற இவைகளை வாருண ஸ்நானமாகவே செய்ய வேண்டும். மற்ற ஸ்நானங்களை, தேசகாலானுஸாரமாய் உசிதப்படி அனுஷ்டிக்கலாம். **கார்க்யர்**:- நைமித்திகம், காம்யம் என்னும் ஸ்நானங்களைச் சீதஜலத்தால் செய்ய வேண்டும். நித்யம், யாத்ருச்சிகம் என்பதை இஷ்டப்படி செய்யலாம். **மனு**:- சண்டாளன், ரஜஸ்வலை, ஸூதிகை, பதிதன், பிணம், பிணத்தைத் தொட்டவன் இவர்களை ஸ்பர்சித்தால் ஸ்நானத்தால் சுத்தனாகிறான். **அங்கிரஸ்**:- பிணத்தைத் தொட்டவன், ரஜஸ்வலை, ஸூதிகை, பதிதன் இவர்களை ஸ்பர்சித்தால், ஸசேல ஸ்நானத்தால் சுத்தியுண்டாகும். ஸம்சயமில்லை (தரித்த வஸ்த்ரத்துடன் முழுகுவது ஸசேல ஸ்நானம்.) **கௌதமரும்**:- பதிதன், சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலை, சவத்தைத் தொட்டவன், அவனைத் தொட்டவன் இவர்களை ஸ்பர்சித்தால் ஸசேல ஸ்நானத்தால் சுத்தனாகிறான்.

अनेन पतितादिस्पृष्टिनमारभ्य तृतीयस्यापि सचेलस्नानमित्युक्तं भवति ।। स्मृत्यन्तरेऽपि – शवचण्डालपतित

सूतिकोदक्यास्पृष्टि तत्स्पृष्टिस्पर्शे सचेलस्नानम् इति ।। चन्द्रिकायाम् – चण्डालः सूतिकोदक्या पतितः शव एव च । एतेषामेव संस्पर्शे तत्स्पृष्टिन्याय इष्यते इति ।। एवकारः कटधूमादिस्पृशि तत्स्पृष्टिन्यायनिवृत्त्यर्थः ।। तथा च तत्रैव – कटधूमस्पृशं वान्तं विरिक्तं क्षुरकर्मणि । मैथुनाचरितारं च स्पृष्ट्वा स्नानं विद्यते इति । यत्तु संवर्त आह – तत्स्पृष्टिनं स्पृशेद्यस्तु स्नानं तस्य विधीयते । ऊर्ध्वमाचमनं प्रोक्तं द्रव्याणां प्रोक्षणं तथा इति, यदपि व्यासः – ससूतकं समृतकं प्रसूतां वा रजस्वलाम् । स्पृष्ट्वा स्नायाच्च तत्स्पृष्टं तत्स्पर्शादाचमेद्बुधः इति, तद्बुद्धिपूर्वस्पर्शविषयम् ।।

*இதனால் பதிதன் முதலியவரை ஸ்பர்சித்தவன் முதல் மூன்றுமவனுக்கும் ஸசேலஸ்நானம் உண்டு, என்று சொல்லியதாய் ஆகிறது.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்**:- *சவம், சண்டாளன், பதிதன், ஸூதிகா, ரஜஸ்வலை இவர்களைத் தொட்டவனையும், அவனைத் தொட்டவனையும் தொடுதல். இதில் ஸசேல ஸ்நானம்.*

**சந்த்ரிகையில்**:- *சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலை, பதிதன், சவம் இவர்களின் ஸ்பர்சத்திலேயே 'தத்ஸ்ப்ருஷ்டி ந்யாயம்' சொல்லப்படுகிறது. 'ஏவ' என்பது, சவப்புகை முதலியதை ஸ்பர்சித்த இடத்தில் தத்ஸ்ப்ருஷ்டி ந்யாயம் இல்லை என்பதற்காம். அவ்விதமே,* **சந்த்ரிகையிலேயே**:- *சவப்புகையை ஸ்பர்சித்தவனையும், வாந்தி செய்தவனையும், விரேசனம் செய்தவனையும், க்ஷௌரம் செய்து கொண்டவனையும், ஸ்த்ரீஸங்கம் செய்தவனையும் தொட்டால் ஸ்நானம் வேண்டியதில்லை.* **ஸம்வர்த்தர்**:- *''அவர்களைத் தொட்டவனை எவன் தொடுவானோ அவனுக்கு ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அதற்கு மேலுள்ளவனுக்கு ஆசமனமும், த்ரவ்யங்களுக்கு ப்ரோக்ஷணமும் சொல்லப்பட்டுள்ளது'' என்று சொல்லியதும்.* **வ்யாஸர்**:- *''ஜனனசௌசம் உள்ளவன், மரணசௌசம் உள்ளவன். ஸூதிகை, ரஜஸ்வலை*

இவர்களைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். தொட்டவனைத் தொட்டாலும் ஸ்நானம் செய்ய வேண்டும். அவனைத் தொட்டால் அறிந்தவன் ஆசமனம் செய்ய வேண்டும்'' என்று அவ்விதமே சொல்லப்பட்டுள்ளது.

तथा च चन्द्रिकामाधवीययोः – अबुद्धिपूर्वसंस्पर्शे द्वयोः स्नानं विधीयते। त्रयाणां बुद्धिपूर्वे तु तत्स्पृष्टिन्याय कल्पना इति ।। चतुर्थस्य त्वाचमनमेव, 'उपस्पृशेच्चतुर्थस्तु तदूर्ध्वं प्रोक्षणं मतम्' इति मरीचिस्मरणात् ।। यत्तु कूर्मपुराणे – चण्डालसूतिकाशावैस्संस्पृष्टं संस्पृशेद्यदि । प्रमादात्तत आचम्य जपं कुर्यात् समाहितः ।। तत्स्पृष्टिस्पृष्टिनं स्पृष्ट्वा बुद्धिपूर्वं द्विजोत्तमः । आचमेत्तु विशुध्यर्थं प्राह देवः पितामहः इति तद्दुर्बलद्वितीयादिविषयम् ।। अन्यथा गौतमादिवचनविरोधात्।।

**சந்த்ரிகா, மாதவீயங்களில்:-** நினைவில்லாமல் செய்த ஸ்பர்சத்தில் இருவருக்கு ஸ்நானம் விதிக்கப்படுகின்றது. புத்தி பூர்வமாய்ச் செய்த ஸ்பர்சத்திலானால் மூன்று பேருக்கும் ஸ்நானம். இங்கு 'தத்ஸ்ப்ருஷ்டி ந்யாயம்' ஏற்படுகிறது. நான்காமவனுக்கு ஆசமனம் மட்டில். 'நான்காமவன் ஆசமனம் செய்ய வேண்டும். அதற்கு மேல் ப்ரோக்ஷணம் விதிக்கப்பட்டுள்ளது' என்று **மரீசி ஸ்ம்ருதியால். கூர்மபுராணத்தில்:-** 'சண்டாளன், ஸூதிகை, சாவா சௌசி இவர்களால் தொடப்பட்டவனைக் கவனமில்லாமல் தொட்டால், பிறகு ஆசமனம் செய்து, கவனமுடையவனாய் ஜபிக்க வேண்டும். சண்டாளாதிகளைத் தொட்டவனை ஸ்பர்சித்தவனை புத்தி பூர்வமாய்த் தொட்டால் சுத்திக்காக ஆசமனம் செய்ய வேண்டும் என்று ப்ரம்ஹதேவர் சொன்னார்'' என்றுள்ள வசனம் துர்ப்பலனான இரண்டாமவன் முதலியவரைப் பற்றியது. இவ்விதம் இல்லையெனில் கௌதமர் முதலியவரின் வசனத்திற்கு விரோதம் வரும்.

यत्तु याज्ञवल्क्येनोक्तम्—उदक्याशुचिभिः स्नायात् संस्पृष्टस्तैरुपस्पृशेत्। अब्लिङ्गानि जपेच्चैव गायत्रीं मनसा सकृत् इति यदपि देवलेनोक्तम् – संस्पृश्याशुचिसंस्पृष्टं द्वितीयं वाऽपि मानवः। हस्तौ पादौ च तोये न प्रक्षाल्याचम्य शुध्यति इति । यदपि वृद्धशातातपेनोक्तम् – 'अशुचिं यः स्पृशेदन्यं एक एव स दुष्यति। तत्स्पृष्टोऽन्योन दुष्येत सर्वद्रव्येष्वयं विधिः इति, एतत् सर्वं दण्डादिस्पर्शविषयमिति माधवीये। चण्डालादिव्यतिरिक्ताशुचिस्पर्श विषयमित्यन्ये । तदेवं चण्डालादिस्पर्शे तृतीयस्याचमनपरं वचनमकामविषयम्। स्नानपरं वचनं सकामविषयम्। द्वितीयस्याचमनवचनं दण्डादिस्पर्शविषयम्। चण्डालादिव्यतिरिक्तशवधूमाद्यशुचिस्पर्शे अशुचिस्पृश एव स्नानम् । द्वितीयस्य त्वाचमनमेवेति व्यवस्था॥

**யாக்ஞவல்க்யர்:-** *''ரஜஸ்வலையாலும், சவம், சண்டாளன், பதிதன், ஸூதிகை முதலியவர், சாவாசௌசிகள் இவர்களாலும் தொடப்பட்டவன் ஸ்நானம் செய்ய வேண்டும். ரஜஸ்வலை முதலியவர்களால் தொடப்பட்டவர்களால் ஸ்பர்சிக்கப்பட்டவன் ஆசமனம் செய்ய வேண்டும், 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். காயத்ரியையும் மனதால் ஒருமுறை ஜபிக்க வேண்டும்''* என்று சொல்லியதும். **தேவலர்:-** *''அசுத்தர்களால் ஸ்பர்சிக்கப்பட்டவனையும், அவனால் ஸ்பர்சிக்கப்பட்டனையும், மனிதன் தொட்டால், கைகளையும், கால்களையும் ஜலத்தால் அலம்பி, ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான்''* என்று சொல்லியதும், **வ்ருத்த சாதாதபர்:-** *''அசுத்தனாகிய மற்றவனை எவன் ஸ்பர்சிப்பானோ அவனொருவனே அசுத்தனாவான். அவனால் தொடப்பட்ட மற்றவன் அசுத்தனாவதில்லை. எல்லா த்ரவ்யங்களிலும் இதே விதியாம்''* என்று சொல்லியதும், ஆகிய இவையெலாம், கழி முதலியதால்

செய்த ஸ்பர்ச விஷயம் என்று மாதவீயத்தில் உள்ளது. சண்டாளன் முதலியவரைத் தவிர்த்த மற்ற அசுத்தரின் ஸ்பர்ச விஷயம் என்று சிலர். இவ்விதமிருப்பதால், சண்டாளாதிகளின் ஸ்பர்சத்தில் மூன்றமவனுக்கு ஆசமனத்தை விதிக்கும் வசனம் அகாம விஷயம். ஸ்நானத்தை விதிக்கும் வசனம் ஸகாம விஷயம். இரண்டாமவனுக்கு ஆசமனத்தை விதிக்கும் வசனம் கழி முதலியதால் ஏற்பட்ட ஸ்பர்ச விஷயம். சண்டாளன் முதலியவரைத் தவிர்த்த சவதூமம் முதலிய அசுத்த ஸ்பர்சத்தில் அசுத்த ஸ்பர்சிக்கு மட்டில் ஸ்நானம். இரண்டாமவனுக்கு ஆசமனம் மட்டில் என்பது வ்யவஸ்தை.

अत्र पराशरः – दुःस्वप्नं यदि पश्येत्तु वान्ते च क्षुरकर्मणि। मैथुने प्रेतधूमे च स्नानमेव विधीयते इति ।। मैथुने स्नानमृतुकालविषयम् ।। तदाह शातातपः – ऋतौ तु गर्भशङ्कित्वात् स्नानं मैथुनिनः स्मृतम्। अनृतौ तु यदा गच्छेच्छौचं मूत्रपुरीषवत् इति ।। अनृतावपि क्वचित् स्नानं स्मर्यते – अष्टम्यां च चतुर्दश्यां दिवा पर्वणि मैथुनम्। कृत्वा सचेलं स्नात्वा तु वारुणीभिश्च मार्जयेत् इति ।।

இங்கு, **பராசரர்:**- து: ஸ்வப்னம் கண்டாலும், வாந்தி செய்தாலும், க்ஷௌரத்திலும், மைதுனத்திலும், சவதூம ஸ்பர்சத்திலும், ஸ்நானமே விதிக்கப்படுகிறது. இங்கு மைதுனத்தில் ஸ்நானமென்றது ருதுகால விஷயம். அதைச் சொல்லுகிறார் **சாதாதபர்:**- ருதுகாலத்தில் மைதுனம் செய்தவனுக்கு, கர்ப்பம் உண்டாகும் என்ற சங்கை இருப்பதால் ஸ்நானம் விதிக்கப்பட்டுள்ளது. ருதுகாலமற்ற காலத்திலானுல் மலமூத்ர விஸர்ஜனத்திற் போல் சௌசம் மட்டும். ருதுகாலம் இல்லாவிடில் சில காலத்தில் ஸ்நானம் சொல்லப்படுகிறது:- அஷ்டமீ, சதுர்தசீ, பகல், பர்வம், இக்காலங்களில் மைதுனம் செய்தால், ஸசேல ஸ்நானம் செய்து வருணதேவதாகமான ருக்குகளால் மார்ஜனமும் செய்ய வேண்டும்.

कात्यायनः – चण्डालसूतिकोदक्यापतिता शौचकृच्छवान्। स्पृष्ट्वा स्नात्वा शुचिः प्रेतमनुगम्यानलं स्पृशेत् । इत्येतत्प्रमादसंस्पर्शविषयम्। पतितं सूतिकामन्त्यं शवं स्पृष्ट्वा च कामतः। स्नात्वा सचेलं स्पृष्ट्वाऽग्निं घृतं प्राश्य विशुध्यति ॥ शवस्पृशं दिवाकीर्त्यं चितिधूमं रजस्वलाम्। स्पृष्ट्वा प्रमादतो विप्रः स्नानं कृत्वा विशुध्यति इति स्मरणात् ॥ पराशरोऽपि – चैत्यवृक्षश्चितेर्धूमः चण्डालः सोमविक्रयी। एतांस्तु ब्राह्मणः स्पृष्ट्वा सवासा जलमाविशेत् इति ॥ चितेर्योग्यं श्मशानं चैत्यम्। तत्र समारोपितो वृक्षश्चैत्यवृक्षः ॥

**காத்யாயனர்:-** *சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலை, பதிதன், ஆசௌசி, சவம் இவர்களைத் தொட்டால், ஸ்நானம் செய்து சுத்தனாகிறான். சவானுகமனம் செய்தால், ஸ்நானம் செய்து அக்னியையும் ஸ்பர்சிக்க வேண்டும். இந்த வசனம் கவனமில்லாமல் செய்த ஸ்பர்ச விஷயம். 'பதிதன், ஸூதிகை, சண்டாளன், சவம் இவர்களை ஞானத்துடன் தொட்டால், ஸசேல ஸ்நானம் செய்து, அக்னியைத் தொட்டு, நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான்; சவத்தைத் தொட்டவன், சண்டாளன், சவதூமம், ரஜஸ்வலை, இவர்களை ப்ராம்ஹணன் அறியாமல் தொட்டால், ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான்' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.* **பராசரரும்:-** *சைத்யவ்ருக்ஷம், சவதூமம், சண்டாளன், ஸோமவிக்ரயீ இவர்களை ப்ராம்ஹணன் தொட்டால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். சைத்ய வ்ருக்ஷம் = ச்மசானத்தில் வளர்க்கப்பட்டுள்ள வ்ருக்ஷம்.*

संवर्तोऽपि – चण्डालं पतितं स्पृष्ट्वा शवमन्त्यजमेव च। उदक्यं सूतिकां नारीं सवासाः स्नानमाचरेत् इति ॥ आपस्तम्बः – चण्डालोपस्पर्शने सम्भाषायां दर्शने च दोषस्तत्र प्रायश्चित्तमवगाहनमपामुपस्पर्शने सम्भाषायां ब्राह्मणसंभाषा दर्शने ज्योतिषां दर्शनम् इति ॥ उपस्पर्शने सत्यपामवगाहनं प्रायश्चित्तमित्यर्थः ॥

**ஸம்வர்த்தரும்:-** சண்டாளன், பதிதன், சவம், அந்த்யஜன், ரஜஸ்வலை, ஸூதிகை இவர்களைத் தொட்டால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். **ஆபஸ்தம்பர்:-** சண்டாளனைத் தொட்டாலும், அவனுடன் பேசினாலும், அவனைப் பார்த்தாலும் தோஷமுண்டு. அவைகளுள், தொடுவதில் ஸ்நானம் ப்ராயச் சித்தம். பேசுவதில் ப்ராம்ஹணனுடன் பேசுவது ப்ராயச் சித்தம். பார்ப்பதில் ஸூர்யன் முதலிய ஜ்யோதிஸ்ஸுகளைப் பார்ப்பது ப்ராயச் சித்தம். **வ்யாஸர்:-** சண்டாளன், பதிதன் இவர்களைப் பார்த்தால் மனிதன் ஸூர்யனைப் பார்க்க வேண்டும். ஸ்நானம் செய்தவுடன் இவ்விருவரையும் பார்த்தால் மறுபடி ஸ்நானம் செய்வதால் சுத்தனாகிறான்.

चण्डालादीनां व्यवधाने देशपरिमाणमाह पराशरः – युगं युगद्वयं चैव त्रियुगं च चतुर्युगम्। चण्डालसूतिकोदक्यापतितानामधः क्रमात्॥ ततः सन्निधिमात्रेण सचेलस्नानमाचरेत् ॥ स्नात्वाऽवलोकयेत् सूर्यमज्ञानात् स्पृशते यदि इति। अधः क्रमात् - विपरीतक्रमात् ॥ युगपरिमाणं लोकव्यवहारादवगन्तव्यमिति माधवीये। नवपदं रथयुग मष्टपदमनोयुगमिति लौकिकाः प्रतियन्ति॥ उक्तव्यवधानात् सन्निहिते सचेल स्नानम्, अज्ञानात् गात्रस्पर्शे सूर्यावलोकन मधिकमित्यर्थः ॥ बुद्धिपूर्वाङ्गस्पर्शे तु सचेल स्नानमग्निस्पर्शनं घृतप्राशनं च पूर्वोक्तं द्रष्टव्यम्॥ अङ्गस्पर्शे मज्जनसङ्ख्याऽपि स्मर्यते – वृषलं चान्त्यजातिं च चण्डालं पतितं तथा। आर्तवाभिप्लुतां नारीं स्पृष्ट्वा स्नानं समाचरेत्॥ एकं च दशकं चैव द्वाविंशत् त्रिंशकं तथा। द्वात्रिंशच्च क्रमेणैव मज्जनं विधीयते इति॥

சண்டாளன் முதலியவர்களை விலக்குவதற்கு தேசத்தின் அளவைச் சொல்லுகிறார் **பராசரர்:-** சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலை, பதிதன் இவர்கள் விஷயத்தில் முறையே, நான்கு, யுகம், மூன்று யுகம், இரண்டு யுகம், ஒரு யுகம் என்ற அளவுள்ள ப்ரதேசம்

விலகுவதற்கு அளவானதாம். அந்த அளவுக்குள் ஸமீபத்தில் சென்றால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். அறியாமையால் தொட்டுவிட்டால், ஸ்நானம் செய்து ஸூர்யனையும் பார்க்க வேண்டும். இங்கு 'யுகம்' என்றதின் அளவு லோகவ்யவஹாரத்தால் அறியப்பட வேண்டும் என்று மாதவீயத்தில் உள்ளது. யுகமென்பதற்கு நுகத்தடி என்று பொருள். தேரின் நுகத்தடி ஒன்பது அடியுள்ளது, வண்டியின் நுகத்தடி எட்டு அடியுள்ளது என்கின்றனர் லௌகிகர்கள். சொல்லிய அளவுக்கு ஸமீபத்திற் சென்றால் ஸசேல ஸ்நானம். அறியாமல் சரீரத்தைத் தொட்டால் ஸூர்யதர்சனமும் அதிகம் என்பது பொருள். புத்தி பூர்வமாய் அங்க ஸ்பர்சம் செய்தால், ஸசேல ஸ்நானம், அக்னி ஸ்பர்சம், ஆஜ்யப்ராசனம் என்று முன் சொல்லியதை அறிந்து கொள்ளவும்.

ஸசேல ஸ்நானத்தில் முழுக்கின் கணக்கும் சொல்லப்படுகிறது- "சூத்ரன், அந்த்யஜன், சண்டாளன், பதிதன், ரஜஸ்வலை இவர்களை ஸ்பர்சித்தால், முறையே, ஒன்று, பத்து, இருபத்திரண்டு, முப்பது, முப்பத்திரண்டு என்ற கணக்குடன் முழுக்கைச் செய்ய வேண்டும்" என்று.

स्मृत्यन्तरे – चण्डालस्य चतुष्षष्टिपदं श्रेण्याः शतद्वयम् । द्वात्रिंशदथ वा तस्य मनः शुद्धिदमाचरेत् ।। अविज्ञाते रजःस्रावे मलवद्वस्त्रया गृहे । स्पृष्टं यद्वस्तु तद्दुष्टं न दुष्टं सन्निकर्षतः इति ।। अस्पृश्यस्पर्शने चैव त्रयोदश निमज्ज्य च । आचम्य प्रयतः पश्चात् स्नानं विधिवदाचरेत् इति भरद्वाजवचनमङ्गस्पर्शाभावविषयम् । चण्डालादिव्यतिरिक्तास्पृश्यस्पर्शविषयं च ।। व्यासः – सूतिकापतितोदक्याः चण्डालश्च चतुर्थकः । यथाक्रमं परिहरे देकद्वित्रि चतुर्युगम् इति ।। अत्र व्यासपराशरवचनयोर्विरोधे विकल्पो द्रष्टव्यः । यत्तु – चण्डालं पतितं चैव दूरतः परिवर्जयेत् । गोवालव्यजनादर्वाक् सवासा जलमाविशेत् इति वैयाघ्रपादवचनम्, तत्सङ्कटादिविषयम् ।।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** சண்டாளனுக்கு அறுபத்து நான்கு அடியும், ச்ரேணிக்கு இருநூறு அடியும் விலகவேண்டும். அல்லது அவனுக்கு முப்பத்திரண்டு அடியாவது மனச்சுத்திக்குத் தகுந்தபடி விலகவேண்டும். ரஜோநிர்கமம் தெரியாமல் ஸ்த்ரீ வீட்டில் தொட்ட வஸ்து எதுவோ அது மட்டில் தோஷமுள்ளதாகும். அவளுடைய ஸாமீப்யத்தால் மற்ற வஸ்துக்கள் துஷ்டமாவதில்லை. "தொடக்கூடாதவர்களைத் தொட்டால் பதிமூன்று தடவை முழுகி, ஆசமனம் செய்து, சுத்தனாய், பிறகு விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும்" என்றுள்ள பரத்வாஜ வசனம், அங்கஸ்பர்சம் இல்லாத விஷயத்தைப் பற்றியதும், சண்டாளன் முதலியவரைத் தவிர்த்த அஸ்ப்ருச்யர்களின் ஸ்பர்சவிஷயமுமாம்.

**வ்யாஸர்:-** ஸூதிகை, பதிதன், ரஜஸ்வலை, சண்டாளன் இவர்களுக்கு, முறையே, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, நுகத்தடி தூரம் விலகவேண்டும். இங்கு வ்யாஸ வசனத்திற்கும், பராசர வசனத்திற்கும் விரோதத்தில் விகல்பம் அறியத்தக்கது. "சண்டாளன், பதிதன் இவர்களை தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். கோவாலவ்யஜனத்திற்கு (பசுவின் வால்வீச்சிற்கு) ஸமீபத்தில் நெருங்கினால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும்" என்றுள்ள வையாக்ர பாதவசனம் எதுவோ அது ஸங்கடமான ஸ்தலம் முதலியதின் விஷயமாம்.

यदाह संवर्तः – सङ्कटे विषमे चैव दुर्गे चैव विशेषतः । हट्टपत्तनमार्गे च यथासम्भवमिष्यते ।। तृणकाष्ठादिघातेन कुड्येनान्तरिते तथा । गोवालव्य(वी) जने वाऽपि स्नानं तत्र न विद्यते इति ।। प्रचेताः – वस्त्रान्तरितसंस्पर्शः साक्षात् स्पर्शो विधीयते । साक्षात् स्पर्शे तु यत्प्रोक्तं तद्वस्त्रान्तरितेऽपि च इति ।। अङ्गिराः – यस्तु छायां श्वपाकस्य ब्राह्मणो ह्यधिरोहति । तत्र स्नानं प्रकुर्वीत घृतं प्राश्य विशुध्यति ।। चण्डालपतितच्छायां स्पृष्ट्वा स्नानं समाचरेत् इति ।।

**ஸம்வர்த்தர்:-** நெருக்கமான இடத்திலும், மேடுபள்ளமுள்ள இடத்திலும், அதிகமாய்ச் செல்லமுடியாத இடத்திலும், ஹட்டம் (கடைத்தெரு), பட்டணம் இவைகளின் மார்க்கத்திலும் கூடியவரையில் ஒதுங்க வேண்டும். புற்களாலாவது, கட்டை முதலியவைகளாலாவது, சுவரினாலாவது மறைவுள்ள இடத்தில், கோவால வீஜனத்திற்கு உட்பட்டிருந்தாலும் ஸ்நானம் வேண்டுவதில்லை. (ஒரு பசு நின்று வாலை வீசினால், அந்த அளவுள்ள தூரம் கோவாலவீஜனம் எனப்படும்.) **ப்ரசேதஸ்:-** வஸ்த்ரத்தால் மறைத்துத் தொடுவதும், நேராகத் தொடுவதாகவே கருதப்படுகிறது. நேராகத் தொடுவதில் எந்தவிதி சொல்லப்பட்டுள்ளதோ, அதுவே வஸ்த்ரத்தால் மறைத்துத் தொடுவதிலும் சொல்லப்பட்டுள்ளது. **அங்கிரஸ்:-** எந்த ப்ராம்ஹணன் ச்வபாகனின் (நாய் மாம்ஸத்தைப் புஜிப்பவனின்) நிழலை மிதித்தானோ அவன் ஸ்நானம் செய்து, நெய்யைப் புஜித்தால் சுத்தனாவான். சண்டாளன், பதிதன் இவரின் நிழலைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும்.

स्मृतिरत्ने—छायामन्त्यश्वपाकादेः स्पृष्ट्वा स्नानं समाचरेत् । चत्वारिंशत् पदादूर्ध्वं छायादोषो न विद्यते इति ।। आपस्तम्बः – एकशाखां समारूढश्चण्डालादिर्यदा भवेत् । ब्राह्मणस्तत्र निवसन् स्नानेन शुचितामियात् इति ।। शाखाग्रहणमेवंजातीयद्रव्योपलक्षणार्थम् । अत एव चन्द्रिकायाम् – तार्णे संस्तर एकस्मिन् अस्पृश्यैः सह तिष्ठति । अस्पृष्टस्तैरदुष्टोऽस्तीत्येवं मूढस्तु मन्यते इति ।। तार्णे - तृणनिर्मिते ।।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** அந்த்யஜன், ச்வபாகன் முதலியவரின் நிழலைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். 40 அடிக்கு மேல் நிழலின் தோஷமில்லை. **ஆபஸ்தம்பர்:-** ஒரு கிளையில் சண்டாளன் முதலியவன் ஏறியிருந்தால், ப்ராம்ஹணனும் அங்கிருந்தால்,

*(தூரத்திலிருந்தாலும்) அந்தப்ராம்ஹணன் ஸ்நானத்தால் சுத்தனுவான். கிளே என்றது இம்மாதிரியான த்ரவ்யங்களைச் சொல்வதற்காக. ஆகையால், சந்த்ரிகையில:- புற்களால் செய்யப்பட்ட ஒரே பாய் முதலியதில், தொடக் கூடாதவருடன் சேர்ந்திருந்தால். அவரால் நான் தொடப்படாதலால் தோஷமில்லாதவனுய் இருக்கின்றேன் என்று நினைக்கின்ருன் மூடன். (அவ்விதம் நினைப்பது தவறு. அவன் துஷ்டனேயாம்.)*

आपस्तम्बस्तु – मूढः स्वस्तरे चासंस्पृशन्नन्यानप्रयतान् प्रयतो मन्येत तथा तृणकाष्ठेषु निखाते इति ।। अत्र हरदत्तः – पतितचण्डालसूतिकोदक्याशवस्पृष्टितत्स्पृष्ट्युपस्पर्शने सचेलोपस्पर्शनाच्छुध्यत् इति गौतमः । तस्मिन्विषये इदमुच्यते । शयनतया आसनतया वा सुष्ठु आस्तीर्णः पलालादिसङ्घातः स्वस्तरः । पृषोदरादिषु दर्शनाद्रूपसिद्धिः । यत्रातिश्लक्ष्णतया पलालादेर्मूलाग्रविभागो न ज्ञायते, स मूढः । मूढश्चासौ स्वस्तरश्चेति मूढस्वस्तरः । तस्मिन् पतितादिष्वप्रयतेष्वासीनेषु यदा कश्चित् प्रयत उपविशेत्, न च तान् स्पृशेत्तदा स प्रयतो मन्यते । यथा प्रयत आत्मानं मन्यते प्रयतोऽस्मीति, तथैव मन्येत । नैवंविधविषये तत्स्पृष्टिन्यायः प्रवर्तते । तथा तृणकाष्ठेषु च भूमौ निखातेषु तत्स्पृष्टिन्यायो न भवति इति ।।

*ஆபஸ்தம்பர்:- 'மூடஸ்வஸ்தரே + நிகாதேஷு' என்கிருர். இதற்கு ஹரதத்தரின் வ்யாக்யானம் - ''பதிதன், சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலே, சவத்தைத் தொட்டவன், அவனைத் தொட்டவன் என்ற இவர்களை ஸ்பர்சித்தால் ஸசேல ஸ்நானத்தால் சுத்தனுவான் என்ருர். கௌதமர்- அந்த விஷயத்தில் இது சொல்லப்படுகிறது. படுக்கையாகவோ, ஆஸனமாகவோ நன்ருய் விரிக்கப்பட்ட வைக்கோல் முதலியதின் குவியல் 'ஸ்வஸ்தரம்' எனப்படுகிறது. ரொம்ப ம்ருதுவாய் இருப்பதால் எதில் அடி நுனி என்ற விபாகம்*

தெரியவில்லேயோ அது மூடம். அவ்விதமான ஸ்வஸ்த்ரம் மூடஸ்வஸ்தரம் எனப்படுகிறது. அதில் பதிதன் முதலிய அசுத்தர்கள் உட்கார்ந்திருக்கும் பொழுது, சுத்தனுன ஒருவன் உட்கார்ந்தால், அவர்களைத் தொடாமலிருந்தால், அப்பொழுது அவன் சுத்தனென்று நினைக்க வேண்டும். சுத்தனுயிருப்பவன் எப்படித் தன்னை சுத்தனுயிருக்கிறேன் என்று நினைக்கின்றுனே அவ்விதமே நினைக்க வேண்டும். இவ்விதமான விஷயத்தில் தத்ஸ்ப்ருஷ்டி ந்யாயம் ப்ரவர்த்திப்பதில்லை அவ்விதமே, பூமியில் புதைக்கப் பட்டுள்ள புல், கட்டை இவைகளின் விஷயத்திலும் தத்ஸ்ப்ருஷ்டி ந்யாயம் ப்ரவர்த்திப்பதில்லை'' என்று.

स्नानस्य निमित्तान्तरमुक्तं चतुर्विंशतिमते— बौद्धान् पाशुपतान् जैनान् लोकायतिक कापिलान् । विकर्मस्थान् द्विजान् स्पृष्ट्वा सचेलो जलमाविशेत् ।। कापालिकांस्तु संस्पृश्य प्राणायामोऽधिको मतः इति ।। चन्द्रिकायाम् – जैनान् पाशुपतान् स्पृष्ट्वा लोकायतिकनास्तिकान् । विकर्मस्थान् द्विजान् शूद्रान् सवासा जलमाविशेत् ।। अवकीर्णिनमन्त्यं च स्पृष्ट्वा स्नानेन शुध्यति । स्पृष्ट्वा देवलकं चैव सवासा जलमाविशेत् ।। देवार्चनपरो यस्तु वित्तार्थी वत्सरत्रयम् । स वै देवलको नाम हव्यकव्येषु गर्हितः इति ।।

ஸ்நானத்திற்கு வேறு காரணமும் சொல்லப் பட்டுள்ளது, சதுர்விம்சதிமதத்தில்:- பௌத்தர், பாசுபதர், ஜைனர், லோகாயதிகர், காபிலர், நிஷித்த கர்மங்களைச் செய்யும் ப்ராம்ஹணர்கள் இவர்களைத் தொட்டால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். காபாலிகர்களைத் தொட்டால் ப்ராணுயாமமும் செய்ய வேண்டும். சந்த்ரிகையில்:- ஜைனர், பாசுபதர், லோகாயதிகர், நாஸ்திகர், நிஷித்த கர்மங்களைச் செய்யும் ப்ராம்ஹணர், சூத்ரர் இவர்களைத் தொட்டால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். அவகீர்ணீ, அந்த்யஜன் இவர்களைத் தொட்டால் ஸ்நானத்தால் சுத்தனுகிறுன். தேவலகனைத் தொட்டாலும்

ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். எவன் பணத்தை வேண்டியவனுய், மூன்று வருஷம் தேவபூஜை செய்கின்றுனே, அவன் தேவலகன் எனப்படுவான். அவன் ஹவ்யங்களிலும், கவ்யங்களிலும் நிந்திக்கப் பட்டவன்.

यमः—शुना चैव श्वपाकेन मृतनिर्हरणेन वा । स्पृष्टमात्रस्तु कुर्वीत सचेलं प्लावनं द्विजः । दुःस्वप्ने दुर्जनस्पर्शेऽभ्युदिते स्नानमाचरेत् इति । अभ्युदिते - शयानस्यादित्योदये ।। स्मृत्यन्तरे – स्पृष्ट्वा रुद्रस्य निर्माल्यं सवासा आप्लुतः शुचिः इति ।। संवर्तः – श्ववराहखरानुष्ट्रान् वृकगोमायुवानरान् । काककुक्कुटगृध्रांश्च स्पृष्ट्वा स्नानं समाचरेत् इति ।। हारीतः – चाटकं कुक्कुटं काकं श्वसृगालशिवावृकान् । चितिधूमश्मशानानि विड्वराहखराशुचीन् ।। अवकीर्णिनमन्त्यं च स्पृष्ट्वा स्नानं विधीयते इति ।। पैठीनसिः – काकोलूकस्पर्शने स्नान मनुदकमूत्रपुरीषकरणे सचेलस्नानं महाव्याहृतिहोमश्च इति ।। अङ्गिराः – कृत्वा मूत्रं पुरीषं वा यदा नैवोदकं भवेत् । स्नात्वा लब्धोदकः पश्चात् सचेलस्तु विशुध्यति ।।

**யமன்:**- நாய், ச்வபாகன், சவத்தைச் சுமப்பவன் இவர்களால் ஸ்பர்சிக்கப்பட்டால், உடனே ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். துஷ்டஸ்வப்னம் கண்டாலும், துர்ஜனனைத் தொட்டாலும், படுத்திருக்கும் பொழுது ஸூர்யோதயமானுலும், ஸ்நானம் செய்ய வேண்டும். **மற்ருெரு ஸ்ம்ருதியில்:**- சிவநிர்மால்யத்தைத் தொட்டால் ஸசேல ஸ்நானத்தால் சுத்தனுவான். **ஸம்வர்த்தர்:**- நாய், பன்றி, கழுதை, ஒட்டகம், செந்நாய், நரி, குரங்கு, காக்கை, கோழி, கழுகு இவைகளைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். **ஹாரீதர்:**- சாடகம், கோழி, காக்கை, நாய், நரி, பெண் நரி, செந்நாய், சவப்புகை, ச்மசானம், பன்றி, கழுதை, அசுத்தன், அவகீர்ணீ, அந்த்யஜன் இவர்களைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். **பைடீநஸி:**- காக்கை, கோட்டான்

இவைகளின் ஸ்பர்சத்தில் ஸ்நானம். ஜலமில்லாமல், மூத்ர மல விஸர்ஜனம் செய்தால் ஸசேல ஸ்நானமும், மஹாவ்யாஹ்ருதிகளால் ஹோமமும் விதிக்கப் படுகின்றன. அங்கிரஸ்:- மல மூத்ர விஸர்ஜனம் செய்தவன் ஜலமே கிடைக்காவிடில், பிறகு கிடைத்த பொழுது சௌசத்துடன் ஸசேல ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான்.

सङ्ग्रहे—गौल्याश्च स्पर्शमात्रे तु सरटाकृकलासयोः । शुभे वाऽप्यशुभे वाऽपि सचेलस्नानमाचरेत् इति ।। मनुः – नारं स्पृष्ट्वाऽस्थि सस्नेहं स्नात्वा विप्रो विशुध्यति । आचम्यैव तु निः स्नेहं गामालभ्यार्कमीक्ष्य वा इति ।। विष्णुः – भक्ष्यवर्जं पञ्चनखं तदस्थि सस्नेहं च स्पृष्ट्वा स्नायात् इति ।।

ஸங்கிரஹத்தில்:- பல்லி, அரணை, ஓணான் இவைகளின் ஸ்பர்சம் சுபத்திலானாலும், அசுபத்தி லானாலும், ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். மனு:- ப்ராம்ஹணன், மனிதனின் பசையுள்ள எலும்பைத் தொட்டால் ஸ்நானத்தால் சுத்தனாகிறான். ஈரமில்லாத எலும்பைத் தொட்டால் ஆசமனம் செய்து, பசுவை ஸ்பர்சித்து, அல்லது ஸூர்யனைத் தர்சித்துச் சுத்தனாகிறான். விஷ்ணு:- பக்ஷணத்திற்கு அர்ஹமல்லாத பஞ்சநக ப்ராணியை ஸ்பர்சித்தாலும், பஞ்ச நகத்தின் (ஐந்துநகமுள்ள ப்ராணியின்) ஈரமுள்ள எலும்பை ஸ்பர்சித்தாலும் ஸ்நானம் செய்ய வேண்டும்.

श्वस्पर्शे विशेषमाह आपस्तम्बः—शुनोपहतः सचेलोऽवगाहेत प्रक्षाल्य वा तं देश मग्निना संस्पृश्य पुनः प्रक्षाल्य पादौ चाचम्य प्रयतो भवति इति ।। व्यवस्थितविकल्पोऽयम् ।। तथा च मनुः – ऊर्ध्वं नाभेः करौ मुक्त्वा यदङ्गमुपहन्यते । तत्र स्नानविधिः प्रोक्ता ह्यधः प्रक्षालनं स्मृतम् इति ।। विष्णुरपि – नाभेरधः कराग्रं वा शुना यद्युपहन्यते । प्रक्षाल्य तदभिज्वाल्य पुनराचम्य शुध्यति ।। नाभेरूर्ध्वं शुनास्पृष्टो

लिप्तोऽमेध्येन वा पुनः । प्रक्षाल्य मृद्भिरङ्गानि सचेलं स्नानमर्हति ॥ शातातपः – रजकश्चर्मकृच्चैव व्याधजालोपजीविनौ । निर्णेजकः सौनिकश्च नटः शैलूषकस्तथा ॥ मुखेभगस्तथाश्वा च ग्रामकुक्कुटसूकरौ । एतैर्यदङ्गं स्पृष्टं स्यात् शिरोवर्जं द्विजातिषु । तोयेन क्षालनं कृत्वा आचान्तः प्रयतो मतः इति ॥ अत्रापि शुना साहचर्यात् शिरोग्रहणं नाभेरूर्ध्वाङ्गोपलक्षणार्थम् ॥

*நாயின் ஸ்பர்சத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார். **ஆபஸ்தம்பர்:-** நாயால் தீண்டப்பட்டவன் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். அல்லது அந்த ப்ரதேசத்தை அலம்பி, அக்னியினால் தொட்டு, மறுபடி அலம்பி, கால்களையும் அலம்பி, ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். இது வ்யவஸ்தித விகல்பம். அவ்விதமே, **மனு:-** நாபிக்கு மேல் கைகள் தவிர எந்த அங்கமாவது நாயால் தீண்டப்பட அதில் ஸ்நானம் விதிக்கப்படுகிறது. நாபிக்குக் கீழான அங்கமானால் அலம்புதல் விதிக்கப்பட்டுள்ளது. **விஷ்ணுவும்:-** நாபிக்குக் கீழுள்ள அங்கமாவது, கையாவது கையால் தொடப்பட்டால், அதை அலம்பி, அக்னியால் ஸ்பர்சித்து, இருமுறை ஆசமனம் செய்தால் சுத்தனாகிறான். நாபிக்கு மேல் நாயால் தீண்டப்பட்டால், அல்லது மலத்தால் ஸம்பந்தப்பட்டால், மண்ணால் அங்கங்களை அலம்பி, ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். **சாதாதபர்:-** வண்ணான், சக்கிலி, வேடன், வலையன், நிர்ணேஜகன், மாம்ஸவிக்ரயீ, நடன், சைலூஷகன், முகேபகன், நாய், ஊர்க்கோழி, பன்றி இவர்களால், தலையைத் தவிர எந்த அங்கம் தொடப்பட்டதோ அதை ஜலத்தால் அலம்பி ஆசமனம் செய்தால் ப்ராம்ஹணன் சுத்தனாகிறான். இங்கும், நாயுடன் சேர்ந்திருப்பதால், தலையென்றது நாபிக்கு மேற்பட்ட அங்கங்களையும் சொல்வதற்காம்.*

जातुकर्णोऽपि—ऊर्ध्वं नाभेः करौ मुक्त्वा यदङ्गं स्पृशते खगः । स्नानं तत्र प्रकुर्वीत शेषं प्रक्षाल्य शुध्यति इति ॥ खगः - पक्षी ॥ शङ्खः -

रथ्याकर्दमतोयेन ष्ठीवनाद्येन वा तथा। नाभेरूर्ध्वं नरः स्पृष्टः सद्यः स्नानेन शुध्यति इति ॥ व्यासः – भासवानरमार्जारखरोष्ट्राणां शुनां तथा। सूकराणाममेध्यं वै स्पृष्ट्वा स्नायात् सचेलकम् इति ॥

ஜாதுகர்ணரும்:- நாபிக்கு மேல் கைகள் தவிர எந்த அங்கத்தையாவது பக்ஷி ஸ்பர்சித்தால், அப்பொழுது ஸ்நானம் செய்ய வேண்டும். மற்ற அங்கத்தையானால் அலம்பியதால் சுத்தனாகிறான். சங்கர்:- வீதியிலுள்ள சேற்றாலாவது தண்ணீராலாவது, எச்சில் (கோழை) முதலியதாலாவது நாபிக்கு மேல் மனிதன் தொடப்பட்டால் உடனே ஸ்நானத்தால் சுத்தனாகிறான். வ்யாஸர்:- பருந்து, குரங்கு, பூனை, கழுதை, ஒட்டகை, நாய், பன்றி இவைகளின் மலத்தை ஸ்பர்சித்தால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும்.

विष्णुः—आजानुभ्यां भवेत् स्नानमानाभ्युपवसेदहः। ऊर्ध्वं नाभेस्त्रिरात्रं स्यादमेध्यस्पर्शने विधिः इति ॥ मनुः – पुच्छे बिडालकं स्पृष्ट्वा स्नात्वा विप्रो विशुध्यति। भोजने कर्मकाले च विधिरेष उदाहृतः इति ॥ इतराङ्गस्पर्शे त्वाचमनमेव, मार्जारमूषिकस्पर्शे कर्म कुर्वन्नुपस्पृशेत् इति बृहस्पति स्मरणात् ॥ अन्यकाले मार्जारस्पर्शेनाशुद्धिः। तथा च मनुः– मार्जारश्चैव दर्वी च मारुतश्च सदा शुचिः इति ॥

விஷ்ணு:- பாதம் முதல் முழங்காலுக்குள் மலத்தால் ஸ்பர்சம் ஏற்பட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். அதற்கு மேல் நாபி வரையிலானால் பகல் முழுவதும் உபவாஸமிருக்க வேண்டும். நாபிக்கு மேல் ஸ்பர்சிக்கப்பட்டால் மூன்று நாள் உபவாஸமிருக்க வேண்டும். அமேத்ய ஸ்பர்சத்தில் இவ்விதம் விதியாம். மனு:- ப்ராம்ஹணன் பூனையை வாலில் தொட்டால் ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான். போஜன காலத்திலும், கர்மானுஷ்டான காலத்திலும் இந்த விதி சொல்லப்பட்டுள்ளது. மற்ற அங்கங்களின் ஸ்பர்சத்தில்

ஆசமனம் மட்டில். 'கர்மானுஷ்டானம் செய்பவன் பூனே, எலி இவைகளை ஸ்பர்சித்தால் ஆசமனம் செய்ய வேண்டும் என்று ப்ருஹஸ்பதி சொல்லியிருப்பதால். மற்றக் காலத்தில் பூனையைச் தொடுவதால் அசுத்தியில்லை. அவ்விதமே, மனு:- பூனையும், பரிமாறுகிற கரண்டியும், காற்றும் எப்பொழுதும் சுத்தமாம்.

पराशरोऽपि – मार्जारमक्षिकाकीटपतङ्गकृमिदर्दुराः । मेध्यामेध्यं स्पृशन्तोऽपि नोच्छिष्टं मनुरब्रवीत् ।। यदा पुनरशुद्ध श्वादीन् स्पृशति, तदा विशेषो देवलेन दर्शितः – श्वपाकं पतितं चान्त्यमुन्मत्तं शवदाहकम्। सूतिकां स्राविकां नारीं रजसा च परिप्लुताम् । श्वकुक्कुटवराहांश्च ग्राम्यान् संस्पृश्य मानवः । सचेलः सशिराः स्नात्वा तदानीमेव शुध्यति ।। स्वयमेवैतानशुद्धस्तु यदि स्पृशेत् । विशुध्यत्युपवासेन तथा कृच्छ्रेण वा पुनः इति । स्राविका - प्रसवस्य कारियित्री ।। एतद्बुद्धिपूर्वस्पर्शविषयम्। तथा च कूर्मपुराणम् – उच्छिष्टोऽद्भिरनाचान्तश्चण्डालादीन् स्पृशेद्द्विजः। प्रमादाद्वै जपेत् स्नात्वा गायत्र्यष्टसहस्रकम् ।। चण्डालपतितादींस्तु कामाद्यः संस्पृशेद्द्विजः । उच्छिष्टस्तत्र कुर्वीत प्राजापत्यं विशुद्धये इति ।।

பராசரரும்:- பூனே, ஈ, பூச்சி, விட்டில், புழு, தவளை இவைகள் சுத்த வஸ்துக்களையும் அசுத்த வஸ்துக்களையும் தொடுகின்றனவாயினும், அவைகளின் ஸ்பர்சத்தால் அசுத்தியில்லை என்று மனு சொல்லியுள்ளார். எப்பொழுது தான் அசுத்தனுயிருந்து நாய் முதலியதைத் தொடுகின்றானே, அப்பொழுது விசேஷம் தேவலரால் காண்பிக்கப்பட்டுள்ளது. ச்வபாகன், பதிதன், அந்த்யஜன், உன்மத்தன், சவத்தைத் தஹிப்பவன், ஸூதிகை, ஸ்ராவிகை, ரஜஸ்வலை, க்ராமத்திலுள்ள, நாய், கோழி, பன்றி இவர்களை மனிதன் ஸ்பர்சித்தால் வஸ்த்ரத்துடன் தலை முழுகினுல் அப்பொழுதே சுத்தனுகிறான். அசுத்தர்களான இவர்களை ஸ்வயம் அசுத்தனுயிருப்பவன் ஸ்பர்சித்தால் உபவாஸத்தால், அல்லது க்ருச்ரத்தால், சுத்தனுகிறான். (ஸ்ராவிகை = ப்ரஸவம் செய்விப்பவள்) இது புத்தி

பூர்வமாய் ஸ்பர்சித்த விஷயம். அவ்விதமே, **கூர்மபுராணம்:-** அசுத்தனுயிருக்கும் ப்ராம்ஹணன் ஆசமனம் செய்யாமல் சண்டாளன் முதலியவரைக் கவனிக்காமல் ஸ்பர்சித்தால், ஸ்நானம் செய்து, 1008 - முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். எந்த ப்ராம்ஹணன் தான் அசுத்தனுயிருந்து, சண்டாளன், பதிதன் முதலியவரை புத்தி பூர்வமாய் ஸ்பர்சித்தாளுே அவன் சுத்திக்காக ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

अनेनैवाभिप्रायेण विष्णुरपि – अनुच्छिष्टेन संस्पृष्टे स्नानं येन विधीयते। तेनैवोच्छिष्ट संस्पृष्टः प्राजापत्येन शुध्यति इति। पराशरः – अनुच्छिष्टेन शूद्रेण स्पर्शे स्नानं विधीयते। तेनोच्छिष्टेन संस्पृष्टः प्राजापत्यं समाचरेत्॥ उच्छिष्टोच्छिष्टसंस्पृष्टः शुना शूद्रेण वा द्विजः। उपोष्य रजनीमेकां पञ्चगव्येन शुध्यति इति। अनुच्छिष्टस्य विप्रस्य अनुच्छिष्टशूद्रस्पर्शे स्नानमात्रम्, उच्छिष्ट शूद्रस्पर्शे कृच्छ्रम्। उच्छिष्टस्य द्विजस्यान्येन उच्छिष्टेन द्विजेन शुना वाऽनुच्छिष्ट शूद्रेण वा स्पर्शे एकदिनमुपवासः, पञ्चगव्यप्राशनं चेत्यर्थः॥

இதே அபிப்ராயத்தினுல், **விஷ்ணுவும்:-** உச்சிஷ்டனல்லாத எவனுல் ஸ்பர்சிக்கப்பட்டதில் ஸ்நானம் விதிக்கப்படுகின்றதோ, அவனுல் உச்சிஷ்டனுனவன் ஸ்பர்சிக்கப்பட்டால் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தால் சுத்தனுகிறுன். **பராசரர்:-** உச்சிஷ்டனல்லாத சூத்ரனுல் ஸ்பர்சமானுல் ஸ்நானம் விதிக்கப்படுகின்றது. உச்சிஷ்டனுன சூத்ரனுல் ஸ்பர்சமானுல் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். உச்சிஷ்டனல்லாத ப்ராம்ஹணனுக்கு, உச்சிஷ்டனல்லாத சூத்ரனின் ஸ்பர்சத்தில் ஸ்நானம் மட்டில். உச்சிஷ்டனுன சூத்ரனுல் ஸ்பர்சத்தில் க்ருச்ரம். உச்சிஷ்டனுன ப்ராம்ஹணனுக்கு, உச்சிஷ்டனுன ப்ராம்ஹணனுல், அல்லது நாயினுல், அல்லது உச்சிஷ்டனல்லாத சூத்ரனுல் ஸ்பர்சத்தில் ஒருநாள் உபவாஸமும், பஞ்சகவ்ய ப்ராசனமும் என்பது பொருள்.

स्मृत्यन्तरे – चण्डालं पतितं श्वानमुदक्यां सूतिकां तथा। दृष्ट्वा भुक्त्यन्तरे स्नात्वा मानस्तोकेत्यृचं जपेत् ।। उच्छिष्टवदनो विप्रः शूद्रादीन्नावलोकयेत्। अवलोकयेत् प्रमादाच्चेत् सह तैर्भुक्तवान् भवेत् इति ।। भरद्वाजः – शावे शवगृहं गत्वा श्मशाने वाऽन्तरेऽपि वा। आतुरव्यञ्जनं कृत्वा दूरस्थोऽप्यशुचिर्भवेत् इति ।। आतुरव्यञ्जनम् - मृतविषयविलापादि ।। पराशरः – अस्थिसञ्चयनादूर्ध्वं रुदित्वा स्नानमाचरेत्। अन्तर्दशाहे विप्रस्य ह्यूर्ध्वमाचमनं भवेत्।। शिशो रभ्युक्षणं प्रोक्तं बालस्याचमनं स्मृतम्। रजस्वला(भि)दिसंस्पर्शे स्नानमेव कुमारके। शिशुरादन्तजननादाचलद्बालकः स्मृतः। कुमारः स तु विज्ञेयो बुधैरामौञ्जिबन्धनात् इति ।।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *சண்டாளன், பதிதன், நாய், ரஜஸ்வலை, ஸூதிகை இவர்களைப் போஜன மத்யத்தில் பார்த்தால், ஸ்நானம் செய்து, 'மானஸ்தோகே' என்ற ருக்கை ஜபிக்க வேண்டும். உச்சிஷ்டமான வாயையுடைய ப்ராம்ஹணன் சூத்ரன் முதலியவரைப் பார்க்கக் கூடாது. கவனமில்லாமல் பார்த்தால் அவருடன் புஜித்தவனாய் ஆவான்.* **பரத்வாஜர்:-** *சாவத்தில் சவக்ருஹம் சென்றாலும், ச்மசானத்திலோ நடுவிலோ ஆதுரவ்யஞ்ஜனம் செய்தாலும், தூரத்தில் இருப்பவனானாலும் அசுத்தனாவான். (ஆதுரவ்யஞ்ஜனம் = இறந்தவனைக் குறித்து அழுவது முதலியது)* **பராசரர்:-** *அஸ்தி ஸஞ்சயனத்திற்குப் பிறகு பத்துநாட்களுள் அழுதால் ஸ்நானம் செய்ய வேண்டும். அதற்குப் பிறகு ப்ராம்ஹணனுக்கு ஆசமனம் விதிக்கப்பட்டுள்ளது. சிசுவுக்கு ப்ரோக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது. பாலனுக்கு ஆசமனம் சொல்லப்பட்டுள்ளது. ரஜஸ்வலாதி ஸ்பர்சத்தில் குமாரனுக்கு ஸ்நானமே விதிக்கப்பட்டுள்ளது. பற்கள் முளைக்கும் வரை சிசுவாம். சௌளசம் வரையில் பாலன் எனப்படுகிறான். உபநயனம் வரையில் குமாரன் என்று வித்வான்கள் சொல்லுகின்றனர்.*

निमित्तान्तरमाह स एव – तस्मिन्नाचमनं कुर्याद्यत्र भाण्डेऽथ भुक्तवान्। यद्युत्तिष्ठत्यनाचान्तः भुक्तवानासनात्ततः। स्नानं सद्यः प्रकुर्वीत सोऽन्यथाऽप्रयतो भवेत् इति॥ स एव – वृकश्वानसृगालाद्यैः दष्टो यस्तु द्विजोत्तमः। स्नात्वा जपेत् स गायत्रीं पवित्रां वेदमातरम्॥ गवां शृङ्गोदकस्नानं महानद्योस्तु सङ्गमे। समुद्रदर्शनाद्वाऽपि शुनादष्टः शुचिर्भवेत्। वेदविद्याव्रतस्नातः शुना दष्टो द्विजो यदि। स हिरण्योदके स्नात्वा घृतं प्राश्य विशुध्यति॥

வேறு நிமித்தமும் சொல்லுகிறார். பராசரரே:- எந்தப் பாத்ரத்தில் புஜித்தானோ அதிலேயே ஆசமனம் செய்ய வேண்டும். ஆசமனம் செய்யாமல் அந்த ஆஸனத்திலிருந்து எழுந்தால் உடனே ஸ்நானம் செய்ய வேண்டும். இல்லாவிடில் அவன் அசுத்தனாவான். பராசரரே:- செந்நாய், நாய், நரி முதலிவைகளால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்து சுத்தமாகியதும், வேதமாதாவாகியதுமான காயத்ரியை ஜபிக்க வேண்டும். பசுவின் கொம்பிலுள்ள ஜலத்தால் ஸ்நானம், மஹாநதிகளின் ஸங்கமத்தில் ஸ்நானம், ஸமுத்ர தர்சனம் இவைகளில் ஒன்றினால் நாயால் கடிக்கப்பட்டவன் சுத்தனாவான். வேதாத்யயனம் செய்து வித்யாவ்ரத ஸ்நாதனான ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால் ஸ்வர்ணத்துடன் கூடிய ஜலத்தில் ஸ்நானம் செய்து, நெய்யை ப்ராசனம் செய்தால் சுத்தனாகிறான்.

सव्रतस्तु शुना दष्टो यस्त्रिरात्रमुपावसेत्। घृतं कुशोदकं पीत्वा व्रतशेषं समापयेत्॥ अव्रतः सव्रतो वाऽपि शुना दष्टो भवेद्द्विजः। प्रणिपाताद्भवेत् पूतो विप्रैश्चक्षुर्निरीक्षितः॥ शुनाऽऽघ्रातावलीडस्य नखैर्विलिखितस्य च। अद्भिः प्रक्षालनं प्रोक्तमग्निना चोप(चूल)धूपनम्॥ शुना तु ब्राह्मणी दष्टा जम्बुकेन वृकेण वा। उदितं ग्रहनक्षत्रं दृष्ट्वा सद्यः शुचिर्भवेत्॥ कृष्णपक्षे यदा सोमो न दृश्येत कदाचन। यां दिशं व्रजते सोमस्तां दिशं

चावलोकयेत् ।। असद्ब्राह्मणके ग्रामे शुना दष्टो द्विजोत्तमः। वृषं प्रदक्षिणीकृत्य सद्यः स्नात्वा विशुध्यति इति ।। वृकः - आरण्यकश्वा। आदिशब्देन वराहादयो गृह्यन्ते। तैर्दष्टः स्नात्वा गायत्र्यष्टशतं जपेत्। एतच्चासमर्थविषयम्।

வ்ரதானுஷ்டானத்தில் இருக்கும் ப்ராம்ஹணன் நாயால் கடிக்கப்பட்டால் மூன்று நாள் உபவாஸமிருக்க வேண்டும். நெய், குசோதகம் இவைகளை ப்ராசனம் செய்து. வ்ரதத்தின் சேஷத்தை முடிக்க வேண்டியது. வ்ரத மனுஷ்டிப்பவன் ஆனாலும், அனுஷ்டிக்காதவன் ஆனாலும், நாயினால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன், ப்ராம்ஹணர்களை நமஸ்கரித்து, அவர்களின் கண்களால் பார்க்கப்பட்டால் சுத்தனாகிறான். நாயால் முகரப்பட்டதும், நாக்கினால் நக்கப்பட்டதும், நகங்களால் கீறப்பட்டதுமான அங்கத்திற்கு ஜலத்தால் அலம்புதலும், அக்னியா ஸ்பர்சமும் சொல்லப்பட்டுள்ளது. நாய் அல்லது நரி, அல்லது செந்நாய் இவைகளால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹண ஸ்த்ரீ, உதயமான க்ரஹம், நக்ஷத்ரம் இவைகளைப் பார்க்கல் அப்பொழுதே சுத்தையாகிறாள். க்ருஷ்ண பக்ஷத்தில் எப்பொழுதாவது சந்த்ரன் காணப்படாவிடில், எந்தக் திக்கில் சந்த்ரன் செல்கிறானோ அந்தத் திக்கைப் பார்க்க வேண்டும். ப்ராம்ஹணர் இல்லாத க்ராமத்தில், நாயால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன், உடனே ஸ்நானம் செய்து வ்ருஷபத்தை ப்ரதக்ஷிணம் செய்தால் சுத்தனாகிறான். இங்கு ஆதிசப்தத்தால் பன்றி முதலியவை சொல்லப்படுகின்றன. அவைகளால் கடிக்கப்பட்டவன், ஸ்நானம் செய்து 108 - முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். இது அசக்தவிஷயம்.

समर्थस्तु गोशृङ्गोदकस्नानादिकमाचरेत्। तत्र शृङ्गोदकस्नानं नाम शृङ्गपूरितेनोदकेन गायत्र्या शतवारमभिमन्त्रितेन सेचनम्। शृङ्गोदकस्नान सङ्गमस्नान समुद्रदर्शनानामधम मध्यमोत्तमभेदेन वा दंशतारतम्येन वा

व्यवस्था । सव्रताव्रतावुभावपि विप्रान् प्रणिपत्य तैर्निरीक्षितौ यथोक्तप्रायश्चित्ताचरणेन पूतौ भवतः । यस्मिन् ग्रामे ब्राह्मणा न सन्ति, तत्र ब्राह्मणप्रणिपातनिरीक्षणयोः स्थाने वृषभप्रदक्षिणस्नाने द्रष्टव्ये । यस्तु शुना न दष्टः, किन्तु नासिकयाऽऽघ्रातः, जिह्वयाऽवलीढः, नखैर्वा विलिखितः, एते त्रयोऽपि तं प्रदेशं प्रक्षाल्य वह्निना सन्ताप्य शुद्धाः स्युरिति माधवीये व्याख्यातम् ॥

*சக்தனுகில் கோச்ருங்கோதக ஸ்நானம் முதலியதைச் செய்ய வேண்டும். அதில் கோச்ருங்கோதக ஸ்நானம் என்பது, (இறந்த) பசுவின் கொம்பில் ஜலத்தை நிரப்பி, காயத்ரியால் நூறுமுறை அபிமந்த்ரித்து அதனுல் ஸ்நானம் செய்வதாம். ச்ருங்கோதக ஸ்நானம், ஸங்கம ஸ்நானம், ஸமுத்ரதர்சனம் இவைகளுக்கு உத்தம மத்யம அதம தாரதம்யத்தாலாவது, கடியின் தாரதம்யத்தாலாவது வ்யவஸ்தையை அறியவும். வ்ரதமுடையவன் வ்ரதமில்லாதவன் இருவரும், ப்ராம்ஹணர்களை நமஸ்கரித்து அவர்களால் பார்க்கப்பட்டால் யதாவிதி ப்ராயச் சித்தத்தால் சுத்தராகின்றனர். எந்த க்ராமத்தில் ப்ராம்ஹணர் இல்லையோ அங்கு, ப்ராம்ஹண நமஸ்கார தர்சனங்களின் ஸ்தானத்தில், வ்ருஷப ப்ரதக்ஷிணமும் ஸ்நானமும் என்றறியவும். எவன் நாயால் கடிக்கப்படாமல், மூக்கினுல் முகர்க்கப்பட்டானே அவனும், எவன் நாக்கினுல் நக்கப்பட்டானே அவனும், எவன் நகங்களால் கீறப்பட்டானே அவனும், இம்மூவரும், அந்த இடத்தை அலம்பி, அக்னியால் சுடச் செய்தால் சுத்தராகின்றனர், என்று மாதவீயத்தல் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது.*

शातातपोऽपि –गवां शृङ्गोदकस्नानान्महानद्युपसङ्गमात् । समुद्रदर्शनाद्वाऽपि शुना दष्टः शुचिर्भवेत् ॥ अव्रतः सव्रतो वाऽथ शुना दष्टस्तु यो द्विजः । हिरण्योदकमिश्रं तु घृतं प्राश्य विशुध्यति इति ॥ वसिष्ठः – ब्राह्मणस्तु शुना दष्टः नदीं गत्वा समुद्रगाम् । प्राणायामशतं कृत्वा घृतं

प्राश्य विशुध्यति इति ।। अङ्गिराः – ब्रह्मचारी शुना दष्टः त्रिरात्रेणैव शुध्यति । गृहस्थस्तु द्विरात्रेण एकाहेनाग्निहोत्रवान् । नाभेरूर्ध्वं तु दष्टस्य तदेव द्विगुणं भवेत् । तदेव त्रिगुणं वक्त्रे मूर्ध्नि चेत् स्याच्चतुर्गुणम् ।। अत्र विच्छूद्रयोनिस्तु स्नानेनैव शुचिर्भवेत् । द्विगुणं तु वनस्थस्य तथा प्रव्रजितस्य च ।। ब्राह्मणी तु शुनादष्टा सोमे दृष्टिं निपातयेत् । यदा न दृश्यते सोमः प्रायश्चित्तं तदा कथम् ।। यां दिशं तु गतस्सोमः तां दिशं ह्यवलोकयेत् । सोममार्गेण सा पूता पञ्चगव्येन शुध्यति इति ।।

**சாதாதபரும்**:- கோச்ருங்கோதக ஸ்நானத்தாலும், மஹாநதீ ஸங்கம ஸ்நானத்தாலும், ஸமுத்ர தர்சனத்தாலும், நாயால் கடிக்கப்பட்டவன் சுத்தனுவான். வ்ரத மனுஷ்டிப்பவனுயினும், அனுஷ்டிக்காதவனுயினும், நாயால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன், ஸ்வர்ணத்துடனும், ஜலத்துடனும் கூடிய நெய்யைப் பருகிஞல் சுத்தனுகிருன். **வஸிஷ்டர்**:- நாயால் கடிக்கப்பட்ட ப்ராம்ஹணன், ஸமுத்ரம் நோக்கிப் பெருகுகிற நதியை அடைந்து ஸ்நானம் செய்து, 100 முறை ப்ராணுயாமம் செய்து, நெய்யைப் பருகிஞல் சுத்தனுகிருன். **அங்கிரஸ்**:- ப்ரம்ஹசாரீ, நாயால் கடிக்கப்பட்டால் மூன்று நாட்களுக்குப் பிறகு சுத்தனுகிருன். க்ருஹஸ்தனுகில் இரண்டு நாட்களால் சுத்தனுகிருன். அக்னிஹோத்ரியாஞல் ஒரு நாளால் சுத்தனுகிருன். நாபிக்குமேல் கடிக்கப்பட்டால், அதுவே இரு மடங்காகும். முகத்தில் கடிக்கப்பட்டால் அதுவே மூன்று மடங்காகும். தலையில் கடிக்கப்பட்டால் அதுவே நான்கு மடங்காகும். க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் இவர்கள் நாயால் கடிக்கப்பட்டால் ஸ்நானத்தாலேயே சுத்தராகின்றனர். வானப்ரஸ்தனுக்கு இரண்டு மடங்கு, ஸன்யாஸிக்குமப் படியே. நாயால் கடிக்கப்பட்டால், ப்ராம்ஹண ஸ்த்ரீ சந்த்ரனிடத்தில் கண்ணைச் செலுத்த வேண்டும். சந்த்ரன் காணப்படாமல் இருக்கும் போது ப்ராயச் சித்தம் எப்படி? எனில், சந்த்ரன் எந்தத் திக்கில்

சென்றிருக்கின்றனோ அந்தத் திக்கைப் பார்க்க வேண்டும். அதனால் அவள் சுத்தையாகி, பஞ்சகவ்யத்தால் சுத்தையாகிறாள்.

अरुणोदयात् पूर्वभावि स्नानं निषेधति पराशरः – भास्करस्य करैः पूतं दिवा स्नानं प्रशस्यते। अप्रशस्तं निशि स्नानं राहोरन्यत्र दर्शनात्। स्नानं दानं जपो होमः कर्तव्यो राहुदर्शने। अन्यदा त्वशुची रात्रि स्तस्मात्तां परिवर्जयेत् इति।।

அருணோதயத்திற்கு முன் ஸ்நானத்தை நிஷேதிக்கின்றார். பராசரர்:- ஸூர்ய கிரணங்களால் சுத்தமாவதால் பகலில் ஸ்நானம் புகழப்படுகிறது. ராத்ரியில் ஸ்நானம் ப்ரசஸ்தமல்ல. ராஹு தர்சனம் (க்ரஹணம்) தவிர்த்து. ராஹு தர்சனத்தில், ராத்ரியானாலும் ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம் இவைகளைச் செய்ய வேண்டும். மற்றக் காலத்தில் ராத்ரி அசுத்தம். ஆகையால் அதை (ஸ்நானாதிகளில்) வர்ஜிக்க வேண்டும்.

मनुः – न स्नानमाचरेद्भुक्त्वा नातुरो न महानिशि। न वासोभिः सहाजस्रं नाविज्ञाते जलाशये इति।। न स्नानमाचरेद्भुक्त्वेति दृष्टार्थस्य स्नानस्य निषेधः। नातुर इत्यदृष्टार्थस्य च। न वासोभिरिति, 'सवासा जलमाविशे' दिति उक्तविषये, प्रातर्मध्यन्दिनयोश्च सोत्तरीयस्नानम्, अन्यत्र यादृच्छिकादौ अन्तर्वाससैव सह स्नानमित्यर्थः।। पराशरः – महानिशा तु विज्ञेया मध्यस्थप्रहरद्वयम्। प्रदोषपश्चिमौ यामौ दिनवत्स्नानमाचरेत् इति।। एतच्च आपद्विषयम्। अन्यथा भास्करस्य करैरित्यनेन विरुध्यते।।

மனு:- போஜனம் செய்த பிறகும், வ்யாதியுள்ளவனும், மஹாராத்ரியிலும், எப்பொழுதும் வஸ்த்ரங்களுடனும், அறியப்படாத ஜலாசயத்திலும் ஸ்நானம் செய்யக் கூடாது. இங்கு, போஜனம் செய்த பிறகு கூடாதென்றது த்ருஷ்டார்த்தமான ஸ்நானத்தை

நிஷேதித்தது. வ்யாதிஸ்தனாய் இருப்பவன் கூடாதென்று, அத்ருஷ்டார்த்தத்தையும் நிஷேதிப்பதாம். வஸ்த்ரங்களுடன் கூடாதென்று, 'வஸ்த்ரத்துடன் ஸ்நானம் செய்ய வேண்டும்' என்று சொல்லிய விஷயத்திலும், காலையிலும், மத்யாஹ்னத்திலும் செய்யும் ஸ்நானத்திலும் உத்தரீயத்துடன் ஸ்நானம். மற்ற யாத்ருச்சிகம் முதலியதில் இடுப்பு வஸ்த்ரத்துடன் மட்டுமே ஸ்நானம் என்பதற்காம். **பராசரர்:-** 'ராத்ரியின் நடுவிலுள்ள இரண்டு யாமம் மஹாநிசை எனப்படும். பிரதோஷ காலத்திலும் கடைசி யாமத்திலும் பகலில் போல் ஸ்நானம் செய்யலாம்' என்றார். இது ஆபத் விஷயம். இவ்விதம் இல்லையென்றால் 'பாஸ்கரஸ்ய கரை: பூதம்' என்பதுடன் விரோதிக்கும்.

षट्त्रिंशन्मते – अपेयं हि सदा तोयं रात्रौ मध्यमयामयोः । स्नानं तत्र न कुर्वीत तथैवाचमनक्रियाम् । मूत्रोच्चारे महारात्रौ कुर्यान्नाचमनं तु यः । प्रायश्चित्तीयते विप्रः प्राजापत्यार्धमर्हति इति ।। वृद्धमनुः – आराध्यं देवमाराध्य बन्धूनप्यनुसृत्य च । भुक्त्वा व्याधौ च न स्नायात् तैलेनापि निशास्वपि इति ।। मेधातिथिरपि – न स्नायादुत्सवेऽतीते मङ्गल्यं विनिवर्त्य च । अनुव्रज्य सुहृद्बन्धूनर्चयित्वेष्ट देवताः । न स्नानमाचरेद्भुक्त्वा नातुरो न महानिशि इति ।। कालादर्शेऽपि – अनुव्रज्येष्ट बन्धूंश्च व्याधौ भुक्त्यन्तरं निशि । इष्टं देवं समभ्यर्च्य विधाय च महोत्सवम् । विना निमित्तं न स्नायात् निमित्तेऽपि (रुगा) च नातुरः इति ।।

**ஷட்த்ரிம்சன்மதத்தில்:-** ராத்ரியின், நடுவான இரண்டு யாமங்களில், ஜலம் பருகத்தகாதது. அப்பொழுது ஸ்நானம் செய்யக் கூடாது. ஆசமனமும் செய்யக் கூடாது. மூத்ர விஸர்ஜனம் மலவிஸர்ஜனம் செய்தால், மஹாராத்ரியில் எவன் ஆசமனம் செய்யவில்லையோ, அந்த ப்ராம்ஹணன் ப்ராயச் சித்தார்ஹனாகிறான். **வ்ருத்தமனு:-** பூஜிக்கத் தகுந்த தேவதையைப் பூஜித்த பிறகும்,

பந்துக்களைப் பின் சென்று அனுப்பிய பிறகும், புஜித்த பிறகும், வ்யாதியிலும், தைலத்துடனும் கூட ஸ்நானம் செய்யக் கூடாது. ராத்திரியிலும் ஸ்நானம் கூடாது. **மேதாதிதியும் :-** உத்ஸவம் முடிந்த பிறகும், மங்கள கார்யத்தை முடித்த பிறகும், மித்ரர், பந்துக்கள் இவர்களைப் பின் சென்று அனுப்பிய பிறகும், இஷ்ட தேவதைகளைப் பூஜித்த பிறகும், போஜனம் செய்த பிறகும், வ்யாதியுள்ள காலத்திலும், மஹாராத்ரியிலும் ஸ்நானம் செய்யக் கூடாது. **காலாதர்சத்திலும்:-** இஷ்டரையும், பந்துக்களையும் பின் சென்று அனுப்பிய பிறகும், வ்யாதியிலும், புஜித்த பிறகும், ராத்ரியிலும், இஷ்டதேவதையைப் பூஜித்த பிறகும், மஹோத்ஸவத்தை முடித்த பிறகும், காரணம் இல்லாமலும் ஸ்நானம் செய்யக் கூடாது. காரணம் இருந்தாலும் வ்யாதியுள்ளவன் ஸ்நானம் செய்யக் கூடாது.

काम्यनैमित्तिके तु स्नाने महानिश्यप्यनिषिद्धे। तथा च स्मृत्यर्थसारे – न महानिशि नित्यार्थं काम्यं नैमित्तिकं भवेत्। स्नायात्तु पूर्वमस्नातो निश्युष्णेन जलेन च ।। अस्पृश्यस्पर्शने स्नानं निश्युष्णेन जलेन च। नद्यां नास्तमिते स्नायात् विशेषान्मध्ययामयोः ।। अग्निं प्रज्वाल्य वा स्नायाद्वाप्यादिषु महाजले। ब्राह्मणाग्निगवामग्रे स्नानं विज्ञाप्य बुद्धिमान्। निशिस्नानं च दानं च कुर्यादग्निं समिध्य हि इति ।।

காம்யஸ்நானமும், நைமித்திக ஸ்நானமும், மஹாராத்ரியிலும் நிஷேதிக்கப் படவில்லை. அவ்விதமே, **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** நித்யஸ்நானத்தை மஹாநிசியில் செய்யக் கூடாது. காம்யஸ்நானமும், நைமித்திக ஸ்நானமும் செய்யப்படலாம். முன் ஸ்நானம் செய்யாதவன், நிசியில் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்யலாம். அஸ்ப்ருச்யரை ஸ்பர்சித்தால் நிசியில் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்யலாம். அஸ்தமயத்திற்குப் பிறகு நதியில் ஸ்நானம் செய்யக் கூடாது. ராத்ரியின் நடுயாமங்களில் ஸ்நானம் கூடவே கூடாது. வாபீ முதலிய பெரிய ஜலாசயத்தில் அக்னியை

ஜ்வலிக்கச் செய்து, ப்ராம்ஹணர், அக்னி, பசு இவர் முன்னிலையில், ஸ்நானத்தை அறிவித்துச் செய்யலாம். நிசியில், ஸ்நானம், தானம் இவைகளை, அக்னியை ஜ்வலிக்கச் செய்து அதன் முன்னில் செய்ய வேண்டும்.

मनुः—राहुदर्शनसङ्क्रान्तिविवाहात्ययवृद्धिषु। स्नानदानादिकं कुर्यान्निशि काम्यव्रतेषु च इति। अत्ययः - मरणम्।। वृद्धिः - जननम्।। योगयाज्ञवल्क्योऽपि – ग्रहणोद्वाहसं क्रान्तियात्रार्तिप्रसवेषु च। स्नानं नैमित्तिकं ज्ञेयं रात्रावपि तदिष्यते इति।। आर्तिः - मरणम्।। पराशरोऽपि – पुत्रजन्मनि यज्ञे च तथा सङ्क्रमणे रवेः। राहोश्च दर्शने स्नानं प्रशस्तं नान्यथा निशि इति।। यज्ञः - अवभृथः।। स एव रात्रौ चण्डालादिस्पर्शे शुद्धिमाह – अस्तं गते यदा सूर्ये चण्डालं पतितं स्त्रियम्। सूतिकां स्पृशतश्चैव कथं शुद्धिर्विधीयते।। जातवेदः सुवर्णं च सोममार्गं विलोक्य च। ब्राह्मणानुमतश्चैव स्नानं कृत्वा विशुध्यति।। शुक्लपक्षे सोमो विलोकनीयः। तदभावे वह्निः, तदभावे सुवर्णम् तस्याप्यभावे सोममार्गः। एतेषामन्यतमं विलोक्य विप्रैरनुज्ञातः स्नायादित्यर्थः।।

**மனு:-** க்ரஹணம், ஸங்க்ரமணம், விவாஹம், மரணம், ஜனனம், காம்ய வ்ரதங்கள் இவைகளில் ராத்ரியிலும் ஸ்நானம், தானம் முதலியதைச் செய்யலாம். **யோகியாக்ஞவல்க்யர்:-** க்ரஹணம், விவாஹம், ஸங்க்ரமணம், யாத்ரை, மரணம், ஜனனம் இவைகளில் செய்யும் ஸ்நானம் நைமித்திகமாம். அதை ராத்ரியிலும் செய்யலாம். **பராசரரும்:-** புத்ரஜன்மத்திலும், யாகத்திலும், (அவப்ருதம்) ஸூர்ய ஸங்க்ரமணத்திலும், ராஹுதர்சனத்திலும் ராத்ரியில் ஸ்நானம் ப்ரசஸ்தமாகும். மற்றக் காரணத்தால் செய்யக் கூடாது. ராத்ரியில் சண்டாளாதி ஸ்பர்சத்தில் சுத்தியைச் சொல்லுகிறார் **பராசரரே:-** ஸூர்யன் அஸ்தமித்த பிறகு, சண்டாளன், பதிதன், ஸூதிகையான ஸ்த்ரீ இவர்களை ஸ்பர்சித்தவனுக்கு எவ்விதம் சுத்தி விதிக்கப்படுகிறது

எனில் அக்னி, ஸுவர்ணம், சந்த்ரனின் மார்க்கம் இவைகளைப் பார்த்து, ப்ராம்ஹணர்களால் அனுமதிக்கப்பட்டவனாய் ஸ்நானம் செய்தால் சுத்தனாகிறான், சுக்லபக்ஷத்தில் சந்த்ரனைப் பார்க்க வேண்டும். அவன் இல்லாவிட்டால் அக்னியைப் பார்க்க வேண்டும். அக்னி இல்லாவிடில் ஸுவர்ணம், அதுவும் இல்லாவிடில் சந்த்ரனின் மார்க்கம், இவைகளுள் ஒன்றைப் பார்த்து, ப்ராம்ஹணர்களால் அனுமதிக்கப்பட்டவனாய் ஸ்நானம் செய்ய வேண்டும் என்பது பொருள்.

रात्रिस्नाने तु विशेषमाह यमः – विप्रः स्पृष्टो निशायां तूदक्यया पतितेन वा। दिवाऽऽनीतेन तोयेन स्नापयेदग्निसन्निधौ इति ।। तोयेन स्वर्णसहितेनेति शेषः ।। तथा च पराशरः – दिवाऽऽहृतं तु यत्तोयं कृत्वा स्वर्णयुतं तु तत्। रात्रौ तु संप्राप्ते स्नायादनलसन्निधौ इति ।। देवलोऽपि – दिवाहृतैर्जलैः स्नानं निशि कुर्यान्निमित्ततः । निक्षिप्य च सुवर्णं वै सन्निधाप्य च पावकम् इति । कात्यायनः – प्रवेशाद्वरुणस्याप्सु न रवौ जलमुद्धरेत्। अन्यत्र धाम्न इत्येवं तत्रस्थे स्नानमिष्यते इति। धाम्नो धाम्न इति समन्त्रकोद्धरणादन्यत्र रात्रौ जलं नोद्धरेत् । तत्रस्थे जले स्नायादित्यर्थः । अत्रापि विशेषमाह पराशरः - यदि गेहे न तोयं स्यात्तावच्छुद्धिः कथं भवेत्। धाम्नो धाम्नेति मन्त्रेण गृह्णीयदाग्नि सन्निधौ । रात्रौ ग्रहांशुभिः पूतं दिवा पूतं तु भानुना। अनेनैव विशुद्ध्यते तथा रात्रौ यथा दिवेति।

ராத்ரி ஸ்நானத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார். **யமன்**:- ப்ராம்ஹணன், ராத்ரியில், ரஜஸ்வலையினாலாவது, பதிதனாலாவது ஸ்பர்சிக்கப்பட்டால், பகலில் கொண்டு வந்த ஜலத்தினால், அக்னி ஸன்னிதியில் ஸ்நானம் செய்ய வேண்டும். ஸ்வர்ணத்துடன் கூடிய ஜலத்தினால் என்று சேர்க்க வேண்டும். அவ்விதமே, **பராசரர்**:- ராத்ரியில் ஸ்நானம் நேர்ந்தால் பகலில் கொண்டு வந்த ஜலத்தை ஸ்வர்ணத்துடன் கூடியதாய்ச் செய்து, அதனால் அக்னி

ஸன்னிதியில் ஸ்நானம் செய்ய வேண்டும்.

**தேவலரும்:-** ராத்திரியில் நைமித்திக ஸ்நானம் நேர்ந்தால் பகலில் கொண்டு வந்த ஜலத்தில் ஸ்வர்ணத்தைச் சேர்ந்து அதனுல் அக்னி ஸந்நிதியில் ஸ்நானம் செய்ய வேண்டும். **காத்யாயனர்:-** ராத்திரியில் ஜலத்தில் வருணனே பிரவேசித்து இருப்பதால் ஜலத்தை எடுக்கக் கூடாது. 'தாம்நோ தாம்ந:' என்ற மந்திரத்தைச் சொல்லாமல் ராத்ரியில் ஜலத்தை எடுக்கக் கூடாது. அங்கிருக்கும் ஜலத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும் என்பது பொருள்.

இதிலும் விசேஷத்தைச் சொல்கிருர் **பராசரர்:-** வீட்டில் ஜலமில்லாவிடில் அப்போது எப்படி சுத்தி ஏற்படும்? 'தாம்நோ தாம் ந:' என்ற மந்திரத்தால் அக்னி ஸந்நிதியில் கிரஹங்களின் கிரணங்களால் ஜலம் சுத்தமாகின்றது. பகலில் ஸூரியனுல் சுத்தமாகிறது. இந்த மந்திரத்தால் கிரஹித்தால் பகலில் போல் ராத்திரியிலும் சுத்தமாகின்றது.

संवर्तः – अपो निशि न गृह्णीयाद्गृह्णन्नपि कदाचन । उद्धृत्याग्निमुपर्यासां धाम्नोधाम्न इतीरयेत् इति ।। मरीचिः – दिवाऽऽहृतं तु यत्तोयं गृहे यस्य न विद्यते । प्रज्वाल्याग्निं ततः स्नायात् नदीपुष्करिणीषु च इति ।। कालादर्शे – निमित्ततोऽपि न स्नायात् रात्रौ नद्यां दिवाऽऽहृतैः । तज्जलैस्तदभावे तु स्वर्णं क्षिप्त्वा तदंभसि ।। प्रज्वाल्य वह्निमभ्यर्णे तदभावे समन्त्रकम् । निशाहृतैर्जलैः स्नायादिति शास्त्रीयनिश्चयः इति ।।

**ஸம்வர்த்தர்:-** ஜலத்தை ராத்ரியில் க்ரஹிக்கக் கூடாது. ஒருகால் க்ரஹிக்கும்படி நேர்ந்தால், அக்னியை எடுத்து ஜலத்தின் மேல் பிடித்து 'தாம்ேைதாம்ன:' என்ற மந்த்ரத்தை உச்சரிக்க வேண்டும். **மரீசி:-** எவனது க்ருஹத்தில் பகலில் கொண்டு வந்த ஜலம் இல்லேயோ, அவன் அக்னியை ஜ்வலிக்கச் செய்து அதன் ஸன்னிதியில்

நதீ, புஷ்கரிணீ இவைகளில் ஸ்நானம் செய்யலாம். **காலாதர்சத்தில்:**- நிமித்தம் நேர்ந்தாலும் இரவில் நதியில் ஸ்நானம் செய்யக் கூடாது. பகலில் கொண்டு வந்த நதீ ஜலத்தால் ஸ்நானம் செய்ய வேண்டும். அதில்லாவிடில், நதியின் ஜலத்தல் ஸுவர்ணத்தைப் போட்டு, அதன் ஸமீபத்தில் அக்னியை ஜ்வலிக்கச் செய்து ஸ்நானம் செய்ய வேண்டும். அதுவும் இல்லாவிடில் மந்த்ரத்துடன் ராத்ரியில் கொண்டுவரப்பட்ட ஜலத்தினுல் ஸ்நானம் செய்ய வேண்டும் என்பது சாஸ்த்ரத்தின் நிச்சயமாம்.

—★—

## ग्रहणस्नानम् ।

ग्रहणस्नानमुक्तं महाभारते – गङ्गास्नानं प्रकुर्वीत ग्रहणे चन्द्रसूर्ययोः । महानदीषु(व)चान्यासु स्नानं कुर्याद्यविधि इति ।। शङ्खः – वापीकूपतटाकेषु गिरिप्रस्रवणेऽपि वा । नद्यां नदे देवखाते सरसीषूद्धृताम्बुनि। उष्णोदकेन वा स्नायात् ग्रहणे चन्द्रसूर्ययोः इति। उष्णोदकेन वा स्नायात् ग्रहणे चन्द्रसूर्ययोः इति उष्णोदकस्नानमातुरविषयम् ।। आदित्यकिरणैः पूतं पुनः पूतं च वह्निना । अतो व्याध्यातुरः स्नायाद् ग्रहणेऽप्युष्णवारिणा इति व्याघ्रस्मरणात् ।। पराशरः–सर्वं गङ्गासमं तोयं राहुग्रस्ते दिवाकरे। सोमग्रहे तथैवोक्तं स्नानदानादिकर्मसु इति ।।

### க்ரஹண ஸ்நானம்

க்ரஹண ஸ்நானம் சொல்லப்பட்டுள்ளது. **மஹாபாரதத்தில்:**- சந்த்ரக்ரஹணம், ஸூர்யக்ரஹணம் இவைகளில், கங்கையில் ஸ்நானம் செய்ய வேண்டும். அல்லது வேறு மஹாநதிகளில் விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். **சங்கர்:**- வாபீ, கூபம், தடாகம், மலையருவி, நதீ, நதம், தேவகாதம், ஓடைகள், எடுத்து வைத்த ஜலம், உஷ்ணோதகம் என்ற இவைகளிலொன்றில் சந்த்ரஸூர்ய

க்ரஹணங்களில் ஸ்நானம் செய்ய வேண்டும். உஷ்ணோதக ஸ்நானம் வ்யாதியுள்ளவனைப் பற்றியது. "பகலில் ஸூர்ய கிரணங்களால் சுத்தமாகியதும், மறுபடி அக்னியால் சுத்தமாகியதுமாக உள்ளது உஷ்ணோதகம். ஆகையால் பிணியாளன் க்ரஹண காலத்திலும் உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்யலாம்" என்று வ்யாக்ர வசனமிருப்பதால். **பராசரர்:-** ஸூர்ய க்ரஹணத்திலும், சந்த்ர க்ரஹணத்திலும் ஸ்நானம் தானம் முதலிய கர்மங்களில் எல்லா ஜலமும், கங்கைக்கு ஸமமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

व्यासोऽपि – सर्वं गङ्गासमं तोयं सर्वे ब्रह्मसमा द्विजाः । सर्वं भूमिसमं दानं ग्रहणे चन्द्रसूर्ययोः इति ॥ शौनकः – स्वर्धुन्या तु समानि स्युः सर्वाण्यम्भांसि भूतले । कूपस्थान्यपि सोमार्कग्रहणे नात्र संशयः इति ॥ मार्कण्डेयः–शीतमुष्णोदकात् पुण्यं पारक्यमवरोदकात् । भूमिष्ठमुद्धृतात् पुण्यं ततः प्रस्रवणोदकम् ॥ ततोऽपि सारसं पुण्यं ततः पुण्यं नदीजलम् । तीर्थतोयं ततः पुण्यं महानद्याम्बु पावकम् ॥ ततस्ततोऽपि गङ्गाम्बु पुण्यं पुण्यस्ततोऽम्बुधिः इति ॥

**வ்யாஸரும்:-** சந்த்ரஸூர்ய க்ரஹண காலத்தில், எல்லா ஜலமும் கங்கைக்குச் சமமாகவும், எல்லா வேதியரும் ப்ரம்ஹாவுக்குச் சமமாகியவர்களாகவும், எல்லா தானமும் பூமி தானத்திற்குச் சமமாகவும் சொல்லப்பட்டுள்ளது. **சௌனகர்:-** சந்த்ரஸூர்ய க்ரஹண காலத்தில் பூமியில் கிணற்றிலுள்ள ஜலம் முதல் ஸகல ஜலங்களும், கங்கைக்குச் சமங்களாகின்றன. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. **மார்க்கண்டேயர்:-** சீதஜலம் உஷ்ணோதகத்தை விடப் புண்யம். தாழ்ந்த ஜாதீயனின் ஜலத்தை விடப் பிறனின் ஜலம் புண்யம். பூமியிலுள்ள ஜலம் எடுக்கப்பட்டதை விடப் புண்யம். அதைவிட மலையருவியின் ஜலம் புண்யம். அதைவிட ஸரோஜலம் புண்யம். அதைவிட நதீ ஜலம் புண்யம். அதைவிடத் தீர்த்த ஜலம் புண்யம். அதைவிட மஹாநதீ

## आतुरस्नानविधिः

अथ आतुरस्नानविधिः । ज्वरादिभिरातुरस्य स्नाननिमित्ते प्राप्ते कर्तव्यमाह पराशरः – आतुरस्नान उत्पन्ने दशकृत्वो ह्यनातुरः । स्नात्वा स्नात्वा स्पृशेदेनं ततः शुध्येत् स आतुरः इति ॥ अत्र प्रतिस्नानमातुरस्य वासो विपरिवर्तनीयम् ॥ उशना – ज्वराभिभूता या नारी रजसा च परिप्लुता । कथं तस्या भवेच्छौचं शुद्धिः स्यात् केन कर्मणा ॥ चतुर्थेऽहनि सम्प्राप्ते स्पृशेदन्या तु तां स्त्रियम् । सा सचेलाऽवगाह्यापः स्नात्वा स्नात्वा पुनः स्पृशेत् ॥ दश द्वादशकृत्वो वा ह्याचामेच्च पुनः पुनः । अन्यान्यानि च वासांसि ततः शुद्धा भवेत्तु सा ॥ दद्याच्छक्त्या ततो दानं पुण्याहेन विशुध्यति इति ॥

### பிணியாளர் ஸ்நானவிதி

இனி ஆதுரனின் (பிணியாளனின்) ஸ்நானவிதி சொல்லப்படுகிறது. ஜ்வரம் முதலியவைகளால் வருந்தியவனுக்கு ஸ்நான நிமித்தம் நேர்ந்தால், செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார் **பராசரர்:-** ஆதுரனுக்கு ஸ்நான நிமித்தம் ப்ராப்தமானால், வ்யாதியில்லாத மற்றவன், பத்துத் தடவை, மூழ்கி மூழ்கி வ்யாதிஸ்தனைத் தொட வேண்டும். பிறகு அந்த வ்யாதிஸ்தன் சுத்தனாவான். இங்கு ஒவ்வொரு ஸ்நானத்திலும், ஆதுரனுடைய வஸ்த்ரம் மாற்றப்பட வேண்டும். **உசநஸ்:-** எந்த ஸ்த்ரீ ஜ்வரத்தால் பீடிக்கப்பட்டவளாய் ரஜஸ்வலையாயும் உள்ளாளோ, அவளுக்குச் சுத்தி எப்படி ஆகும்? எக்கர்மத்தால் சுத்தி ஏற்படும்? (எனில்) நான்காவது நாள் வந்ததும், மற்றொரு ஸ்த்ரீ, அந்த ஸ்த்ரீயைத் தொட்டுவிட்டு, ஸசேலஸ்நானம் செய்து, அவளைத் தொட்டு மறுபடி ஸசேல ஸ்நானம் செய்து மறுபடி அவளைத் தொட வேண்டும். இவ்விதம் பத்து அல்லது பன்னிரண்டு தடவை செய்ய வேண்டும். ஆதுரையானவள் அடிக்கடி ஆசமனம் செய்ய வேண்டும்.

ஒவ்வொரு தடவையிலும் வெவ்வேறு வஸ்த்ரம் தரிக்க வேண்டும். இவ்விதம் செய்தால் பிறகு அவள் சுத்தையாவாள். பிறகு யதாசக்தி தானம் செய்ய வேண்டும். புண்யாஹவசனத்தால் சுத்தையாகிருள்.

योगयाज्ञवल्क्यः – तूष्णीमेवावगाहेत यदा स्यादशुचिर्नरः । आचम्य प्रयतः पश्चात् स्नानं विधिवदाचरेत् इति ।। विष्णुरपि – स्नानार्हस्तु निमित्तेन कृत्वा तोयावगाहनम् । आचम्य प्रयतः पश्चात् स्नानं विधिवदाचरेत् इति ।। शातातपः – मार्गे तु यत्र संस्पृष्टिः यात्रायां कलहादिषु । ग्रामसंदूषणे चैव स्पृष्टिदोषो न विद्यते इति ।। षट्त्रिंशन्मतेऽपि – देवयात्राविवाहेषु यज्ञेषु प्रकृतेषु च । उत्सवेषु च सर्वेषु स्पृष्टास्पृष्टिर्न दुष्यति इति ।।

**யோகயாக்ஞவல்க்யர்:-** மனிதன் எப்பொழுது அசுத்தனுகின்றுனே அப்பொழுது விதியில்லாமலே முழுகவேண்டும். பிறகு ஆசமனம் செய்து சுத்தனாய், விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். **விஷ்ணுவும்:-** நிமித்தத்தால் ஸ்நானம் செய்ய வேண்டியவன், ஜலத்தில் முழுகி ஆசமனம் செய்து, சுத்தனாய்ப் பிறகு விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். **சாதாதபர்:-** வழியிலும், யாத்ரையிலும், கலஹம் முதலியதிலும், க்ராமத்தின் கலகத்திலும் ஸ்பர்சதோஷமில்லை. **ஷட்த்ரிம்சன் மதத்திலும்:-** தேவதர்சனத்திலும், யாத்ரையிலும், விவாஹத்திலும், யாகங்கள் நடக்கும் போதும், எல்லா உத்ஸவங்களிலும், அஸ்ப்ருச்யரின் ஸ்பர்சம் தோஷமற்றது.

बृहस्पतिरपि – तीर्थे विवाहे यात्रायां सङ्ग्रामे देशविप्लवे । नगरे ग्रामदाहे च स्पृष्टास्पृष्टिर्न दुष्यति इति ।। पाद्मे – देवालयसमीपस्थान् देवसेवार्थमागतान् । चण्डालान् पतितान् वाऽपि स्पृष्ट्वा न स्नानमाचरेत् इति ।। आपस्तम्बः – शक्तिविषये न मुहूर्तमप्ययतः स्यात् इति ।।

**ப்ருஹஸ்பதியும்:-** தீர்த்தத்திலும், விவாஹத்திலும், யாத்ரையிலும், யுத்தத்திலும், தேசத்தின் தொந்தரையிலும், நகரத்திலும், க்ராமதாஹத்திலும், அஸ்ப்ருச்யரின் ஸ்பர்சம் தோஷமற்றது. **பாத்மத்தில்:-** தேவாலயத்தின் ஸமீபத்தில் இருப்பவரும், தேவஸேவைக்கு வந்தவருமான, சண்டாளர், பதிதர் இவர்களை ஸ்பர்சித்தாலும் ஸ்நானம் செய்ய வேண்டியதில்லை. **ஆபஸ்தம்பர்:-** சக்தியுள்ளவனாகில், முஹூர்த்த காலங்கூட அசுத்தனாய் இருக்கக் கூடாது.

## काम्यस्नानानि

अथ काम्यस्नानानि । तत्र पुलस्त्यः – पुष्ये च जन्मनक्षत्रे व्यतीपाते च वैधृतौ । अमायां च नदीस्नानं पुनात्यासप्तमं कुलम् ।। रव्यङ्गारशनेर्वारे स्नानं कुर्वन्ति ये नराः । व्याधिभिस्ते न पीड्यन्ते मृगैः केसरिणो यथा ।। चैत्रकृष्णचतुर्दश्यां यः स्नायाच्छिवसन्निधौ । न प्रेतत्वमवाप्नोति गङ्गायां च विशेषतः इति ।। यमोऽपि – कार्तिक्यां पुष्करे स्नातः सर्वपापैः प्रमुच्यते । माघ्यां स्नातः प्रयागे तु मुच्यते सर्वकिल्बिषैः ।। सूर्यग्रहणतुल्या तु शुक्ला माघस्य सप्तमी । अरुणोदयवेलायां तस्यां स्नानं महाफलम् ।। पुनर्वसुबुधोपेता चैत्रमासे सिताष्टमी । स्रोतस्सु विधिवत् स्नात्वा वाजपेयफलं लभेत् इति ।।

### காம்ய ஸ்நானங்கள்

இனி தனித்து நன்மை விரும்பி செய்கிற ஸ்நானங்கள் சொல்லப்படுகின்றன. அதில், **புலஸ்த்யர்:-** புஷ்யம், ஜன்மநக்ஷத்ரம், வ்யதீபாதம், வைத்ருதி, அமாவாஸ்யை இக்காலங்களில் செய்யும் நதீ ஸ்நானம் ஏழு குலங்களைச் சுத்தமாக்கும். பானுவாரம், அங்காரகவாரம், சனிவாரம் இவைகளில் ஸ்நானம் செய்பவர் வ்யாதிகளால் பீடிக்கப்படுவதில்லை, மான்களால் சிங்கங்கள் போல். சைத்ரக்ருஷ்ண சதுர்தசியில், சிவஸன்னிதியில் அல்லது

கங்கையில் எவன் ஸ்நானம் செய்கின்றானோ அவன் ப்ரேதத் தன்மையை அடைவதே இல்லை. **யமனும்:-** கார்த்திக பூர்ணிமையில் புஷ்கர க்ஷேத்ரத்தில் ஸ்நானம் செய்தவன் எல்லாப் பாபங்களாலும் விடுபடுவான். மாகபூர்ணிமையில் ப்ரயாகத்தில் ஸ்நானம் செய்தவன் ஸகல பாபங்களாலும் விடுபடுவான். மாக சுக்ல ஸப்தமீ, ஸூர்ய க்ரஹணத்திற்குச் சமமாகும். அதில் அருணோதய காலத்தில் ஸ்நானம் செய்வது மஹாபலனை அளிப்பதாகும். சைத்ர மாஸத்தில் சுக்லாஷ்டமீ, புனர்வஸுவுடன் புதவாரத்துடன் கூடியிருந்தால், அதில் நதிகளில் விதிப்படி ஸ்நானம் செய்தால் வாஜபேய யாகபலத்தை அடைவான்.

शातातपोऽपि – अमावास्या भवेद्वारे यदा भूमिसुतस्य वै । जाह्नवीस्नानमात्रेण गोसहस्रफलं भवेत् ।। कार्तिकं सकलं मासं नित्यस्नायी जितेन्द्रियः । जपन् हविष्यभुक् स्नातः सर्वपापैः प्रमुच्यते । तुलायां मकरे मेषे प्रातः स्नायी सदा भवेत् । हविष्यं ब्रह्मचर्यं च महापातकनाशनम् इति ।। चन्द्रिकायाम् – आषाढादिचतुर्मासिं प्रातःस्नायी भवेन्नरः । विप्रेभ्यो भोजनं दत्वा कार्तिक्यां गोप्रदो भवेत् ।। स वैष्णवं पदं याति विष्णुव्रतमिदं स्मृतम् इति ।।

**சாதாதபரும்:-** அங்காரக வாரத்தில் அமாவாஸ்யை சேர்ந்தால், அப்பொழுது கங்கையில் ஸ்நானமாத்ரத்தால், ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலன் உண்டாகும். கார்த்திக மாஸம் முழுவதும் நித்யமும் ஸ்நானம் செய்பவனாய், இந்த்ரியங்களை ஜயித்தவனாய், ஜபிப்பவனாய், ஹவிஸ்ஸைப் புஜிப்பவனாய் இருப்பவன் ஸகல பாபங்களாலும் விடப்படுவான். துலாமாஸம், மகரமாஸம், மேஷமாஸம் இவைகளில் நித்யமும் ப்ராத:ஸ்நானம் செய்பவனாய் இருக்க வேண்டும் அத்துடன் ஹவிஸ்ஸைப் புஜிப்பதும், ப்ரம்ஹசர்யத்துடன் இருப்பதும், மஹாபாபங்களையும் அகற்றுவதாகும். **சந்த்ரிகையில்:-** ஆஷாடம் முதல் நான்கு மாஸங்களில்,

மனிதன் ப்ராத:ஸ்நானம் செய்பவனாய் இருக்க வேண்டும். ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் அளித்து, கார்த்திக பூர்ணிமையில் கோதானம் செய்ய வேண்டும். இது விஷ்ணுவ்ரதம் எனப்படுகிறது. இதை அனுஷ்டிப்பவன் விஷ்ணு லோகத்தை அடைகிறான்.

मार्कण्डेयः —सर्वकालं तिलैःस्नानं पुण्यं व्यासोऽब्रवीन्मुनिः । तुष्यत्यामलकैर्विष्णुरेकादश्यां विशेषतः ॥ श्रीकामः सर्वदा स्नानं कुर्वीतामलकैर्नरः । सप्तमीं नवमीं चैव पर्वकालं च वर्जयेत् इति ॥ योगयाज्ञवल्क्योऽपि – धात्रीफलै रमावास्यासप्तमी नवमीषु च । न स्नायात्तस्य हीयन्ते तेज आयुर्द्धनं सुताः इति ॥ धात्री - आमलकी ॥

**மார்க்கண்டேயர்:-** எப்பொழுதும் எள்ளுடன் ஸ்நானம் செய்வது புண்யம் என்று வ்யாஸமுனிவர் சொன்னார். ஏகாதசியில் நெல்லிக்கனியுடன் ஸ்நானம் செய்தால் விஷ்ணு ஸந்தோஷிக்கின்றார். விசேஷமாய். ஸம்பத்தை விரும்புவோன் எப்பொழுதும் நெல்லிக்கனியுடன் ஸ்நானம் செய்ய வேண்டும். ஆனால், ஸப்தமீ, நவமீ, பர்வகாலம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். **யோகயாக்ஞவல்க்யர்:-** அமாவாஸ்யை, ஸப்தமீ, நவமீ இவைகளில், நெல்லிக்கனியுடன் ஸ்நானம் செய்யக் கூடாது. செய்பவனின் தேஜஸ், ஆயுள், தனம், பிள்ளைகள் இவை குறைகின்றன.

चन्द्रिकायाम् – षष्ठी च सप्तमी चैव नवमी च त्रयोदशी । सङ्क्रान्तौ रविवारे च स्नानमामलकैस्त्यजेत् इति । शौनकोऽपि – कल्केनामलकेनासु न विप्रः स्नानमाचरेत् । संपत्कामस्तु सप्तम्यां नवम्यां नष्टशीतगौ ॥ अर्थकामी त्रयोदश्यां दशम्यां पुत्रवत्सलः । पुत्रार्थकामो विप्रस्तु द्वितीयायां कदाचन इति ॥ माधवीये – गुरुवारेऽप्यमायां च ह्यश्वत्थच्छायवारिणा । स्नानं प्रयागस्नानेन समं पातकनाशनम् । शाल्मली तिन्त्रिणी निम्बकरञ्जौ द्वौ हरीतकी ।

कोविदारकपित्थार्क बदरी च विभीतकः ।। शेलुश्च खादिरश्चैषां स्नानं छायासु वर्जयेत् इति ।।

**சந்த்ரிகையில்:**- ஷஷ்டி, ஸப்தமீ, நவமீ, த்ரயோதசீ, ஸங்க்ரமணம், பானுவாரம் இவைகளில் நெல்லிக் கனிகளால் ஸ்நானம் செய்யக் கூடாது. **சௌனகரும்:**- ஸம்பத்தை விரும்புகின்றவன், ஸப்தமீ, நவமீ, அமை இவைகளிலும், பணத்தை விரும்புகின்றவன் த்ரயோதசியிலும், புத்ரனை விரும்புகின்றவன் தசமியிலும், புத்ரனையும் அர்த்தத்தையும் விரும்புகின்றவன் த்விதீயையிலும் ஒருகாலும் நெல்லிக்கனியால் ஸ்நானம் செய்யக் கூடாது. **மாதவீயத்தில்:**- குருவாரத்திலும், அமையிலும், அச்வத்த வ்ருக்ஷத்தின் நிழலிலுள்ள ஜலத்தினால் ஸ்நானம் செய்வது, ப்ரயாக ஸ்நானத்திற்குச் சமம். பாபத்தை அகற்றும். இலவு, புளி, வேம்பு, புங்கு, கடுக்காய், மலையகத்தி விளா, எருக்கு, இலந்தை, தானி, நறுவிளி, கருங்காலி இவைகளின் நிழலில் ஸ்நானத்தைத் தவிர்க்க வேண்டும்.



## माघस्नानम्

तत्र विष्णुः – बालाश्च तरुणा वृद्धा नरनारीनपुंसकाः । स्नात्वा माघे शुभे तीर्थे प्राप्नुवन्तीप्सितं फलम् ।। माघमास्युषसि स्नात्वा विष्णुलोकं स गच्छति ।। मकरस्थे रवौ यो हि न स्नात्यनुदिते रवौ । कथं पापैः प्रमुच्येत कथं स त्रिदिवं व्रजेत् इति ।। अनेन माघस्नानमुदयात् पूर्वमेव कर्तव्यमिति सिद्धम् ।।

### மாக ஸ்நானம்

இனி மாக ஸ்நானம் சொல்லப்படுகிறது. அதில் **விஷ்ணு:**- பாலர், தருணர், வ்ருத்தர், புருஷன், பெண், நபும்ஸகன், யாராயினும், மாகமாஸத்தில் நல்லதீர்த்தத்தில்

ஸ்நானம் செய்தால் விரும்பிய பலனை அடைகின்றனர். மாகமாஸத்தில் உஷ:காலத்தில் ஸ்நானம் செய்தால் விஷ்ணு வினுலகத்தை அடைகிறுன். ஸுர்யன் மகரத்தில் இருக்கையில் ஸுர்யோதயத்திற்கு முன் எவன் ஸ்நானம் செய்யவில்லையோ அவன் எப்படிப் பாபங்களால் விடப்படுவான்? எப்படி ஸ்வர்க்கத்தை அடைவான்? இதனுல், மாக ஸ்நானம் உதயத்திற்கு முன்பே செய்யப்பட வேண்டும் என்பது ஸித்தமாயிற்று.

यत्तु महाभारते – माघे ह्यर्धोदिते सूर्ये स्नानं विधिवदाचरेत्। नियतो नियताहारः सर्वपापैः प्रमुच्यते ।। किञ्चिदभ्युदिते सूर्ये सर्वपापैः प्रमुच्यते ।। किञ्चिदभ्युदिते सूर्ये स्नानं माघे समाचरेत् ।। यत्तस्य सर्वपापानि विनश्यन्ति न संशयः ।। माघमासे रटन्त्यापः किञ्चिदभ्युदिते रवौ। ब्रह्मघ्नं वा सुरापं वा कं पतन्तं पुनीमहे इति, तत् सन्ध्योपासनाद्यनधिकृतस्त्रीशूद्रादिविषयम् । 'उषस्युपोदये माघे स्नानमाहुर्द्विजन्मनाम्। स्त्रीशूद्राणां तथाऽन्येषामर्धोदय उपोदयः इति स्मरणात्।

ஆனுல், மஹாபாரதத்தில்:- ''மாக மாஸத்தில் ஸுர்யன் பாதி உதித்திருக்கும் போது விதிப்படி ஸ்நானம் செய்ய வேண்டும். நியமமுடையவனும், ஆஹாரநியமம் உடையவனுமாயின் ஸகல பாபங்களாலும் விடப்படுவான். மாக மாஸத்தில் ஸுர்யன் கொஞ்சம் உதித்திருக்கும் பொழுது எவன் ஸ்நானம் செய்கின்றுனோ, அவனது பாபங்களெல்லாம் நசிக்கின்றன. ஸம்சயமில்லை. மாக மாஸத்தில் ஜலங்களெல்லாம். ஸுர்யன் கொஞ்சம் உதித்திருக்கும் போது ஜலத்தில் ஸ்நானம் செய்பவன். ப்ரம்ஹஹத்யை செய்தவனுயினும், ஸுராபானம் செய்தவனுயினும், அவனைச் சுத்தனுக்குகின்ரேம் என்று கூவுகின்றன'' என்ற வசனமுள்ளதே எனில், அது, ஸந்த்யோ பாஸனம் முதலியதில் அதிகாரமில்லாத ஸ்த்ரீ, சூத்ரன் முதலியவரைப் பற்றியதாம்.

'மாக மாஸத்தில் விடியற்காலத்தில் உபோதயத்தில் ப்ராம்ஹணர்களுக்கு ஸ்நானத்தை விதிக்கின்றனர், ஸ்த்ரீகளுக்கும், சூத்ரருக்கும், மற்றவருக்கும் ஸூர்யன் பாதி உதித்திருக்கும் காலம் உபோதயமாகும்' என்று ஸ்ம்ருதி உள்ளது.

ब्राह्मणादि विषयत्वे सन्ध्यातिक्रमदोषोऽपि दुर्वारः स्यात् । स्नानपूर्वकत्वात् सन्ध्यावन्दनादेः ।। नह्युदयात् पूर्वं किंचिदुदये च कालद्वये स्नानमिति युक्तम् । मार्जनाद्युपस्थानान्तस्यैककर्मत्वेन कर्मान्तरानुष्ठानायोगात्, उदयसमये उपस्थानविधानाच्च । न च माघे किञ्चिदुदयस्नानानन्तरमनुष्ठानम् । सन्धौ सन्ध्यामुपासीत नास्तगे नोद्गते रवौ इति योगयाज्ञवल्क्येन सन्ध्योत्कर्षस्य निषेधात्, सन्ध्यातिक्रमे शूद्रत्वादिप्राप्तिस्मरणाच्च । यद्वा – उपव्युषसि यत्स्नानं सन्ध्यामुदितेऽपि वा इतिवत् स्नानप्रशंसापरं, कैमुतिकन्यायप्रदर्शनपरं वेत्याहुः ।।

ப்ராம்ஹணர் முதலியவரைப் பற்றியதெனில் ஸந்த்யா வந்தனத்தை அதிக்ரமித்த தோஷம் அகற்ற முடியாததாகும். ஸந்த்யா வந்தனம் முதலியது ஸ்நானத்தையே முன்னிட்டதாகையால், உதயத்திற்கு முந்தியும், கொஞ்சமுதித்த காலத்திலும் ஸ்நானமென்பது யுக்தமாகாதல்லவா? மார்ஜனம் முதல் உபஸ்தானம் வரையிலுள்ளவை ஒரே கர்மமாகையால், வேறு கர்மத்தைச் செய்யமுடியாது. ஆகையாலும், உதய காலத்தில் உபஸ்தானம் விதிக்கப்பட்டிருப்பதாலும், மாக மாஸத்தில் கொஞ்சம் உதயமான பிறகு ஸ்நானம் செய்து பிறகு ஸந்த்யா வந்தனுத்யனுஷ்டானம் செய்யலாம் என்றும் சொல்லக் கூடாது. 'ஸந்தியில் ஸந்த்யோபாஸனம் செய்ய வேண்டும். ஸூர்யன் அஸ்தமயமான பிறகும் கூடாது. ஸூர்யன் உதித்த பிறகும் கூடாது' என்று யோகயாக்ஞவல்க்யரால் ஸந்த்யோத்கர்ஷம் நிஷேதிக்கப் பட்டிருப்பதாலும், ஸந்த்யை அதிக்ரமித்தால், சூத்ரத்

தன்மையை அடைவான் என்று ஸ்ம்ருதி இருப்பதாலும். அல்லது, ஸ்நானப்ரகரணத்தில் 'விடியற்காலத்திலோ, ஸந்த்யா காலத்திலோ, உதயத்திற்குப் பிறகோ செய்யும் ஸ்நானம் ப்ராஜாபத்யத்திற்குச் சமமாகும்' என்று சொல்லியது போல், இங்குள்ள வசனமும் ஸ்நானத்தைப் புகழ்வதில் தாத்பர்யமுள்ளது, அல்லது 'கைமுதிக நியாயத்தைக் காண்பிப்பதில் தாத்பர்யமுள்ளது என்கின்றனர் சிலர்.

केचित्तु — विचेयतारके काले नित्यस्नानं विधाय च । पुनरभ्युदिते सूर्ये माघस्नानं समाचरेत् ॥ अध्यर्धघटिकापूर्वं परं सूर्योदयात्तथा। स एवाभ्युदितो नाम धर्मशास्त्रे प्रकीर्तितः इति वचन माचक्षमाणाः उदयादनन्तरं सार्धघटिकामध्ये द्वितीयस्नानं कर्तव्यमिति वदन्ति ॥

சிலரோவெனில்:-''தேடக்கூடிய நக்ஷத்ரங்களையுடைய காலத்தில் நித்ய ஸ்நானத்தைச் செய்து விட்டு, ஸூர்யோதயமான பிறகு மாக ஸ்நானத்தைச் செய்ய வேண்டும், ஸூர்யோதயத்திற்கு முன் 1 1/2 நாழிகையும், ஸூர்யோதயத்திற்குப் பின் 1 1/2 நாழிகையும் உள்ளகாலம் எதுவோ அது 'அப்யுதிதம்' என்று தர்மசாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ளது'' என்ற வசனத்தைச் சொல்லுகின்றவராய், உதயத்திற்குப் பிறகு 1 1/2 நாழிகையின் நடுவில் இரண்டாவது ஸ்நானம் செய்யப்பட வேண்டும் என்று சொல்லுகின்றனர்.

विष्णुः — पौषफाल्गुनयोर्मध्ये प्रातः स्नायी सदा भवेत्। दर्शं वा पौर्णमासीं वा प्रारभ्य स्नानमाचरेत् ॥ पुण्यान्यहानि त्रिंशत्तु मकरस्थे दिवाकरे । तत्र चोत्थाय नियमं गृह्णीयाद्विधिपूर्वकम् ॥ माघमासममं पुण्यं स्नास्येऽहं देव माधव। तीर्थस्यास्य जले नित्यं इति सङ्कल्प्य चेतसि ॥ ततः स्नात्वा शुभे तीर्थे दत्वा शिरसि वै मृदम् । स्नात्वा पितॄंस्तर्पयित्वा उत्तीर्य तु ततो जलात् ॥ काष्ठमौनी नमस्कृत्य

पूजयेत् पुरुषोत्तमम्। शङ्खचक्रधरं देवं माधवं पूजयेत्तदा। वह्नौ हुत्वा विधानेन ततस्त्वेकाशनो भवेत्। भूशय्यो ब्रह्मचर्येण शक्तः स्नानं समाचरेत्॥

விஷ்ணு:- பௌஷ மாஸம், பால்குன மாஸம் இவைகளின் நடுவில், எப்பொழுதும் ப்ராத:ஸ்நானம் செய்பவனாய் இருக்க வேண்டும். அமாவாஸ்யையாவது, பூர்ணிமையாவது முதற்கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். ஸூர்யன் மகரத்தில் இருக்கும் பொழுது, முப்பது தினங்களும் புண்யங்களேயாம். அதில், காலையில் எழுந்து விதியுடன் நியமத்தை க்ரஹிக்க வேண்டும். 'ஓதேவ! மாதவ! புண்யமான இந்த மாக மாஸம் முழுவதிலும் இந்தப் புண்ய தீர்த்தத்தின் ஜலத்தில் ஸ்நானம் செய்யப் போகிறேன்' என்று மனதில் ஸங்கல்பம் செய்து கொண்டு, பிறகு சுபமான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, தலையில் ம்ருத்திகையைச் சேர்த்து ஸ்நானம் செய்து, பித்ருதர்ப்பணம் செய்து, ஜலத்தினின்றும் வெளியேறி, காஷ்டமௌனம் உடையவனாய், புருஷோத்தமனை நமஸ்கரித்துப் பூஜிக்க வேண்டும். அப்பொழுது சங்கசக்ரதரனும், தேவனுமான மாதவனைப் பூஜிக்க வேண்டும். அக்னியில் விதிப்படி ஹோமம் செய்து ஒரு முறை போஜனம் செய்பவனாய் இருக்க வேண்டும். பூமியிற் படுக்க வேண்டும். ப்ரம்ஹசர்யத்துடன் இருக்க வேண்டும். சக்தியுள்ளவன் இவ்விதம் ஸ்நானம் செய்ய வேண்டும்.

अशक्तस्याधनाढ्यस्य स्वेच्छा सर्वत्र कथ्यते। अवश्यमेव कर्तव्यं माघस्नानमिति श्रुतिः॥ तिलस्नायी तिलोद्वर्ती तिलहोमी तिलोदकी। तिलदस्तिलभोक्ता च षट्तिलो नावसीदति॥ तिला आमलकाश्चैव तीर्थे देयास्तु नित्यशः। तथा प्रज्वालयेद्वह्निं इन्धनौघैर्द्विजन्मनाम्॥ एवं स्नानस्यावसाने भोजयेद्विजदंपती। विविधानि च देयानि प्रच्छादनपटांस्तथा॥ अनेन विधिना

दद्यान्माधवः प्रीयतामिति। पित्रा पितामहैः सार्धं तथैव प्रपितामहैः ।। मात्रा मातामहैः सार्धं वृद्धमातामहैस्तथा । एकविंशकुलैः सार्धं भोगान् भुक्त्वा यथेप्सितान्। माघमास्युषसि स्नात्वा विष्णुलोकं स गच्छति इति ।।

*சக்தியில்லாதவனும், தனமில்லாதவனும் இஷ்டப்படி செய்யலாம் என்று எல்லாவற்றிலும் சொல்லப்படுகிறது. எப்படியாவது மாகஸ்நானம் செய்ய வேண்டும் என்கிறது வேதம். எள்ளினால் ஸ்நானம் செய்பவன், திலங்களைத் தேய்த்துக் கொள்பவன், திலங்களை ஹோமம் செய்பவன், திலோதகத்தால் தர்ப்பணம் செய்பவன், திலங்களைத் தானம் செய்பவன், திலங்களைப் பக்ஷிப்பவன் என்று ஆறு பேர்களும் கஷ்டத்தை அடைய மாட்டார்கள். தீர்த்தத்தில், திலங்களையும், நெல்லிக்கனிகளையும் நித்யமும் கொடுக்க வேண்டும். ப்ராம்ஹணர்களின் அக்னியை, விறகுகளால் ஜ்வலிக்கச் செய்ய வேண்டும். இவ்விதம் ஸ்நானம் செய்த பிறகு ப்ராம்ஹண தம்பதிகளைப் பூஜிப்பிக்க வேண்டும். பலவிதமான வஸ்துக்களைத் தானம் செய்ய வேண்டும். இந்த விதியுடனிருந்து 'மாதவ:ப்ரீயதாம்' என்று கொடுக்க வேண்டும். பிதா, பிதாமஹர், ப்ரபிதாமஹர், மாதா, மாதாமஹர், வ்ருத்த மாதாமஹர், இவர்களுடனும் இருபத்தொரு குலங்களுடனும், இஷ்டமான போகங்களைப் புஜித்து, விஷ்ணு லோகத்தை அடைவான். மாகமாஸத்தில் உஷ: காலத்தில் ஸ்நானம் செய்தால்.*

नारदीये – सम्प्राप्ते माघमासे तु तपस्विजनवल्लभे । क्रोशन्ति सर्ववारीणि समुद्गच्छति भास्वति ।। पुनीमः सर्वपापानि त्रिविधानि न संशयः इति ।।

**நாரதீயத்தில்:-** *'ருஷிகளுக்கு ப்ரியமான மாகமாஸம் வந்தவுடன், ஸூர்யன் உதிக்கும் பொழுது, மனம், வாக்கு, காயம் இவைகளால் செய்யப்படும் மூன்று விதமான ஸகல*

பாபங்களையும் அகற்றுகின்றோம்' என்று ஸகல ஜலங்களும் கூவுகின்றன.

पाद्मे —– आपो नारायणो देवः सर्ववेदेषु पठ्यते । मकरस्थे रवौ माघे गोविन्दाच्युत माधव । स्नानेनानेन मे देव यथोक्तफलदो भव ।। इति मन्त्रं समुच्चार्य स्नायान्मौनं समाश्रितः ।। बहिः स्नात्वा तु वाप्यादौ द्वादशाब्दफलं लभेत् । तटाके द्विगुणं राजन्नद्यादौ तु चतुर्गुणम् ।। दशधा देवखातेषु शतधा च महानदी । शतं चतुर्गुणं राजन् महानद्योस्तु सङ्गमे ।। सहस्रगुणितं सर्वं तत्फलं मकरे रवौ । गङ्गायां स्नानमात्रेण लभते मानुषो नृप ।।

**பாத்மத்தில்:** - ஜலமே நாராயணதேவன் என்று எல்லா வேதங்களிலும் சொல்லப்படுகிறது. ஸூர்யன் மகரத்திலிருக்கும் பொழுது, மாகமாஸத்தில் 'ஹே கோவிந்த, அச்யுத, மாதவ, தேவ இந்த ஸ்நானத்தால், சொல்லப்பட்டுள்ள பலத்தைக் கொடுப்பவராய் ஆகக்கடவீர்'. இவ்விதம் மந்த்ரத்தை உச்சரித்து, மௌனமாய் ஸ்நானம் செய்ய வேண்டும். வெளியிலுள்ள வாபீ முதலியதில் ஸ்நானம் செய்தால் பன்னிரண்டு அப்தக்ருச்ர பலத்தை அடைவான். ஓ அரசனே! தடாகத்தில் ஸ்நானம் செய்தால் இரு மடங்கு பலனையும், நதீ முதலியதில் நான்கு மடங்கு பலனையும், தேவகாதங்களில் பத்து மடங்கு பலனையும், மஹாநதியிலானால் நூறு மடங்கு பலனையும், மஹாநதிகளின் ஸங்கமத்திலானால் நானூறு மடங்கு பலனையும், கங்கையிலானால் ஆயிரம் மடங்கு பலனையும் மனிதன் அடைவான்.

पापानां भूरिभारस्य दाहदेशं प्रजापतिः । प्रयागं विदधे भूप प्रजानां च हिते स्थितः ।। दुर्जरा वैष्णवी माया देवैरपि सुदुस्त्यजा । प्रयागे दह्यते साऽपि माघमासे नराधिप ।। मकरस्थे रवौ माघे यत्र कापि बहिर्जले । निष्कामैर्वा सकामैर्वा स्नातव्यं हरितुष्टये इति ।। प्रकरणपर्यालोचनया माघस्नानं नित्यं काम्यं चेत्याहुः ।। चन्द्रिकायाम्

– नित्यं नैमित्तिकं काम्यं त्रिविधं स्नानमुच्यते । तर्पणं तु भवेत्तस्य ह्यङ्गत्वेन प्रकीर्तितम् इति ॥

*அரசனே! ப்ரம்ஹதேவன், மனிதரின் ஹிதத்தில் கருத்துள்ளவராய், பாபங்களின் பெரும் சுமையை எரிக்கும் ப்ரதேசமாக ப்ரயாகக்ஷேத்ரத்தைக் கற்பித்தார். விஷ்ணுவினுடையதாகிய மாயை, அழிக்க முடியாததும், தேவர்களாலும் தள்ளமுடியாததாயுமாகும். அந்த மாயையும், மாகமாஸத்தில் ப்ரயோக க்ஷேத்ரத்தில் தஹிக்கப்படுகின்றது. ஸூர்யன் மகரத்திலிருக்கும் பொழுது, மாகமாஸத்தில், வெளியிலுள்ள எந்த ஜலத்திலாவது, ஸகாமர்களும், நிஷ்காமர்களும், விஷ்ணுவின் ப்ரீதிக்காக ஸ்நானம் செய்ய வேண்டும். இந்த ப்ரகரணத்தை ஆலோசித்ததால், மாகஸ்நானம், நித்யமும், காம்யமும் என்று சொல்கின்றனர். சந்த்ரிகையில்:- நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூன்று விதமாய்ச் சொல்லப்பட்ட ஸ்நானம் எதுவோ, அதற்கு அங்கமாகத் தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது.*

—★—

## मलापकर्षणस्नानम्

अथ मलापकर्षणस्नानम् ॥ तत्र भरद्वाजः – अभ्यङ्गस्नपने योग्या वारा ये तिथिभिस्सह । कथ्यन्ते तेऽधुना स्पष्टं पुष्टये बलवृद्धये। इन्दोर्बुधस्य सौरेश्च वारेऽभ्यङ्गः प्रशस्यते । कान्तिं श्रियं तथा दद्युः भोगान् वाराधिपाः क्रमात् । द्वितीयाद्याश्चतस्रश्च प्रशस्ताः सप्तमी तथा। नवमी दशमी चैव त्रयोदश्यपि च स्मृताः ॥ भानुभौमामराचार्यशुक्रवारेषु सङ्क्रमे । व्यतीपाते च जन्मर्क्षे नाभ्यङ्गस्नानमाचरेत् ॥ एकादश्यां चतुर्दश्यामष्टम्यां प्रतिपद्यपि। षष्ठ्यां पर्वणि चाभ्यङ्गस्नानं नैव समाचरेत् ॥ उत्तराफल्गुनी ज्येष्ठा श्रवणार्द्रासु रात्रिषु । अभ्यङ्गस्नपनं धीमान् सुखार्थी वर्जयेत्तथा ॥

शिशुरोगार्तवृद्धानां यथाकालं शरीरिणाम्। अभ्यङ्गोष्णोदकस्नानं नैव दोषावहं स्मृतम् इति ॥

### மலாபகர்ஷண ஸ்நானம்

*இனி மலாபகர்ஷண ஸ்நானம் (எண்ணெய் தேய்த்து முழுகுதல்) சொல்லப்படுகிறது. அதில்,)* **பரத்வாஜர்:-** *அப்யங்கஸ்நானத்தில் யோக்யமான திதிகளும் வாரங்களும் எவையோ, அவையை, இப்பொழுது வ்யக்தமாய், புஷ்டிக்கும், பலவ்ருத்திக்கும் சொல்லுகிறேன். சந்த்ரன், புதன், சனி இவர்களின் வாரத்தில் அப்யங்கம் புகழப்படுகிறது. அந்த வாரங்களின் அதிபதிகள், முறையே காந்தி, லக்ஷ்மி, போகங்கள் இவைகளைக் கொடுப்பார்கள். த்வீதியை முதல் நான்கு திதிகளும், ஸப்தமியும், நவமியும், தசமியும், த்ரயோதசியும், ப்ரசஸ்தங்களாம், பானுவாரம், பௌமவாரம், குருவாரம், சுக்ரவாரம், ஸங்க்ரமணம், வ்யதீபாதம், ஜன்ம நக்ஷத்ரம் இவற்றிலும் ஏகாதசீ, சதுர்தசீ, அஷ்டமீ, ப்ரதமை, ஷஷ்டீ, பர்வம் இவைகளிலும் அப்யங்க ஸ்நானத்தைச் செய்யக் கூடாது. உத்தர பல்குனீ, ஜ்யேஷ்டா, ச்ரவணம், ஆர்த்ரை இவைகளிலும், ராத்ரியிலும், ஸுகத்தை விரும்பிகிறவன் அப்யங்க ஸ்நானத்தை தவிர்க்க வேண்டும். பாலர், பிணியாளர், வ்ருத்தர் இவர்களுக்கும், ஸமயத்திற்குத் தக்கபடி, அப்யங்கமும் உஷ்ணோதக ஸ்நானமும் தோஷத்தைச் செய்யாதென்று சொல்லப்பட்டுள்ளது.*

व्यासः – पञ्चमीं दशमीं चैव तृतीयां च त्रयोदशीम्। अभ्यङ्गात् स्पर्शनात् पानाद्यश्च तैलं निषेवते ॥ चतुर्णां तस्य वृद्धिः स्यात् धनापत्यबलायुषाम् इति ॥ यत्तु गर्ग आह – न च स्पृश्यात् त्रयोदश्यां तृतीयायां तिथौ तथा। शाश्वतीं भूतिमन्विच्छन् दशम्यामपि पण्डितः इति, यदपि गार्ग्य आह – 'त्रयोदश्यां तृतीयायां प्रतिपद्दशमीद्वये। तैलाभ्यङ्गं न कुर्वीत पिबेत्तु द्वादशीं विना' इति, यदपि वृद्धगार्ग्यवचनम्

– 'दशमी पुत्रनाशाय धनहान्यै त्रयोदशी। तृतीयोभयनाशाय स्नाने ता वर्जयेदतः' इति, एतानि वचनानि क्षत्रियादिविषयाणि। 'त्रयोदश्यां तृतीयायां दशम्यां चैव सर्वदा । शूद्रविट्क्षत्रियाःस्नानं न कुर्युस्तैलसंस्कृतम्' इति जाबालिस्मरणादिति केचित्॥

**வ்யாஸர்:**- *பஞ்சமீ, தசமீ, த்ருதீயை, த்ரயோதசீ இவைகளில் எவன், அப்யங்கத்தாலாவது, ஸ்பர்சத்தாலாவது, பானத்தாலாவது தைலத்தை உபயோகிக்கின்றனோ, அவனுக்கு தனம், குழந்தை, பலம், ஆயுஸ் என்ற நான்கும் வ்ருத்தியை அடையும். ஆனால்,* **கர்க்கர்:**- *''த்ரயோதசியிலும், த்ருதீயையிலும், தசமியிலும், சாச்வதமான ஸம்பத்தை விரும்பும் பண்டிதன் தைலத்தைத் தொடக்கூடாது'' என்று சொல்லிய வசனமும்,* **கார்க்யர்:**- *''த்ரயோதசீ, த்ருதீயை, ப்ரதமை, தசமீ இவைகளில் தைலாப்யங்கம் செய்து கொள்ளக் கூடாது, உட்கொள்ளலாம், த்வாதசியைத் தவிர்த்து'' என்று சொல்லிய வசனமும்,* **வ்ருத்தகார்க்யர்:**- *தசமீ புத்ரனைக் கொல்லும், த்ரயோ தசீ தனத்திற்கு ஹானியைச் செய்யும், த்ருதீயை இவ்விரண்டையும் நாசமாக்கும், ஆகையால் அப்யங்க ஸ்நானத்தில் அந்தத் திதிகளை வர்ஜிக்க வேண்டும்'' என்று சொல்லிய வசனமும், க்ஷத்ரியன் முதலியவரைப் பற்றியது. (ஏனெனில்) 'த்ரயோதசீ, த்ருதீயை, தசமீ இவைகளில், சூத்ரன், வைச்யன், க்ஷத்ரியன் இவர்கள் தைலத்துடன் ஸ்நானம் செய்யக் கூடாது' என்று ஜாபாலி ஸ்ம்ருதி இருப்பதால் என்கின்றனர் சிலர்.*

अपरे तु –सर्वेषामपि द्विजानां दशम्यादावभ्यङ्गस्नाननिषेधपराण्येव गर्गादिवचनानि । जाबालिवचनं तु क्षत्रियादीनां दोषाधिक्यप्रतिपादनार्थम् । सामान्येन निषेधेऽपि दोषाधिक्यान्निषेधनम् । तद्दोषभेदहेतुत्वादिति शास्त्रविदो विदुः इति मरीचिस्मरणादित्याहुः ॥ तथा च आपस्तम्बः – याद्दच्छिकं तु यत्

स्नानं भोगार्थं क्रियते द्विजैः । तन्निषिद्धं दशम्यादौ नित्यं नैमित्तिकं न तु इति ॥

மற்றவரோவெனில், 'கர்க்கர் முதலியவரின் வசனங்களெல்லாம் மூன்று வர்ணத்தாருக்கும் தசமீ முதலிய காலங்களில் அப்யங்க ஸ்நானத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யமுள்ளவைகளே, ஜாபாலி வசனமோவெனில், க்ஷத்ரியர் முதலியவர்க்கு, தோஷமதிகம் என்று சொல்வதில் தாத்பர்யமுள்ளது, (ஏனெனில்) 'ஸாமான்யமாய் நிஷேதத்திலும், தோஷாதிக்யத்தால் நிஷேதிப்பது, அந்தத் தோஷத்தின் பேத காரணத்தால் என்று சாஸ்த்ரம் அறிந்தவர் சொல்லுகின்றனர்' என்று மரீசி ஸ்ம்ருதி இருப்பதால்' என்கின்றனர். அவ்விதமே, **ஆபஸ்தம்பர்:-** த்விஜர்கள், ஸுகத்திற்காக, யாத்ருச்சிகமான எந்த ஸ்நானத்தைச் செய்கின்றனரோ அதுதான் தசமீ முதலியவைகளில் நிஷேதிக்கப்படுகிறது. நித்யமும், நைமித்திகமுமான ஸ்நானம் நிஷேதிக்கப்படவில்லை.

जाबालिरपि — नित्यं न हापयेत् स्नानं काम्यं नैमित्तिकं च यत् । दशम्यामपि कर्तव्यं न तु यादृच्छिकं कचित् इति ॥ यादृच्छिकं - मलापकर्षणार्थम्, 'मलव्यपोहनफलं स्नानं यादृच्छिकं तु तत्' इति गर्गस्मरणात् ॥ एवञ्च नित्यनैमित्तिककाम्यस्नानानां दशम्यादावप्रतिषेधः । यादृच्छिकस्यैव निषेधः ॥ यदुक्तमापस्तम्बेन - 'विना तु सततस्नानं न स्नायाद्दशमीषु च' इति, यदपि गर्गेणोक्तम्, 'पुत्रजन्मनि सङ्क्रान्तौ श्राद्धे जन्मदिने तथा । नित्यस्नाने च कर्तव्ये तिथिदोषो न विद्यते' इति, तत्काम्य नैमित्तिकयोरपि प्रदर्शनार्थमिति स्मृतिचन्द्रिकायाम् ॥

**ஜாபாலியும்:-** நித்யம், காம்யம், நைமித்திகம் என்ற ஸ்நானங்களை விடக்கூடாது. அவைகளைத் தசமியிலும் செய்ய வேண்டும். யாத்ருச்சிக ஸ்நானத்தை மட்டில்

செய்யவே கூடாது. யாத்ருச்சிகம் அழுக்கைப் போக்குவதற்கான ஸ்நானம். 'அழுக்கைப் போக்குவதைப் பலனாக உள்ள ஸ்நானம் எதுவோ அது 'யாத்ருச்சிகம்' என்று கர்க்க ஸ்ம்ருதி இருப்பதால். இவ்விதம் இருப்பதால், நித்யம் நைமித்திகம், காம்யம் என்ற ஸ்நானங்களுக்குத் தசமீ முதலியவைகளில் ப்ரதிஷேதமில்லை. யாத்ருச்சிக ஸ்நானத்திற்கு மட்டில் நிஷேதம். ஆனால், ஆபஸ்தம்பர்:- நித்ய ஸ்நானம் தவிர மற்ற ஸ்நானத்தைக் தசமியில் செய்யக் கூடாது' என்று சொல்லியதும், கர்க்கர்:- 'புத்ரஜன்மம், ஸங்க்ரமணம், ச்ரார்த்ததினம், பிறந்தநாள் இவைகளில் செய்யும் ஸ்நானத்திலும், நித்ய ஸ்நானத்திலும் திதிதோஷமில்லை' என்று சொல்லியதும், காம்ய நைமித்திக ஸ்நானங்களையும் சொல்வதற்காம்' என்று ஸ்ம்ருதி சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது.

व्यासः – षष्ठ्यष्टमी पञ्चदशी पक्षद्वयचतुर्दशी । अत्र सन्निहितं पापं तैले मांसे क्षुरे भगे' इति ।। मनुरपि – पक्षादौ च रवौ षष्ठ्यां रिक्तायां च तिथौ तथा । तैलेनाभ्यज्यमानस्तु धनायुर्भ्यां प्रहीयते इति ।। गर्गः – पञ्चदश्यां चतुर्दश्यामष्टम्यां रविसङ्क्रमे । द्वादश्यां सप्तमीषष्ठ्योस्तैलस्पर्शं विवर्जयेत् इति ।। चन्द्रिकायाम् – कुहूपूर्णेन्दुसङ्क्रान्ति चतुर्दश्यष्टमीषु च । नरश्चण्डालयोनिः स्यात् तैलस्त्रीमांससेवनात् ।। उत्पत्तौ च विपत्तौ च दन्तकाष्ठे च मैथुने । अभ्यङ्गेऽभ्युदयस्नाने तिथिस्तात्कालिकी स्मृता इति ।।

வ்யாஸர்:- ஷஷ்டீ, அஷ்டமீ, பர்வங்கள், சதுர்தசீ இவைகளில் தைலத்திலும், மாம்ஸத்திலும், க்ஷௌரத்திலும், ஸ்த்ரீ இடத்திலும் பாபம் நெருங்கியுள்ளது. அக்காலங்களில் அவைகளை ஸேவிக்கக் கூடாதென்பதாம். மனுவும்:- ப்ரதமையிலும், பானு வாரத்திலும், ஷஷ்டியிலும், ரிக்ததிதியிலும், (சதுர்த்தீ, நவமீ, சதுர்தசிகளிலும்), தைலாப்யங்கம் செய்து கொள்பவன், தனத்தாலும், ஆயுளாலும் விடப்படுவான்.

**கார்க்கர்:-** *பர்வங்கள், சதுர்தசீ, அஷ்டமீ, ஸூர்ய ஸங்க்ரமணம், த்வாதசீ, ஸப்தமீ, ஷஷ்டீ இக்காலங்களில் தைல ஸ்பர்சத்தை வர்ஜிக்க வேண்டும்.* **சந்த்ரிகையில்:-** *அமா, பூர்ணிமா, ஸங்க்ரமணம், சதுர்தசீ, அஷ்டமீ இக்காலங்களில், மனிதன், தைலம், ஸ்த்ரீ, மாம்ஸம் இவைகளை ஸேவிப்பானாகில் சண்டாளனாய்ப் பிறப்பான். ஜனனம், மரணம், தந்தகாஷ்டம், ஸ்த்ரீஸங்கம் இவைகளில் திதி அக்காலத்திலுள்ளது (நிஷேத விஷயமாகியது) என்று சொல்லப்பட்டுள்ளது.*

पुराणेऽपि – चतुर्दश्यष्टमी षष्ठी अमावास्या च पूर्णिमा । पर्वाण्येतानि राजेन्द्र रविसङ्क्रान्तिरेव च ।। तैलस्त्रीमांससंभोगी पर्वस्वेतेषु यः पुमान् । विण्मूत्रभाजनं नाम प्रयाति नरकं नरः इति ।। बोधायनः – अष्टम्यां च चतुर्दश्यां पञ्चदश्यां विशेषतः । शिरोभ्यङ्गं वर्जयेत्तु पर्वसन्धौ तथैव इति ।। वृद्धगार्ग्योऽपि – एकादश्यां दशम्यां च द्वादश्यां पञ्चपर्वसु । श्राद्धाहे च विवाहे च स्त्रियं तैलं च वर्जयेत् इति ।

**புராணத்திலும்:-** *சதுர்தசீ, அஷ்டமீ, ஷஷ்டீ, அமா, பூர்ணிமா, ஸூர்ய ஸங்க்ரமணம் இவை பர்வங்களெனப்படும். இந்தப் பர்வங்களில் எந்த மனிதன் தைலம், ஸ்த்ரீ, மாம்ஸம் இவைகளை ஸேவிக்கின்றானோ அவன், மலமூத்ர பாஜனம் என்னும் நரகத்தை அடைகின்றான்.* **போதாயனர்:-** *அஷ்டமீ, சதுர்தசீ, பர்வங்கள், பர்வ ஸந்தி இவைகளில் தலையில் அப்யஞ்ஜனத்தை வர்ஜிக்க வேண்டும்.*

मरीचिरपि – पञ्चपर्वसु नन्दासु व्यतीपाते च सङ्क्रमे । स्त्रियं तैलं च मांसं च दन्तकाष्ठं च वर्जयेत् इति ।। गार्ग्यः – तैलस्नानं सदा पुण्यं कुर्यादामलकैः श्रिये । सप्तमी नवमी दर्शं रविसङ्क्रमणादृते इति ।। शातातपोऽपि – अमायां च नवम्यां च सप्तम्यां च विशेषतः । धात्रीकल्पेन यत् स्नानं तत्स्नानं च विवर्जयेत् इति । कालादर्शे – नवमी

सप्तमी दर्शसङ्क्रान्तिग्रहणेषु च । धात्रीफलस्य कल्केन तैलस्नानं च नाचरेत् इति ।। वृद्धवसिष्ठः – दन्तकाष्ठे त्वमावास्या मैथुने च चतुर्दशी। हन्ति सप्तकुलं पुंसां तैलग्रहणतोऽष्टमी ।। दिवा कपित्थच्छायायां रात्रौ दधिषु सक्तुषु। धात्रीकल्के तु सप्तम्यामलक्ष्मीर्वर्तते सदा इति ।।

**மரீசியும்:-** பஞ்சபர்வங்களிலும், நந்தைகளிலும், வ்யதீபாதத்திலும், ஸங்க்ரமணத்திலும், ஸ்த்ரீ, தைலம், மாம்ஸம், பற்குச்சி இவைகளை வர்ஜிக்க வேண்டும். **கார்க்யர்:-** எப்பொழுதும், புண்யமான தைல ஸ்நானத்தையும், ஸ்ரீ கரமான ஆமலக ஸ்நானத்தையும் செய்யலாம். ஸப்தமீ; நவமீ, தர்சம், ஸங்க்ரமணம் இக்காலங்களைத் தவிர்த்து. **சாதாதபரும்:-** அமா, நவமீ, ஸப்தமீ இவைகளில் நெல்லிக் கனிகளால் ஸ்நானத்தையும் வர்ஜிக்க வேண்டும். **காலாதர்சத்தில்:-** நவமீ, ஸப்தமீ, அமா, ஸங்க்ரமணம், க்ரஹணம் இக்காலங்களிலும் நெல்லிக் கனியாலும், தைலத்தாலும் ஸ்நானத்தைச் செய்யக் கூடாது. **வ்ருத்த வஸிஷ்டர்:-** அமாவாஸ்யையில் தந்தகாஷ்டமும், சதுர்தசியில் மைதுனமும், அஷ்டமியில் தைலாப்யங்கமும், செய்யப்பட்டால் மனிதரின் ஏழு குலங்களைக் கொல்லும். பகலில் விளாமரத்தின் நிழலிலும், இரவில் தயிரிலும், மாவிலும், ஸப்தமியில் நெல்லிக்கனியிலும், எப்பொழுதும் மூதேவி வஸிக்கின்றாள்.

एवं वारनिषेधोऽपि ज्योतिःशास्त्रे प्रदर्शितः – 'सन्तापः कान्तिरल्पायुर्धनं निर्धनता तथा । अनारोग्यं सर्वकामा अभ्यङ्गाद्भास्करादिषु इति ।। वामनपुराणे – नाभ्यङ्गमर्के न च भूमिपुत्रे क्षौरं च शुक्रे च कुजे च मांसम्। बुधे च योषित् परिवर्जनीया शेषे तु सर्वाणि सदैव कुर्यात् इति ।। चन्द्रिकायाम् – तैलाभ्यङ्गो नार्कवारे न भौमे नो संक्रान्तौ वैधृतौ नापि षष्ठ्याम्। पर्वण्यष्टम्यां च नेष्टश्चतुर्थ्यां प्रोक्ते मुक्त्वा वासरं सूर्यसूनोः इति ।। सूर्यसूनुः शनिः ।।

இவ்விதம், வாரங்களின் நிஷேதமும் ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ளது. பானுவாரம் முதல் ஏழு வாரங்களிலும் அப்யங்கம் செய்து கொள்வதால், முறையே, ஸந்தாபம், காந்தி, ஆயுளின் குறைவு, தனம், தாரித்ர்யம், ஆரோக்யமின்மை, ஸகல காமங்கள் என்ற இவை உண்டாகும். வாமன புராணத்தில்:- பானுவாரத்தில் அப்யங்க ஸ்நானம் கூடாது. செவ்வாய்க் கிழமையில் க்ஷெளரம் கூடாது. வெள்ளிக் கிழமையிலும், செவ்வாய்க் கிழமையிலும் மாம்ஸம் கூடாது. புதவாரத்தில் ஸ்த்ரீ ஸங்கத்தை வர்ஜிக்க வேண்டும். மற்றக் காலங்களில் எல்லாவற்றையும் எப்பொழுதும் செய்யலாம். சந்த்ரிகையில்:- பானுவாரம், பெளமவாரம், ஸங்க்ரமணம், வைத்ருதி, ஷஷ்டீ, அஷ்டமீ, சதுர்தசீ இவைகளில் சனிக்கிழமை இல்லாவிடில், தைலாப்யங்கம் கூடாது.

स्मृत्यन्तरे – पाते पर्वणि सङ्क्रान्त्यां ग्रहणे चन्द्रसूर्ययोः । तैलाभ्यङ्गो न दोषाय यदि स्याद्रविनन्दनः इति ।। कालादर्शे – भौमार्कशुक्रवारेषु नाभ्यङ्गस्नानमाचरेत्।। तापकान्तिमृतिद्रव्यारोग्या-लक्ष्म्यखिलेप्सितम्। क्रमाद्रव्यादिवारेषु तैलेन स्नास्यतः फलम् इति।। षट्त्रिंशन्मतेऽपि – हृत्तापकान्ती मरणं धनमारोग्यमेव च। दारिद्र्यं सर्वकामाप्ति रभ्यङ्गे भास्करादिषु इति ।। वृद्धवसिष्ठः – सूर्यादिसौर्यन्तदिने नराणां तैलोप भोगात् क्रमशः फलानि । हृत्तापकान्ती मरणं धनं च रोगप्रहाणं विधनत्वमिष्टम् इति ।।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- வ்யதீபாதம், பர்வம், ஸங்க்ரமணம், சந்த்ர ஸூர்ய க்ரஹணம் இவைகளில் தைலாப்யங்கம் தோஷாவஹமாகாது, சனிவாரம் சேர்ந்திருந்தால், காலாதர்சத்தில்:- பெளமவாரம், பானுவாரம், சுக்ரவாரம் இவைகளில் அப்யங்க ஸ்நானம் செய்யக் கூடாது. பானுவாரம் முதல் ஏழு வாரங்களிலும் தைலாப்யங்கம் செய்து கொள்பவனுக்கு, முறையே,

ஸந்தாபம், காந்தி, மரணம், த்ரவ்யம், ஆரோக்யம், அலக்ஷ்மீ, (தாரித்ர்யம்) ஸகல காமப்ராப்தி என்ற பலன் உண்டாகும். ஷட்த்ரிம்சன்மதத்திலும்:- மனஸ்தாபம், காந்தி, மரணம், தனம், ஆரோக்யம், தாரித்ர்யம், ஸகல காமப்ராப்தி இவைகள், முறையே, பானுவாரம் முதலிய வாரங்களில் அப்யங்கம் செய்து கொள்வதால் உண்டாகும் பலன்களாம். வ்ருத்த வஸிஷ்டர்:- பானுவாரம் முதல் சனிவாரம் வரையுள்ள தினங்களில் தைலாப்யங்கம் செய்து கொள்ளும் மனிதர்களுக்கு, முறையே, மனஸ்தாபம், காந்தி, மரணம், தனம், ஆரோக்கியம், தாரித்ர்யம், இஷ்ட்ப்ராபதி என்ற இவை பலன்களாம்.

चन्द्रिकायाम् – चित्रासु हस्ते श्रवणे च तैलं क्षौरं विशाखासु भिषक्षु वर्ज्यम् । मूले मृगे भाद्रपदे तु मांसं योषिन्मघासूत्तरकृत्तिकासु इति ॥ कालादर्शे – तिथिवारसमायोगे बलीयान्वार इष्यते इति ॥ ब्रह्मसिद्धान्ते – तिथिरेकगुणा प्रोक्ता नक्षत्रं तु चतुर्गुणम् । करणं षड्गुणं चैव वारश्चाष्टगुणः स्मृतः इति ॥

சந்த்ரிகையில்:- சித்ரை, ஹஸ்தம், ச்ரவணம் இவைகளில் தைலத்தையும், விசாகம், சதயம் இவைகளில் க்ஷௌரத்தையும், மூலம், ம்ருகசீர்ஷம், பூரட்டாதி, உத்திரட்டாதி இவைகளில் மாம்ஸத்தையும், மகம், உத்திரங்கள், க்ருத்திகை இவைகளில் ஸ்த்ரீஸங்கத்தையும் வர்ஜிக்க வேண்டும். காலாதர்சத்தில்:- திதியும் வாரமும் சேர்ந்தால் வாரம் அதிக பலமுள்ளதென்று சொல்லப்படுகிறது. ப்ரம்ஹஸித்தாந்தத்தில்:- திதி ஒரு மடங்கும், நக்ஷத்ரம் நான்கு மடங்கும், கரணம் ஆறு மடங்கும், வாரம் எட்டு மடங்கும் பலமுள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது.

स्मृत्यर्थसारे – तैलाभ्यङ्गनिषेधेषु तिलतैलं निषिध्यते । अभ्यङ्गस्य निषेधे तु सार्षपादेरपीष्यते ॥ स्नेहेनाभ्यङ्गो भवति स स्नेहस्सार्षपादिकः । न भोजनादौ तैलस्य निषेधोऽभ्यङ्ग एव सः ॥

तैलशब्दस्तिलस्नेहे स रूढो न च यौगिकः । अतस्तिलविकारेषु पिण्याकतिलमोदके।। शष्कुलीकृसरादौ च निषेधो नैव जायते। सार्ष पादौ तैलशब्दस्तत्कार्यसदृशत्वतः इति ।। सङ्ग्रहे – श्राद्धाहे जन्मदिवसे विवाहे सुखदुःखयोः । व्रते चैवोपवासे च तैलाभ्यङ्गं विवर्जयेत्।। उपोषितस्य व्रतिनः कृत्तकेशस्य नापितैः। तावत्तिष्ठति वै लक्ष्मीः यावत्तैलं न संस्पृशेत् इति ।।

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:-** *தைல சப்தத்துடன் அப்யங்கத்தை நிஷேதிக்கும் இடங்களில் எள்ளின் எண்ணெய் நிஷேதிக்கப்படுகிறது. அப்யங்கத்தை நிஷேதிக்கும் இடத்தில் கடுகின் நெய் முதலியவைக்கும் நிஷேதம் சொல்லப்படுகிறது. அப்யங்கமானது ஸ்நேஹத்தால் (எண்ணெய்யால்) ஏற்படுகிறது. அந்த ஸ்நேஹம் கடுகின் ஸ்நேஹம் முதலியது ஆகும். எள்ளின் எண்ணெய்க்குப் போஜநாதிகளில் நிஷேதமில்லை. அப்யங்கத்தில் மட்டிலேயே நிஷேதம். 'தைலம்' என்னும் சப்தமானது எள்ளின் எண்ணெயில் ரூடமானது. அது யௌகிகமல்ல. ஆகையால் எள்ளின் விகாரங்களான பிண்ணாக்கு, எள்கொழுக்கட்டை, சஷ்குலீ, க்ருஸரம் முதலியவைகளில் நிஷேதம் உண்டாவதில்லை. கடுகின் ஸ்நேஹம் முதலியதில் தைல சப்தம் ப்ரயோகிக்கப்படுவது, தைலத்தின் கார்யத்தால் அதற்கு ஸமமாய் இருப்பதால்,* **ஸங்க்ரஹத்தில்:-** *ச்ராத்ததினம், பிறந்தநாள், விவாஹம், ஸுகம், துக்கம், வ்ரதம், உபவாஸம் இவைகளில் தைலாப்யங்கத்தை வர்ஜிக்க வேண்டும். உபவாஸம் செய்பவனுடையவும், வ்ரதானுஷ்டாதா வினுடையவும், க்ஷௌரம் செய்து கொண்டவனுடையவும் லக்ஷ்மியானவள், அவன் தைலத்தைத் தொடாத வரையில் அவனிடம் இருப்பாள்.*

रत्नावल्याम् – सुरया लिप्तदेहस्य प्रायश्चित्तं विधीयते । प्रातरभ्यक्तदेहस्य निष्कृतिर्न विधीयते इति ।। अयं निषेधो

नरकचतुर्दशीव्यतिरिक्तविषयः॥ प्रत्यूष आश्वयुक्कृष्णचतुर्दश्यामिनोदये। स्नानमभ्यज्य कर्तव्यं नरैर्नरकभीरुभिः इति स्मरणात्॥

**ரத்னாவளியில்:-** ஸுரையினால் பூசப்பட்ட தேஹமுடையவனுக்கு ப்ராயச்சித்தம் விதிக்கப்படுகிறது. ப்ராத: காலத்தில் அப்யங்கம் செய்து கொண்டவனுக்கு ப்ராய்சித்தம் விதிக்கப்படுவதில்லை. இந்த நிஷேதம், நரகசதுர்தசியைத் தவிர்த்து மற்றக் காலத்தைப் பற்றியது, (ஏனெனில்) "ஆச்வயுஜ க்ருஷ்ண சதுர்தசியில் உஷ:காலத்தில் ஸூர்யோதயத்தில், நரகத்தினின்றும் பயந்த மனிதர்கள் அப்யங்கம் செய்து கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும்" என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

—★—

## नरकचतुर्दशीस्नानम्

स्मृतिरत्ने – आश्वयुक्कृष्णपक्षे तु चतुर्दश्यामिनोदये। तैलाभ्यङ्गेन कर्तव्यं स्नानमुष्णेन वारिणा इति॥ स्मृत्यर्थसारे – यस्यां हतश्चतुर्दश्यां नरको विष्णुना निशि। तस्यामभ्यञ्जनं कार्यं नरैर्नरकभीरुभिः इति॥ कालादर्शेऽपि – प्रत्यूष आश्वयुग्दर्शे कृताभ्यङ्गादिमङ्गलः। भक्त्या संपूजयेल्लक्ष्मीमलक्ष्मीविनिवृत्तये इति॥

### நரகசதுர்தசீ ஸ்நானம்

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ஆச்வயுஜ க்ருஷ்ணபக்ஷத்தில் சதுர்தசியில் ஸூர்யோதயத்தில், தைலாப்யங்கத்துடன், உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்ய வேண்டும். **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** எந்தச் சதுர்தசியில் ராத்ரியில், நரகாஸுரன் விஷ்ணுவினால் கொல்லப்பட்டானோ அந்த ராத்ரியில், நரகத்தினின்றும் பயந்த மனிதர்கள் அப்யங்கம் செய்து கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். **காலாதர்சத்திலும்:-** ஆச்வயுஜமாஸத்தின் அமையில் விடியற்காலத்தில் அப்யங்கம் முதலிய மங்களங்களைச்

செய்து கொண்டு, பக்தியுடன், லக்ஷ்மியைப் பூஜிக்க வேண்டும். மூதேவின் நிவ்ருத்திக்காக.

विष्णुपुराणे —स्वातीस्थिते रवाविन्दुर्यदि स्वातीगतो भवेत्। पञ्चत्वगुदकस्नायी कृताभ्यङ्गविधिर्नरः ॥ नीराजितो महालक्ष्मीमर्चयन् श्रियमश्नुते। दीपैर्नीराजनादत्र दीपावलिरिति स्मृता इति ॥ सारसङ्ग्रहे – चतुर्दशी याऽऽश्वयुजस्य कृष्णा स्वात्यर्कयुक्ता च भवेत् प्रभाते। स्नानं समभ्यज्य नरैस्तु कार्यं सुगन्धितैलेन विभूतिकामैः ॥ तैले लक्ष्मीर्जले गङ्गा दीपावलिदिने वसेत्। अलक्ष्मीपरिहारार्थमभ्यङ्ग-स्नानमाचरेत् ॥ तत आभरणं वस्त्रं धारयेत् सर्वसम्पदः इति ॥

விஷ்ணுபுராணத்தில்:- ஸூர்யன் ஸ்வாதியில் இருக்கும் பொழுது, சந்திரனும் ஸ்வாதிக்கு வரும்பொழுது, மனிதன் அப்யங்கம் செய்து கொண்டு, ஐந்து பட்டைகள் சேர்ந்த ஜலத்தால் ஸ்நானம் செய்து, நீராஜனம் செய்யப்பட்டவனாய், மஹாலக்ஷ்மியைப் பூஜித்தால், ஸம்பத்தை அடைகிறான். இக்காலத்தில் தீபங்களால் நீராஜனம் செய்வதால் இது 'தீபாவளி' எனச் சொல்லப்பட்டது. ஸாரஸங்க்ரஹத்தில்:- ஸ்வாதியில் உள்ள ஸூர்யனுடன் கூடிய ஆச்வயுஜ க்ருஷ்ண சதுர்தசியில் உஷ:காலத்தில், ஸம்பத்தை விரும்பும் மனிதர்கள் வாஸனையுள்ள தைலத்தினால் அப்யங்கம் செய்து கொண்டு, ஸ்நானம் செய்ய வேண்டும். தீபாவளி தினத்தில், தைலத்தில் லக்ஷ்மியும், ஜலத்தில் கங்கையும் வஸிப்பாள். ஆகையால் அலக்ஷ்மியை விலக்குவதற்காக அப்யங்க ஸ்நானம் செய்ய வேண்டும். பிறகு, ஸகல ஸம்பத்து முண்டாவதற்காக, ஆபரணம், வஸ்த்ரம் இவைகளைத் தரிக்க வேண்டும்.

स्मृत्यर्थसारे — तैलाभ्यङ्गे निषिद्धाः स्युः सर्वाश्च तिथयस्सदा। द्वितीयां वर्जयित्वैव दृष्टादृष्टद्विदोषतः इति ॥ प्रायशः सर्वासु तिथिषु अभ्यङ्गस्य निषेधे प्राप्ते विशेषमभ्यनुजानाति प्रचेताः –

'सार्षपं गन्धतैलं च यत्तैलं पुष्पवासितम्। अन्यद्रव्ययुतं तैलं न दुष्यति कदाचन इति ॥

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** தைலாப்யங்க விஷயத்தில், த்விதீயையைத் தவிர்த்து மற்ற எல்லாத் திதிகளும், த்ருஷ்டமும் அத்ருஷ்டமுமான இரண்டுவித தோஷத்தாலும் நிஷித்தங்களாகவே ஆகும். அநேகமாய் எல்லாத் திதிகளிலும் அப்யங்கத்திற்கு நிஷேதம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது விசேஷத்தைச் சொல்லுகிறார், **ப்ரசேதஸ்:-** கடுகின் எண்ணெயும், வாஸனைத் தைலமும், புஷ்பத்தினுல் வாஸனையுள்ள தைலமும். வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலமும் ஒருகாலும் துஷ்டமாகாது.

यमोऽपि—घृतं च सार्षपं तैलं यत्तैलं पुष्पवासितम्। न दोषः पक्वतैलेषु स्नानाभ्यङ्गेषु नित्यशः इति ॥ सङ्ग्रहे – पक्वतैलं गन्धतैलं सार्षपं पुष्पवासितम्। वर्ज्याहिष्वप्यदुष्टं स्यात् द्रव्यान्तरयुतं तथा इति ॥ स्मृत्यर्थसारे – निषिद्धदिवसे वारे रात्रौ च व्याधितस्य च। द्रव्यान्तरयुतं तैलं न दुष्यति कदाचन ॥ शवानुगमनं क्षौरं कृत्वा नाभ्यङ्गमाचरेत्। स्नानीयं च तथा विप्रो न शुध्यति कदाचन इति ॥

**யமனும்:-** நெய், கடுகெண்ணெய், புஷ்பத்தால் வாஸனையேற்றப்பட்ட தைலமும், காய்ச்சப்பட்ட தைலங்களும் அப்யங்க ஸ்நானத்தில் தோஷமற்றவை. **ஸங்க்ரஹத்தில்:-** காய்ச்சப்பட்ட தைலம், வாஸனைத் தைலம், கடுகெண்ணெய், புஷ்பவாஸனையுள்ள தைலம், வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம் இவை நிஷித்த தினங்களிலும் தோஷமற்றவை. **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:-** நிஷித்த தினத்திலும், நிஷித்த வாரத்திலும், ராத்ரியிலும், வ்யாதியுள்ளவனுக்கும், வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம் ஒரு பொழுதும் துஷ்டமாகாது. சவானுகமனம் செய்த பிறகும், க்ஷௌரம் செய்து கொண்ட பிறகும் அப்யங்க ஸ்நானம் செய்யக் கூடாது. உபயோகிப்பவன் ஒருகாலும் சுத்தனுகான்.

सत्यव्रतः – पिष्टपकारनालेन घृतेनाथ जलेन वा। आमं वाऽपि युतं तैलं न कदाचन दुष्यति ॥ रोगातुरस्यापि तथा तैलं जातु न दुष्यति इति ॥ पुराणे – तिथि नक्षत्रवारेषु निषिद्धष्वपि रात्रिषु। तैलमाज्येन संयुक्तमद्भिर्वा शुद्धिमाप्नुयात् इति ॥ स्मृत्यन्तरे – रवौ पुष्पं गुरौ दूर्वां भृगौ गोमयमेव च। भौमे भूमिं विनिक्षिप्य तैलाभ्यङ्गं समाचरेत् ॥ द्रव्यान्तरयुतं तैलं न दुष्येद्ग्रहणं विना। तुलसीदलसंयुक्तं ग्रहणेऽपि न दुष्यति ॥ शिरोभ्यक्तेन तैलेन नाङ्गं किंचिदुपस्पृशेत्। तिलपिष्टं च नाश्नीयात् तस्य चायुर्न रिष्यति इति ॥

**ஸத்யவ்ரதர்:-** *மாவு, பக்வமான கஞ்சி, நெய், ஜலம் இவைகளில் ஒன்றுடன் சேர்ந்ததானல், பச்சையான எண்ணெயும் ஒருகாலும் துஷ்டமாகாது. ரோகத்தால் பீடிக்கப்பட்டவனுக்குத் தைலம் கெட்டதல்ல.* **புராணத்தில்:-** *நிஷித்தமான திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளிலும், ராத்ரிகளிலும், நெய் அல்லது ஜலத்துடன் கூடிய தைலம் சுத்தமாகும்.* **மற்ெருரு ஸ்ம்ருதியில்:-** *பானுவாரத்தில் புஷ்பத்தையும், குருவாரத்தில் அருகையும், வெள்ளிக்கிழமையில் கோமயத்தையும், பௌமவாரத்தில் மண்ணையும் போட்டு தைலாப்யங்கம் செய்து கொள்ளலாம். வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம், க்ரஹணம் தவிர மற்றக் காலத்தில் துஷ்டமாகாது. துளஸீ தளத்துடன் கூடிய தைலம் க்ரஹணத்திலும் துஷ்டமாகாது. தலையில் தேய்த்துக் கொண்ட தைலத்தால் வேறு ஒரு அங்கத்தையும் தடவக்கூடாது. எள்ளுடன் மாவைப் புஜிக்கக் கூடாது. இந்த நியமத்துடன் இருப்பவனுக்கு ஆயுள் குறையாது.*

गार्ग्यः – कुर्यान्नैमित्तिकं स्नानं शीताद्भिः काम्यमेव च। नित्यं यादृच्छिकं चैव यथारुचि समाचरेत् इति ॥ सत्यव्रतः – मन्त्रवन्मन्त्रहीनं च स्नानं द्विविधमीरितम्। मन्त्रैर्यत् क्रियते स्नानं मन्त्रवत्तत्प्रकीर्तितम् ॥ मलापनुत्त्यै तैलाद्यैः मन्त्रहीनं मलापहम् इति ॥

स्मृतिप्रदीपिकायाम् – अनुद्धृतैरुद्धृतैर्वा जलैः स्नानं समाचरेत् इति ।।

**கார்க்யர்:-** நைமித்திக ஸ்நானம், காம்ய ஸ்நானம் இவைகளை, சீத ஜலத்தால் செய்ய வேண்டும். நித்ய ஸ்நானம், யாத்ருச்சிக ஸ்நானம் இவைகளை இஷ்டப்படி செய்யலாம். **ஸத்யவ்ரதர்:-** மந்த்ரமுள்ளது என்றும், மந்த்ரமில்லாதது என்றும் இரண்டுவிதமாய் ஸ்நானம் சொல்லப்பட்டுள்ளது. மந்த்ரங்களுடன் செய்யப்படும் ஸ்நானம் மந்த்ர ஸ்நானம் எனப்படும். அழுக்கை யகற்றுவதற்காக எண்ணெய் முதலியதுடன் செய்யப்படும் மலாபகர்ஷண ஸ்நானம் அமந்த்ரக ஸ்நானம் எனப்படும். **ஸ்ம்ருதிப்ரதீபிகையில்:-** வெளியிலெடுக்கப்படாத ஜலத்தாலோ, வெளியிலெடுக்கப்பட்ட ஜலத்தாலோ ஸ்நானம் செய்யலாம்.

देवलः— उद्धृताश्चापि शुध्यन्ति शुद्धैः पात्रैः समुद्धृताः । एकरात्रोषिता आपस्त्याज्याः शुद्धा अपि स्वयम् इति ।। महाभारते – पादाभ्यङ्गं शिरोभ्यङ्गं द्विजोच्छिष्टावमार्जनम् । एकैकं पाण्डवश्रेष्ठ राजसूयाद्विशिष्यते इति ।। नारदीये – तैलाभ्यङ्गं महाराज ब्राह्मणानां करोति यः । स स्नातोऽब्दशतं साग्रं गङ्गायां नात्र संशयः इति ।।

**தேவலர்:-** சுத்தமான பாத்ரங்களால் எடுக்கப் பட்டால், உத்த்ருதஜலமும் சுத்தமேயாகும். சுத்தமான ஜலமாயினும், ஒரு ராத்ரி அதிக்ரமித்தால் அது தவிர்க்கத் தகுந்தததாகும். **மஹாபாரதத்தில்:-** ப்ராம்ஹணரின் பாதத்தில் எண்ணெய் தடவுவதும், அவரின் சிரஸ்ஸில் எண்ணெய் தடவுவதும், பிராம்ஹணனின் உச்சிஷ்டத்தைச் சுத்தம் செய்வதும், ஓ பாண்டவ ச்ரேஷ்டனே! ஒவ்வொன்றும் ராஜஸூயத்தை விடச் சிறந்ததாகும். **நாரதீயத்தில்:-** ஓ மஹாராஜனே! எவன் ப்ராம்ஹணருக்குத் தைலாப்யங்கம் செய்கின்றானோ அவன், நூறு வருஷம் கங்கையில் ஸ்நானம் செய்தவனாகிறான். இதில் ஸம்சயமில்லை.

—★—

## क्रियास्नानम्

अथ क्रियास्नानम् । तत्र शङ्खः – क्रियास्नानं प्रवक्ष्यामि यथावद्विधिपूर्वकम् । सरस्सु देवखातेषु तीर्थेषु च नदीषु च ॥ क्रियास्नानं समुद्दिष्टं स्नानं तत्र क्रिया मता । मृद्भिरद्भिश्च कर्तव्यं शौचमादौ यथाविधि ॥ जले निमग्न उन्मज्ज्य उपस्पृश्य यथाविधि । तीर्थस्यावाहनं कुर्यात् तत् प्रवक्ष्याम्यतः परम् ॥

### க்ரியா ஸ்நானம்

*இனி க்ரியா ஸ்நானம் சொல்லப்படுகிறது. அதில் சங்கர்:- க்ரியா ஸ்நானத்தை விதி உள்ளபடி சொல்லப் போகிறேன். ஸரஸ்ஸுகள், தேவகாதங்கள், தீர்த்தங்கள், நதிகள் இவைகளில் விதிப்படி ஸ்நானம் செய்வது க்ரியா ஸ்நானம் எனப்படும். அதில், ஸ்நானமே க்ரியை என்று சொல்லப்பட்டுள்ளது. ஆதியில் மண், ஜலம் இவைகளால் தேஹத்தைச் சுத்தி செய்து கொள்ள வேண்டும். பிறகு ஜலத்தில் மூழ்கி எழுந்து விதிப்படி ஆசமனம் செய்து, தீர்த்தத்தை ஆவாஹனம் செய்ய வேண்டும். இனி அதைச் சொல்லுகிறேன்.*

प्रपद्ये वरुणं देवमम्भसां पतिमूर्जितम् । याचितं देहि मे तीर्थं सर्वपापापनुत्तये ॥ तीर्थमावाहयिष्यामि सर्वाघविनिषूदनम् । सान्निध्यमस्मिन् स्वे तोये स्थीयतां मदनुग्रहात् ॥ रुद्रान् प्रपद्ये वरदान् सर्वानप्सुषदस्त्वहम् । देवमप्सुषदं वह्निं प्रपद्येऽघनिषूदनम् ॥ अपः पुण्याः पवित्राश्च प्रपद्ये शरणं तथा । रुद्रश्चाग्निश्च शर्वश्च वरुणश्चाप एव च ॥ शमयन्त्वाशु मे पापं रक्षन्तु च सदैव माम् ॥

*ஆவாஹன மந்த்ரங்கள் - ''ப்ரபத்யே வருணம் + ஸதைவமாம்'' என்று. அவைகளின் பொருள் - ''ஜலங்களுக்குப் பதியும், பலமுள்ளவனுமான வருண தேவனைச் சரணமடைகின்றேன். ஓ வருண! என்னால்*

வேண்டப்பட்ட தீர்த்தத்தை, ஸகல பாபங்களையும் போக்குவதற்கு எனக்குக் கொடுப்பாயாக. ஸகல பாபங்களையும் போக்குவதான தீர்த்தத்தை ஆவாஹனம் செய்யப் போகிறேன். உமதாகிய இந்தத் தீர்த்தத்தில் என்னை அனுக்ரஹிப்பதற்காக நீர் இருக்க வேண்டும். வரனைக் கொடுப்பவர்களான ருத்ரர்களையும், ஜலத்தில் வஸிப்பவர் எல்லோரையும் சரணமடைகிறேன். பாபத்தைப் போக்குகின்றவரும், ஜலத்தில் இருப்பவருமான அக்னியைச் சரணமடைகிறேன். புண்யப்ரதமாயும், பரிசுத்தமாயுமுள்ள ஜலத்தைச் சரணமடைகின்றேன். ருத்ரன், அக்னி, சர்வன், வருணன், ஜலம் என்ற இவர்கள் என் பாபத்தைச் சீக்கிரம் போக்க வேண்டும். எப்பொழுதும் என்னைக் காக்க வேண்டும்'' என்பது.

इत्येवमुक्त्वा कर्तव्यं ततः संमार्जनं कुशैः । आपोहिष्ठेति तिसृभिः यथावदनुपूर्वशः । हिरण्यवर्णा इति च ऋग्भिश्चतसृभिस्तथा ॥ शन्नोदेवीरिति तथा शन्न आपस्तथैव च । सदमापः प्रवहतेत्येवं च समुदीरयेत् ॥ एवं सम्मार्जनं कृत्वा छन्द आर्षं च दैवतम् । अघमर्षणसूक्तस्य संस्मरेत् प्रयतः सदा ॥ ततोऽम्भसि निमग्नस्तु त्रिः पठेदघमर्षणम् । प्रदद्यान्मूर्द्धनि तथा महाव्याहृतिभिर्जलम् इति ॥

இவ்விதம் சொல்லிப் பிறகு, குசங்களால் மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். 'ஆபோஹிஷ்ட' முதல் மூன்று ருக்குகளாலும், 'ஹிரண்யவர்ணா:' முதல் நான்கு ருக்குகளாலும் 'சம்நோதேவீ:, சம்நஆப:, இதமாப: ப்ரவஹத' என்ற ருக்குகளாலும் மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். பிறகு, அகமர்ஷண ஸூக்தத்தின், சந்தஸ், ருஷி, தேவதை இவைகளை ஸ்மரிக்க வேண்டும். பிறகு, ஜலத்தில் மூழ்கியவனாய், அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று முறை ஜபிக்க வேண்டும். மஹாவ்யாஹ்ருதிகளால் தலையில் ஜலத்தை விட்டுக் கொள்ள வேண்டும்.

तीर्थयात्रायां वर्जनीयमाह व्यासः – छत्रं च हरते पादमर्धं हरति पादुका । यानं हरेत्त्रिपादं तु सर्वं हरति डोलिका ।। ऐश्वर्याल्लोभमोहाद्वा गच्छेद्यानादिभिस्तु यः । निष्फलं तस्य तत्तीर्थं तस्माद्यानादि वर्जयेत् इति ।। विष्णुः – गोभिर्युक्तेन यानेन तीर्थयात्रां करोति यः । स याति नरकं घोरं यावद्गोरोमसङ्ख्यया इति ।।

*தீர்த்த யாத்ரையில் விடத் தகுந்தவைகளைச் சொல்கிறார், **வ்யாஸர்**:- தீர்த்த யாத்ரையில் குடை உபயோகிக்கப்பட்டால் அது புண்யத்தின் கால்பாகத்தை அபஹரிக்கும். பாதரக்ஷை பாதிபாகத்தை அபஹரிக்கும். டோலி முழுப்புண்யத்தையும் அபஹரிக்கும். ஐச்வர்யத்தால் அல்லது லோபத்தாலோ, மோஹத்தாலோ வாஹனம் முதலியவைகளால் எவன் தீர்த்தயாத்ரைக்குச் செல்கின்றானோ, அவனுக்கு அந்தத் தீர்த்தம் நிஷ்பலமாகும். ஆகையால் வாஹனம் முதலியவைகளை வர்ஜிக்க வேண்டும். **விஷ்ணு**:- எருதுகளுடன் கூடிய வாஹனத்தால் எவன் தீர்த்த யாத்ரை செய்கின்றானோ அவன், எருதுகளின் ரோமங்கள் எவ்வளவோ அவ்வளவு வர்ஷங்கள் வரையில் கோரமான நரகத்தை அடைகின்றான்.*

पैठीनसिः – षोडशांशं स लभते यः परार्थेन गच्छति । अर्धतीर्थफलं तस्य यः प्रसङ्गेन गच्छति ।। तीर्थं प्राप्यानुषङ्गेण यस्तत्र स्नानमाचरेत् । स्नानार्धफलमाप्नोति तीर्थयात्राश्रितं न तु ।। नृणां पापकृतां तीर्थे पापस्य शमनं भवेत् । यथोक्तफलदं तीर्थं भवेच्छुद्धात्मनां नृणाम् इति ।। व्यासोऽपि – यस्य हस्तौ च पादौ च मनश्चैव सुसंयतम् । विद्या तपश्च कीर्तिश्च स तीर्थफलमश्नुते इति ।।

***பைடீநஸி**:- எவன் பிறருக்காகச் செல்கின்றானோ அவன் தீர்த்த பலத்தின் 16-ல் ஒரு பாகமுள்ள பலனை அடைகிறான். வேறு கார்யத்தால் சென்றவன் தீர்த்த பலத்தின் பாதியை அடைவான். பிறருக்கு உதவியாய்ச்*

சென்றவன் அங்கு ஸ்நானம் செய்தால் ஸ்நானத்தின் பாதி பலனை அடைகிறுன். தீர்த்த யாத்ரா பலனை முழுவதும் அடைய மாட்டான். பாபம் செய்த மனிதர் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால், பாபம் மட்டில் சாந்தமாகும். சுத்தரான மனிதருக்கே, தீர்த்தம் பூர்ண பலனைக் கொடுப்பதாகும். **வ்யாஸரும்:**- எவனது கைகளும், கால்களும், மனதும், அடக்கப்பட்டிருக் கின்றனவோ, எவனுக்கு வித்யையும், தபஸ், ஸுகம், கீர்த்தியும் உள்ளனவோ, அவன் தீர்த்தத்தின் பலத்தை அடைகிறுன்.

वृद्धवसिष्ठः – पितरं मातरं वाऽपि भ्रातरं सुहृदं गुरुम् । निमज्जेत्तु यमुद्दिश्य द्वादशांशं लभेत सः ।। तत्प्रार्थिते त्वष्टमांशं लभेत् स्नानफलं नरः इति ।। पैठीनसिः – प्रतिकृतिं कुशमयीं तीर्थवारिणि मज्जयेत् । मज्जयेत्तु यमुद्दिश्य अष्टभागं लभेत सः ।। अत्रायं मन्त्रः – 'कुशोऽसि त्वं पवित्रोऽसि ब्रह्मणा निर्मितः पुरा । त्वयि स्नाते स च स्नातो यस्यैतद्ग्रन्थिबन्धनम् इति ।।

**வ்ருத்த வஸிஷ்டர்:**- பிதா, மாதா, ப்ராதா, மித்ரன், குரு இவருள் எவரையாவது உத்தேசித்து ஸ்நானம் செய்தால், அந்த உத்தேச்யன், தீர்த்த பலத்தில் பன்னிரண்டிலொரு பாகத்தை அடைவான். உத்தேச்யன் ப்ரார்த்தித்துச் செய்த விஷயத்திலானுல், அவன் எட்டிலொரு பாகத்தை அடைவான். **பைடீநஸி:**- குசத்தால் ப்ரதிநிதி செய்து, அதைத் தீர்த்த ஜலத்தில் முழுக்க வேண்டும். எவனை உத்தேசித்து முழுக்குகின்ருனே அவன் தீர்த்த பலனின் எட்டிலொரு பாகத்தை அடைவான். அதில் மந்த்ர மிது - 'குசோஸி + பந்தனம்' என்பது. இதன் பொருள் - 'நீ குசமாய் இருக்கின்ருய், சுத்தனுய் இருக்கிருய், நீ முற்காலத்தில், ப்ரஹ்மாவினுல் ஸ்ருஷ்டிக்கப்பட்டாய். நீ ஸ்நானம் செய்த பொழுது, இந்தக் குசமுடிச்சு எவனுடையதோ அவனும் ஸ்நானம் செய்தவனுய் ஆகிருன்' என்று.

तीर्थफलं न विक्रीणीयात् ।। तथाचापस्तम्बः – मांसमायुधं सुकृताशां च तिलतण्डुलांस्त्वेव धान्यस्य विशेषेण न विक्रीणीयात् इति ।। धर्मदानं तु विषयविशेषे स्मर्यते – देवतानां गुरूणां च मातापित्रोस्तथैव च । पुण्यं देयं प्रयत्नेन नापुण्यं चोदितं क्वचित् इति ।। शाण्डिल्यः – जीवनार्थं हतं तीर्थं जीवनार्थं हतं व्रतम् । सन्दिग्धोऽपि हतो मन्त्रो व्यग्रचित्तो हतो द्विजः ।। पृथिव्यां यानि तीर्थानि तानि सर्वाणि सागरे । सागरे यानि तानि स्युः पादे विप्रस्य दक्षिणे इति ।।

*தீர்த்த பலத்தை விற்கக் கூடாது. அவ்விதமே,* **ஆபஸ்தம்பர்:-** *மாம்ஸம், ஆயுதம், தீர்த்த ஸ்நானம் முதலியதின் புண்யகாலம், தான்யங்களுள் எள்ளு, அரிசி இவைகளையும் விற்கவே கூடாது. தர்மதானம் சிலருக்குச் செய்யலாம் என்று சொல்லப்படுகிறது - தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும், மாதா பிதாக்களுக்கும் புண்யத்தை அவச்யம் கொடுக்க வேண்டும். பாபத்தை ஒருகாலும் கொடுக்கக் கூடாது.* **சாண்டில்யர்:-** *பிழைப்புக்காகச் செய்யப்படும் தீர்த்த ஸ்நானம் வீணாகும். ஜீவனத்திற்காகச் செய்யப்படும் வ்ரதமும் வீணாகும். ஸந்தேகிப்படும் மந்த்ரம் வீணாகும். நிலையில்லாத சித்தமுடைய ப்ராம்ஹணன் வீணாவான். பூமியில் எவ்வளவு தீர்த்தங்கள் உண்டோ அவையெல்லாம் ஸமுத்ரத்தில் இருக்கின்றன. ஸமுத்ரத்தில் எவ்வளவு தீர்த்தங்களோ அவையெல்லாம் ப்ராம்ஹணனின் வலது காலில் இருக்கின்றன.*

आश्वमेधिके — आस्ते हरिरचिन्त्यात्मा यत्रैव मधुसूदनः । तत्तीर्थं तत्परं ब्रह्म तत्पुण्यं तत्तपोवनम् ।। आचारवस्त्रान्तविशोधितेन सत्यप्रसन्नक्षमशीतलेन । ज्ञानाम्बुना स्नाति हि यश्च नित्यं किं तस्य भूयः सलिलेन कृत्यम् इति ।। शाण्डिल्यः – कुटुम्बिनो विनाऽन्येषां दृष्टं तीर्थादि सेवनम् । कुटुम्बिनां गृहे सर्वं विकलो निर्गतो गृहात् इति । विकलः – शून्यनित्यकर्मा ।।

ஆச்வமேதிகத்தில்:- மனத்திற்கெட்டாதவரும், மதுவை வென்றவருமான ஹரியானவர் எங்கு இருக்கின்றாரோ, அது தீர்த்தம், அது பரமான ப்ரம்ஹம், அது புண்யஸ்தலம், அதுவே தபோவனமாகும். ஆசாரமாகிய வஸ்த்ரத்தால் சோதிக்கப்பட்டதும், ஸத்யத்தால் தெளிந்ததும், க்ஷமையால் சீதளமுமான, ஜ்ஞானமெனும் ஜலத்தினால் எவன் ஸ்நானம் செய்கின்றானோ அவனுக்கு மறுபடி ஜலத்தால் என்ன கார்யம் இருக்கிறது. சாண்டில்யர்:- குடும்பிகளைத் தவிர மற்றவர்க்குத் தீர்த்தம் முதலியதின் ஸேவை சொல்லப்பட்டுள்ளது. குடும்பிகளுக்கு வீட்டிலேயே ஸகலமும் உள்ளது. விகலன் வீட்டிலிருந்து வெளியிற் செல்ல வேண்டும். விகலன் = நித்ய கர்மங்களில்லாதவன்.



## नदीरजोदोषनिर्णयः

अथ नदीरजोदोषनिर्णयः ।। तत्र कात्यायनः – सम्प्राप्ते श्रावणे मासि सर्वा नद्यो रजस्वलाः । तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा तु जाह्नवीम् इति ।। योगयाज्ञवल्क्यः – यावन्नोदेति भगवान् दक्षिणाशाविभूषणम् । तावद्रेतोवहा नद्यो वर्जयित्वा तु जाह्नवीं इति ।। यावन्नोदेत्यगस्त्यः, तावद्रेतोवहाः रजस्वला इत्यर्थः ।। उदयोऽपि तस्य शरद्येव ज्योतिःशास्त्रे दर्शितः ।। एवं च वर्षाकाले रजस्वला इत्युक्तं भवति ।। मरीचिः – कर्कटे सरितस्सर्वा भवन्तीह रजस्वलाः । अप्रशस्तं तदा स्नानं वर्षादौ नववारिणि इति ।।

### நதிகளின் ரஜோதோஷ நிர்ணயம்

இனி நதிகளின் ரஜோதோஷத்தின் நிர்ணயம் சொல்லப்படுகிறது. அதில், காத்யாயனர்:- ச்ராவண மாஸம் வந்தவுடன் எல்லா நதிகளும் ரஜஸ்வலையாய் ஆகின்றன. கங்கையைத் தவிர்த்த மற்ற நதிகளில் ஸ்நானம்

செய்யக் கூடாது. **யோகயாக்ஞவல்க்யர்:-** தெற்குத் திக்கின் ஆபரணமாகிய அகஸ்த்யர் எதுவரையில் உதயமாக வில்லேயோ அது வரை, கங்கையைத் தவிர்த்த மற்ற நதிகள் ரஜஸ்வலைகளாம். அந்த அகஸ்த்யரின் உதயமும் சரத் காலத்திலேயே ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் சொல்லப் பட்டுள்ளது. இவ்விதம் இருப்பதால் வர்ஷா காலத்தில் ரஜஸ்வலைகள் என்று சொல்லியதாய் ஆகின்றது. **மரீசி:-** கடக மாஸத்தில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அப்பொழுது வர்ஷா காலத்தில் ஆரம்பம். புதுஜலத்தில் ஸ்நானம் நிஷித்தம் ஆகும்.

वृद्धगार्ग्योऽपि – वर्षादौ सरितः सर्वा भवन्तीह रजस्वलाः । तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा तु जाह्नवीम् इति ।। मार्कण्डेयः – द्विमासं सरितस्सर्वा भवन्तीह रजस्वलाः ।अप्रशस्तं तदा स्नानं वर्षादौ नववारिणि इति ।। कात्यायनोऽपि – नभोनभस्ययोर्मध्ये सर्वा नद्यो रजस्वलाः । तासु स्नानं न कुर्वीत देवर्षिपितृतर्पणम् इति ।।

**வ்ருத்த கார்க்யரும்:-** வர்ஷருதுவின் ஆதியில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக் கூடாது, கங்கையைத் தவிர்த்து. **மார்க்கண்டேயர்:-** இங்கு, எல்லா நதிகளும் இரண்டு மாதம் முழுவதும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அப்பொழுது வர்ஷருதுவின் ஆரம்பத்தில் புது ஜலத்தில் ஸ்நானம் நிஷித்தமாகும். **காத்யாயனரும்:-** ச்ராவண பாத்ரபத மாஸங்களின் நடுவில், எல்லா நதிகளும் ரஜஸ்வலைகள் ஆகின்றன. அவைகளில் ஸ்நானத்தையும், தேவர்ஷி பித்ரு தர்ப்பணத்தையும் செய்யக் கூடாது.

एतत्सर्वं कर्कटादिमासद्वयाभिप्रायम् ।। यदाह अत्रिः – सिंहकर्कटयोर्मध्ये सर्वा नद्यो रजस्वलाः । न स्नानादीनि कर्माणि तासु कुर्वीत मानवः इति ।। सिंहकर्कटमासद्वयमध्ये सर्वा रजस्वला इत्यर्थः। योगयाज्ञवल्क्यः – रजोदुष्टेऽम्भसि स्नानं वर्ज्यं नद्यादिषु द्विजैः ।

कदर्थितं रजस्तेषां सन्ध्योपास्तिश्च तर्पणम् इति ॥ कदर्थितं - कुत्सितम् ॥ व्याघ्रपादः – सिंहकर्कटयोर्मध्ये सर्वा नद्यो रजस्वलाः । तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा समुद्रगाः इति। समुद्रगाः - महानदीः ॥

இவையெல்லாம் கடகம் முதலான இரண்டு மாதங்களைச் சொல்வதில் அபிப்ராயம் உடையவை. ஏனெனில், **அத்ரி**:- ஸிம்ஹ கடக மாஸங்களின் நடுவில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அவைகளில், ஸ்நானம் முதலிய கர்மங்களை மனிதன் செய்யக் கூடாது. ஸிம்ஹ கடகமாஸங்கள் இரண்டிலும், எல்லா நதிகளும் ரஜஸ்வலைகள் என்பது பொருள். **யோகயாக்ஞவல்க்யர்**:- நதி முதலியவையில் ரஜஸ்ஸால் துஷ்டமான ஜலத்தில் ப்ராம்ஹணர்கள் ஸ்நானத்தை தவிர்க்க வேண்டும். ரஜஸ் வெறுக்கத்தக்கது ப்ராம்ஹணர் செய்யும் ஸந்த்யோ பாஸனம் தர்ப்பணம் இவையும் குறையுள்ளதாகும். **வ்யாக்ரபாதர்**:- ஸிம்ஹ கர்க்கட மாஸங்களில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகள் ஆகின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக் கூடாது. ஸமுத்ரத்தைச் சேரும் நதிகளை (மஹா நதிகளை)த் தவிர்த்து.

तत्र विशेषो दर्शितो भविष्यत् पुराणे – आदौ कर्कटके सर्वा महानद्यो रजस्वलाः । त्रिदिनं तु चतुर्थेऽह्नि शुद्धाः स्युर्जाह्नवी यथा इति ॥ महाभारतेऽपि – महानद्यो देविका च कावेरी नर्मदा तथा । रजसा तु प्रदुष्टाः स्युः कर्कटात्तु त्र्यहं नृप इति ॥ महानद्यो दर्शिताः ब्रह्मपुराणे – गोदावरी भीमरथी तुङ्गभद्रा च वेणिका । तापी पयोष्णिका विन्ध्यदक्षिणे तु प्रकीर्तिताः ॥ भागीरथी नर्मदा च यमुना च सरस्वती । विशोका च वितस्ता च विन्ध्यस्योत्तरसंस्थिताः ॥ द्वादशैता महानद्यो देवर्षिक्षेत्रसंभवाः इति ॥

அதில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது, **பவிஷ்யத்புராணத்தில்**:- கடக மாஸத்தில் முதலில்,

எல்லா மஹாநதிகளும் மூன்று நாள் ரஜஸ்வலைகளாகின்றன, நான்காவது நாளில் சுத்தையாய் ஆகின்றன, கங்கை போல். **மஹாபாரதத்திலும்**:- ஓ அரசனே! மஹாநதிகளும், தேவிகா, காவேரீ, நர்மதா இவைகளும், கடகமாஸம் முதலில் மூன்று நாள் ரஜஸ்ஸினால் தோஷமுள்ளவைகளாய் ஆகின்றன. மஹாநதிகள் சொல்லப்பட்டுள்ளன, **ப்ரம்ஹ புராணத்தில்**:- கோதாவரீ, பீமரதீ, துங்கபத்ரா, வேணிகா, தாபீ, பயோஷ்ணிகா இவை விந்த்யத்தின் தென் பாகத்திலுள்ள மஹாநதிகள். பாகீரதீ, நர்மதா, யமுனா, ஸரஸ்வதீ, விசோகா, விதஸ்தா இவை விந்த்யத்தின் வடக்குப் பாத்திலுள்ள மஹாநதிகள், இந்தப் பன்னிரண்டு மஹாநதிகளும் தேவர்ஷி க்ஷேத்ரங்களிலிருந்து உண்டாகியவைகளாம்.

वामनपुराणे तु – गोदावरी भीमरथी कृष्णवेणी सरस्वती । तुङ्गभद्रा सुप्रयोगा वेणी कावेरिकेति च ॥ दुग्धोदा नकिनी रेवा वारिगीता कलस्वना । एता अपि महानद्यः सह्यमूलाद्विनिः सृताः इति । नृसिंहपुराणेऽपि – गङ्गा च यमुना गोदावरी स्यात्तुङ्गभद्रका । कावेरी च महापुण्या महानद्यः प्रकीर्तिताः इति ॥

**வாமன புராணத்தில்**:- கோதாவரீ, பீமரதீ, க்ருஷ்ணவேணீ, ஸரஸ்வதீ, துங்கபத்ரா, ஸுப்ரயோகா, வேணீ, காவேரீ, துக்தோதா, நளிநீ, ரேவா, வாரிகீதா, களஸ்வநா என்ற இவையும் ஸஹ்யமலையின் அடியினின்றும் வெளிவந்துள்ள மஹாநதிகளாம். **ந்ருஸிம்ஹ புராணத்திலும்**:- கங்கா, யமுனா, கோதாவரீ, துங்கபத்ரா, காவேரீ என்ற நதிகளும் மஹாபுண்யமான மஹாநதிகள் எனச் சொல்லப்பட்டுள்ளதுன.

भरद्वाजः – उद्धृत्वा भूधरेंऽभोधिं प्रविशत्यम्बुसन्ततिः । या सा महानदी ज्ञेया सर्वपापप्रणाशिनी इति ॥ एवं महानदीत्वेन परिगणितानामेव दिनत्रयं रजोदोषः । अन्यासां तु समुद्रगानामपि

मासद्वयं रजोदोष इत्यभिप्रेत्याह। कात्यायनः – प्रावृट्काले महानद्यः सन्ति नित्यं रजस्वलाः। तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा तु जाह्नवीम् इति॥

பரத்வாஜர்:- மலையில் உண்டாகி, ஸமுத்ரத்தை அடையும் ஜலப்ரவாஹ மெதுவோ, அது, ஸகல பாபங்களையும் அகற்றும் மஹாநதி என்று அறியத் தகுந்தது. இவ்விதம் மஹாநதி என்று எண்ணப்பட்ட நதிகளுக்கே மூன்று நாள் ரஜோதோஷம். மற்ற நதிகள் ஸமுத்திர காமினிகளாகினும் அவைகளுக்கு இரண்டு மாதம் ரஜோதோஷமுண்டு, என்ற அபிப்ராயத்தைக் கொண்டு சொல்லுகிறார், காத்யாயனர்:- வர்ஷா காலத்தில் மஹாநதிகள் நித்யமும் ரஜஸ்வலைகளாய் இருக்கின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக் கூடாது, கங்கையைத் தவிர்த்து.

स एव – कर्कटादौ रजोदुष्टा गोमती वासरत्रयम्। चन्द्रभागा सती सिन्धुः सरयूर्नर्मदा तथा॥ इति॥ अत्रापवादमाह मरीचिः – आदित्यदुहिता गङ्गा प्लक्षजाता सरस्वती। रजसा नाभिभूयन्ते ये चान्ये नदसंज्ञिताः इति॥ मार्कण्डेयः – कालिन्दी गौतमी गङ्गा वेणिका च सरस्वती। सामर्थ्यादाभिजात्याच्च रजो नाभिभवत्यमूः इति॥ आभिजात्यम् - देवसम्भूतत्वम्॥ जाह्नव्यादित्यसम्भूता प्लक्षजाता सरस्वती। रजसा नैव दुष्यन्ति नदाः कृष्णा च वेणिका इति॥

காத்யாயனரே:- கடக மாஸத்தின் முதலில் மூன்று நாள், கோமதீ, சந்த்ரபாகா, கோதாவரீ, ஸிந்து, ஸரயூ, நர்மதா என்ற நதிகள் ரஜோதோஷம் உடையவைகளாய் இருக்கின்றன. இங்கு அபவாதத்தைச் சொல்லுகிறார் மரீசி:- யமுனை, கங்கா, ப்லக்ஷஜா, ஸரஸ்வதீ இவைகளும், நதமென்று பெயருள்ளவைகளும் ரஜஸ்ஸினால் தோஷம் அடைவதில்லை. மார்க்கண்டேயர்:- யமுனை, கௌதமீ, கங்கா, வேணிகா, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகளின்

ஸாமர்த்யத்தாலும், தேவரிடம் இருந்து உண்டாகிய தாலும், அவைகளை ரஜோதோஷம் கெடுப்பதில்லை. **காத்யாயனரும்:-** கங்கா, யமுனு, ப்லக்ஷஜா, ஸரஸ்வதீ, க்ருஷ்ணு, வேணிகா என்ற இவைகளும் நதங்களும் ரஜஸ்ஸினுல் தோஷத்தை அடைவதில்லை.

वामनपुराणे – सरस्वती नदी पुण्या तथा वैतरणी नदी। आपगा च महापुण्या गङ्गा मन्दाकिनी तथा ॥ मधुप्रवाहांऽशुमती कौशिकी पापनाशिनी। दषद्वती महापुण्या तथा वैतरणी नदी ॥ एतासामुदकं पुण्यं वर्षाकाले प्रवर्द्धितम्। रजस्वलात्वमेतासां विद्यते न कदाचन इति ॥ यमः – गङ्गा धर्मोद्भवा पुण्या यमुना च सरस्वती। अन्तर्गतरजोयोगाः सर्वाहःस्वपि चामलाः इति ॥ कालादर्शे – सिंहकर्कटयोर्नद्यः सर्वा एव रजस्वलाः। त्रिदिनं स्युर्महानद्यो गोदां पेण्णां सरस्वतीम् ॥ भागीरथीं च कालिन्दीं नदान् शोणादिकान् विना इति ॥

**வாமன புராணத்தில்:-** புண்யையான ஸரஸ்வதீ, வைதரணீ, மஹா புண்யையான கங்கை, மந்தாகினீ, மதுப்ரவாஹா, அம்சுமதீ, பாபத்தை அகற்றும் கௌசிகீ, மஹா புண்யையான த்ருஷத்வதீ, வைதரணீ என்ற இந்த நதிகளின், வர்ஷா காலத்தில் பெருகும் ஜலமும் புண்யமாகும். இவைகளுக்கு, ரஜஸ்வலையின் தன்மை ஒருகாலுமில்லை. **யமன்:-** கங்கா, தர்மோத்பவா, யமுனு, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகள், எக்காலத்திலும் நிர்மலங்கள், இவைகளுக்கு ரஜோதோஷமில்லை. **காலாதர்சத்தில்:-** ஸிம்ஹ கடக மாஸங்களில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. கோதாவரீ, பெண்ணு, ஸரஸ்வதீ, பாகீரதீ, காளிந்தீ, சோணம் முதலிய நதங்கள் இவைகளைத் தவிர்த்து மற்ற மஹா நதிகள் மூன்று நாள் ரஜஸ்வலைகளாய் ஆகும்.

कात्यायनस्तु गङ्गाया अपि रजोदोषमाह – प्रवृत्ते श्रावणे मासि त्र्यहं गङ्गा रजस्वला । चतुर्थेऽहनि संप्राप्ते शुद्धा भवति जाह्नवी इति ।। योगयाज्ञवल्क्योऽपि – प्रथमं कर्कटादौ तु त्र्यहं गङ्गा रजस्वला इति ।। अत्र जाह्नव्या रजोयोगाभाववचनानां भूयस्त्वाद्रजोदोषो नास्तीत्येव युक्तम् ।।

காத்யாயனரோவெனில்:- கங்கைக்கும் ரஜோ தோஷத்தைச் சொல்லுகிறார் - 'ச்ராவண மாஸம் ஆரம்பித்தவுடன், கங்கை மூன்று நாள் ரஜஸ்வலையாய் இருக்கிறாள். நான்காவது நாள் வந்தவுடன் சுத்தையாய் ஆகிறாள்' என்று. யோக்யாக்ஞவல்க்யரும்:- கடக மாஸத்தின் ஆரம்பத்தில் மூன்று நாள் கங்கை ரஜஸ்வலையாய் இருக்கிறாள். இங்கு, கங்கைக்கு ரஜஸ் ஸம்பந்தமில்லை என்று சொல்லும் வசனங்களே அதிகமாய் இருப்பதால், கங்கைக்கு ரஜோ தோஷமில்லை என்பதே யுக்தமாகும்.

केचित्तु – या निस्सृता नदा : प्रोक्ता याश्च गङ्गेति कीर्तिताः । एतासां कर्कटे भानौ रजोदोषो न विद्यते । कावेरी तुङ्गभद्रा च कृष्णवेणी च गौतमी । भागीरथी च विख्याता पञ्च गङ्गाः प्रकीर्तिताः इति वचनमुदाहरन्तः कावेर्या रजोदोषो नास्तीत्याहुः ।। अपरे पुनः – कालिन्दी गौतमी गङ्गा वेणिका च सरस्वती । सामर्थ्यादाभिजात्याच्च रजो नाभिभवत्यमूः इत्यविद्यमानरजोदोषासु गौतमीभागीरथीकृष्ण-वेणीषु गङ्गाभिधानासु 'याश्च गङ्गेति कीर्तिताः' इति वचनस्य सावकाशत्वात्, 'महानद्यो देविका च कावेरी नर्मदा तथा । रजसा तु प्रदुष्टाः स्युः कर्कटादौ त्र्यहं नृप' इति प्रातिस्विक महाभारतवचनाच्च दिनत्रयं रजोदोषोऽस्तीत्याहुः ।।

சிலரோவெனில்:- "எவை நதம் எனப்படுகின்றனவோ. எவை கங்கை எனச் சொல்லப்பட்டுள்ளனவோ

இவைகளுக்குக் கடக மாஸத்தில் ரஜோதோஷமில்லை. காவேரீ, துங்கபத்ரா, க்ருஷ்ணவேணீ, கௌதமீ, பாகீரதீ, என்ற ஐந்து நதிகளும் கங்கை எனச் சொல்லப்பட்டுள்ளன'' என்னும் வசனத்தைச் சொல்பவராய், காவேரிக்கு ரஜோதோஷமில்லை என்கின்றனர். **மற்றவரோவெனில்:-** 'யமுனா, கௌதமீ, கங்கா, வேணிகா, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகளை ரஜோதோஷம் அடைவதில்லை' என்ற வசனப்படி ரஜோதோஷமில்லாத கௌதமீ, பாகீரதீ, க்ருஷ்ணவேணீ என்ற அவைகள் கங்கையெனப் பெயருள்ளதால் அவைகளில் 'யாச்ச கங்கா: ப்ரகீர்த்திதா:' என்ற வசனம் ஸாவகாசமாய் இருப்பதாலும், 'மஹாநதிகளான தேவிகா, காவேரீ, நர்மதா இவைகள், கடக மாஸத்தின் முதலில் மூன்று நாள் ரஜோதோஷம் உள்ளவைகளாய் ஆகின்றன'' என்று, மஹா பாரதத்திலுள்ள விசேஷ வசனத்தாலும், மூன்று நாள் ரஜோதோஷம் உண்டென்கின்றனர்.

एवमुक्तरजोदोषस्य क्वचित् कचिदपवादमाह, कात्यायनः – उपाकर्मणि चोत्सर्गे प्रेतस्नाने तथैव च। चन्द्रसूर्यग्रहे चैव रजोदोषो न विद्यते। महदम्बु समं वाऽपि यदि तिष्ठेत् पुरातनम्। नवाम्बु मिश्रितं तेन न दुष्टमिति सूरयः इति ॥ व्याघ्रपादः – अभावे कूपवापी नामनपायिपयोभृताम्। रजोदुष्टेऽपि पयसि ग्रामभोगो न दुष्यति इति ॥

இவ்விதம் சொல்லப்பட்டுள்ள ரஜோதோஷத்திற்குச் சிற்சில இடங்களில் அபவாதத்தைச் சொல்லுகிறார். **காத்யாயனர்:-** உபாகர்மம். உத்ஸர்ஜனம், ப்ரேத ஸ்நானம், சந்த்ர ஸூர்ய க்ரஹணம் இவைகளில் ரஜோதோஷமில்லை. புதிதாய் வரும் ஜலத்தைவிட அதிகமாகவோ, ஸமமாகவோ உள்ள நதியின் முந்திய ஜலத்துடன் புது ஜலம் சேர்ந்தால் அந்த ஜலம் துஷ்டமாகாதென்று அறிந்தவர் சொல்லுகின்றனர். **வ்யாக்ரபாதர்:-** குறைவற்ற ஜலமுடைய கிணறுகள்,

வாபிகள் இவை இல்லாவிடில், ரஜோதோஷமுள்ள ஜலத்தையும் க்ராமத்தார் உபயோகிப்பது தோஷாவஹமாகாது.



## गौणस्नानानि

अथ गौणस्नानानि तत्र, दक्षः – अशिरस्कं भवेत् स्नानं कटीमात्रमशक्तितः । आर्द्रेण वाससा वाऽपि सर्वाङ्गपरिमार्जनम् इति। जाबालिः – अशिरस्कं भवेत् स्नानं स्नानाशक्तौ तु कर्मिणः । नाभिमात्रं निमज्याप्सु कटिं वा क्षालयेज्जलैः ।। आर्द्रेण वाससा वाऽङ्गमार्जनं कापिलं विदुः इति ।।

### கௌண ஸ்நானங்கள்

*இனி கௌண ஸ்நானங்கள் சொல்லப்படுகின்றன. அதில், தக்ஷர்:- தலையை முழுக்காமல் கழுத்துவரை நனைப்பதும், அதிலும் சக்தி இல்லாவிடில் இடுப்பு வரையில் நனைப்பதும், அல்லது ஈரமான வஸ்த்ரத்தால் எல்லா அங்கங்களையும் துடைத்துக் கொள்வதும் ஸ்நானமாகும். ஜாபாலி:- கர்மத்தை அனுஷ்டிப்பவனுக்குச் சக்தி இல்லாவிடில், தலையை முழுக்காமல் ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அல்லது நாபிவரையில் ஜலத்தில் முழுகி இடுப்பை ஜலத்தால் அலம்பலாம். அல்லது, ஈரமான வஸ்த்ரத்தால் அங்கங்களைத் துடைத்துக் கொள்ளலாம், இதைக் காபில ஸ்நானம் என்கின்றனர்.*

पराशरः – स्नानानि पञ्च पुण्यानि कीर्तितानि महर्षिभिः । आग्नेयं वारुणं ब्राह्मं वायव्यं दिव्यमेव च । आग्नेयं भस्मना स्नानमवगाह्य तु वारुणम् । आपोहिष्ठेति च ब्राह्मं वायव्यं गोरजःस्मृतम् ।। यत्तु सातपवर्षेण तत्स्नानं दिव्यमुच्यते । तत्र स्नात्वा तु गङ्गायां स्नातो भवति मानवः इति ।। दक्षोऽपि – आग्नेयं वारुणं ब्राह्मं वायव्यं दिव्यमेव च । पञ्च स्नानानि पुण्यानि मनुः स्वायम्भुवोऽब्रवीत् इति ।।

பராசரர்:- புண்யமான ஸ்நானங்கள் ஐந்து என மஹர்ஷிகள் சொல்லியுள்ளனர். அவை, ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம், வாயவ்யம், திவ்யம் என்பனவாம். விபூதியினுல் செய்வது ஆக்னேய ஸ்நானமாம். ஜலத்தில் முழுகுவது வாருண ஸ்நானமாம். 'ஆபோஹிஷ்ட' என்ற மந்த்ரங்களால் செய்வது ப்ராஹ்ம ஸ்நானமாம். பசுவின் புழுதியால் செய்வது வாயவ்ய ஸ்நானமாம். வெயிலுடன் கூடிய மழையில் செய்யும் ஸ்நானம் திவ்ய ஸ்நானமாம். மனிதன் அதில் ஸ்நானம் செய்தால், கங்கையில் ஸ்நானம் செய்தவனுய் ஆகிருன். தக்ஷரும்:- ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம், வாயவ்யம், திவ்யம் என்று ஐந்து ஸ்நானங்கள் புண்யமானவை என்று ஸ்வாயம்புவ மனு சொன்னுர்.

व्यासः —अशक्तावशिरस्कं वा स्नानमस्य विधीयते। आर्द्रेण वाससा वाऽङ्गमार्जनं कापिलं स्मृतम् ॥ ब्राह्मादीन्यथवाऽशक्तौ स्नानान्याहुर्मनीषिणः। ब्राह्ममाग्नेय मुद्दिष्टं वायव्यं दिव्यमेव च। वारुणं यौगिकं चैव गौणं स्नानं प्रकीर्तितम्। ब्राह्मं तु मार्जनं मन्त्रैः कुशैः सोदकबिन्दुभिः॥ आग्नेयं भस्मनाऽऽपादमस्तकाद्देहधूलनम्। गवां हि रजसा प्रोक्तं वायव्यं स्नानमुत्तमम् ॥ यत्तु सातपवर्षेण दिव्यं तत्स्नानमुच्यते। वारुणं चावगाहस्तु मानसं चात्मवेदनम्॥ यौगिकं स्नानमाख्यातं यद्योगे विष्णुचिन्तनम्। आत्मतीर्थमिति ख्यातं सेवितं ब्रह्मवादिभिः ॥ मनः शुद्धिकरं पुंसां नित्यं तत् स्नानमाचरेत्। शक्तश्चेद्वारुणं विद्वानप्रायत्ये तथैव च इति॥

வ்யாஸர்:- சக்தி இல்லாவிடில், சிரஸ்ஸை நனைக்காமல் ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அல்லது, ஈரமுள்ள வஸ்த்ரத்தினுல் அங்கங்களைத் துடைத்துக் கொள்ளுதல் என்ற காபில ஸ்நானமும் சொல்லப்பட்டுள்ளது. அதிலும் அசக்தி இருந்தால், ப்ராம்ஹம் முதலிய ஸ்நானங்களைப் புத்திமான்கள் சொல்லுகின்றனர். ப்ராம்ஹம், ஆக்னேயம், வாயவ்யம்,

திவ்யம், வாருணம், யௌகிகம் என்ற இவை கௌண ஸ்நானங்களெனப்படும். மந்த்ரங்களுடன் குசோதகங்களால் துடைத்துக் கொள்வது ப்ராம்ஹ ஸ்நானம். விபூதியால் கால் முதல் தலை வரையில் தேஹத்தைப் பூசிக்கொள்வது ஆக்னேய ஸ்நானம். பசுக்களின் புழுதியால் செய்யும் ஸ்நானம் வாயவ்ய ஸ்நானம் எனப்படும். இது சிறந்தது. வெயிலுடன் கூடிய மழையினுல் செய்யும் ஸ்நானம் திவ்ய ஸ்நானம் எனப்படுகிறது. ஆத்ம த்யானம் செய்வது மானஸ ஸ்நானம் எனப்படுகிறது. யோகத்தில் விஷ்ணுவை த்யானித்தல் யௌகிக ஸ்நானம் எனப்படுகிறது. இது ஆத்ம தீர்த்தம் என ப்ரஸித்தமாகியது. பிரம்ஹவாதிகளால் ஸேவிக்கப் பட்டது. மனிதருக்கு மனச்சுத்தியைச் செய்வதாகும். நித்யமும் அந்த ஸ்நானத்தைச் செய்ய வேண்டும். சக்தியுள்ளவனுகில், அறிந்தவன் வாருண ஸ்நானத்தைச் செய்ய வேண்டும். அசுத்தி ஏற்பட்டாலும் அதைச் செய்ய வேண்டும்.

गर्गः — दिव्यं वायव्य माग्नेयं ब्राह्मं सारस्वतं तथा । मानसं चेति विज्ञेयं गौणस्नानं तु षड्विधम् इति ॥ योगयाज्ञवल्क्यः — असामर्थ्याच्छरीरस्य कालशक्त्याद्यपेक्षया । मन्त्रस्नानादिकान् सप्त केचिदिच्छन्ति सूरयः ॥ मान्त्रं भौमं तथाऽऽग्नेयं वायव्यं दिव्यमेव च । वारुणं मानसं चेति सप्त स्नानान्यनुक्रमात् ॥ आपोहीत्यादिभिर्मान्त्रं मृदालंभस्तु पार्थिवम् । वारुणं चावगाहस्तु मानसं विष्णुचिन्तनम् ॥ मानसं प्रवरं स्नानं सर्वे शंसन्ति सूरयः ॥ आत्मतीर्थप्रशंसायां व्यासेन पठितं यतः इति ॥

**கர்க்கர்:-** திவ்யம், வாயவ்யம், ஆக்னேயம், ப்ராம்ஹம் ஸாரஸ்வதம், மானஸம் என்று கௌண ஸ்நானம் ஆறுவிதம் என்று அறியத் தகுந்தது. **யோகயாக்ஞவல்க்யர்:-** சரீரத்தில் சக்தி இன்மையாலும், காலம், சக்தி முதலியவைகளை அபேக்ஷித்தும் மந்த்ர

ஸ்நானம் முதலிய ஏழு ஸ்நான பேதங்களை வித்வான்கள் விரும்புகின்றனர். அவை மாந்த்ரம், பௌமம், ஆக்னேயம் வாயவ்யம், திவ்யம், வாருணம், மானஸம் என்று ஏழு ஸ்நானங்கள். 'ஆபோஹி' என்பது முதலிய மந்த்ரங்களால் செய்யும் ஸ்நானம் மந்த்ர ஸ்நானமாம். ம்ருத்திகையினால் தேஹத்தைப் பூசிக் கொள்வது பார்த்திவ ஸ்நானமாம். ஜலத்தில் முழுகுவது வாருண ஸ்நானமாம். விஷ்ணுவை த்யானித்தல் மானஸஸ்நானமாம். அறிந்தவர் எல்லோரும் மானஸ ஸ்நானத்தைச் சிறந்ததெனப் புகழ்கின்றனர். ஏனெனில், ஆத்மதீர்த்தத்தை ஸ்துதிக்கு மிடத்தில் வ்யாஸர் படித்திருப்பதால்.

स्मृतिरत्ने — चतुर्भुजं महादेवं शङ्खचक्रगदाधरम् । मनसा ध्यायते विष्णुं मानसं स्नान मुच्यते ॥ गायत्र्या जलमादाय दशकृत्वोऽभिमन्त्र्य च । शिरस्यङ्गानि सर्वाणि प्रोक्षयेत्तेन वारिणा । स्नानं गायत्रकं नाम सर्वपापप्रणाशनम् इति ॥ विष्णुः – त्र्यृचाभिमन्त्रितं तोयं प्रोक्षयेन्मूर्ध्नि सर्वतः । अनुकल्पमिदं स्नानं सर्वपापहरं नृणाम् इति ॥ दक्षः – आग्नेयं वारुणं ब्राह्मं वायव्यं दिव्यमेव च । मानसं पार्थिवं चैव त्वष्टमं कापिलं स्मृतम् ॥ सारस्वतं तथा प्रोक्तं नवमं स्नानमुत्तमम् इति ॥

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** சதுர்புஜனும், பெரியதேவனும், சங்க சக்ர கதைகளைத் தரித்தவனுமாகிய விஷ்ணுவை மனதினால் த்யானிப்பது மானஸ ஸ்நானம் என்று சொல்லப்படுகிறது. காயத்ரியால் ஜலத்தை எடுத்து, பத்து முறை அபிமந்த்ரித்து, அந்த ஜலத்தால் சிரஸ்ஸிலும் எல்லா அங்கங்களிலும் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். இது ஸகல பாபங்களையும் மற்றும் காயத்ர ஸ்நானம் எனப்படும். **விஷ்ணு:-** (ஆபோஹிஷ்ட முதலிய) மூன்று ருக்குகளால் அபிமந்திரிக்கப்பட்ட ஜலத்தைத் தலையிலும் அங்கங்களிலும் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். இது மனிதரின் ஸகலபாபங்களையும் பறிக்கும் அனுகல்ப

ஸ்நானமாம். தக்ஷர்:- ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம். வாயவ்யம், திவ்யம், மாநஸம், பார்த்திவம், என்று ஏழு ஸ்நானங்கள். எட்டாவது காபிலம், ஒன்பதாவது ஸாரஸ்வத ஸ்நானம். இது சிறந்தது.

तत्र आग्नेयस्नानप्रकारमाह, भरद्वाजः – प्राङ्मुखश्चरणौ हस्तौ प्रक्षाल्याचम्य पूर्ववत्। प्राणानायम्य सङ्कल्प्य भस्मस्नानं समाचरेत्॥ आदाय भसितं श्वेत मग्निहोत्रसमुद्भवम्। ईशानेन तु मन्त्रेण स्वमूर्धनि विनिक्षिपेत्॥ तत आदाय तद्भस्म मुखे तत्पुरुषेण तु। अघोराख्येन हृदये गुह्ये वामाह्वयेन च॥ सद्योजाताभिधानेन भस्म पादद्वये क्षिपेत्। सर्वाङ्गं प्रणवेनैव मन्त्रेणोद्धूलयेत्ततः॥ एतदाग्नेयकं स्नानमुदितं परमर्षिभिः। सर्वकर्मसमृद्ध्यर्थं कुर्यादादाविदं बुधः इति॥

அவைகளுள் ஆக்னேயஸ்நானத்தைச் சொல்லுகிறார், **பரத்வாஜர்**:- கால் கைகளை அலம்பி, கிழக்கு முகமாய் முன்போல் ஆசமனம் செய்து, ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்ப்பித்து, பஸ்ம ஸ்நானத்தைச் செய்ய வேண்டும். அக்னிஹோத்ரத்தில் உண்டாகியதும், வெண்ணிற முள்ளதுமான பஸ்மத்தை எடுத்து, ஈசான மந்த்ரத்தால் சிரஸ்ஸிலும். தத்புருஷ மந்த்ரத்தால், முகத்திலும், அகோர மந்த்ரத்தால் மார்பிலும், வாமதேவ மந்த்ரத்தால் குஹ்யத்திலும், ஸத்யோஜாத மந்த்ரத்தால் பாதங்களிலும் தரிக்க வேண்டும். ப்ரணவ மந்த்ரத்தால் ஸர்வாங்கத்திலும் உத்தூளனம் செய்து கொள்ள வேண்டும், இது ஆக்னேய ஸ்நானம், பெரிய முனிவர்களால் சொல்லப்பட்டது. எல்லாக் கர்மங்களும் குறைவில்லாமல் இருப்பதற்காக ஆதியில் இதைச் செய்ய வேண்டும். அறிந்தவன்.

आपस्तम्बोऽपि – भस्म स्यादग्निहोत्राग्नेरावसथ्यादथापि वा। अभावे चानयोर्विप्रः स्वगृह्याग्नेरथापि वा। भस्म त्वादाय विधिवत् स्नानमाग्नेयमाचरेत्। भस्म स्थाप्य करे वामे विध्युक्तं प्राग्यथोदितम्॥ सौवर्णे राजते वाऽपि ताम्रे पात्रान्तरेऽपि वा। अग्निरित्यादिभिर्मन्त्रैः

प्रणवेन तथैव च ।। षड्भिर्मन्त्रैः प्रजप्तेन कास्य हृद्गुह्यपद्वये । ईशाद्यैः पञ्चभिर्मन्त्रैः क्रमादुद्धूलयेत्ततः इति ।। अग्निरित्यादयो मन्त्रा अथर्वशिरस्यभिहिताः - 'अग्निरिति भस्म, वायुरिति भस्म, जलमिति भस्म, स्थलमिति भस्म, व्योमेति भस्म, सर्वं हवा इदं भस्म' इति । कं - शिरः ।।

**ஆபஸ்தம்பரும்:-** *பஸ்மமானது அக்னி ஹோத்ர அக்னியிலிருந்து உண்டாகியதாகும், அல்லது, ஆவஸத்யாக்னி உடையதாய் இருக்கலாம். இவ்விரண்டுமில்லாவிடில், தனது ஔபாஸனுக்னி உடையதாய் இருக்கலாம். ப்ராம்ஹணன் பஸ்மத்தை க்ரஹித்து விதிப்படி ஆக்னேய ஸ்நானத்தை அனுஷ்டிக்க வேண்டும். முன் சொல்லிய விதிப்படியுள்ள பஸ்மத்தை க்ரஹித்து, இடது கையிலாவது, ஸ்வர்ணம், வெள்ளி, தாம்ரமான பாத்ரத்திலாவது, வேறு பாத்ரத்திலாவது வைத்து, 'அக்னிரிதி' முதலான ஆறு மந்த்ரங்களையும், ப்ரணவத்தையும் ஜபித்து, ஈசாநுதிகளான ஐந்து மந்த்ரங்களால், முறையே சிரஸ், முகம், மார்பு, குஹ்யம், பாதங்கள் இவைகளில் உத்தூளனம் செய்ய வேண்டும். அக்னிரித்யாதி மந்த்ரங்கள் அதர்வ சிரத்தில் சொல்லப்பட்டுள்ளன.*

लिङ्गपुराणेऽपि – ईशानेन शिरोदेशं मुखं तत्पुरुषेण तु । उरोदेशमघोरेण गुह्यं वामेन सुव्रत ।। सद्येन पादौ सर्वाङ्गं प्रणवेन विशोधयेत् ।। कृत्वाऽपि चातुलं पापं मृत्युकालेऽपि यो द्विजः ।। भस्मस्नायी भवेत् कश्चित् क्षिप्रं पापैः प्रमुच्यते इति ।। स्मृतिसारसमुच्चये – त्र्यायुषैश्चैव मन्त्रैस्तु लिप्तमापादमस्तकम् । गोशकृद्भस्म यत् पुण्यं भस्मस्नानं तदुच्यते इति ।।

**லிங்க புராணத்திலும்:-** *ஈசான மந்த்ரங்களால் சிரஸ்ஸையும், தத்புருஷ மந்த்ரத்தால் முகத்தையும, அகோர மந்த்ரத்தால் மார்பையும், வாமதேவ மந்த்ரத்தால்*

குஹ்யத்தையும், ஸத்யோஜாத மந்த்ரத்தால் கால்களையும், ப்ரணவத்தால் ஸர்வாங்கத்தையும், சுத்தம் செய்ய வேண்டும். அதிகபாபம் செய்தவனாயினும் எந்த ப்ராம்ஹணன் மரண காலத்திலாவது இவ்விதம் பஸ்ம ஸ்நானம் செய்கின்றானோ அவன் உடனே பாபங்களால் விடப்படுகின்றான். ஸ்ம்ருதி ஸாரஸமுச்சயத்தில்:- த்ர்யாயுஷ மந்த்ரங்களால் கோமயத்தால் உண்டாகிய பஸ்மத்தால் தலை முதல் கால்வரையில் பூசிக் கொள்வது எதுவோ, அது புண்யமான பஸ்ம ஸ்நானம் எனப்படுகிறது.

वारुणस्नानमाह व्यासः – स्नानमब्देवतैर्मन्त्रैः जले मज्जनगाहनैः । तर्पणं पितृदेवानां स्नानं वारुणमुच्यते इति ॥ बोधायनः – जलावगाहनं स्नानं वारुणं सार्ववर्णिकम् । मन्त्रवत् प्रोक्षणं चापि द्विजातीनां विशिष्यते इति ॥

வாருண ஸ்நானத்தைச் சொல்லுகிறார். வ்யாஸர்:- ஜலதேவதாகமான மந்த்ரங்களுடன் ஜலத்தில் முழுகி, பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் செய்வது வாருண ஸ்நானம் எனப்படுகிறது. போதாயனர்:- ஜலத்தில் முழுகுவது வாருண ஸ்நானம். இது எல்லா வர்ணத்தாருக்கும் உரியது. மந்த்ரங்களுடன் ப்ரோக்ஷணமும் செய்து கொள்வது என்பது, முதல் மூன்று வர்ணத்தாருக்கு மட்டில்.

ब्राह्मस्नानप्रकारमाह कात्यायनः – आपो हिष्ठादिभिर्ब्राह्मं मन्त्रस्नानं हि तत्स्मृतम् । कुशाग्रैर्मार्जनं कुर्याद् देवतार्थेन वा द्विजः ॥ ऋगन्ते मार्जनं कुर्यात् पादान्ते वा समाहितः । त्यृचस्यान्तेऽथवा कुर्यात् शिष्टानां मतमीदृशम् इति ॥ पादान्तमार्जनप्रकारमाह ब्रह्मा – भुवि मूर्ध्नि तथाऽऽकाशे मूर्ध्न्याकाशे तथा भुवि । आकाशे भुवि मूर्ध्नि स्यान्मन्त्रस्नानं विधीयते इति ॥ भुवि - पादयोः । आकाशे - हृदि ॥

ப்ராம்ஹ ஸ்நான ப்ரகாரத்தைச் சொல்லுகிறார், காத்யாயனர்:- 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்களால் செய்யப்படும் ஸ்நானம் ப்ராம்ஹ ஸ்நானம். அதுவே மந்த்ர ஸ்நானம் எனப்படும். ப்ராம்ஹணன், குசங்களின் நுனிகளாலாவது, தேவதீர்த்திலாவது மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். கவனம் உடையவனாய் ருக்கின் முடிவிலாவது, பாதத்தின் முடிவிலாவது, மூன்று ருக்குகளின் முடிவிலாவது மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். இவ்விதம் சிஷ்டர்களின் கொள்கை. பாதத்தின் முடிவில் மார்ஜனம் செய்வதின் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார் ப்ரஹ்மா:- மூன்று ருக்குகளின் ஒன்பது பாதங்களாலும், முறையே, பாதங்களிலும் சிரஸ்ஸிலும் மார்பிலும், சிரஸ்ஸிலும் மார்பிலும் பாதங்களிலும் மார்பிலும் பாதங்களிலும் சிரஸ்ஸிலும் ப்ரோக்ஷித்துக் கொள்வது மந்த்ர ஸ்நானம் என்று விதிக்கப்படுகிறது.

प्रकारान्तरमुक्तं स्मृत्यन्तरे – पच्छोऽप्यर्धर्चशोऽप्यृक्शः आपोहिष्ठेत्यृचेन च । कुशाग्रैर्मार्जनं कुर्याद्देवतीर्थेन वा द्विजः ।। पादादि प्रणवं कुर्यात् अर्धर्चादि तथैव च । ऋगादि प्रणवं कुर्यात् मन्त्रस्नाने विशेषतः इति ।। गृह्यपरिशिष्टेऽपि – अथाशक्तस्य मन्त्रस्नानं - शुचौ देशे शुचिराचान्तः प्राणानायम्य दर्भपाणिस्तिसृभिरापोहिष्ठीयाभिः पच्छः प्रणवपूर्वं दर्भोदकैर्मार्जयेत् । पादयोर्मूर्ध्नि हृदये, मूर्ध्नि हृदये पादयोः, पादयोः हृदये मूर्ध्नि च । अथार्धर्चशो मूर्ध्नि हृदये, पादयोः हृदये, पादयोः मूर्ध्नि च । अथ ऋक्छो हृदये पादयोर्मूर्ध्नि च । अथ त्र्यृचेन मूर्ध्नि मार्जयित्वा गायत्र्या दशधाऽभि मन्त्रिता अपः प्रणवेन पीत्वा द्विराचामेदित्येतन्मन्त्र-स्नानम् इति ।। योगयाज्ञवल्क्यस्तु – शन्न आपस्तु द्रुपदा आपोहिष्ठाऽघमर्षणम् । एतैश्च पञ्चभिर्मन्त्रैः मन्त्रस्नानमुदाहृतम् इति ।।

வேறு ப்ரகாரமும், மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளை, பாதம்

பாதமாகவும், பாதி ருக்காகவும், முழு ருக்காவும் உச்சரித்துக் குசங்களின் நுனிகளால் மார்ஜனம் செய்ய வேண்டும். தேவ தீர்த்தத்தில் ஆவது செய்யலாம். இந்த மந்த்ர ஸ்நானத்தில் விசேஷமாய் ஒவ்வொரு பாதத்திலும் முதலில் ப்ரணவத்தைச் சேர்க்கவும். பாதி ருக்குகளின் முதலிலும் சேர்க்கவும். ருக்கின் ஆதியிலும்-சேர்க்கவும்.

**க்ருஹ்ய பரிசிஷ்டத்திலும்**:- இனி, அசக்தனுக்கு மந்த்ர ஸ்நானம் சொல்லப்படுகிறது. சுத்தமான ஸ்தலத்தில், சுத்தனுய், ஆசமனம் செய்து ப்ராணுயாமம் செய்து, தர்ப்பத்தைக் கையில் உடையவனுய் 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால் பாதம் பாதமாய், ப்ரணவ பூர்வமாய் தர்ப்ப ஜலங்களால் முறையே 9- ஸ்தானங்களில் மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். பாதங்களிலும் சிரஸ்ஸிலும் மார்பிலும், சிரஸ்ஸிலும் மார்பிலும் பாதங்களிலும், பாதங்களிலும் மார்பிலும் சிரஸ்ஸிலும், பிறகு, பாதி ருக்காகப் பிரித்து, சிரஸ்ஸிலும் மார்பிலும், பாதங்களிலும் மார்பிலும் பாதங்களிலும் சிரஸ்ஸிலும், பிறகு, ருக்காகவே உச்சரித்து ஒரு ருக்குக்கு ஒரு முறையாய், மார்பிலும், பாதங்களிலும், சிரஸ்ஸிலும் மார்ஜனம் செய்யவும். பிறகு மூன்ரு ருக்குகளேயும் ஜபித்து ஒரு முறை சிரஸ்ஸில் மார்ஜனம் செய்து கொள்ளவும். பிறகு, பத்துத் தடவை காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தை ப்ரணவத்தால் பருகி, இரண்டு முறை ஆசமனம் செய்ய வேண்டும். இவ்விதம் உள்ளது மந்த்ர ஸ்நானமாம். **யோகயாக்ஞவல்க்யரோவெனில்**:- ''சந்ந ஆப:, த்ருபதா, ஆபோஹிஷ்டா, அகமர்ஷணம் என்ற இவ்வைந்து மந்த்ரங்களாலும் செய்யப்படுவது மந்த்ர ஸ்நானம்'' என்கிருர்.

वायव्यसारस्वते दर्शयति बृहस्पतिः – वायव्यं गोरजः प्रोक्त मस्तं गच्छति गोपतौ । विद्वत्सरस्वती प्राप्तं स्नानं सारस्वतं स्मृतम् इति । गोपतौ - सूर्ये । विदुषां सरस्वती = वाणी । तया प्राप्तं सारस्वतमित्यर्थः ॥ तत्स्वरूपमाह व्यासः – स्वयमेवोपसन्नाय

विनयेन द्विजातये ।। तज्ज्ञः सम्पादयेत् स्नानं शिष्याय च सुताय च । दाक्षायणमयैः कुम्भैः मन्त्रवज्जाह्नवीजलैः । कृतमङ्गल पुण्याहैः स्नानमस्तु तदर्थिनाम् ।। आदौ तावत् प्रभासे बहुगुणसलिले मध्यमे पुष्करे च गङ्गाद्वारे प्रयागे कनखलसहिते गव्यकर्णे गयायाम् । राहुग्रस्ते तु सोमे दिनकरसहिते सत्यपत्याविशेषादेतैर्विख्यातरूपैस्त्रिभुवन विदितैः स्नानमच्छिद्रमस्तु ।। प्राप्य सारस्वतं तीर्थं भवेन्मुदित-मानसः । सर्वतीर्थाभिषेकाद्धि पवित्रं विदुषां हि वाक् इति ।।

*வாயவ்ய ஸாரஸ்வத ஸ்நானங்களைச் சொல்லுகிறார்,* **ப்ருஹஸ்பதி:-** *ஸூர்யன் அஸ்தமயத்தை அடையும் பொழுது, பசுவின் புழுதியால் செய்வது வாயவ்ய ஸ்நானம். வித்வான்களின் வாக்கினால் அடையப்பட்டது ஸாரஸ்வத ஸ்நானம் என்று சொல்லப்பட்டுள்ளது. அதன் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்.* **வ்யாஸர்:-** *தானாகவே ஸமீபத்தில் வந்தவனும், வணக்கம் உடையவனும், சிஷ்யன் அல்லது புத்ரனுமான ப்ராம்ஹணனுக்கு, அந்த ஸ்நான விதியைத் தெரிந்தவனான ப்ராம்ஹணன் ஸ்நானத்தைச் செய்விக்க வேண்டும். அதன் மந்த்ரங்கள் - 'தாக்ஷாயணமயை: + அச்சித்ரமஸ்து' என்றவை. இவற்றின் பொருள் - 'ஸ்வர்ணமயமான குடங்களாலும் மந்த்ரத்துடன் கூடிய ஜலங்களாலும் மங்களம் புண்யாஹம் இவைகளாலும், ஸ்நானத்தை விரும்பியவர்க்கு ஸ்நானமிருக்கக் கடவது ! முதலில் மிகுந்த குணங்களை யுடைய ஜலத்தையுடைய ப்ரபாஸத்திலும், மத்யமான புஷ்கரத்திலும், கங்காத் வாரத்திலும், கனகலசத்துடன் கூடிய ப்ரயாகத்திலும், கோகர்ணத்திலும், கயையிலும், சந்த்ரன் ராகுவினால் பிடிக்கப்பட்டிருக்கும் போதும், ஸூர்ய க்ரஹணத்திலும், குழந்தையைவிடப் பேதமில்லாததால், இவனுக்கு ப்ரஸித்தங்களும், மூன்றுலகங்களாலும் அறியப்பட்டவையுமான இவைகளால் குறைவிலாத ஸ்நான முண்டாகக் கடவது' என்பது. இந்த ஸாரஸ்வத தீர்த்தத்தை அடைந்து ஸந்துஷ்ட*

சித்தனுய் ஆக வேண்டும். ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்வதை விட வித்வான்களின் வசனம் சுத்தமானதல்லவா?

स एव – शुचिदेशान्मृदं गृह्य कुर्याद्गात्रोपलेपनम् । मन्त्रैः पार्थिवसंयुक्तैः भौमं स्नानं तदुच्यते ।। मृत्तिके हन मे पाप मित्यादयः पार्थिवसंयुक्तमन्त्राः ।। 'गोखुराद्रज आदाय गोसावित्रीं जपेद्बुधः । गात्रेष्वथ तदालिप्य स्नानं वायव्यमुच्यते ।

வ்யாஸரே:- சுத்தமான ஸ்தலத்திலிருந்து ம்ருத்தை க்ரஹித்து, பூதேவதாகமான மந்த்ங்களால் தேஹத்தில் பூசிக் கொள்ள வேண்டும். 'ம்ருத்திகே ஹநமே பாபம்' என்பது முதலியவை பார்த்திவஸம்பந்த மந்த்ரங்களாம். பசுவின் குளம்பிலிருந்து தூளியை எடுத்து கோஸாவித்ரியை ஜபிக்க வேண்டும். அறிந்தவன் பிறகு அந்தத் துளியை அங்கங்களில் பூசிக் கொண்டால், அது வாயவ்ய ஸ்நானம் எனச் சொல்லப்படுகிறது.

उत्तरायणमध्ये तु यदा वर्षति वासवः । आतपेन सह स्नानं दिव्यं स्नानं तदुच्यते ।। हृत्स्थितं सर्वभूतानां रविमण्डलसंस्थितम् । नीलजीमूतसङ्काशं वासुदेवं चतुर्भुजम् ।। शङ्खचक्रगदापद्मधारिणं वनमालिनम् । तत्पादोदकजां धारां निपतन्तीं स्वमूर्द्धनि ।। चिन्तयेद् ब्रह्मरन्ध्रेण प्रविशन्तीं स्वकां तनूम् । तया प्रक्षालितं सर्वं स्वदेहं परिचिन्तयेत् ।। इदं स्नानवरं मन्त्रात् सहस्रादधिकं मतम् । एवं स्नात्वा विशेषेण सर्वपापैः प्रमुच्यते इति ।।

உத்தராயணத்தில் வெயிலுடன் மழை பொழியும் போது, அதனுல் ஸ்நானம் செய்வது திவ்யஸ்நானம் எனப்படுகிறது. ஸகல ப்ராணிகளின் ஹ்ருதயத்தில் இருப்பவனும், ஸுர்ய மண்டலத்தில் இருப்பவனும், கருமேகம் போன்றவனும், நான்கு கைகளுடையவனும், வனமாலை அணிந்தவனுமான வாஸுதேவனை த்யானித்து,

அவனது பாதத்தினின்று பெருகும் ஜலத்தின் தாரை, தனது சிரஸ்ஸில் விழுந்து, ப்ரம்ஹரந்த்ரத்தின் வழியாய் தன் சரீரத்திற்குள் நுழைவதாய் த்யானிக்க வேண்டும். அந்தத் தாரையால் தன் தேஹம் முழுவதும் அலம்பப்பட்டதாய் த்யானிக்க வேண்டும். சிறந்ததான இந்த ஸ்நானம், ஆயிரம் மந்த்ரஸ்நானத்தைவிட அதிகமென மதிக்கப்பட்டது. இவ்விதம் ஸ்நானம் செய்தால் எல்லாப் பாபங்களாலும் அவச்யம் விடுபடுவான்.

कूर्मपुराणे – अप्रायत्ये समुत्पन्ने स्नानमेव समाचरेत् । ब्राह्मादीन्यन्यथाऽशक्तौ स्नानान्याहुर्मनीषिणः इति ।। जाबालिः – अशिरस्कं भवेत् स्नानं स्नानाशक्तौ तु कर्मिणः । तस्याप्यसामर्थ्यविधौ मन्त्रस्नानादिकं चरेत् इति ।। जाबालिः – अशिरस्कं भवेत् स्नानं स्नानाशक्तौ तु कर्मिणः । तस्याप्यसामर्थ्यविधौ मन्त्रस्नानादिकं चरेत् इति ।। स्मृत्यन्तरे – असामर्थ्याच्छरीरस्य वैषम्याद् देशकालयोः । स्नानान्येतानि तुल्यानि वारुणेन भवन्ति हि इति ।। मनुः – प्रभुः प्रथमकल्पेऽपि योऽनुकल्पे प्रवर्तते । न सांपरायिकं तस्य दुर्मतेर्वर्तते फलम् इति ।। साम्परायिकं - आमुष्मिकम् ।।

**கூர்ம புராணத்தில்:-** அசுத்தி ஏற்பட்டால் வாருண ஸ்நானத்தையே செய்ய வேண்டும். அதில் சக்தி இல்லாவிடில் ப்ராம்ஹாதி ஸ்நானங்களை வித்வான்கள் சொல்லுகின்றனர். **ஜாபாலி:-** கர்மத்தை அனுஷ்டிப்பவனுக்கு வாருண ஸ்நானத்தில் சக்தி இல்லாவிடில் தலையை முழுக்காமல் கழுத்து வரையில் நனைத்து ஸ்நானம் செய்ய வேண்டும். அதிலும் சக்தி இல்லாவிடில் மந்த்ர ஸ்நானம் முதலியதைச் செய்யவும். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** சரீரத்தின் ஸாமர்த்யம் இன்மையாலும், தேசகாலங்களின் ஒற்றுமை இல்லாததாலும், இந்த ஸ்நானங்களும் வாருண ஸ்நானத்திற்குச் சமமாய் ஆகின்றன. **மனு:-** முக்ய கல்பத்தை அனுஷ்டிப்பதற்குச் சக்தனாய் இருந்தும் எவன்

அனுகல்பத்தில் ப்ரவர்த்திக்கின்றனரோ அந்தத் துர்ப்புத்திக்குப் பாரலௌகிகமான பலன் இல்லை.

—★—

## ऊर्ध्वपुण्ड्रधारणविधिः

अथोर्ध्वपुण्ड्रधारणविधिः ।। तत्र वासुदेवोपनिषत् – 'अथ गोपीचन्दनं नमस्कृत्योद्धृत्य, गोपीचन्दन पापघ्न विष्णुदेहसमुद्भव। चक्राङ्कित नमस्तुभ्यं धारणान्मुक्तिदो भव ।। इमम्मेगङ्ग इति जलमादाय विष्णोर्नुकमिति मर्दयेदतो देवा अवन्तु न इत्येताभिर्विष्णुगायत्र्या च त्रिवारमभिमन्त्र्य, शङ्खचक्रगदापाणे द्वारकानिलयाच्युत। गोविन्द पुण्डरीकाक्ष रक्ष मां शरणागतम् इति मां ध्यात्वा गृहस्थो ललाटादिषु द्वादशस्थानेष्वनामिकाङ्गुल्या विष्णुगायत्र्या केशवादिद्वादशनामभिर्वा धारयेत्।

### ஊர்த்வ புண்ட்ர தாரண விதி

இனி ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரிப்பதின் விதி சொல்லப்படுகிறது. அதில், வாஸுதேவோபநிஷத்:- பிறகு கோபீ சந்தனத்தை நமஸ்கரித்து, எடுத்து 'கோபீ சந்தன + முக்திதோபவ' என்று ப்ரார்த்திக்கவும். இதன் பொருள் -'பாபத்தை அகற்றுவதும், விஷ்ணு தேஹத்தில் உண்டாகியதும், சக்ரத்தால் அடையாளம் இடப்பட்டதுமான ஓ கோபீ சந்தனமே! உனக்கு நமஸ்காரம். உன்னைத் தரிப்பதால் முக்தியை அளிப்பாயாக' என்பது. 'இமம்கே கங்கே' என்பதால் ஜலத்தை எடுத்து, 'விஷ்ணோர்நுகம்' என்பதால் தேய்க்க வேண்டும். 'அதோதேவா:' என்பது முதலிய ருக்குகளாலும், மூன்று தடவை விஷ்ணு காயத்ரீயாலும் அபிமந்த்ரித்து, 'சங்க சக்ர + சரணாகதம்' என்று என்னை (விஷ்ணுவை) த்யானித்து நெற்றி முதலிய 12-இடங்களில் அநாமிகா விரலால்,

*விஷ்ணு காயத்ரியாலாவது, 'கேசவ' முதலிய 12-நாமங்களாலாவது க்ருஹஸ்தன் தரிக்கவும்.*

ब्रह्मचारी वानप्रस्थो वा ललाटकण्ठहृदयबाहुमूलेषु वैष्णव्या गायत्र्या कृष्णादिनामपञ्चभिर्वा धारयेत् । यतिस्तर्जन्या शिरोललाटहृदयेषु प्रणवेन धारयेत् । परमहंसो ललाटे प्रणवे नैकमूर्ध्वपुण्ड्रं धारयेत् । तत्र दीपप्रकाशं स्वात्मानं पश्यन् 'ब्रह्माहमस्मी' ति भावयन् योगी मत्सायुज्यमवाप्नोति ॥ स ऊर्ध्वं पदमाप्नोति यतिरूर्ध्वचतुष्कवान् ॥ ब्राह्मणानां तु सर्वेषां वैदिकानामनुत्तमम् । गोपीचन्दनवारिभ्यामूर्ध्वपुण्ड्रं विधीयते ॥ यो गोपीचन्दनाभावे तुलसीमूलमृत्तिकाम् । मुमुक्षुर्द्धारयेन्नित्य मपरोक्षात्मसिद्धये इति ॥

*ப்ரம்ஹசாரியாயினும், வானப்ரஸ்தனாயினும், நெற்றி, கழுத்து, மார்பு, கைகளின் மூலபாகம் இவைகளில் விஷ்ணு காயத்ரியால் ஆவது, 'க்ருஷ்ண' முதலிய ஐந்து நாமங்களாலாவது தரிக்க வேண்டும். யதி, தர்ஜனீ விரலால், தலை, நெற்றி, மார்பு இவைகளில் ப்ரணவத்தால் தரிக்கவும். பரமஹம்ஸன், நெற்றியில், ப்ரணவத்தால் ஒரு ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். அதில் தீபம் போல் பிரகாசிக்கும் தன் ஆத்மாவை த்யானித்து 'ப்ரம்ஹாஹமஸ்மி' என்று பாவிப்பவனாகிய யோகீ எனது ஸாயுஜ்யத்தை அடைகிறான். தண்டம், ரேதஸ், புண்ட்ரம், யோகம் என்ற இந்த நான்கையும் ஊர்த்வமாய் உடைய யதி ஊர்த்வமான (உயர்ந்ததான) பதத்தை அடைகிறான். வைதிகரான ப்ராம்ஹணர் எல்லோருக்கும் கோபீ சந்தனம் ஜலம் இவைகளால் ஊர்த்வ புண்ட்ரம் விதிக்கப்படுகிறது. எவன் முமுக்ஷுவோ அவன் கோபீ சந்தனம் இல்லாவிடில், துளஸியின் அடியிலுள்ள ம்ருத்திகையை, அபரோக்ஷாத்ம க்ஞான ஸித்திக்காகத் தரிக்க வேண்டும்.*

महोपनिषदि – धृतोर्ध्वपुण्ड्रः परमेशितारं नारायणं साङ्ख्ययोगाधिगम्यम्। ज्ञात्वा विमुच्येत नरस्समस्तैः संसारभारै रिह चैति विष्णुम् इति ।। कठशाखायामपि – धृतोर्ध्वपुण्ड्रो धृतचक्रमीशं विष्णुं परं ध्यायति यो महात्मा। स्वरेण मन्त्रेण सदा हृदिस्थं परात् परं यो महतो महान्तम् इति ।। आथर्वणे च – 'हरेः पादाकृति मात्मनो हिताय मध्येछिद्रमूर्ध्वपुण्ड्रं यो धारयति स परस्य प्रियो भवति स पुण्यभाग्भवति स मुक्तिभाग्भवति इति ।।

**மஹோபநிஷத்தில்**:- *மனிதன், ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனாய், பரமேச்வரனும், ஸாங்க்ய யோக சாஸ்த்ரங்களால் அறியக் கூடியவனுமான நாராயணனை த்யானித்தால், ஸகல ஸம்ஸார பாரங்களில் இருந்தும் விடுபடுவான். இங்கேயே விஷ்ணுவையும் அடைவான்.* **கடசாகையிலும்**:- *எவன் ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனாய், சக்ரஹஸ்தனும், ஈசனும், பரனும், எப்பொழுதும் ஹ்ருதயத்தில் இருப்பவனும், பரத்திற்கும் பரனும், மஹத்திற்கும் மஹானுமான விஷ்ணுவை ப்ரணவ மந்த்ரத்தால் த்யானிக்கின்றானோ அவன் மஹாத்மா எனப்படுகிறான்.* **ஆதர்வணத்திலும்**:- *எவன் தனக்கு நன்மைக்காக, ஹரியின் பாதம் போன்றதும், நடுவில் சித்ரமுள்ளதுமான ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கின்றானோ அவன் பரமாத்மாவுக்கு ப்ரியனாய் ஆகிறான், அவன் புண்யம் உடையவனாகிறான், அவன் முக்தி அடைபவனாகிறான்.*

अत्रोपबृंहणानि स्मृतिपुराणवचनानि लिख्यन्ते। उपबृंहणत्वं च तेषां महाभारतेऽभिहितम् – इतिहासपुराणाभ्यां वेदार्थमुपबृंहयेदिति। स्कान्देऽपि – पुराणैरेव विस्पष्टो वेदार्थो ज्ञायते खलु । बिभेति मानवाद्वेदः पुराणाभ्यासवर्जितात् इति ।। सुदर्शनाचार्योऽपि – वेदार्थनिर्णयविधौ हि पुराणमङ्गं निर्णीतवेद-विषयाः स्मृतयो भवन्ति इति ।। सूतसंहितायामपि –

अनन्तशाखासापेक्षे वैदिकार्थविनिर्णये । स्वबुद्धिकल्पितान्यायात् गरीयो ह्युपबृंहणम् इति ॥

இங்கு உபப்ரும்ஹணங்களான (அர்த்தத்தை நிர்ணயிக்கின்ற) ஸ்ம்ருதி புராண வசனங்கள் எழுதப் படுகின்றன. அந்த ஸ்ம்ருதி புராண வசனங்கள் வேதத்திற்கு உபப்ருஹ்மணங்கள் என்பதும் மஹா பாரதத்தில் சொல்லப்பட்டுள்ளது, இதிஹாஸத்தாலும், புராணத்தாலும், வேதார்த்தத்தை நிர்ணயிக்க வேண்டும்' என்று. **ஸ்காந்தத்திலும்:-** வேதத்தின் அர்த்தம், புராணங்களாலேயே ஸ்பஷ்டமாய் அறியப் படுகிறதல்லவா. புராணத்தைப் படிக்காத மனிதரிட மிருந்து வேதம் பயப்படுகின்றது. **ஸுதர்சனாசார்யரும்:-** வேதார்த்தத்தை நிச்சயிக்கும் விஷயத்தில் புராணம் அங்கமாகும். ஸ்ம்ருதிகள், வேதத்திலுள்ள விஷயங்களை நிர்ணயம் செய்பவையாய் இருக்கின்றன. **ஸூதஸம்ஹிதையிலும்:-** அநேக சாகைகளை அபேக்ஷித்து நிற்கும் வேதார்த்தத்தின் நிர்ணயத்தில், தன் புத்தியால் கல்ப்பிக்கப்பட்ட ந்யாயத்தைக் காட்டிலும், உபப்ரும்ஹணம் மிகப் பெரியதல்லவா.

विष्णुस्मृतौ – उपवीतं शिखाबन्धमूर्ध्वपुण्ड्रं विना कृतम् । अपवित्रकृतं कर्म विप्रस्य विफलं भवेत् ॥ योगो दानं जपो होमः स्वाध्यायः पितृतर्पणम् । भस्मीभवति तत्सर्वं मूर्ध्वपुण्ड्रं विना कृतम् ॥ अशुचिश्चाप्यनाचारः मनसा पापमाचरन् । शुचिरेव भवेन्नित्य मूर्ध्वपुण्ड्रस्य धारणात् इति ॥ भृगुः – उपवीतविहीनेन पवित्ररहितेन च । तथोर्ध्वपुण्ड्रहीनेन यत्कृतं तन्निरर्थकम् इति ॥ मार्कण्डेयः – अमन्त्रेण कृतं कर्म ह्यपवित्रेण वा कृतम् । ऊर्ध्वपुण्ड्रं विना वाऽपि कर्म यद्धि द्विजैः कृतम् ॥ तत्सर्वमासुरं विद्यात् कर्ताऽपि नरकं व्रजेत् इति ॥

**விஷ்ணு ஸ்ம்ருதியில்:-** உபவீதம், சிகையைக் கட்டுதல், ஊர்த்வ புண்ட்ரம் இவை இல்லாமலும்,

பவித்ரம் இல்லாமலும் செய்த, ப்ராம்ஹணனின் கர்மம் பலமற்றதாகும். யாகம், தானம், ஜபம், ஹோமம், அத்யயனம், பித்ரு தர்ப்பணம் இவை ஊர்த்வ புண்ட்ரம் இல்லாமல் செய்யப்பட்டால், அவை முழுதும் சாம்பலாய் ஆகின்றன. அசுத்தன் ஆனாலும், ஆசாரமற்றவன் ஆனாலும், மனதால் பாபத்தைச் செய்பவனானாலும், ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரித்தால் எப்பொழுதும் சுத்தனாகவே ஆகிறான். ப்ருகு:- உபவீதம் இல்லாதவனாலும், பவித்ரம் இல்லாதவனாலும், ஊர்த்வபுண்ட்ரம் இல்லாதவனாலும் எக்கார்யம் செய்யப்பட்டதோ அது வீணாகும். மார்க்கண்டேயர்:- மந்த்ரம் இல்லாமலும், பவித்ரம் இல்லாமலும், ஊர்த்வபுண்ட்ரம் இல்லாமலும் ப்ராம்ஹணரால் செய்யப்பட்ட கர்மம் எதுவோ அது முழுவதும் ஆஸுரம் என்று அறியவும். செய்தவனும் நரகத்தை அடைவான்.

दक्षः – कुशपाणिः सदा कुर्यात् सोत्तरीयोर्ध्वपुण्ड्रधृक् । वेदोक्तमखिलं विद्वानन्यथा स्यान्निरर्थकम् इति ।। मरीचिः – सपवित्रकरः स्वस्थः सोत्तरीयोर्ध्वपुण्ड्रकः । कुर्यादहरहः कर्म वेदोक्तं विप्रसत्तमः । मरीचिः – सपवित्रकरः स्वस्थः सोत्तरीयोर्ध्वपुण्ड्रधृक् । कुर्यादहरहः कर्म वेदोक्तं विप्रसत्तमः । सर्पं दृष्ट्वा यथा लोके दर्दुरा भयविह्वलाः । ऊर्ध्वपुण्ड्राङ्कितं तद्वत् कम्पन्ते यमकिङ्कराः इति ।। व्यासः – जाह्नवीतीरसंभूतां मृदमूर्ध्वां बिभर्ति यः । बिभर्ति रूपं सोऽर्कस्य तमोनाशाय वै स्मृतः ।। ऊर्ध्वपुण्ड्रो मृदा शुद्धो ललाटे यस्य दृश्यते । स चण्डालोऽपि शुद्धात्मा पूज्य एव न संशयः इति ।।

தக்ஷர்:- அறிந்தவன், எப்பொழுதும், வேதத்திற் சொல்லிய எல்லாக் கர்மத்தையும், தர்ப்பபாணியாயும், உத்தரீயம் உடையவனாயும், ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனாயும் செய்ய வேண்டும். இல்லாவிடில் அக்கர்மம் வீணாகும். மரீசி:- ப்ராம்ஹணன், ப்ரதிதினம், பவித்ரம் தரித்தவனாயும், ஸ்வஸ்த சித்தனாயும், உத்தரீயம்

உடையவனுயும், ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனுயும், வேதத்திற் சொல்லிய கர்மத்தைச் செய்ய வேண்டும். உலகில் தவளைகள் பாம்பைக் கண்டால் எவ்விதம் பயத்தால் கலங்கியவையாய் நடுங்குகின்றனவோ, அவ்விதம், யமகிங்கரர்கள், ஊர்த்வபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டால் பயந்து நடுங்குகின்றுர்கள்.

**வ்யாஸர்:-** கங்கைக் கரையிலுள்ள ம்ருத்திகையைச் சிரஸ்ஸினுல் எவன் தரிக்கின்றுனே அவன், இருளை அழிப்பதற்காக ஸுர்யனின் ரூபத்தைத் தரிக்கின்றுன் என்று நினைக்கப்படுகிறுன். எவனின் நெற்றியில், ம்ருத்திகையால் சுத்தமான ஊர்த்வ புண்ட்ரம் காணப்படுகிறதோ, அவன் சண்டாளனுயினும், சுத்தனுயும், பூஜ்யனுயும் ஆகிறுன். ஸம்சயமில்லை.

स्मृतिसारे – स्वाध्याये भोजने चैव होमे मङ्गलकर्मणि । ऊर्ध्वपुण्ड्रधरो भूयाद्रक्षसां चापनुत्तये इति ॥ आत्रेये – ऊर्ध्वपुण्ड्रविहीनं यत् शरीरं शवसन्निभम् । ऊर्ध्वपुण्ड्रविहीनं तु श्वपाकमिव सन्त्यजेत् ॥ ऊर्ध्वं नयति यत्पुण्ड्रं प्राणिनः पापकारिणः । तस्याख्या ह्यूर्ध्वपुण्ड्रेति तस्मात्तद्धारयेद्द्विजः इति ॥

**ஸ்ம்ருதிஸாரத்தில்:-** அத்யயனம், போஜனம், ஹோமம், மங்களகார்யம் இவைகளில் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரித்தவனுய் இருக்க வேண்டும். இது ராக்ஷஸர்களை அகற்றுவதற்காகவுமாம்.

**ஆத்ரேயத்தில்:-** ஊர்த்வ புண்ட்ரமில்லாத சரீரம் எதுவோ அது சவத்திற்குச் சமமாகும். ஊர்த்வ புண்ட்ரம் இல்லாதவனை நாயாடியைப் போல் பரிஹரிக்க வேண்டும். பாபம் செய்யும் ப்ராணிகளையும் எந்தப் புண்ட்ரம் உயர்ந்த பதத்தை அடைவிக்கின்றதோ அதனுல் அதற்கு ஊர்த்வபுண்ட்ரம் எனப்பெயர். ஆகையால் ப்ராம்ஹணன் அதைத் தரிக்க வேண்டும்.

स्मृत्यन्तरे – विष्ण्वर्पणविहीनं यत् पवित्ररहितं तथा । उत्तरीयोर्ध्वपुण्ड्राभ्यां रहितं तन्निरर्थकम् ।। होमपूजादिसमये सायं प्रातः समाहितः । ऊर्ध्व पुण्ड्रधरो विप्रो भवेच्छुद्धो नचान्यथा । निरूर्ध्वपुण्ड्रस्तु भवेन्न कदाचिदपि द्विजः । वैष्णवश्चेद्विशेषेण सर्वकर्मणि सोऽर्हति ।। ऊर्ध्वपुण्ड्रं ललाटे तु कुर्वीत चतुरङ्गुलम् । उदरे हृदि कण्ठे च दशाष्टचतुरङ्गुलान् इति ।।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *விஷ்ணுவுக்கு அர்ப்பணம் செய்யப்படாததும், பவித்ரம் இல்லாததும், உத்தரீயம் இல்லாததும், ஊர்த்வபுண்ட்ரம் இல்லாததுமான கர்மம் வீணாகும். ஹோமம் பூஜை முதலிய ஸமயத்திலும், மாலையிலும், காலையிலும், கவனம் உடையவனாய் ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரிக்கும் ப்ராம்ஹணன் சுத்தனாவான். இல்லாவிடில் சுத்தனாகான். ப்ராம்ஹணன் ஒருகாலும் ஊர்த்வ புண்ட்ரம் இல்லாதவனாய் இருக்கக் கூடாது. வைஷ்ணவனானால் அவச்யம் தரிக்க வேண்டும். அவன் ஸகல கர்மங்களிலும் அர்ஹனாவான். ஊர்த்வபுண்ட்ரத்தை நெற்றியில் நாலங்குலமளவும், வயிற்றில் பத்து அங்குலமளவும், மார்பில் எட்டங்குலமளவும், கழுத்தில் நாலங்குலமளவுமாய்த் தரிக்க வேண்டும்.*

आग्निवेश्यायनिः – त्रिपुण्ड्रं ब्राह्मणो विद्वान् लीलयाऽपि न धारयेत् । धारयेत् ब्राह्मणस्सम्य गूर्ध्वपुण्ड्रं प्रयत्नतः इति ।।

**ஆக்னிவேச்யாயனி:-** *அறிந்த ப்ராம்ஹணன், விளையாட்டாகவும் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கக் கூடாது. ப்ராம்ஹணன், முயற்சியுடன் ஊர்த்வபுண்ட்ரத்தை நன்றாய் தரிக்க வேண்டும்.*

सङ्ग्रहे – श्रौतस्मार्तक्रियास्सर्वा ऊर्ध्वपुण्ड्र मकुर्वतः । जायन्ते विफलाश्चैव बाधिताश्च भवन्ति ताः इति ।। पुराणेषु ब्रह्माण्डपुराणे ब्रह्माणं भगवानाह – ऊर्ध्वपुण्ड्रप्रमाणानि द्रव्याण्यङ्गुलिभेदतः ।

वर्णानि मन्त्रदेशांश्च प्रवक्ष्यामि फलानि च ।। पर्वताग्रे नदीतीरे मम क्षेत्रे विशेषतः । सिन्धुतीरे च वल्मीके तुलसीमूलमाश्रिते ।। मृद एतास्तु सङ्ग्राह्या वर्जयेदन्यमृत्तिकाः । श्यामं शान्तिकरं प्रोक्तं रक्तं वश्यकरं भवेत् ।। श्रीकरं पीतमित्याहुर्वैष्णवं श्वेतमुच्यते । अङ्गुष्ठः पुष्टिदः प्रोक्तो मध्यमाऽऽयुष्करी भवेत् ।। अनामिकाऽन्नदा नित्यं मुक्तिदा च प्रदेशिनी । एतैरङ्गुलिभेदैस्तु कारयेन्न नखैः स्पृशेत् ।।

ஸங்க்ரஹத்தில்:- ஊர்த்வபுண்ட்ரம் தரிக்காதவனின் ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்களெல்லாம் பலனற்றதும் பாதிக்கப்பட்டவைகளும் ஆகின்றன. புராணங்களுள், ப்ரம்ஹாண்ட புராணத்தில், ப்ரம்ஹாவைக் குறித்துச் சொல்லுகிறுர், பகவான்:- ஊர்த்வபுண்ட்ரத்தின் அளவுகளையும், த்ரவ்யங்களையும், விரல்களின் பேதங்களுடன், வர்ணங்களையும், மந்த்ரங்களையும், தேசங்களையும், பலன்களையும் சொல்லப் போகிறேன். மலையின் உச்சியிலும், நதிக்கரையிலும், எனது க்ஷேத்ரத்திலும், ஸமுத்ரக் கரையிலும், புற்றிலும், துளசியின் அடியிலும் உள்ள ம்ருத்திகைகள் க்ரஹிக்கத் தகுந்தவை. மற்ற ம்ருத்திகைகளை தவிர்க்க வேண்டும். கறுப்பானது சாந்தியைக் கொடுப்பதாகும். சிவப்பு வச்யகரமாம். மஞ்சள் நிறம் லக்ஷ்மியைச் செய்யும். வெளுப்பு வைஷ்ணவம் எனப்படுகிறது. பெருவிரல் புஷ்டியைக் கொடுப்பதாய்ச் சொல்லப்பட்டுள்ளது. நடுவிரல் ஆயுளைக் கொடுப்பதாகும். அணுமிகாவிரல் நித்யமும் அன்னத்தைக் கொடுப்பதாம். ஆள்காட்டி விரல் முக்தியை அளிப்பதாம். இந்த விரல்களில் ஒன்றிஞல் தரிக்க வேண்டும். நகங்களால் தொடக் கூடாது.

वर्तिदीपाकृतिं चापि वेणुपत्राकृतिं तथा । पद्मस्य मुकुलाकारं तथैव कुमुदस्य च । मत्स्यकूर्माकृतिं वापि शङ्खाकारमथापि वा । दशाङ्गुल प्रमाणं तदुत्तमोत्तम मुच्यते । नवाङ्गुलं मध्यमं

स्यादष्टाङ्गुलमतः परम्। सप्त षट्पञ्चभिः पुण्ड्रं त्रिविधं मध्यमं स्मृतम्। चतुस्त्रिद्व्यङ्गुलैः पुण्ड्रं कनिष्ठं त्रिविधं भवेत्॥

வர்த்தி தீபம் போலாவது, மூங்கில் இலை போலாவது, தாமரையின் மொக்குப் போலாவது, ஆம்பல் புஷ்பம் போலாவது, மீன், ஆமை, சங்கு இவைகளின் ஆகாரம் போலாவது, புண்ட்ரத்தைத் தரிக்கவும். பத்தங்குல ப்ரமாணமுள்ளது மிக உத்தமமாய்ச் சொல்லப்படுகிறது. ஒன்பது அங்குலமுள்ளதும், எட்டு அங்குலமுள்ளதும், ஏழு, ஆறு, ஐந்து அங்குலம் உள்ளதும் என்று மூன்று விதம் மத்யமம். நான்கு, மூன்று, இரண்டு அங்குலமுள்ள மூன்று விதமும் கனிஷ்டமாகும்.

ललाटे केशवं विद्यान्नारायणमथोदरे॥ माधवं हृदि विन्यस्य गोविन्दं कण्ठकूपके। उदरे दक्षिणे पार्श्वे विष्णुं विद्याद्द्विजस्तथा। तत्पार्श्वे बाहुमध्ये तु स्मरेत्तु मधुसूदनम्। त्रिविक्रमं कण्ठदेशे वामे कुक्षौ तु वामनम्॥ श्रीधरं बाहुके वामे हृषीकेशं तु कण्ठके। पृष्ठे तु पद्मनाभं तु ककुद्दामोदरं स्मरेत्॥ द्वादशैतानि नामानि वासुदेवेति मूर्धनि। पूजाकाले च होमे च सायंप्रातः समाहितः॥ नामान्युच्चार्य विधिना धारयेदूर्ध्वपुण्ड्रकम्॥ ऊर्ध्वपुण्ड्रधरो मर्त्यो म्रियते यत्र कुत्रचित्। श्वपाकोऽपि विमानस्थो मम लोके महीयते इति॥

நெற்றியில் கேசவ என்றும், வயிற்றில் நாராயண என்றும், மார்பில் மாதவ என்றும், கழுத்துப் பள்ளத்தில் கோவிந்த என்றும், வயிற்றில் வலது பாகத்தில் விஷ்ணு என்றும், வலது கையில் மதுஸூதன என்றும், வலது கண்ட தேசத்தில் த்ரிவிக்ரம என்றும், வயிற்றின் இடது பாகத்தில் வாமன என்றும், இடது கையில் ஸ்ரீதர என்றும், இடது கண்டத்தில் ஹ்ருஷீகேச என்றும், முதுகில் பத்மநாப என்றும், கழுத்தின் பின் புறத்தில் தாமோதர என்றும் பன்னிரண்டு நாமங்களை உச்சரித்துத் தரிக்கவும். வாஸுதேவ என்ற நாமத்தை உச்சரித்துத் தலையில்

தரிக்கவும். கவனமுள்ளவனாய் மாலையிலும் காலையிலும் பூஜா காலத்திலும், ஹோமகாலத்திலும் நாமங்களை உச்சரித்து விதிப்படி ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கவும், ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவன் எந்தெந்த இடத்திலாவது மரித்தாலும், அவன் நாயாடியாயினும் விமானத்தில் இருப்பவனாய் எனது உலகத்தில் சிறப்புறுகிறான்.

वामनपुराणेऽपि नारदं प्रति भगवानाह – ते । श्रुतिस्मृत्युक्तमार्गेण मृदो धारण मुच्यते । शृणु वत्स विधानेन मृत्स्नाधारणमुत्तमम् ।। मम क्षेत्रे कुरुक्षेत्रे पुण्यक्षेत्रे तथैव च । पर्वताग्रे नदीतीरे तुलसीमूलकाश्रिते ।। अश्वत्थबिल्ववल्मीकवकुलाः पनसास्तथा । एतेषु मृत्तिकाः प्रोक्ता यथाविधिवदाहरेत् इत्यादि । पाद्मेऽपि – ऊर्ध्वपुण्ड्रस्य माहात्म्यं वक्ष्यामि तव पार्वति । धारणादेव मुच्येत भवबन्धाद्द्विजोत्तमः ।। ऊर्ध्वपुण्ड्रस्य मध्येतु विशाले सुमनोहरे । लक्ष्म्या सार्धं समासीनो देवदेवो जनार्दनः ।। तस्माद्यस्य शरीरे तु ऊर्ध्वपुण्ड्रं धृतं भवेत् । तस्य देहं भगवतो विशालं मन्दिरं शुभम् ।। धारयेदूर्ध्वपुण्ड्रं तु त्रिसन्ध्यासु द्विजोत्तमः ।। सर्वपापविशुध्यर्थ मिष्टापूर्तफलाप्तये ।। यज्ञदानतपश्चर्याजपहोमादिकं च यत् ।। ऊर्ध्वपुण्ड्रधरः कुर्यात् तस्य पुण्यमनन्तकम् ।। ऊर्ध्वपुण्ड्रविहीनस्तु किञ्चित् कर्म करोति यः । इष्टापूर्तादिकं सर्वं निष्फलं स्यान्न संशयः ।। यच्छरीरं मनुष्याणामूर्ध्वपुण्ड्रविवर्जितम् । द्रष्टव्यं नैव तद्यस्मात् श्मशानसदृशं भवेत् ।। ऊर्ध्वपुण्ड्रविहीनो यः सः सन्ध्याकर्मादिकं चरेत् । तत्सर्वं राक्षसैर्नीतं नरकं चाधिगच्छति ।। ऊर्ध्वपुण्ड्रं द्विजैः कार्यं श्यामया पीतया मृदा । श्वेतमृत्तिकया धार्यं वैष्णवैश्च विशेषतः इति ।।

வாமன புராணத்திலும், நாரதரை நோக்கிச் சொல்லுகிறார். பகவான்:- ச்ருதியிலும் ஸ்ம்ருதியிலும் சொல்லப்பட்ட விதிப்படி ம்ருத்திகையின் தாரணம்

சொல்லப்படுகிறது. ஓவத்ஸ? விதிப்படி சிறந்ததான ம்ருத்திகா தாரணத்தைக் கேட்பாய். எனது க்ஷேத்ரம், குருக்ஷேத்ரம், புண்யக்ஷேத்ரம், மலையின் உச்சி, நதியின் கரை, துளஸியின் மூலம், அரசு, பில்வம், புற்று, முகிழ், பலா இவைகளின் மூலம் என்ற இடங்களில் ம்ருத்திகைகள் க்ராஹ்யங்களெனச் சொல்லப்பட்டுள்ளன. விதிப்படி அவைகளைக் கொண்டு வரவும் என்பது முதலியவை சொல்லப்பட்டுள்ளன.

**பாத்மத்திலும்**:- ஓ பார்வதி ! ஊர்த்வ புண்ட்ரத்தின் மஹிமையை உனக்குச் சொல்வேன். ப்ராம்ஹணன் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிப்பதாலேயே ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபடுவான். விசாலமும் அழகியதுமான ஊர்த்வ புண்ட்ரத்தின் நடுவில், தேவதேவனுன விஷ்ணு லக்ஷ்மியுடன் வீற்றிருக்கிறுர். ஆகையால் எவனது சரீரத்தில் ஊர்த்வபுண்ட்ரம் தரிக்கப்பட்டிருக்கிறதோ அவன் தேஹம் விசாலமும் சுபமுமாகிய விஷ்ணுவின் ஆலயமாகிறது. ப்ராம்ஹணன், மூன்று ஸந்த்யைகளிலும், ஸகல பாபங்களேயும் அகற்றுவதற்கும், இஷ்டாபூர்த்த பலன்களைப் பெறுவதற்கும் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். எவன், யக்ஞம், தானம், தபஸ், ஜபம், ஹோமம் முதலிய இவைகளை ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரித்தவனுய்ச் செய்கின்றுனே அவனது புண்யம் அழிவற்றதாகும். எவன் ஊர்த்வ புண்ட்ரம் இல்லாதவனுய் எந்தக் கார்யத்தையாவது செய்கின்றுனே, அவனது இஷ்டா பூர்த்தம் முதலிய எல்லாம் பலனற்றனவாகும். ஸம்சயமில்லை. மனுஷ்யரின் எந்தச் சரீரம் ஊர்த்வ புண்ட்ரம் இல்லாமல் இருக்கிறதோ அதைப் பார்க்கவே கூடாது. அது ச்மசானத்திற்குச் சமமானதால். எவன் ஊர்த்வ புண்ட்ரம் இல்லாமல் ஸந்த்யா வந்தனம் முதலியதைச் செய்கின்றுனே, அவனது கர்மமெலாம் ராக்ஷஸரால் அபஹரிக்கப்படுகிறது. அவனும் நரகத்தை அடைகிறுன். ப்ராம்ஹணர்கள், கருப்பு அல்லது மஞ்சள் நிறமுள்ள ம்ருத்தி கையால் ஊர்த்வ

புண்ட்ரம் தரிக்க வேண்டும். வைஷ்ணவர்கள் அவச்யம் வெளுப்பான ம்ருத்திகையால் தரிக்க வேண்டும்.

नारदीये – ऊर्ध्वपुण्ड्रं यः करोति तुलसीमूलमृत्स्नया। तत्रैव नेत्रं तस्य स्यान्मूर्ध्नीन्दोर्बिभृयात् कलाम् ॥ ब्राह्मणस्योर्ध्वपुण्ड्रं स्यात् क्षत्रियस्यार्धचन्द्रकम्। वैश्यस्य वर्तुलाकारं शूद्रस्यैव त्रिपुण्ड्रकम् ॥ ऊर्ध्वपुण्ड्रं द्विजः कुर्याद्वारिमृद्भस्मचन्दनैः । जपकाले मृदा कुर्यात् सन्ध्याकाले तु वारिणा ॥ भस्मना होमकाले तु चन्दनं सार्वकालिकम् इति ॥

நாரதீயத்தில்:- எவன், துளஸீ மூலத்திலுள்ள ம்ருத்திகையால் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கின்றானோ, அவனுக்கு நெற்றியிலேயே ஒரு கண் உண்டாகும். அவன், தலையில் சந்த்ரனின் கலையைத் தரிப்பான். ப்ராம்ஹணனுக்கு ஊர்த்வ புண்ட்ரமும், க்ஷத்ரியனுக்குப் பாதிச் சந்த்ரன் போன்ற புண்ட்ரமும், வைச்யனுக்கு வர்த்துளமான புண்ட்ரமும், சூத்ரனுக்கு த்ரிபுண்ட்ரமும் விதிக்கப்பட்டுள்ளது. ப்ராம்ஹணன், ஜலம், ம்ருத்திகை, பஸ்மம், சந்தனம் இவைகளால் ஊர்த்வ புண்ட்ரம் தரிக்க வேண்டும். ஜபகாலத்தில் ம்ருத்திகையாலும், ஸந்த்யா காலத்தில் ஜலத்தாலும், ஹோமகாலத்தில் பஸ்மத்தாலும், சந்தனத்தால் எல்லாக் காலங்களிலும் தரிக்க வேண்டும்.

विष्णुधर्मोत्तरे – बिभर्ति निटिले मूर्ध्नि जाह्नवीतीरमृत्तिकाम्। बिभृयाच्चक्षुरेकत्र मूर्ध्नीन्दो र्बिभृयात् कलाम् ॥ गङ्गामृदोर्ध्वपुण्ड्रं तु यो बिभर्ति नरो यदा । तदैव तस्य पितरः ब्रह्मलोकमवाप्नुयुः ॥ गङ्गाकूलमृदा यस्तु बिभृयादूर्ध्वपुण्ड्रकम्। तदङ्गं ये निरीक्षन्ते ते यान्ति त्रिदिवं नराः इति ॥

விஷ்ணு தர்மோத்தரத்தில்:- கங்கையின் கரையிலுள்ள ம்ருத்திகையை, நெற்றியிலும், சிரஸ்ஸிலும் எவன் தரிக்கின்றானோ அவன், நெற்றியில் கண்ணையும்,

தலையில் சந்த்ரனின் கலையையும் தரிப்பான். எவன் கங்கையிலுள்ள ம்ருத்திகையால் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கின்றானோ, அப்பொழுதுதே அவனது பித்ருக்கள் ப்ரம்ஹலோகத்தை அடைவார்கள். கங்கைக் கரையிலுள்ள மண்ணினால் ஊர்த்வ புண்ட்ரத்தை எவன் தரிக்கின்றானோ, அவனது அங்கத்தை எவர் தர்சிக்கின்றனரோ, அவரும் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர்.

वासिष्ठे – ऊर्ध्वपुण्ड्रं तु विप्राणां सततं श्रुतिचोदितम् । मुमुक्षुभिर्वीतरागैरप्रमत्तैस्समाहितैः ॥ ब्रह्मचारी गृहस्थो वा वानप्रस्थोऽथ वा यतिः । अवश्यं धारयेत् पुण्य मूर्ध्वपुण्ड्रं सुशोभनम् ॥ ऊर्ध्वपुण्ड्रं द्विजः कुर्याद्दण्डाकारं सुशोभनम् । मध्ये छिद्रं वैष्णवस्तु नमोन्तैः केशवादिभिः इति ॥

வாஸிஷ்டத்தில்:- ப்ராம்ஹணர்களுக்கு ஊர்த்வ புண்ட்ரம் நித்யமாய் வேதத்தால் விதிக்கப்பட்டுள்ளது. முக்தியில் விருப்பமுள்ளவர்கள், நிஷ்காமர்களாய், கவனமுள்ளவராய், நியமமுள்ளவராய்த் தரிக்க வேண்டும். ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், யதி, யாராயினும், புண்யமான ஊர்த்வ புண்ட்ரத்தை அழகியதாய்த் தரிக்க வேண்டும். விஷ்ணு பக்தனான ப்ராம்ஹணன், ஊர்த்வ புண்ட்ரத்தை, தண்டம் போன்றதாயும், நடுவில் இடைவெளி உள்ளதாயும், நம: என்பதைக் கடைசியிலுள்ள கேசவாதி நாமங்களால் தரிக்க வேண்டும்.

पाद्मे ब्रह्मगरुडसंवादे – गृहे यस्य सदा तिष्ठेत् गोपीचन्दन-मृत्तिका । द्वारका विहिता तत्र कृष्णेन सहिता कलौ । यो मृत्तिकां द्वारवतीसमुद्भवां करे समादाय ललाटपट्टके । करोति नित्यं तनुशुद्धिहेतोः क्रियाफलं कोटिगुणं सदा भवेत् ॥ क्रियाविहीनं यदि मन्त्रहीनं श्रद्धाविहीनं यदि भक्तिवर्जितम् । कृतं ललाटे यदि गोपिचन्दनं प्राप्नोति तत् पुण्यफलं सदाऽक्षयम् ॥ यस्यान्तकाले खग

गोपिचन्दनं बाह्वोर्ललाटे हृदि मस्तके वा। प्रयाति लोकं कमलासनस्य गोबालघाती यदि ब्रह्महा भवेत्॥ अस्नातो यः क्रियां कुर्यादशुचिः पापशङ्कितः । पूतः सद्यो भवेन्नित्यं गोपीचन्दनधारणात् ॥ द्वारवत्युद्भवं गोपीचन्दनं चोर्ध्वपुण्ड्रकम्। धारयेन्नित्यमेवं हि पापं हन्ति दिनेदिने। गोपीचन्दनलिप्ताङ्गो यं यं पश्यति चक्षुषा। तं तं पूतं विजानीयात् नात्र कार्या विचारणा इति।

**பாத்மத்தில், ப்ரம்ஹகருட ஸம்வாதத்தில்:-** *எவனது க்ருஹத்தில் கோபீ சந்தன ம்ருத்திகை எப்பொழுதும் இருக்கின்றதோ, அவ்விடத்தில் க்ருஷ்ணனுடன் கூடிய த்வாரகை கலியில் செய்யப்பட்டதாகிறது. எவன், த்வாரவதியிலுண்டாகிய ம்ருத்திகையைக் கையிலெடுத்து, நெற்றியில் நித்யமும் தேஹ சுத்திக்காகத் தரிக்கின்றானோ, அவனுக்கு க்ரியையின் பலன் கோடி மடங்காக எப்பொழுதும் உண்டாகும். நெற்றியில் கோபீ சந்தனம் தரித்தானாகில், அவன் செய்யும் கர்மம் விதிப்படி அனுஷ்டிக்கப் படாவிடினும், மந்திரங்களில் சிரத்தை பக்தி இல்லாவிடினும் அதன் புண்ய பலனை எப்பொழுதும் அழிவற்றதாய் அவன் அடைகிறான். ஓ கருட! எந்த மனிதனின் மரண காலத்தில், கோபீ சந்தனம், கைகளிலும், நெற்றியிலும், மார்பிலும், தலையிலும் தரிக்கப் பட்டுள்ளதோ, அவன் ப்ரம்ஹாவின் உலகத்தை அடைகிறான், அவன் பசு, பாலர், ப்ராம்ஹணர் இவர்களைக் கொன்றவனாயினும். ஸ்நானம் செய்யாமல் அசுத்தனாய்ப் பாபத்தினின்றும் சங்கையால் நற்கர்மத்தை அனுஷ்டிக்கின்றானோ, அவன் கோபீசந்தனத்தைத் தரித்தால், உடனே சுத்தனாகவே ஆகிறான். த்வாரவதியில் உண்டாகிய கோபீசந்தனத்தை ஊர்த்வ புண்ட்ரமாய் நித்யமும் தரிக்க வேண்டும். இவ்விதம் இருப்பவன் அன்றன்று செய்யப்பட்ட பாபத்தைப் போக்குகிறான். கோபீசந்தனத்தைத் தரித்தவன், கண்ணால் எவனெவனைப் பார்க்கின்றானோ, அவனவன் சுத்தனென அறியவேண்டும். இது விஷயத்தில் விசாரணை வேண்டாம்.*

पाराशरेऽपि – मृदं मन्त्रेणाभिमन्त्र्य चोर्ध्वपुण्ड्राणि धारयेत्। ललाटादिषु चाङ्गेषु धरेत् पुण्ड्रं शुभावहम् ॥ आरभ्य नासिकामूलं ललाटान्तं लिखेन्मृदम् इति ॥ ब्रह्माण्डपुराणे – मृत्तिका चन्दनं भस्म तोयं चैव चतुर्थकम्। एभिर्द्रव्यैर्यथाकाल मूर्ध्वपुण्ड्रं भवेत् सदा। स्नात्वा पुण्ड्रं मृदा कुर्याद्धुत्वा चैव तु भस्मना । देवानभ्यर्च्य गन्धेन सर्वपापापनुत्तये इति ॥

**பாராசரத்திலும்:-** ம்ருத்திகையை மந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்து ஊர்த்வ புண்ட்ரங்களைத் தரிக்க வேண்டும். நெற்றி முதலிய அங்கங்களில் சுபமான புண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். மூக்கின் அடியில் ஆரம்பித்து நெற்றி வரையில் மண்ணைத் தரிக்க வேண்டும். **ப்ரஹ்மாண்ட புராணத்தில்:-** ம்ருத்திகை, சந்தனம், விபூதி, ஜலம் நான்காவது, இந்த த்ரவ்யங்களால் காலப்படி எப்பொழுதும் ஊர்த்வ புண்ட்ரம் விதிக்கப்படும். ஸ்நானம் செய்த பிறகு மண்ணினுலும், ஹோமம் செய்த பிறகு விபூதியினுலும், தேவர்களைப் பூஜித்த பிறகு சந்தனத்தாலும் ஸகல பாபங்களையும் போக்குவதற்குப் புண்ட்ரம் தரிக்க வேண்டும்.

वैखानससूत्रे – समिद्भिर्गोमयैः स्वेन हवने विहिते सति । तद्भस्म सङ्गृह्य करे मन्त्रेणैवाभिमन्त्र्य च । यदूर्ध्वपुण्ड्रकरणमाग्नेयं स्नानमेव तत् । भूतिस्मेति भस्म गृहीत्वा ललाटहृदयबाहुकण्ठा-दीनादित्यः सोमो नम इत्यूर्ध्वाग्रमालिप्य आपो हिष्ठेति प्रोक्ष्य यत्ते अग्ने तेजस्तेनेत्यग्निमुद्वयमित्यादिभिरादित्य मुपतिष्ठेत भूतिमालभते नित्यं सर्वयज्ञकृतं भवेत् इति ॥

**வைகானஸஸூத்ரத்தில்:-** ஸமித்துகளாலும், கோமயங்களாலும் தான் ஹோமம் செய்த பிறகு அந்தப் பஸ்மத்தைக் கையிலெடுத்துக் கொண்டு மந்த்ரத்தால் அபிமந்த்ரித்து ஊர்த்வ புண்ட்ரம் செய்து கொள்வது

ஆக்னேய ஸ்நானமேயாம். 'பூதிஸ்ம' என்று பஸ்மத்தை எடுத்து நெற்றி, மார்பு, கைகள், கழுத்து முதலியவைகளில் 'ஆதித்யஸ்ஸோமோநம:' என்று உயரே நுனி இருக்கும் படியாகப் பூசி, ஆபோஹிஷ்ட என்று ப்ரோக்ஷித்து, 'யத்தே அக்னே தேஜஸ்தேந' என்று அக்னியையும் 'உத்வயம்' என்பது முதலியவைகளால் ஸூர்யனையும் உபஸ்தானம் செய்ய வேண்டும். பஸ்மத்தைத் தரிப்பதால் நித்யமும் எல்லா யாகங்களின் பலமும் உண்டாகுமம்.

पाद्मेऽपि— समिदादिहुतानां च होमीयस्य हुतस्य च। सितेन भस्मनाऽङ्गेषु ललाटादिषु च क्रमात् ॥ यदूर्ध्वपुण्ड्रकरणं मन्त्रोच्चारणपूर्वकम्। तदाग्नेयं भवेत् स्नानं शोधनं परमं स्मृतम् इति ॥ पाद्मोत्तरे – श्रौतं वैखानसं प्रोक्तं स्मार्तं वासिष्ठमुच्यते । पाञ्चरात्राद्यागमोक्त मागमोक्तं तदिष्यते इति ॥ स्मृतिसङ्ग्रहे तु – त्रिपुण्ड्रं भस्मना तिर्यगूर्ध्वपुण्ड्रं मृदा न्यसेत्। उभयं चन्दनेनैव वर्तुलं न कदाचन ॥ न कदाचिन्मृदा तिर्यङ्न्यसेदूर्ध्वं न भस्मना । तुषादिभस्मपाषाणरजो धार्यं च न क्वचित् इति ॥

**பாத்மத்திலும்**:- ஹோமம் செய்யப்பட்ட ஸமித்து முதலியது, ஹோமம் செய்யப்பட்ட த்ரவ்யம் இவைகளின் வெண்மையான பஸ்மத்திஞல் நெற்றி முதலிய அங்கங்களில் க்ரமமாய் ஊர்த்வ புண்ட்ரத்தை மந்த்ரத்துடன் தரிப்பது ஆக்னேய ஸ்நானம் எனப்படும். அது மிகவும் சுத்திகரம் எனச் சொல்லப்பட்டுள்ளது.

**பாத்மோத்தரத்தில்**:- 'வைகானஸம்' என்பது ச்ரௌதம் எனச் சொல்லப்பட்டுள்ளது. 'வாஸிஷ்டம்' என்பது ஸ்மார்த்தம் எனச் சொல்லப்படுகிறது. பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்களால் சொல்லப் பட்டுள்ளது ஆகமோக்தம் எனப்படுகிறது. **ஸ்ம்ருதி ஸங்க்ரஹத்தில்**:- த்ரிபுண்ட்ரத்தைப் பஸ்மத்திஞல் குறுக்காகவும், ஊர்த்வ புண்ட்ரத்தை மண்ணிஞலும், இரண்டையும் சந்தனத்திஞலும் தரிக்கலாம். ஒருகாலும்

வர்த்துளமாய்த் தரிக்கக் கூடாது. மண்ணினால் குறுக்காகவும், பஸ்மத்தினால் ஊர்த்வமாகவும் தரிக்கக் கூடாது. உமி முதலியதின் பஸ்மத்தையும், கல்லின் பொடியையும் ஒருகாலும் தரிக்கக் கூடாது.

गारुडपुराणेऽपि– भस्मना तूर्ध्वपुण्ड्रं च तिर्यक्पुण्ड्रं मृदा तथा। ब्रह्महत्यासमं प्रोक्तं मुनिभिर्वेदपारगैः इति ॥ एवञ्च भस्मोर्ध्वपुण्ड्रस्य विधिप्रतिषेधाभ्यां यथाकुलाचारं व्यवस्थितो विकल्प इत्याहुः ।

**காருட புராணத்திலும்:-** பஸ்மத்தினால் ஊர்த்வ புண்ட்ரமும், மண்ணினால் த்ரிபுண்ட்ரமும் ப்ரம்ஹ ஹத்யைக்குச் சமமென்று வேதமறிந்த முனிகளால் சொல்லப்பட்டுள்ளது. இவ்விதம் இருப்பதால், பஸ்மத்தினால் செய்யப்படும் ஊர்த்வ புண்ட்ரத்திற்கு விதிநிஷேதங்களால், அவரவர் குலாசாரப்படி வ்யவஸ்தித விகல்பம் என்கின்றனர்.

ननु क्वचित् क्वचिदूर्ध्वपुण्ड्रं निषिध्यते । तथा हि पाराशरोपपुराणे–श्रौतं लिङ्गं च विज्ञेयं त्रिपुण्ड्रोद्धूलनात्मकम् । अश्रौतमूर्ध्वपुण्ड्रादि नैव तिर्यक् त्रिपुण्ड्रकम् ॥ नराणामुत्थिता जातिर्येषां तन्त्रोक्तवर्त्मना । ललाटे तैः सदा धार्यं मृदा पुण्ड्रान्तरं द्विजः ॥ जन्मना लब्धजातिस्तु वेदपन्थानमाश्रितः । पुण्ड्रान्तरं भ्रमाद्वाऽपि ललाटे नैव धारयेत् इति ॥ मानवोपपुराणे च – ऊर्ध्वपुण्ड्रं च शूलं च वर्तुलं चार्धचन्द्रकम् । तन्त्रनिष्ठेन धार्यं स्यान्न धार्यं वैदिकैर्जनैः ॥ सोर्ध्वपुण्ड्रमुखं दृष्ट्वा व्रतं चान्द्रायणं चरेत् ॥

சிற்சில இடங்களில் ஊர்த்வ புண்ட்ரம் நிஷேதிக்கப்படுகிறது. அவ்விதமே, **பாராசரோப புராணத்தில்:-** த்ரிபுண்ட்ரமும், உத்தூளனமும் ச்ருதியில் சொல்லப்பட்ட புண்ட்ரம் என அறியத் தகுந்தது. ஊர்த்வ புண்ட்ரம் முதலியது அச்ரௌத புண்ட்ரம் எனப்படும். குறுக்காய் இடப்படும் த்ரிபுண்ட்ரம் அச்ரௌதமாகாது.

வேண்டும். ஸாங்க்யாயன க்ருஹ்யத்திலும்:- 'த்ரியாயுஷம்' முதலிய ஐந்து மந்த்ரங்களால் நெற்றி, மார்பு, வலதுதோள், இடது தோள், முதுகு என்ற ஐந்து ஸ்தானங்களிலும் பஸ்மத்திளுல் த்ரிபுண்ட்ரத்தை எவன் தரிக்கின்ருனே அவன் இந்த வேதங்களுள் ஒன்று, இரண்டு, மூன்றுகளை அத்யயனம் செய்தவனுகிருன்.

**மாத்யந்தின க்ருஹ்யத்திலும்:-** நெற்றி, கழுத்து, வலது தோள், இடது தோள், மார்பு இவைகளில் த்ர்யாயுஷம் முதலிய மந்த்ரங்களால் பஸ்மத்திளுல் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். **ஸ்காந்தத்தில்:-** தாந்த்ரிகர்களுக்கு மூன்று ஸந்த்யைகளிலும் ஜலத்துடன் கூடிய த்ரிபுண்ட்ரம் தரிக்கத் தகுந்தது. ஸ்த்ரீகளுக்கும் யதிகளுக்கும் ஜலமில்லாத புண்ட்ரம் தரிக்கத் தகுந்தது. வானப்ரஸ்தன், ப்ரம்ஹசாரீ, கன்யை, தீக்ஷையில்லாத மனிதர் இவர்களுக்கும் மத்யாஹ்னத்திற்கு முன் ஜலத்துடன் கூடியதும், பிறகு ஜலமில்லாததுமான த்ரிபுண்ட்ரம் விதிக்கப்படுகிறது. **ஆதித்ய புராணத்தில்:-** ப்ராம்ஹணன் எப்பொழுதும் ஸகல கர்மங்களிலும், அக்னிஹோத்ர பஸ்மத்திளுலாவது, சிவாக்னி பஸ்மத்திளுலாவது த்ரிபுண்ட்ரம் தரித்தவனுய் ஆகவேண்டும்.

वासिष्ठलैङ्गे वसिष्ठं प्रति महादेवः – भस्म विद्धि परं ब्रह्म सत्यंबोधसुखावहम्। भस्म तद्वेदनाल्लभ्यं मुख्यं तदपरं बुधैः ।। आग्नेयं गौणमज्ञानध्वंसकं ज्ञानसाधनम् । गौणं नानाविधं विद्धि ब्रह्मन् ब्रह्मविदां वर ।। अग्निहोत्राग्निजं तद्वत् विरजानलजं मुने । औपासनसमुत्पन्नं समिदग्निसमुद्भवम् ।। त्रैवर्णिकानां सर्वेषामग्निहोत्रसमुद्भवम् । विरजानलजं चैव धार्यं भस्म महामुने ।। औपासनसमुत्पन्नं गृहस्थानां विशेषतः । समिदग्निसमुत्पन्नं धार्यं वै ब्रह्मचारिणाम् ।। शूद्राणां श्रोत्रियागारे पचनाग्निसमुद्भवम् । अन्येषामपि सर्वेषां धार्यं दावानलोद्भवम् ।।

வாஸிஷ்ட லைங்கத்தில் வஸிஷ்டரை நோக்கி, மஹாதேவர்:- ஓ முனே! 'பஸ்ம' என்பது, ஸச்சிதானந்தத்தைத் கொடுக்கும் ப்ரம்ஹமே என்று அறியும். அது ஜ்ஞானத்தால் வித்வான்களால் அறியத்தகுந்தது. இது முக்யமாகும். மற்றது கௌணமான பஸ்ம. அது அக்னியிலுண்டாகியதும், அக்ஞானத்தை அகற்றுவதும், ஜ்ஞானத்தை ஸாதிப்பதுமாகும். ப்ரம்ஹ ஜ்ஞானிகளுள் சிறந்த ஓ ப்ரம்ஹன்! அந்த, கௌண பஸ்மம் பலவிதமாய் உள்ளது என்றறிவாயாக. அக்னி ஹோத்ராக்னியில் உண்டாகியதும், விரஜாக்னியில் உண்டாகியதும், ஔபாஸனத்தில் உண்டாகியதும், ஸமிதக்னியில் உண்டாகியதும் என்று பலவிதமாம். மூன்று வர்ணத்தாருக்கும், அக்னி ஹோத்ரத்தில் உண்டாகியதும், விரஜாக்னியில் உண்டாகியதுமான பஸ்மம் ஏற்றது. க்ருஹஸ்தருக்கு ஔபாஸனத்தில் உண்டாகியதும். ப்ரம்ஹசாரிகளுக்கு ஸமிதக்னியில் உண்டாகியதும். சூத்ரருக்கு, ச்ரோத்ரிய க்ருஹத்தில் பாகாக்னியில் உண்டாகியதும் தார்யம். மற்ற எல்லோருக்கும் காட்டுத் தீயினால் உண்டாகியதும் தாரியம்.

अग्निरित्यादिभिर्मन्त्रैः षड्भिराथर्वणैस्तथा । जाबालैः सप्तभिर्वाऽपि गौणेनैव तु भस्मना ।। उद्धूलयेत् स्वकं देहं पापपुञ्जभयापहम् । त्रियायुषेण मन्त्रेण मेधावीत्यादिनाऽथवा ।। गौणेन भस्मना धार्यं त्रिपुण्ड्रं ब्रह्मचारिणाम् । त्रैयम्बकेण मन्त्रेण सतारेण तथैव च ।। पञ्चाक्षरेण मन्त्रेण प्रणवेन युतेन च । ललाटे हृदये चैव दोर्द्वन्द्वे च महामुने ।। त्रिपुण्ड्रं धारयेन्नित्यं गृहस्थश्च वनाश्रमी ।

'அக்னிரிதி' முதலான ஆறு ஆதர்வண மந்த்ரங்களால், அல்லது ஏழு ஜாபால மந்த்ரங்களால், கௌணபஸ்மத்திறைல் தன் தேஹத்தை உத்தூளனம் செய்யவும். இது பாபக்கூட்டத்தினின்று பயத்தைப் போக்குவதாகும். 'த்ரியாயுஷ' மந்த்ரத்தால், அல்லது, 'மேதாவீ' என்பது முதலிய மந்த்ரத்தால்,

ப்ரம்ஹசாரிகளுக்கு கௌணபஸ்மத்தினுல் த்ரிபுண்ட்ரம் தரிக்கத் தகுந்ததாகும். ப்ரணவத்துடன் கூடிய 'த்ரயம்பக' மந்த்ரத்தாலும், ப்ரணவத்துடன் கூடிய பஞ்சாக்ஷர மந்த்ரத்தாலும், நெற்றி, மார்பு, இரு புஜங்கள் இவைகளில், க்ருஹஸ்தனும், வானப்ரஸ்தனும், நித்யமும் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும்.

आत्ममन्त्रेण हंसेन प्रणवेन समाहितः ।। त्रिपुण्ड्रं धारयेन्नित्यं सन्यासाश्रममाश्रितः । नमोन्तेन शिवेनैव शूद्रः शुश्रूषणप्रियः ।। उद्धूलनं त्रिपुण्ड्रं च नित्यं भक्त्या समाचरेत् । अन्येषामपि सर्वेषां विना मन्त्रेण सुव्रत ।। उद्धूलनं त्रिपुण्ड्रं च कर्तव्यं भक्तितो मुने इति ।।

ஸன்யாஸாச்ரமத்தில் இருப்பவன், ஆத்மமந்த்ரமான ஹம்ஸமந்த்ரத்தாலும், ப்ரணவத்தாலும், கவனமுள்ளவனுய், த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும், 'நம:' என்பதை முடிவில் உள்ள சிவ பதத்தால் (சிவாய நம:) சுச்ருஷையில் ப்ரியமுள்ள சூத்ரன், உத்தூளனம் த்ரிபுண்ட்ரம் இவைகளை, நித்யமும் பக்தியுடன் செய்ய வேண்டும். ஓ முனே! மற்ற எல்லோருக்கும் மந்த்ரமில்லாமல் உத்தூளனமும் த்ரிபுண்ட்ரமும் பக்தியுடன் செய்யத் தகுந்ததாம்.

ब्रह्मचारिणां धारणप्रकारमाह बोधायनः – यस्मिन्नग्नौ कर्म कृत्वोपतिष्ठते तस्मात्तूष्णीं भस्मादाय तूष्णीमभिमन्त्र्याभिमृश्य मानस्तोक इति मन्त्रेणादाय धारयेत् मेधावीति ललाटे तेजस्वीति दक्षिणे बाहौ वर्चस्वीति सव्ये ब्रह्मवर्चसीति हृदयदेशे आयुष्मानिति कण्ठे भूयासं स्वस्तीति सर्वत्रानुषजति इति ।।

ப்ரம்ஹசாரிகள் தரிக்கும் விதியைச் சொல்லுகிறுர், **போதாயனர்**:- எந்த அக்னியில் கர்மத்தைச் செய்து உபஸ்தானம் செய்கின்றுனே அதினின்றும் மந்த்ரமில்லாமல் பஸ்மத்தை எடுத்து, அபிமந்த்ரித்து, ஸ்பர்சித்து, 'மாநஸ்தோகே' என்ற மந்த்ரத்தால் எடுத்து,

'மேதாவீ' என்று நெற்றியிலும், 'தேஜஸ்வீ' என்று வலது புஜத்திலும், 'வர்ச்சஸ்வீ' என்று இடது புஜத்திலும், 'ப்ரம்ஹவர்ச்சஸீ' என்று மார்பிலும், 'ஆயுஷ்மான்' என்று கழுத்திலும் தரிக்கவும், 'பூபாஸம் ஸ்வஸ்தி' என்று எல்லா மந்த்ரங்களிலும் சேர்க்க வேண்டும்.

गारुडे – श्रुतयः स्मृतयः सर्वाः पुराणान्यखिलान्यपि। वदन्ति भूतिमाहात्म्यं ततस्तां धारयेद् द्विजः ॥ उद्धूलनं त्रिपुण्ड्रं च मनसाऽपि न सन्त्यजेत्। श्रुत्या विधीयते यस्मात् तत्त्यागी पतितो भवेत्' इति।

காருடத்தில்:- ஸகல ச்ருதிகளும் ஸகல ஸ்ம்ருதிகளும், ஸகல புராணங்களும், பஸ்மத்தின் பெருமையைச் சொல்லுகின்றன. ஆகையால் ப்ராம்ஹணன் அதைத் தரிக்க வேண்டும். உத்தூளனத்தையும், த்ரிபுண்ட்ரத்தையும் மனதாலும் விடக்கூடாது. ச்ருதியில் விதிக்கப்படுவதால். அவைகளை விடுகின்றவன் பதிதனாவான்.

पाराशरे – भस्मना वेदमन्त्रेण त्रिपुण्ड्रं चावकुण्ठनम्। यस्य सिध्येत् प्रयत्नेन ब्राह्मण्यं तस्य पुष्कलम् ॥ भस्मना वेदमन्त्रेण त्रिपुण्ड्रस्य तु धारणम्। आश्रमाणां च सर्वेषां धर्मत्वेनाहुरास्तिकाः ॥ शिवस्य विष्णोर्देवानां ब्रह्मणस्तृप्तिकारणम्। पार्वत्याश्च महालक्ष्म्या भारत्यास्तृप्तिकारणम् ॥ भस्मना वेदमन्त्रेण त्रिपुण्ड्रस्य तु धारणम् ॥ भस्म संछन्नसर्वाङ्गं त्रिपुण्ड्राङ्कितमस्तकम्। ये निन्दन्ति नरा राजा हन्यात्तानविचारतः ॥ वैणवीं धारयेद्यष्टिं सोदकं च कमण्डलुम्। पवित्रमुपवीतं च त्रिपुण्ड्रोद्धूलनं द्विजः ॥ यथा विशिष्टे मानुष्ये ब्राह्मणे पशुविग्रहे। यज्ञदानाद्यनुष्ठानं दुर्लभं सर्वदेहिनाम् ॥ तथा श्रौतेषु धर्मेषु त्रिपुण्ड्रं भस्मकुण्ठनम्। रुद्रलिङ्गार्चनं चापि दुर्लभं हि शरीरिणाम् ॥ त्रिपुण्ड्रधारणं तिर्यक् भस्मनैवावकुण्ठनम्। सुदुर्लभमिति ज्ञात्वा खलु सर्वेश्वरोऽकरोत् ॥ अनिष्पन्नस्य कर्तव्यं त्रिपुण्ड्रादेस्तु धारणम् ॥

विशेषेण स्वलाभाय नान्यलाभाय सत्तम ॥ स्वलाभमन्तरेणापि पराचारार्थमास्तिक। निष्पन्नेनापि कर्तव्यं यथा सर्वेश्वरेण तु इति ॥

பாராசரத்தில்:- வேதமந்த்ரத்துடன் பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரமும் உத்தூளனமும் எவனுக்கு ஸித்தித்துள்ளதோ அவனுக்கே ப்ராஹ்மண்யம் பூர்ணமாயுள்ளது. வேதமந்த்ரத்துடன் பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரத்தை தரிப்பது எல்லா ஆச்ரமங்களுக்கும் தர்மமென்கின்றனர் ஆஸ்திகர்கள். வேதமந்த்ரங்களால் செய்யப்படும் பஸ்ம த்ரிபுண்டரமானது, சிவன், விஷ்ணு, தேவர்கள், ப்ரம்ஹா, பார்வதீ, மஹாலக்ஷ்மீ, ஸரஸ்வதீ இவர்களின் த்ருப்திக்குக் காரணமாகும். பஸ்மத்தால் பூசப்பட்ட ஸர்வாங்கங்களை உடையவனையும், த்ரிபுண்ட்ரம் தரித்த லலாடமுடையவனையும் எந்த மனிதர்கள் நிந்திக்கின்றனரோ அவர்களை அரசன் ஸந்தேஹமில்லாமல் ஒடுக்க வேண்டும். ப்ராம்ஹணன், வேணு தண்டத்தையும், ஸஜலமான கமண்டலுவையும், பவித்ரத்தையும், உபவீதத்தையும், த்ரிபுண்ட்ரத்தையும், உத்தூளனத்தையும் தரிக்க வேண்டும். உலகில், மனுஷ்யத் தன்மையில் ப்ராம்ஹணன் சிறந்தவனாகினும், யாகார்ஹமான பசுசரீரம் சிறந்ததாகினும், யக்ஞம் தானம் முதலியதின் அனுஷ்டானம் எல்லாப் பிராணிகளுக்கும் ஸுலப மாகாமல் எவ்விதம் சிலருக்கு, துர்லப மாகின்றதோ அவ்விதம் ச்ரௌத தர்மங்களுள், பஸ்ம த்ரிபுண்ட்ரமும், பஸ்மோத்தூளனமும், சிவ லிங்கார்ச்சனமும், சரீரிகளுக்கு, துர்லபமாகியது. பஸ்மத்தினால் த்ரிபுண்ட்ரமும், உத்தூளனமும் மிகவும் துர்லபமென்று அறிந்தே, ஸர்வேச்வரன் தான் தரித்தார். அநிஷ்பன்னனால் (பூர்ண நிலையடையாதவனால்) த்ரிபுண்ட்ராதி தாரணம் ஆத்மலாபத்திற்காக அன்யலாபத்திற்கு இல்லாமல் செய்யத் தகுந்ததாம். முக்தனும் பிறர் ஆசரிப்பதற்காக, ஸர்வேச்வரன் செய்வது போல் செய்ய வேண்டியதே.

मानवोपपुराणे –त्रिपुण्ड्रधारिणं दृष्ट्वा भूतप्रेतपुरस्सराः । भीताः प्रकंपिताः शीघ्रं गच्छन्त्येव न संशयः ।। त्रिपुण्ड्रधारणं भूत्या तथा देहावकुण्ठनम् । यो न कुर्यात्तु मन्त्रेण स साक्षात् पतितो भवेत् इति ।। कूर्मपुराणेऽपि – स्रष्टा सृष्टिच्छलेनाह त्रिपुण्ड्रस्य प्रशस्तताम् । ससर्ज स ललाटं हि तिर्यङ्नोर्ध्वं न वर्तुलम् ।। तिर्यग्रेखाः प्रकाशन्ते ललाटे सर्वदेहिनाम् । तथाऽपि मानवा मूर्खा न कुर्वन्ति त्रिपुण्ड्रकम् ।। वेदस्याध्ययने शूद्रो नाधिकारी यथा भवेत् । त्रिपुण्ड्रेण विना विप्रो नाधिकारी स्वकर्मसु ।। यथा राजा स्वचिह्नाङ्कं स्वजनं मन्यते सदा । तथा शिवस्त्रिपुण्ड्राङ्कं नरं स्वमिव मन्यते ।। द्विजातिर्वाऽन्त्यजातिर्वा सितशुद्धेन भस्मना । धारयेद्यस्त्रिपुण्ड्राङ्कं रुद्रस्तेन वशीकृतः इति ।।

**மானவோப புராணத்தில்:-** பூத ப்ரேதங்கள் முதலியவர்கள், த்ரிபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டால் பயந்து நடுங்கி, சீக்ரமாய் வெளியேறுகின்றனர், ஸம்சயமில்லை. மந்த்ரத்துடன் பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரத்தையும் உத்தூளனத்தையும் எவன் செய்வதில்லையோ அவன் பதிதன். **கூர்ம புராணத்திலும்:-** த்ரிபுண்ட்ரம் பாராட்டப் பெற்றதே என்பதை, ப்ரம்ஹதேவன் ஸ்ருஷ்டியெனும், கபடத்தினுல் வெளியிட்டார். அவர் நெற்றியைக் குறுக்காக ஸ்ருஷ்டித்தார். ஊர்த்வமாகவாவது, வர்த்துளமாகவாவது ஸ்ருஷ்டித்தாரில்லை. எல்லா ப்ராணிகளுக்கும் நெற்றியில் குறுக்காக மூன்று ரேகைகள் காணப்படுகின்றன. அவ்விதம் இருந்தும் மூர்க்கரான மனிதர்கள் த்ரிபுண்ட்ரத்தை தரிப்பதில்லை. சூத்ரன் வேதாத்யயனத்தில் எப்படி அதிகாரியாவதில்லையோ அதுபோல், த்ரிபுண்ட்ரம் தரிக்காத ப்ராம்ஹணன் ஸ்வகர்மாஷ்டானத்தில் அதிகாரியாவதில்லை. அரசன், தனது அடையாளத்தைத் தரித்தவனைத் தனது மனிதன் என்று எப்படி எண்ணுகின்றானே அவ்விதம் த்ரிபுண்ட்ரம் தரித்த மனிதனைத் தமது மனிதனாய் எப்பொழுதும் பரமசிவன்

எண்ணுகின்றார். த்விஜன் ஆனாலும், அந்த்யஜன் ஆனாலும், எவன் வெளுத்ததும் சுத்தமுமான பஸ்மத்தினால் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கின்றானோ அவனால் பரமசிவன் வசப்படுத்தப்படுகிறார்.

लैङ्गे – त्रिपुण्ड्रं सुरविप्राणां वर्तुलं नृप वैश्ययोः । अर्द्धचन्द्रं तु शूद्राणामन्येषामूर्ध्वपुण्ड्रकम् इति ॥ ब्रह्मकैवर्ते – धार्यं भस्म सदाऽग्निहोत्रजनितं यद्वैदिकं वैदिकैस्तिर्यक्पुण्ड्रतया ललाटफलके वक्षःस्थले मस्तके । बाह्वोर्मन्त्रपुरस्सरं क्रतुशतं तैरेव सम्यक्कृतं स्नातं तीर्थसहस्रकोटिषु धरा दत्ताऽनवद्येऽखिला इति ॥ शङ्करसंहितायाम् – यत्र भुञ्जीत भस्माङ्गी मूर्खो वा पण्डितोऽपि वा । तत्र भुङ्क्ते महादेवः सपत्नीको वृषध्वजः ॥ भूतिरेवौषधं पुंसां मुक्तिस्त्रीवश्यकर्मणि इति ॥

லிங்கத்தில்:- தேவர்களுக்கும், ப்ராம்ஹணர்களுக்கும் த்ரிபுண்ட்ரமும், க்ஷத்ரிய வைச்யர்களுக்கு வட்ட புண்ட்ரமும், சூத்ரர்களுக்கு அர்த்தசந்த்ர புண்ட்ரமும், மற்றவர்க்கு ஊர்த்வ புண்ட்ரமும் விஹிதமாகின்றது. **ப்ரம்ஹகைவர்த்தத்தில் :-** அக்னி ஹோத்ரத்தில் உண்டாகியதும் வைதிகமுமான பஸ்மத்தை வைதிகர்கள் நெற்றி, மார்பு, சிரஸ், கைகள் இவைகளில் மந்த்ர பூர்வமாய், திர்யக் புண்ட்ரமாய் தரிக்க வேண்டும். அவற்றாலேயே நூறு யாகங்கள் விதிப்படி செய்யப்பட்டதாகும். ஆயிரம் கோடி தீர்த்தங்களில் அவர்களால் ஸ்நானம் செய்யப்பட்டதாகும். பூமி முழுவதும் தோஷமற்ற ப்ராம்ஹணனிடத்தில் தானம் செய்யப்பட்ட தாகும். **சங்கரஸம்ஹிதையில்:-** பஸ்மத்தைத் தரித்தவன் மூர்க்கனாயினும், பண்டிதனாயினும் எங்கே புஜிக்கின்றானோ அங்கு, வ்ருஷபத்வஜனாகிய மஹாதேவன் அம்பிகையுடன் புஜிக்கின்றார். மனிதருக்கு, முக்தி என்னும் பெண்ணை வசப்படுத்துவதில் பஸ்மமே ஔஷதமாகும்.

सौरसंहितायाम् – भस्मनाच्छन्नसर्वाङ्गमनुगच्छति यः पुमान्। सर्वपातकयुक्तोऽपि स सद्यः पूयते नरः ॥ यथा पुरेषु सर्वेषु पुरी वाराणसी शुभा। तथा शुभ्रं त्रिपुण्ड्रं च सर्वपुण्ड्रेषु कथ्यते इति ॥ मानवीयसंहितायाम् – प्रातःकाले च मध्याह्ने सायाह्ने च त्रिपुण्ड्रकम्। सितेन भस्मना कुर्यात् स रुद्रो नात्र संशयः इति ॥ सूतसंहितायाम् – ललाटे चैव दोर्द्वन्द्वे तथैवोरसि बुद्धिमान्। त्रिपुण्ड्रं धारयेन्नित्यं भुक्तिमुक्तिफलप्रदम् ॥ भस्मनोद्धूलनं चैव तथा तिर्यक् त्रिपुण्ड्रकम्। प्रमादादपि मोक्षार्थी न त्यजेदिति हि श्रुतिः इत्यादि ॥

**ஸௌரஸம்ஹிதையில்:-** *பஸ்மத்தால் பூசப்பட்ட ஸர்வாங்கங்களையும் உடையவனை எந்த மனிதன் அனுஸரித்துச் செல்லுகின்றானோ அவன், ஸகல பாபங்களுடன் கூடியவனாயினும் அப்பொழுதே சுத்தனாகிறான். ஸகல பட்டணங்களுக்குள்ளும் காசீபுரீ எப்படிச் சிறந்ததோ, அப்படி, சுத்த த்ரிபுண்ட்ரமும் ஸகல புண்ட்ரங்களுக்குள் சிறந்ததாய்ச் சொல்லப்படுகிறது.* **மானவீயஸம்ஹிதையில்:-** *எவன், காலையிலும், மத்யாஹ்நத்திலும், மாலையிலும், வெளுத்த பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரத்தை, தரிக்கின்றானோ, அவன் ருத்ரனே. இதில் ஸம்சயமில்லை.* **ஸூதஸம்ஹிதையில்:-** *நற்புத்தியுள்ளவன், நெற்றி, இருபுஜங்கள், மார்பு இவைகளில், புக்தி முக்தி பலத்தை அளிக்கும் த்ரிபுண்ட்ரத்தை நித்யமும் தரிக்கவும். பஸ்மத்தினால் உத்தூளனத்தையும், த்ரிபுண்ட்ரத்தையும், மோக்ஷத்தை விரும்புவோன் கவனம் இன்மையாலும் விடக்கூடாதென்கின்றது வேதம்.*

पुरुषार्थप्रबोधेऽपि – विभूतिधारणविधिं प्रवक्ष्यामि समासतः। भस्माग्निहोत्रजं वाऽथ विरजाग्निसमुद्भवम् ॥ आदरेण समादाय शुद्धे पात्रे निधाय तत्। प्रक्षाल्य हस्तौ पादौ च द्विराचम्य समाहितः। गृहीत्वा भस्म तत् पञ्चब्रह्ममन्त्रैः शनैः करे। प्राणायामत्रयं कृत्वाऽथाग्निरित्यादिमन्त्रतः ॥ तैरेव सप्तभिर्मन्त्रैः त्रिवारमभिमन्त्र्य

तत्। ओमापोज्योतिरित्युक्त्वा ध्यात्वा विष्णुं जलाधिपम्।। संयोज्य भस्मना तोयमग्निरित्यादिभिः पुनः । निमृज्य साम्बं ध्यात्वा समुद्धूल्यापादमस्तकम् । तेन भावनया ब्रह्मभूतेन सितभस्मना । ललाटवक्षः स्कन्धेषु स्वाश्रमोचितमन्त्रतः ।। मध्यमानामिकाङ्गुष्ठैरनु-लोमविलोमतः । त्रिपुण्ड्रं धारयेन्नित्यं त्रिकालेष्वपि भक्तितः । उद्धूलनस्य स्नानत्वाद्धस्तौ प्रक्षाल्य तत्परम्। द्विराचामेत् त्रिपुण्ड्रस्य धारणान्ते तथैव च इति ।।

**புருஷார்த்த ப்ரபோதத்திலும்:**- விபூதிதாரணத்தின் விதியைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். அக்னி ஹோத்ர பஸ்மத்தையாவது, விரஜாக்னி பஸ்மத்தையாவது ஆதரவோடு எடுத்து, அதைச் சுத்தமான பாத்ரத்தில் வைத்து, கை கால்களை அலம்பி, கவனமாய் இருமுறை ஆசமனம் செய்து, அந்தப் பஸ்மத்தைப் பஞ்சப்ரஹ்ம மந்த்ரங்களால் எடுத்துக் கையில் வைத்து, மூன்று ப்ராணாயாமங்கள் செய்து, 'அக்னிரிதி' என்ற ஏழு மந்த்ரங்களால் மூன்று முறை அபிமந்த்ரித்து, 'ஓமாப:' என்ற மந்த்ரத்தைப் படித்து, ஜலாதிபதியான விஷ்ணுவை த்யானித்து, பஸ்மத்துடன் ஜலத்தைச் சேர்த்து, 'அக்னிரிதி' முதலிய மந்த்ரங்களால் குழைத்து, ஸாம்பசிவனை த்யானித்து, தலைமுதல் கால்வரையில் உத்தூளனம் செய்து, பாவனையினால் ப்ரம்ஹமாயுள்ள அந்த வெண்ணிறமான பஸ்மத்தினால், நெற்றி, மார்பு, தோள்கள் இவைகளில் தனது ஆச்ரமத்திற்குசிதமான மந்த்ரத்தால், நடுவிரல், பவித்ரவிரல், பெருவிரல் இவைகளால் அனுலோமமாகவும், விலோமமாகவும், மூன்று காலங்களிலும் பக்தியுடன், த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். உத்தூளனம் ஸ்நானமானதால், பிறகு கைகளை அலம்பி இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். த்ரிபுண்ட்ரத்தைத் தரித்த பிறகும் அப்படியே செய்ய வேண்டும்.

क्रियासारे – शूद्रहस्तस्थितं भस्म द्विजातिर्नैव धारयेत् । तथैवान्त्यजहस्तस्थं शूद्रैर्धार्यं न जातुचित् ।। यावन्तः पतिता भूमौ भस्मनः परमाणवः । तावद्वर्षसहस्राणि रौरवं नरकं व्रजेत् इति ।।

पाराशरे – श्रौतधर्मैकनिष्ठानां लिङ्गं तु श्रौतमेव हि । अश्रौतधर्मनिष्ठानां लिङ्गं त्वश्रौतमेव हि ।। श्रौतं लिङ्गं च विज्ञेयं त्रिपुण्ड्रोद्धूलनात्मकम् । अश्रौतमूर्ध्वपुण्ड्रादि नैव तिर्यक् त्रिपुण्ड्रकम् ।। वेदसिद्धो महादेवः साक्षात्संसारमोचकः । उमार्धविग्रहः शुक्लश्चन्द्रार्द्धकृतशेखरः ।। लोकानामुपकाराय श्रौतं लिङ्गं दधाति च । वेदसिद्धस्य विष्णोश्च श्रौतं लिङ्गं न चेतरत् ।। प्रादुर्भावविशेषाणामपि तस्य तदेवहि इति ।।

*க்ரியாஸாரத்தில்:- சூத்ரன் கையிலுள்ள பஸ்மத்தை த்விஜன் தரிக்கக் கூடாது. அந்த்யஜனின் கையிலுள்ள பஸ்மத்தைச் சூத்ரரும் ஒருகாலும் தரிக்கக் கூடாது. விபூதியின் எவ்வளவு பரமாணுக்கள் பூமியில் விழுந்தனவோ, அவ்வளவு ஆயிரம் வர்ஷங்கள் வரையில் (சிந்தியவன்) ரௌரவ நரகத்தை அடைவான்.*

*பாராசரத்தில்:- ச்ரௌத தர்மத்திலேயே நிலைபெற்றவருக்கு லிங்கம் (குறி, புண்ட்ரம்) ச்ரௌதமே ஆகும். ச்ரௌதமல்லாத தர்மத்தில் நிலை பெற்றவருக்கு லிங்கம் ச்ரௌதமல்லாததாகும். த்ரிபுண்ட்ரமும், உத்தூளனமும் ச்ரௌதலிங்கமென்று அறியத் தகுந்தவை. ஊர்த்வ புண்ட்ரம் முதலியது அச்ரௌத லிங்கமாகும். திர்யக்புண்ட்ரம் அச்ரௌதமாகாது. வேதங்களால் ஸித்தனும், மஹாதேவனும், ஸாக்ஷாத் ஸம்ஸார மோசகனும், உமார்த்த சரீரனும், சுக்லனும், சந்த்ரார்த்த சேகரனுமான பரமேசன் லோகோபகாரத்திற்காக, ச்ரௌத லிங்கத்தையே தரிக்கின்றார். வேத ஸித்தரான விஷ்ணுவும் ச்ரௌத லிங்கத்தையே தரிக்கின்றார். மற்றதைத் தரிப்பதில்லை. விஷ்ணுவின் அவதார விசேஷங்களுக்கும் ச்ரௌத லிங்கமே தார்யமாய் இருக்கிறது.*

भविष्यत्पुराणे — पापानामपि बाहुल्याद् दधीचस्य च शापतः । गौतमस्य मुनेः शापात् श्रौतं लिङ्गं न रोचते इति । आदित्यपुराण - दुर्वाससो मुनेः शापात् कुपितस्य महात्मनः । कण्वशापाद्भृगोः शापादुपमन्योश्च शापतः ॥ दधीचस्य मुनेः शापाद्गौतमस्य च शापतः । विप्राणां दाक्षिणात्यानां पापोपहतचेतसाम् ॥ शिवे भस्मनि रुद्राक्षे किञ्चिच्छ्रद्धा न विद्यते इति ॥ त्रिपुण्ड्रोद्धूलनार्थानि वचनानि सहस्रशः । सन्ति तानि न लिख्यन्ते ग्रन्थविस्तरभीतितः ॥

பவிஷ்யத் புராணத்தில்:- பாபங்கள் அதிகமாகியதாலும், ததீசருடைய சாபத்தாலும், கௌதம முனியின் சாபத்தாலும், ச்ரௌதமான புண்ட்ரம் ருசிப்பதில்லை. ஆதித்ய புராணத்தில்:- கோபமுற்றவரும் மஹாத்மாவுமான துர்வாஸர் கண்வர் ப்ருகு உபமன்யு ததீசமுனி, கௌதமர் இவர்களது சாபத்தாலான பாபத்தால் கெடுக்கப்பட்ட மனதுடைய தென்தேசத்திலுள்ள ப்ராம்ஹணர்களுக்கு, சிவனிடத்திலும், பஸ்மத்திலும், ருத்ராக்ஷத்திலும், கொஞ்சமும் ச்ரத்தை இல்லை. இவ்விதம், த்ரிபுண்ட்ரத்திற்கும், உத்தூளனத்திற்கும் ப்ரமாணங்களான வசனங்கள் ஆயிரக்கணக்காய் இருக்கின்றன. க்ரந்தம் விரியுமென்ற பயத்தினுல் அவை எழுதப்படவில்லை.

यत्तु ब्रह्मरातवचनम् – ब्राह्मणस्योर्ध्वपुण्ड्रं स्यात् क्षत्रियस्यार्द्धचन्द्रकम् । वैश्यस्य वर्तुलाकारं शूद्रस्यैव त्रिपुण्ड्रकम् इति । यदपि पाद्मवचनम् – कपालकेशभस्मास्थिशुक्तिपाषाणधारिणम् । त्रिपुण्ड्रधारिणं विप्रं चण्डालमिव सन्त्यजेत् ॥ बालेन्दुवत् क्षत्रियाणां वैश्यानां वर्तुलाकृति । त्रिपुण्ड्रं शूद्रजातीनां विधिरेष सनातनः ॥ कुलीनो ब्राह्मणो विद्वान् भस्मग्राही भवेद्यदि । वर्जयेत्तादृशं देवि मद्योच्छिष्टघटं यथा ॥ त्रिपुण्ड्रं ब्राह्मणो विद्वान् लीलयाऽपि न धारयेत् । त्रिपुण्ड्रधारणाद्विप्रः पतत्येव न संशयः ॥ तामसेषु पुराणेषु मोहनार्थं

सुरद्विषाम् । त्रिपुण्ड्रधारणं प्रोक्तं तामसैर्मुनिसत्तमैः ।। तामसानि पुराणानि दृष्ट्वा मोहाच्च यो द्विजः । त्रिपुण्ड्रधारणं कृत्वा तमस्यन्धे निमज्जति ।। तिर्यक्पुण्ड्रं न कुर्वीत सम्प्राप्ते मरणेऽपि च । तिर्यक्पुण्ड्राद्गतिस्तिर्यगूर्ध्वपुण्ड्रात्तथोर्ध्वगा ।। शस्त्रधार्यसिधारी च धनुर्द्धारी धनापहः । तिर्यक्पुण्ड्रधरो विप्रश्चण्डालसदृशो भवेत् ।। ब्राह्मणः कुलजो विद्वान् तिर्यक्पुण्ड्रधरो यदि । तं गर्दभं समारोप्य राजा राष्ट्रात् प्रवासयेत् इति ।।

ஆனல், **ப்ரம்ஹராதர்,** 'ப்ராம்ஹணனுக்கு ஊர்த்வபுண்ட்ரமும், க்ஷத்ரியனுக்கு அர்த்த சந்த்ரமும், வைச்யனுக்கு வர்த்துளமும், சூத்ரனுக்கே த்ரிபுண்ட்ரமும் விஹிதம்' என்று சொல்லிய வசனமுள்ளது. **பாத்ம புராணத்திலும்:-** ''ஓடு, மயிர், சாம்பல், எலும்பு, கிளிஞ்சில், கல் இவைகளைத் தரித்தவனும், த்ரிபுண்ட்ரத்தைத் தரித்தவனுமான ப்ராம்ஹணனைச் சண்டாளனைப் போல் விலக்க வேண்டும். க்ஷத்ரியர்களுக்கு, பாலசந்த்ரன் போலும், வைச்யருக்கு வர்த்துள புண்ட்ரமும், சூத்ரருக்கு த்ரிபுண்ட்ரமும் என்ற இந்த விதி புராதனமாகியது. நற்குலத்தில் பிறந்தவனும், அறிந்தவனுமான ப்ராம்ஹணன் பஸ்மத்தை க்ரஹிப்பவனுய் இருந்தால் அவ்விதமான அவனை, மத்யத்தால் உச்சிஷ்டமான குடத்தைப் போல் விலக்க வேண்டும். அறிந்த ப்ராம்ஹணன், விளையாட்டிற்காகவும் த்ரிபுண்ட்ரத்தை தரிக்கக் கூடாது. ப்ராம்ஹணன் த்ரிபுண்ட்த்தைத் தரித்தால் பதிதனுகவே ஆகிறுன், ஸம்சயமில்லை. அஸுரர்களை மயக்குவதற்காக, தமோகுணமுற்ற முனிவர்களால், தாமஸ புராணங்களில், த்ரிபுண்ட்ர தாரணம் சொல்லப்பட்டது. எந்த ப்ராம்ஹணன், தாமஸ புராணங்களைப் பார்த்து, மோஹத்தால் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கின்றுனே அவன் பெருமிருளில் முழுகுகிறுன். மரணம் நேர்ந்தாலும் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கக் கூடாது. திர்யக் புண்ட்ரத்தால்

திர்யக்கதிதான் கிடைக்கும். ஊர்த்வ புண்ட்ரத்தால் ஊர்த்வமான (மேலான) கதி கிடைக்கும். ஆயுதம் தரித்தவன், கத்தியைத் தரித்தவன், வில்லைத் தரித்தவன், பணத்தை அபஹரித்தவன், திர்யக் புண்ட்ரம் தரித்தவன் ப்ராம்ஹணனாகில் சண்டாளனுக்கு ஸமனாய் ஆவான். நற்குலத்திற் பிறந்தவனும், அறிந்தவனுமான ப்ராம்ஹணன் திர்யக் புண்ட்ரத்தைத் தரித்தால், அரசன் அவனைக் கழுதையிலேற்றி, நாட்டினின்றும் வெளியேற்ற வேண்டும்.

यदपि वसिष्ठसंहितायाम् – यत्तु रुद्रार्चनं प्रोक्तं त्रिपुण्ड्रं वाऽपि सत्तमाः । तदब्रह्मण्यविषयं न तु विप्रस्य कर्हिचित् ।। न त्रिपुण्ड्रं द्विजैर्द्धार्यं पट्टिकाकारमेव च । न चान्यदेवताभक्तिरापद्यपि कदाचन इति ।।

வஸிஷ்ட ஸம்ஹிதையில்:- "ஓ ஸாதுக்களே! சிவார்ச்சனமும், த்ரிபுண்ட்ரமும் ப்ராம்ஹணரல்லாதவரைப் பற்றியது, ஒருகாலும் ப்ராம்ஹணரைப் பற்றியதல்ல. ப்ராம்ஹணர்கள் த்ரிபுண்ட்ரத்தையும், பட்டிகை போன்ற புண்ட்ரத்தையும், தரிக்கக் கூடாது. அன்யதேவதா பக்தியும் ஆபத்திலும் விஹிதமல்ல" என்றுள்ளது.

यदपि ब्रह्माण्डपुराणवचनम् – त्रिपुण्ड्रं शूद्रकल्पानां शूद्राणां च विधीयते इति, एवमादीनि त्रिपुण्ड्रनिषेधवचनानि पाशुपतादि-तन्त्रदीक्षाप्रविष्टब्राह्मणनिन्दापराणि । -अत एव वाराहे, गौतमः – शशाप तान् जटाभस्मदीक्षाव्रतधरास्तथा । त्रिपुण्ड्रधारिणो नित्यं भस्मोद्धूलनतत्पराः ।। भविष्यथ त्रयीबाह्या मिथ्याज्ञानप्रलापिनः । बौद्धे चाप्यार्हते चैव तथा पाशुपतेऽपि च ।। शाम्भवे दीक्षिता यूयं भवत ब्राह्मणाधमाः इति ।।

ப்ரம்ஹாண்ட புராணத்தில்:- 'சூத்ரரைப் போன்றவருக்கும், சூத்ரருக்கும் த்ரிபுண்ட்ரம் விதிக்கப்படுகிறது'

என்றிருப்பதும், இதுபோலுள்ள த்ரிபுண்ட்ர நிஷேத வசனங்களும், பாசுபதம் முதலிய தந்த்ரங்களில் தீக்ஷையடைந்த ப்ராம்ஹணர்களை நிந்திப்பதில் தாத்பர்யம் உள்ளவைகளாகும். ஆகையால்தான் வராஹ புராணத்தில்:- கௌதமர் அவர்களைச் சபித்தார் - ஓ ப்ராம்ஹணுதமர்களே! நீங்கள், ஜடை, பஸ்மம், தீக்ஷை, வ்ரதம் இவைகளைத் தரித்தவராய், நித்யமும், த்ரிபுண்ட்ரம் தரிப்பவராய், உத்தூளனம் செய்பவராய், மூன்று வேதங்களுக்கும் பாஹ்யராய், பொய்யான ஞானத்தை ப்ரலாபிப்பவராய், பௌத்தம், ஆர்ஹதம், பாசுபதம், சாம்பவம் இவைகளில் தீக்ஷை பெற்றவராய் ஆகக்கடவீர்.

चतुर्विंशतिमते – बौद्धान् पाशुपतान् जैनान् लोकायतिक कापिलान्। विकर्मस्थान् द्विजान् दृष्ट्वा सचेलो जलमाविशेत् इति ॥ चन्द्रिकायामपि – जैनान् पाशुपतान् स्पृष्ट्वा लोकायतिक-नास्तिकान्। स्पृष्ट्वा देवलकं चैव सवासा जलमाविशेत् इति ॥ नारदीयपुराणे – शैवान् पाशुपतांचैव पाञ्चरात्रान् जनेश्वर। स्पृष्ट्वा स्नायाज्जपेत् सूक्तं यतो निन्दन्ति वैदिकान् इति ॥ कौर्मेऽपि – कापालिकाः पाशुपताः पाषण्डा ये च तद्विधाः। ब्रह्मभावान्निरस्तास्ते वर्जनीयाः प्रयत्नतः इति ॥

சதுர்விம்சதி மதத்தில் :- பௌத்தர், பாசுபதர், ஜைனர், லோகாயதிகர், காபிலர், நிஷித்த கர்மங்களில் இருக்கும் த்விஜர்கள் இவர்களைக் கண்டால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். சந்த்ரிகையிலும்:- ஜைனர், பாசுபதர், லோகாயதிகர், நாஸ்திகர், தேவலகன் இவர்களைக் ஸ்பர்சித்தால் ஸசேலஸ்நானம் செய்ய வேண்டும். நாரதீய புராணத்தில்:- ஓ அரசனே! சைவர், பாசுபதர், பாஞ்சராத்ரர்கள் இவர்களைத் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். (புருஷ) ஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். (ஏனெனில்) அவர்கள் வைதிகர்களை நிந்திப்பவர். கௌர்மத்திலும்:- காபாலிகர், பாசுபதர்,

பாஷண்டர்கள் இவர்களும், இவர்களைப் போன்ற மற்றவரும், ப்ராம்ஹணத் தன்மையினின்றும் தள்ளப்பட்டவர்கள். அவர்களை அவச்யம் விலக்க வேண்டும்.

वासिष्ठलैङ्गेऽपि – केचित्कापालमिच्छन्ति केचित्पाशुपतं मुने। केचिद्बौद्धं प्रशंसन्ति केचिद्दैगम्बरं मुने ॥ केचिल्लोकायतं ब्रह्मन् केचिद्वामं महामुने । केचिद्भैरवमिच्छन्ति केचिच्छाक्तं तथैव च । शाम्भवं केचिदिच्छन्ति यामलं भुवि केचन ॥ अन्यानि यानि शास्त्राणि विरुद्धानि महामुने । स्वतः प्रमाणभूतेन वेदेन मुनिसत्तम ॥ तान्येव श्रद्धया युक्ताः परिगृह्य द्विजातयः । आचरन्ति महामूढा युगान्ते समुपस्थिते इति ॥

வாஸிஷ்ட லிங்கத்திலும்:- ஓ முனே! சிலர் காபாலத்தையும், சிலர் பாசுபதத்தையும், சிலர் பௌத்தத்தையும், சிலர் திகம்பரமதத்தையும் புகழ்கின்றனர். சிலர் லோகாயதத்தையும், சிலர் வாமத்தையும், சிலர் பைரவத்தையும் விரும்புகின்றனர். சிலர் சாக்தத்தையும், சிலர் சாம்பவத்தையும், சிலர் யாமளத்தையும் விரும்புகின்றனர். ஓ முனே! ஸ்வயம் ப்ரமாணமாய் உள்ள வேதத்துடன் விரோதிக்கும் சாஸ்த்ரங்கள் வேறு எவையுண்டோ அவைகளை, ப்ராம்ஹணர்கள் ச்ரத்தையுடன் கூடியவராய் பரிக்ரஹித்து, யுகாந்தம் ஸமீபத்திருக்கும் போது மஹாமூடர்களாய் அனுஷ்டிக்கப் போகிறார்கள்.

विष्णुपुराणेऽपि – येन केनापि योगेन द्विजातिर्दीक्षितः कलौ । यैव सैव च मैत्रेय प्रायश्चित्तं कलौ क्रिया ॥ यदा यदा हि पाषण्डवृद्धिर्मैत्रेय लक्ष्यते । तदा तदा कलेर्वृद्धिरनुमेया विचक्षणैः इति । द्विजबन्धूनां तन्त्रेऽधिकार उक्तो जातिनिर्णयसंग्रहे – ब्राह्मणादुद्विजकन्यायां जातो नाम शिवद्विजः । महादेवस्य पूजार्थं

मुपनेयः समन्त्रकम् ।। शिवागमं पठेन्नित्यं शिवशेषान्नभुक्तिमान् । दीक्षाधर्मविधानं च द्विजो धर्ममिवाचरेत् ।। ब्राह्मण्यां सधवायां तु विप्राज्जातस्तु कुण्डकः । विधवायां तु गोलः स्यादेतौ श्राद्धबहिष्कृतौ । तौ च देवस्य पूजार्हा वुपनेयौ च मन्त्रतः । आरामपोषणः कुण्डो गोलको हिङ्गुविक्रयी ।। सवर्णेष्वधमावेतौ कानीनत्वाच्छिवद्विजः इति ।।

**விஷ்ணு புராணத்திலும்**:- *கலியில், ப்ராம்ஹணன் ஏதாவதொரு சாஸ்த்ரத்தால் தீக்ஷிதனுவான், ஓ மைத்ரேய? ஏதாவதொரு க்ரியை (மனதிற்குத் தோன்றியதே) ப்ராயச் சித்தமாகும் கலியில். ஓ மைத்ரேய! எந்தெந்தக் காலத்தில் பாஷண்டரின் வ்ருத்தி காணப்படுகிறதோ, அந்தந்தக் காலத்தில் கலியின் வ்ருத்தியைப் புத்திமான்கள் அனுமானிக்க வேண்டும். ப்ரம்ஹபந்துக்களுக்குத் தந்த்ரத்தில் அதிகாரம் சொல்லப்பட்டுள்ளது.* **ஜாதிநிர்ணய ஸங்க்ரஹத்தில்**:- *ப்ராம்ஹணனிடத்தினின்றும் க்ஷத்ரிய வைச்ய கன்யைகளிடத்தில் பிறந்தவன் சிவத்விஜன் எனப்படுவான். அவன் மஹாதேவனின் பூஜைக்காக மந்த்ரத்துடன் உபநயனம் செய்யத் தகுந்தவன். அவன் நித்யமும் சிவாகமத்தைப் படிக்க வேண்டும். சிவநிர்மால்யான்னத்தைப் புஜிக்க வேண்டும். ப்ராம்ஹணன் வைதிக தர்மத்தை அனுஷ்டிப்பதுபோல் தீக்ஷாதர்மவிதானத்தை அனுஷ்டிக்க வேண்டும். பதியுடன் கூடிய ப்ராம்ஹணியிடத்தில் ஜாரனுன ப்ராம்ஹணனுல் உண்டாகியவன் குண்டகன் எனப்படுவான். ப்ராம்ஹண விதவையினிடம் ப்ராம்ஹணனுல் பிறந்தவன் கோளகன் எனப்படுவான். இவர் இருவரும் ச்ராத்தத்திற்கு அர்ஹரல்லாதவர். அவரும் தேவபூஜைக்காக மந்த்ரத்தினுல் உபநயனம் செய்யத் தகுந்தவர். குண்டன் பூத்தோட்டத்தைப் போஷிப்பவன், கோளகன் பெருங்காயம் விற்பவன், இவரிருவரும் ஸவர்ணருள் அதமர்கள். கன்னியினிடத்திற் பிறந்ததால் சிவத்விஜனும் அதமன்.*

यत्तु शङ्खवचनम् – दीपाग्निं दीपतैलं च भस्म चास्थि रजस्वलाम्। एतानि ब्राह्मणः स्पृष्ट्वा सवासा जलमाविशेत् इति, तत् दीपाग्निपदसन्निधानात् तदग्निवर्तिभस्मविषयम्। भस्ममात्रपरत्वे तु पूर्वोक्तभस्मधारणविधायक श्रुतिस्मृतीतिहासपुराणविरोधः स्यात्। तस्मादुद्धूलनं त्रिपुण्ड्रं च वैदिकैर्धार्यमिति स्थितम्॥

சங்கரின் வசனமோ:- "தீபத்தின் சுடரையும், தீபத்தின் எண்ணெயையும், பஸ்மத்தையும், அஸ்தியையும், ரஜஸ்வலையையும், ப்ராம்ஹணன் தொட்டால் ஸசேலஸ்நானம் செய்ய வேண்டும்" என்று உள்ளதே எனில், அது, தீபாக்னி பதம் ஸமீபத்தில் இருப்பதால், தீபாக்னியில் இருக்கும் பஸ்மத்தைப் பற்றியதாகும். அல்லாது, எல்லாப் பஸ்மத்தையும் சொல்லுகிறதெனில், முன் சொல்லியதும், பஸ்மதாரணத்தை விதிப்பதுமான ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களுடன் விரோதம் நேரிடும். ஆகையால், உத்தூளனமும், த்ரிபுண்ட்ரமும் வைதிகர்களால் தரிக்கத் தகுந்ததேயாகும்.

अत्र विकल्पमाह व्यासः – ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा धारयेत् सर्वकर्मसु इति॥ शैवेऽपि – ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा धृत्वा कर्माणि वै द्विजः। इष्टापूर्तानि कुर्वीत नान्यथा तत्फलं लभेत् इति॥ अन्यत्रापि – आचम्य धारये दूर्ध्वपुण्ड्रं पुण्यस्थलीमृदा। अथवा धारयेद्विप्रो भस्मना तु त्रिपुण्ड्रकम्॥ यज्वा तु धारयेन्नित्यं भस्मनैव त्रिपुण्ड्रकम् इति॥

இதில் விகல்ப்பத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:- ஊர்த்வபுண்ட்ரத்தையாவது, த்ரிபுண்ட்ரத்தையாவது, ஸகல கர்மங்களிலும் தரிக்க வேண்டும். சைவத்திலும்:- ப்ராம்ஹணன், ஊர்த்வபுண்ட்ரத்தையாவது த்ரிபுண்ட்ரத்தையாவது தரித்து, இஷ்டாபூர்த்தகர்மங்களைச் செய்ய வேண்டும். இல்லாவிடில் அதன் பலனை அடைவதில்லை. மற்றோரிடத்திலும்:- ப்ராம்ஹணன்,

ஆசமனம் செய்து, புண்ய ஸ்தலத்திலுள்ள ம்ருத்திகையால் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கவும், அல்லது பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கவும். யாகம் செய்தவனாகில், எப்பொழுதும் பஸ்மத்தால் த்ரிபுண்ட்ரத்தையே தரிக்கவும்.

अत्र व्यवस्था माधवीये दर्शिता – ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा धारयेत्तु यथा कुलम् इति ।। पारिजाते – अपवित्रेण यज्ञप्तमस्नातेन कृतं हुतम् । यच्च शून्यललाटेन तदत्यल्पफलं भवेत् ।। ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा धारयेत्तु यथाकुलम् इति ।। पाद्मेऽपि – आचम्य भस्मना धार्यं त्रिपुण्ड्रं गोपिचन्दनात् । ऊर्ध्वपुण्ड्रं यथापूर्वमनुष्ठानं समाचरेत् इति ।।

இதில் முடிவான தீர்ப்பு மாதவீயத்தில்:- காண்பிவிக்கப்பட்டுள்ளது, ''ஊர்த்வபுண்ட்ரத்தையோ, த்ரிபுண்ட்ரத்தையோ, குலாசாரப்படி தரிக்கவும்' என்று. பாரிஜாதத்தில்:- பவித்ரம் இல்லாமலும், ஸ்நானம் செய்யாமலும், புண்ட்ரம் தரிக்காமலும் செய்த ஜபம், கர்மம், ஹோமம் இவை மிக ஸ்வல்ப்ப பலனுள்ளதாய் ஆகும். ஊர்த்வ புண்ட்ரத்தையாவது, த்ரிபுண்ட்ரத்தை யாவது குலாசாரப்படி தரிக்க வேண்டும். பாத்மத்திலும்:- ஆசமனம் செய்து, பஸ்மத்தினால் த்ரிபுண்ட்ரத்தையாவது, கோபீசந்தனத்தால் ஊர்த்வபுண்ட்ரத்தையாவது முன்னோரின் ஆசாரப்படி தரிக்க வேண்டும்.

तत्रैव समुच्चयोऽप्यभिहितः – ऊर्ध्वपुण्ड्रं मृदा पूर्वमनुषज्य समाचरेत् । अग्निहोत्रसमुद्भूतभस्मनाऽपि त्रिपुण्ड्रकम् ।। ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं च द्वावेतौ धारयेद्द्विजः । तयोरेकं परित्यज्य रौरवं नरकं व्रजेत् । इति । यत्तु वचनम् – गोपीचन्दनसंयुक्तं भूत्या निर्यक् त्रिपुण्ड्रकम् । षष्टिवर्षसहस्राणि नरकं तं प्रवेशयेत् इति, तत् त्रिपुण्ड्रोपरि ऊर्ध्वपुण्ड्रधारणनिषेधपरम् । ऊर्ध्वपुण्ड्रे त्रिपुण्ड्रं स्यात् त्रिपुण्ड्रे नोर्ध्वपुण्ड्रकम् इति स्मरणात् ।।

**பாத்மத்திலேயே:-** ஸமுச்சயமும் சொல்லப் பட்டுள்ளது. முதலில் ம்ருத்திகையினால் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரித்து, அக்னி ஹோத்ரத்தில் உண்டாகிய பஸ்மத்தினால் த்ரிபுண்ட்ரத்தையும் தரிக்க வேண்டும். ப்ராமம்ஹணன் ஊர்த்வ புண்ட்ரம், த்ரிபுண்ட்ரம் இரண்டையும் தரிக்க வேண்டும். அவைகளுள் ஒன்றை விட்டால் ரௌரவமெனும் நரகத்தை அடைவான். ஆனால் - ''கோபீசந்தனத்துடன் கூடிய பஸ்ம த்ரிபுண்ட்ரமானது, தரிப்பவனை அறுபதினாயிரம் வர்ஷம் நரகத்தை அடைவிக்கும்'' என்ற வசனம் உள்ளதே எனில், அது, த்ரிபுண்ட்ரத்தின் மேல் ஊர்த்வபுண்ட்ர தாரணத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யம் உடையது, ''ஊர்த்வ புண்ட்ரத்தின் மேல் த்ரிபுண்ட்ரம் தரிக்கலாம், த்ரிபுண்ட்ரத்தின் மேல் ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கக் கூடாது'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

ब्रह्मकैवर्ते वृद्धगिरिमाहात्म्ये – तिर्यग्भस्म मृदं तथोर्ध्वमुदितां धत्तेऽनयोर्व्यत्ययो विप्रध्वंसनमन्यधारणकृता भस्मापि धार्यं ततः । अन्यन्नोपरि भस्मधारणकृता मोहाद्दधन्निष्पतेत् यत्तच्चन्दनकुङ्कुमाद्यपि च मृत्स्याल्लौकिकी केवलं इति । भस्म तिर्यगेव धारयेत् । तथा ग्राह्यत्वेन उदितां - उक्तां गोपीचन्दनादिकां मृदमूर्ध्वाग्रामेव धारयेत् । अनयोः व्यत्ययः - व्यत्यासः भस्मना ऊर्ध्वपुण्ड्रकरणं, मृदा तिर्यक्पुण्ड्रकरणं च, विप्रध्वंसनं - ब्राह्मण्यहानिकरम् । अन्यधारणकृता - गोपीचन्दनादिमृद्धारणकृता, तत उपरि भस्मापि धार्यम् । भस्म धारयता तदुपरि अन्यत् - गोपीचन्दनादि, न धार्यम् । मोहाद्धारयन् पतितः स्यात् । एवं लौकिकी केवलं - अलङ्कारार्था मृत् चन्दनकुङ्कुमकस्तूरिकादिकं च भस्मोपरि न धार्यमित्यर्थः ॥

**அவ்விதமே, ப்ராம்ஹகைவர்த்தத்தில்:-** வ்ருத்தகிரி மாஹாத்ம்யத்தில் 'திர்யக்பஸ்ம + கேவலம்' என்று. இதன் பொருள் - ''பஸ்மத்தைக் குறுக்காகவே தரிக்கவும்.

க்ராஹ்யமாய்ச் சொல்லப்பட்ட கோபீசந்தனம் முதலிய ம்ருத்திகையை ஊர்த்வமாகவே தரிக்கவும். இவைகளை மாற்றுவது, பஸ்மத்தினுல் ஊர்த்வ புண்ட்ரமும், ம்ருத்திகையினுல் குறுக்கான புண்ட்ரமும் தரிப்பது, ப்ராம்ஹண்யத்திற்கு ஹானியைச் செய்யும், கோபீசந்தனம் முதலிய ம்ருத்தைத் தரிப்பவன், அதன் மேல் பஸ்மத்தையும் தரிக்கவும். பஸ்மத்தைத் தரிப்பவன், பஸ்மத்தின் மேல் கோபீசந்தனம் முதலியதைத் தரிக்கக்கூடாது. அறியாமையால் தரித்தவன் பதிதனுவான். இவ்விதம் அலங்காரத்திற்காகத் தரிக்கப்படும் ம்ருத்திகை, சந்தனம், குங்குமம், கஸ்தூரீ முதலியதும் பஸ்மத்தின் மேல் தரிக்கத் தக்கதல்ல'' என்பதாம்.

स्मृत्यन्तरे – वैदिकैर्मन्त्ररहितं चन्दनागरुकुङ्कुमम् । तिर्यक् पुण्ड्रात्मना धार्यं कान्तिसौख्याभिलाषिभिः ॥ पुण्ड्रो धृतश्चन्दनाद्यैरिति भस्म न सन्त्यजेत् । दह्येत भस्मसन्त्यागी श्रुतिचक्रोत्थवह्निना ॥ चन्दनादुपरि प्राज्ञो धारयेद्भस्म वैदिकम् । लौकिकं चन्दनाद्यं तु भस्मोपरि न धारयेत् इति ॥ प्रातःकाले जलैर्युक्ता मध्याह्ने चन्दनैर्युता । सायमम्भोविरहिता भूतिरंहोविनाशिनी इति स्मरणात् भस्मोपरि भस्ममिश्रितं चन्दनं धार्यमित्याहुः ॥

மற்ருெரு ஸ்ம்ருதியில்:- காந்தி ஸௌக்யம் இவைகளை விரும்பிய வைதிகர்களால் மந்த்ரமில்லாமல், சந்தனம், அகரு, குங்குமம் இவை திர்யக் புண்ட்ரரூபமாய் தரிக்கப்படலாம், சந்தனம் முதலியவைகளால் புண்ட்ரம் தரிக்கப்பட்டதென்று, பஸ்மத்தை விடக்கூடாது. பஸ்மத்தை விட்டவன், வேத சக்ரத்திலுண்டாகிய அக்னியால் தஹிக்கப்படுவான். அறிந்தவன், சந்தனத்தின் மேல் வைதிகமான பஸ்மத்தைத் தரிக்கலாம். லௌகிகமான சந்தனம் முதலியதை பஸ்மத்தின் மேல் தரிக்கக் கூடாது. ப்ராத:காலத்தில் ஜலத்துடன் கூடியதும், மத்யாஹ்னத்தில் சந்தனத்துடன் கூடியதும்,

ஸாயங்காலத்தில் ஜலமில்லாததுமான விபூதி, பாபத்தை அழிக்கத் தக்கதாகும் என்று ஸ்ம்ருதி இருப்பதால், பஸ்மத்தின் மேல், பஸ்மத்துடன் சேர்ந்த சந்தனம் தரிக்கத் தகுந்தது என்கின்றனர்.

तथा स्मृतिरत्ने – ब्राह्मणानां नृपाणाञ्च भस्ममिश्रञ्च चन्दनम्। नेत्रयुग्मप्रमाणं तु त्रिपुण्ड्रोपरि चेष्यते इति ॥ एवञ्च, ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा धारयेत्तु यथाकुलम्। उभयं वा यथाचारं धारयेद्वैदिको द्विजः ॥ तन्त्रनिष्ठस्तु तत्तन्त्रसिद्धमेवेति निर्णयः ॥ श्राद्धे ऊर्ध्वपुण्ड्रधारणमुक्तं हेमाद्रौ – जपे होमे तथा दाने स्वाध्याये पितृकर्मणि। तत्सर्वं नश्यति क्षिप्रमूर्ध्वपुण्ड्रं विनाकृतम् इति ॥

அவ்விதமே, ஸ்ம்ருதி ரத்னத்தில்:- 'ப்ராம்ஹணர்களுக்கும், க்ஷத்ரியர்களுக்கும் பஸ்மத்துடன் கூடிய சந்தனம், இரண்டு கண்களின் அளவுள்ளதாய் த்ரிபுண்ட்ரத்தின் மேல் தரிக்கப்பட வேண்டும் எனப்படுகிறது' என்றுள்ளது. இவ்விதம் இருப்பதால், வைதிகனான ப்ராம்ஹணன, ஊர்த்வ புண்ட்ரத்தையாவது, த்ரிபுண்ட்ரத்தையாவது, குலாசாரப்படி தரிக்கவும். அல்லது, இரண்டு புண்ட்ரங்களையும் குலாசாரப்படி தரிக்கவும். தந்த்ரநிஷ்டனுவெனில் தன் தந்த்ரத்தில் விதிக்கப்பட்டதையே தரிக்க வேண்டும் என்பது நிர்ணயம். ச்ராத்தத்தில் ஊர்த்வபுண்ட்ரத்தின் தாரணம் சொல்லப்பட்டுள்ளது. ஹேமாத்ரியில்:- ஜபம், ஹோமம், தானம், அத்யயனம், பித்ருகார்யம் இவைகளை ஊர்த்வபுண்ட்ரம் இல்லாமல் செய்தால் அது முழுவதும் வீணுகிறது.

वर्तुलनिषेधः स्मर्यते तत्रैव – वामहस्ते तु दर्भांश्च रङ्गवल्लीं तथा गृहे। ललाटे तिलकं दृष्ट्वा निराशाः पितरो गताः इति ॥ संग्रहे – वर्जयेत्तिलकं फाले श्राद्धकर्मणि सर्वदा। तिर्यग्वाऽप्यूर्ध्वपुण्ड्रं वा धारयेच्छ्राद्धकर्मणि इति ॥ पुराणे – यागो दानं जपो होमः स्वाध्यायः

पितृतर्पणम् । भस्मीभवति तत्सर्वमूर्ध्वपुण्ड्रं विनाकृतम् इति ॥ चन्द्रिकायाम् – श्रौतस्मार्तक्रियाः सर्वा ह्यूर्ध्वपुण्ड्रमकुर्वतः । जायन्ते विफला ब्रह्मन् बाधिताश्च भवन्ति ताः ॥ सन्ध्याकाले जपे होमे स्वाध्याये पितृतर्पणे । श्राद्धकाले विशेषेण कर्ता भोक्ता च न त्यजेत् इति ॥

வர்த்துளபுண்ட்ர நிஷேதம் சொல்லப்படுகிறது, **ஹேமாத்ரியிலேயே:-** இடது கையில் தர்ப்பங்களையும், வீட்டில் கோலத்தையும், நெற்றியில் திலகத்தையும் பார்த்தால், பித்ருக்கள் ஆசையற்றுச் செல்கின்றனர். **ஸங்க்ரஹத்தில்:-** ச்ராத்த கார்யத்தில் நெற்றியில் திலகத்தை எப்பொழுதும் வர்ஜிக்க வேண்டும். ச்ராத்த கார்யத்தில் த்ரிபுண்ட்ரத்தையாவது, ஊர்த்வ புண்ட்ரத்தையாவது தரிக்க வேண்டும். **புராணத்தில்:-** ஊர்த்வபுண்ட்ரம் இல்லாமல் செய்த யாகம், தானம், ஜபம், ஹோமம், அத்யயனம், பித்ரு தர்ப்பணம் இவை முழுவதும் சாம்பலாய் ஆகிறது. **சந்த்ரிகையில்:-** ஓ ப்ரம்ஹன்! ஊர்த்வபுண்டரம் தரிக்காதவன் செய்யும் ச்ரௌத ஸ்மார்த்த க்ரியைகளெலாம் பலனற்றதாய் ஆகின்றன, பாதிக்கப்பட்டதாயுமாகின்றன. ஸந்த்யா காலத்திலும், ஜபத்திலும், ஹோமத்திலும், அத்யயனத்திலும், பித்ரு தர்ப்பணத்திலும் புண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். ச்ராத்தகாலத்தில் கர்த்தாவும், போக்தாவும் அவச்யம் தரிக்க வேண்டும்.

स्मृत्यन्तरे – श्वोभूते नित्यकर्माणि नद्यादौ विमले जले । कृत्वा श्राद्धं मृदा शुभ्रमूर्ध्वपुण्ड्रं तु धारयेत् इति ॥ पाद्मे – ऊर्ध्वपुण्ड्रविहीनं तु यः श्राद्धे भोजयेद्द्विजः । अश्नन्ति पितरस्तस्य विण्मूत्रं नात्र संशयः ॥ ऊर्ध्वपुण्ड्रविहीनस्तु यः श्राद्धं कुरुते द्विजः । सर्वं तद्राक्षसैर्नीतं नरकं च स गच्छति इति ॥

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** மறுநாளில் நதி முதலியதில்

இங்கு விதியும், ப்ரதிஷேதமும் இருப்பதால், அவரவர் குலாசாரப்படி வ்யவஸ்திக விகல்ப்பம் என்று அறியவும். சிலரோவெனில், ச்ராத்தத்தில் த்ரிபுண்ட்ரம். ஊர்த்வ புண்ட்ரம் இவைகளின் விதி, சைவ வைஷ்ணவ தந்த்ரங்களை ஆச்ரயித்தவரைப் பற்றியது. அவைகளின் நிஷேதம் வைதிகர்களைப் பற்றியது என்கின்றனர். மற்றவரோவெனில், நிஷேதம் ப்ரேத ச்ராத்தத்தைப் பற்றியது. (ஏனெனில்) ''த்ரிபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டால் ப்ரேதங்கள், பூதங்கள் முதலியவைகள் பயந்து ஓடுகின்றன, ஸம்சயமில்லை. கோரரான ராக்ஷஸரும், ப்ரேதர்களும், அற்ப ஜந்துக்களும், த்ரிபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டால் ஓடுகின்றார்கள், ஸம்சயமில்லை'', என்பது முதலான புராண வசனங்களால் என்கின்றனர். 'நிராசா: பிதரோகதா:' என்கிற வசனமோவெனில், பித்ருத்வத்தை அடைந்தவனுக்கும், வர்ஷம் முடியும் வரையில் ப்ரேதபாவனை நிவ்ருத்திக்காததால், ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு ஸம்பவிக்கும் மாஸிக ச்ராத்தத்தில் புண்ட்ரம் தரிக்கத் தகாதது என்பதில் தாத்பர்யமும் உள்ளதாகும். (ஏனெனில்) 'ஸபிண்டீகரணத்திற்குப் பிறகும் ப்ரேதத்தன்மை நிவ்ருத்திக்காதததால், வர்ஷம் பூர்ணமாகும் வரையில் விபூதி தரிக்கத் தகாதது' என்று ஸ்ம்ருதி இருப்பதால் என்கின்றனர். சிஷ்டாசாரத்தை அனுஸரித்து உசிதமானதை இங்கு க்ரஹிக்கவும்.

ननु देवतोत्कर्षनिकर्षप्रतिपादकानि पुण्ड्रस्तुतिनिन्दा पराणि च वचनानि परस्परविरुद्धानि बहूनि इतिहासपुराणेषु दृश्यन्ते। अतः परस्परविरुद्धार्थाभिधायकत्वात् इतिहासपुराणानि अप्रमाणानीति चेत्, भवेदयं दोषो भेदवादिनां शैवानां वैष्णवानां च शिवादन्यो विष्णुः, विष्णोरन्यः शिव इत्यवगच्छताम्। अभेदवादिनां तु सिद्धान्तिनां नायं दोषः, ईश्वरस्यैकत्वाभ्युपगमात्॥

கண்டால் பித்ருக்கள் ஆசையற்றவராய்ச் செல்கின்றனர். மண் பாத்ரத்திலுள்ள அர்க்யத்தையும், மண் பாத்ரத்திலுள்ள சந்தனத்தையும், நெய்யால் செய்யப்பட்ட தூபத்தையும் கண்டால் பித்ருக்கள் ஆசையற்றவராய்ச் செல்கின்றனர். ருத்ராக்ஷம் தரித்த ப்ராம்ஹணனை ச்ராத்தத்தில் புஜிப்பித்தால் பித்ருலோகத்தை அடைகிருன், இதில் ஸந்தேஹப்பட வேண்டாம். த்ரிபுண்ட்ரத்துடன் கூடியவனுய் எந்த ப்ராம்ஹணன் ச்ராத்தம் செய்கின்ருனே அவனது அந்த ச்ராத்தத்தை ராக்ஷஸர்கள் அழிக்கின்றனர், என்று வைவஸ்வதமனு சொன்னுர். த்ரிபுண்ட்ரத்தை யாவது, வர்த்துள புண்ட்ரத்தையாவது, ஊர்த்வ புண்ட்ரத்தையாவது தரித்து எவன் ச்ராத்தம் செய்கின்ருனே அவன் பாபி ஆவான், ரௌவமெனும் நரகத்தை அடைவான். ப்ராம்ஹணர்களை வரித்து, எவன் த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்கின்ருனே, அந்தக் கர்த்தா பயங்கரமான நரகத்தில் பித்ருக்களுடன் முழுகுகிருன். த்ரிபுண்ட்ரம் எல்லோருக்கும் அக்னி ஹோத்ரத்திற்குச் சமமாய் விதிக்கப்பட்டுள்ளது. ஆனுலும் ச்ராத்த காலம் வந்தால், கர்த்தாவும், போக்தாவும் அதை விடவேண்டும்.

अत्र विधिप्रतिषेधाभ्यां यथाकुलाचारं व्यवस्थितो विकल्पो द्रष्टव्यः ।। केचित्तु – श्राद्धे त्रिपुण्ड्रोर्ध्वपुण्ड्रयोर्विधिः शैववैष्णव-तन्त्रावलम्बिविषयः, तन्निषेधो वैदिकविषयः इत्याहुः ।। अन्ये तु – निषेधः प्रेतश्राद्धविषयः । त्रिपुण्ड्रधारिणं दृष्ट्वा प्रेता भूतपुरस्सराः । भीताः प्रकंपिताः शीघ्रं गच्छन्त्येव न संशयः ।। ये घोरा राक्षसाः प्रेताः ये चान्ये क्षुद्रजन्तवः । त्रिपुण्ड्रधारिणं दृष्ट्वा पलायन्ते न संशयः इत्यादिपुराण वचनैरित्याहुः ।। निराशाः पितरो गताः इति तु वचनं, पितृत्वं प्राप्तस्याप्यब्दपूर्तिपर्यन्तं प्रेतभावनाऽनिवृत्तेः, सपिण्डना-नन्तरभाविनि मासिकश्राद्धे पुण्ड्रं न धार्यमित्येवं परम् । सपिण्डीकरणादूर्ध्वं प्रेतत्वस्यानिवृत्तितः । तावद्भस्म न धार्यं स्याद्यावदब्दो न पूर्यते' इति स्मरणादित्याहुः । शिष्टाचारानुसारेण यथोचित मत्र ग्राह्यम् ।।

குறுக்கான புண்ட்ரத்தின் நிஷேதம் சொல்லப்படுகிறது ஹேமாத்ரியில்:- குறுக்கான புண்ட்ரத்தையும், கழுத்தில் மாலையையும், வ்ருஷளீ பதியையும், கண்டால், பித்ருக்கள் ஆசையற்றவராய் திரும்பிச் செல்லுகிறார்கள். வஸிஷ்டர்:- வெண்கலப் பாத்ரத்தில் ஹவிஸ்ஸான வஸ்துவையும், கழுத்தில் மாலிகையையும், நெற்றியில் திலகத்தையும் கண்டால், பித்ருக்கள் ஆசையற்றவராய்ச் செல்கின்றனர். திலகம் என்பதற்கு வர்த்துளமான திலகம் என்று பொருள். மாலிகை என்பதால் புஷ்பமாலையின் நிஷேதம் சொல்லப்படுகிறது.

तथा च पद्धतौ – ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा नित्यमेव तु धारयेत्। श्राद्धकाले तु सम्प्राप्ते कर्ता भोक्ता च वर्जयेत्॥ आयसं घण्टानादं च त्रिपुण्ड्रं च विशेषतः। पुष्पमालां च मुद्रां च निराशाः पितरो गताः॥ मृत्पात्रगतमर्घ्यं च मृत्तिकागन्धलेपनम्। आज्येन धूपं दृष्ट्वा च निराशाः पितरो गताः॥ रुद्राक्षधारिणं श्राद्धे भोजयित्वा तथा द्विजम्। पितृलोकमवाप्नोति नात्र कार्या विचारणा॥ त्रिपुण्ड्रेण च संयुक्तो यः श्राद्धं कुरुते द्विजः। राक्षसास्तद्विलुम्पन्तीत्याह वैवस्वतो मनुः॥ त्रिपुण्ड्रं वर्तुलाकारमूर्ध्वपुण्ड्रं च धारयन्। श्राद्धं कुर्वन् स पापी स्याद्रौरवं नरकं व्रजेत्॥ विप्रान्निमन्त्रयित्वा तु त्रिपुण्ड्रं यस्तु धारयेत्। स कर्ता नरके घोरे पितृभिः सह मज्जति॥ त्रिपुण्ड्रं चैव सर्वेषामग्निहोत्रसमो विधिः। श्राद्धकाले तु सम्प्राप्ते कर्ता भोक्ता च तत्त्यजेत् इति॥

அவ்விதமே, பத்ததியில்:- ஊர்த்வ புண்ட்ரத்தை யாவது, த்ரிபுண்ட்ரத்தையாவது நித்யமும் தரிக்க வேண்டும். ச்ராத்தகாலம் வந்ததாகில் கர்த்தாவும், போக்தாவும் தவிர்க்க வேண்டும். இரும்புப் பாத்ரத்தையும், மணியின் ஓசையையும், த்ரிபுண்ட்ரத்தையும், புஷ்ப மாலையையும், முத்ரையையும்

நிர்மலமான ஜலத்தில் ஸ்நானம் செய்து, நித்யகர்மங்களைச் செய்து, ச்ராத்தம் செய்வதற்கு, ம்ருத்திகையால் வெண்ணிறமான ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்க வேண்டும். **பாத்மத்தில்:-** எந்த ப்ராம்ஹணன் ஊர்த்வபுண்ட்ரம் தரிக்காத ப்ராம்ஹணனை ச்ராத்தத்தில் புஜிப்பிக்கின்றானோ, அவனது பித்ருக்கள் மலமூத்ரங்களைப் புஜிக்கின்றனர். இதில் ஸம்சயமில்லை. எந்த ப்ராம்ஹணன் ஊர்த்வபுண்டரத்தைத் தரிக்காமல் ச்ராத்தத்தைச் செய்கின்றானோ அவனது ச்ராத்தம் முழுவதும் ராக்ஷஸர்களால் அபஹரிக்கப்பட்டதாகும். கர்த்தாவும் நரகத்தை அடைவான்.

त्रिपुण्ड्रधारणमाह लोकाक्षिः – त्रिपुण्ड्रधृग्विप्रवरः यो रुद्राक्षधरः शुचिः । स पङ्क्तिपावनः श्राद्धे पूज्यो विप्रैः सुरैरपि । श्राद्धे यज्ञे जपे होमे वैश्वदेवे सुरार्चने । धृतत्रिपुण्ड्रः पूतात्मा मृत्युं जयति मानवः ।। त्रिपुण्ड्रं यद्यधृत्वा तु कुर्याद्यत् कर्म तद्वृथा इति ।।

த்ரிபுண்ட்ரதாரணத்தைச் சொல்லுகிறார். **லோகாக்ஷி:-** எந்த ப்ராம்ஹணன் த்ரிபுண்ட்ரம், ருத்ராக்ஷம் இவைகளைத் தரித்தவனாயுள்ளவனோ அவன் ச்ராத்தத்தில் பங்க்தியைச் சுத்தம் செய்பவனாயும், ப்ராம்ஹணர்களாலும், தேவர்களாலும் பூஜிக்கத் தகுந்தவனாயும் ஆகிறான். ச்ராத்தம், யாகம், ஜபம், ஹோமம், வைச்வதேவம், தேவபூஜை இவைகளில் த்ரிபுண்ட்ரம் தரித்த மனிதன் சுத்தாத்மாவாய் ம்ருத்யுவை ஜயிக்கின்றான். த்ரிபுண்ட்ரத்தைத் தரிக்காமல் எந்தக் கர்மத்தையாவது செய்வானாகில் அக்கர்மம் வீணாகும்.

तिर्यक्पुण्ड्रनिषेधो हेमाद्रौ स्मर्यते – तिर्यक्पुण्ड्रं तथा दृष्ट्वा स्कन्धे मालां तथैव च । निराशाः पितरो यान्ति दृष्ट्वा च वृषलीपतिम् इति ।। वसिष्ठः – कांस्यपात्रे हविर्द्रव्यं कण्ठे चैव तु मालिकाम् । ललाटे तिलकं दृष्ट्वा निराशाः पितरो गताः इति ।। तिलकं - वर्तुलम् ।। मालिकामिति पुष्पमालानिषेधः ।।

'தேவதைகளுக்கு உத்கர்ஷத்தையும் அபகர்ஷத்தையும் சொல்லுகின்றனவும், புண்ட்ரங்களின் ஸ்துதியிலும் நிந்தையிலும் தாத்பர்யம் உள்ளவைகளுமாய், பரஸ்பரம் விரோதமுள்ள வெகு வசனங்கள் இதிஹாஸ புராணங்களில் காணப்படுகின்றன. ஆகையால், பரஸ்பரம் விரோதமுள்ள விஷயங்களைச் சொல்லுகின்றனதானதால், இதிஹாஸ புராணங்கள் ப்ராமாணங்களல்ல' எனில், இது தோஷமாகலாம், பேதத்தைச் சொல்லுகின்றவரும், சிவனினின்றும் வேறு விஷ்ணு, விஷ்ணுவினின்றும் வேறு சிவன் என்று அறியும் சைவருக்கும் வைஷ்ணவருக்கும். அபேதத்தைச் சொல்லுகின்ற ஸித்தாந்திகளுக்கோ வெனில், இது தோஷமாகாது, ஈச்வரன் ஒருவன் என்று ஒப்புதலால்.

तथा हि — एक एवेश्वरो जगत्सृष्ट्यादिकरणाय मायया ब्रह्मविष्णुरुद्रेन्द्रादिविग्रहान् स्वीकृत्य तत्तद्विग्रहे भक्तान् तेन तेन रूपेणानुगृह्णन् वर्तते । अष्टादशपुराणानां कर्ता व्यासोऽपि तत्तद्विग्रहभक्तानां तत्र तत्र भक्त्यतिशयोत्पादनाय तत्तद्रूपं स्तौति । अयमेव सर्वज्ञः सर्वेश्वरः सर्वात्मा नान्ये । अतोऽयमेक एव सेव्य इति ।। सा तु निन्दा तेषां न निन्दापरा भवति । किन्तु प्रकृतविग्रहस्तुतिपरा । यथा अनुदितहोमनिन्दा उदितहोमस्तुतिपरा । न हि निन्दा निन्द्यान्निन्दितुमपि तु स्तुत्यान् स्तोतुम् इति न्यायात् । अन्यथा प्रकृत विग्रहस्य स्तुत्यस्य वचनान्तरेण निन्दितत्वेन तेन वचनान्तरेणास्य विरोधात् । तस्माद्रूपान्तरनिन्दया एकैकं रूपं स्तुवन् तद्द्वारा स्वरूपमेकमेव सर्वेश्वरं दर्शयति । तस्य च स्वरूपस्यैकत्वात् सर्वेषामितिहासपुराणानां तत्रैव पर्यवसानात् एकार्थत्वेनाविरोधात् पुराणानामद्वैतपरत्वे वेदान्तानुसारित्वेन च तन्मूलत्वात् प्रामाण्यम् ।

அவ்விதமே ஈச்வரன் ஒருவனே, உலகத்தின் ஸ்ருஷ்டி முதலியதைச் செய்வதற்காக, மாயையால் ப்ரம்ஹா,

விஷ்ணு, ருத்ரன், இந்த்ரன் முதலிய மூர்த்திகளை ஸ்வீகரித்து, அந்தந்த மூர்த்தியில் பக்தியுடையவரை, அந்தந்த ரூபத்துடன் அனுக்ரஹிப்பவராய் இருக்கின்றார். பதினெட்டுப் புராணங்களை இயற்றிய வ்யாஸரும், அந்தந்த மூர்த்தியில் பக்தியுடையவருக்கு அததில் பக்தியை அதிகப்படுத்துவதற்காக அந்தந்த ரூபத்தை ஸ்துதிக்கின்றார், 'இவனே ஸர்வக்ஞன், ஸர்வேச்வரன், ஸர்வாத்மா, மற்றவரல்ல, ஆகையால் இவனொருவனே ஸேவிக்கத் தகுந்தவன்' என்று. அந்த நிந்தை, அவர்களை நிந்திப்பதில் தாத்பர்யமுளதல்ல. ஆனால், ப்ரக்ருதமான மூர்த்தியை ஸ்துதிப்பதில் தாத்பர்யமுள்ளது. எவ்விதம், அனுதிதஹோமத்தின் நிந்தை, உதிதஹோமத்தை ஸ்துதிப்பதில் தாத்பர்யமுள்ளதோ அவ்விதம், 'நிந்தாவசனமானது நிந்த்யர்களை நிந்திப்பதற்கல்ல, ஆனால், புகழவேண்டியவரைப் புகழ்வதற்கு, என்ற ந்யாயத்தால். இவ்விதம் இல்லாவிடில், ப்ரக்ருதமாய் ஸ்துதிக்க வேண்டிய விக்ரஹத்தை வேறுவசனம் நிந்தித்திருப்பதால், அந்த வசனத்தால், ப்ருக்ருதவசனத்திற்கு விரோதமாகும். ஆகையால், வேறு ரூபத்தை நிந்திப்பதால் ஒவ்வொரு ரூபத்தை ஸ்துதிப்பவராய், அந்த வழியாய் தேவதையின் ஸ்வரூபம் ஒரே ஈச்வரன் எனத் தெரிவிக்கின்றார். அந்தஸ்வரூபம் ஒன்றே ஆனதால் இதிஹாஸ புராணங்கள் எல்லாவற்றுக்கும் அதிலேயே முடிவானதால், ஒரே அர்த்தம் உடையவைகளாவதால் விரோதம் இல்லாததால் புராணங்களுக்கு அத்வைத விஷயத்வம் இருப்பதாலும், வேதாந்தங்களை அனுஸரிப்பதாலும் அவைகளை மூலமாய் உடையவை ஆனதால் ப்ராமாண்யம் ஸித்திக்கினறது.

भेदवादिपक्षे तु परस्परविरुद्धार्थाभिधानात् पौरुषेयत्वेन मूलप्रमाणापेक्षायां तदनिरूपणादप्रामाण्यम्। तस्मादेकस्यैवेश्वरस्य सर्वदेवमयत्वात् देवतान्तरनिन्दा वर्जितैरेव ईश्वर आराध्यः शिवो विष्णुरन्यो वा देवः। पुण्ड्रमपि तत्तद्देवताप्रीतिकरं पुण्ड्रान्तरनिन्दा-वर्जितैरेव धार्यम्॥

பேதம் சொல்பவரின் பக்ஷத்தில், பரஸ்பரம் விரோதமுள்ள விஷயங்களைச் சொல்வதால் பௌருஷேயங்களென்றாக, மூலப்ரமாணத்தை அபேக்ஷிக்கும் போது அதை நிரூபிக்க முடியாததால் அப்ராமாண்யம் வருகின்றது. ஆகையால் ஒரே ஈச்வரன் ஸர்வதேவஸ்வ ரூபமாயிருப்பதால், வேறு தேவர்களை நிந்திக்காதவர்களாய் ஈச்வரனை ஆராதிக்க வேண்டும். சிவனையோ, விஷ்ணுவையோ, மற்றத் தேவனையோ. அந்தந்தத் தேவதைக்கு ப்ரீதியைச் செய்யும் புண்ட்ரத்தையும், மற்ற புண்ட்ரங்களை நிந்திக்காதவராய்த் தரிக்க வேண்டும்.

तथा च पाद्मे कौर्मे च विष्णुशङ्करादिवचनानि – मद्भक्तः शङ्करद्वेषी मद्द्वेषी शङ्करप्रियः । तावुभौ नरकं यातो यावदाभूतसंप्लवम् ॥ परात् परतरं यान्ति नारायणपरायणाः । न ते तत्र गमिष्यन्ति ये द्विषन्ति महेश्वरम् ॥ अयं नारायणो योऽहमीश्वरो नात्र संशयः । नान्तरं ये प्रपश्यन्ति तेषां देयमिदं परम् ॥ ममैव परमा मूर्तिर्नारायण समाह्वया । ये त्वन्यथा प्रपश्यन्ति लोके भेददृशो जनाः । न ते मां संप्रपश्यन्ति जायन्ते च पुनः पुनः ॥ ये त्विमं विष्णुमव्यक्तं वामदेवं महेश्वरम् । एकीभावेन पश्यन्ति न तेषां पुनरुद्भवः ॥ तस्मादनादिनिधनं विष्णुमात्मानमव्ययम् । मामेव संप्रपश्यध्वं पूजयध्वं तथैव च ॥ येऽन्यथा मां प्रपश्यन्ति मत्वेमं देवतान्तरम् । ते यान्ति नरकान् घोरान्नाहं तेषु व्यवस्थितः ॥ मूर्खं वा पण्डितं वाऽपि ब्राह्मणं वा मदाश्रयम् । मोचयामि श्वपाकं वा न नारायणनिन्दकम् ॥ तस्मादेष महायोगी मद्भक्तैः पुरुषोत्तमः ॥ अर्चनीयो नमस्कार्यो मत्प्रीतिजननाय हि ॥ अहन्तामात्रशरणाः केचि द्वैदिकमानिनः ॥ भेददृष्ट्या विनिन्दन्ति युगशक्तिकृतं तु तत् इति ॥

அவ்விதமே, பாத்மத்திலும், கௌர்மத்திலும்:- விஷ்ணு சங்கரர் முதலியவரின் வசனங்கள் - சிவனை

த்வேஷிப்பவனுய் என்னிடம் பக்தியுள்ளவன் எவனே, என்னை த்வேஷிப்பவனுய் சிவனிடத்தில் பக்தியுள்ளவன் எவனே, அவ்விருவரும், ப்ரளயகாலம் வரையில் நரகத்தை அடைகின்றனர். நாராயணனைச் சரணமடைந்தவர் மிகச்சிறந்த பதத்தை அடைகின்றனர். ஆனுல், அவர்களுள் எவர் ஈச்வரனை த்வேஷிக்கின்றனரோ அவர்கள் அந்தப் பதத்தை அடைவதில்லை. இந்த நாராயணன், ஈச்வரனெனும் நானே ஆகிருன். இதில் ஸம்சயமில்லை. எவர்கள் பேதத்தைப் பாராமல் இருக்கின்றனரோ அவருக்கே இதைக் கொடுக்க வேண்டும். என்னுடைய மூர்த்தியை நாராயணனென்று பெயருடையதும், ஸர்வபூதங்களுக்கும் ஆத்மாவாய் இருப்பதும், சாந்தமாயும், அக்ஷரமென்று பெயருடையதுமாய் உள்ளது. உலகத்தில் பேத த்ருஷ்டியுள்ள எந்த ஜனங்கள் வேறுவிதமாய் அறிகின்ருர்களோ அவர்கள் என்னை நன்கு அறியவில்லை. ஆகையால் அவர்கள் அடிக்கடி பிறப்பை அடைகின்றனர். எவர்கள் இந்த வ்யக்தரான விஷ்ணுவையும், வாமதேவனுன மஹேச்வரனையும் ஒருவனென்ற பாவத்தால் பார்க்கின்றனரோ அவர்கட்கு மறுபடி பிறப்பில்லை. ஆகையால், ஆதி அந்தமற்றவனும், ஆத்மாவும், அவ்யயனுமான விஷ்ணுவை நானென்றே பாருங்கள், அவ்விதமே பூஜியுங்கள். எவர்கள் வேறுவிதமாய், விஷ்ணுவை வேறு தேவதையென்று நினைத்து என்னை உபாஸிக்கின்றனரோ, அவர்கள் கோரமான நரகங்களை அடைகின்றனர். நான் அவர்களிடம் இருப்பதில்லை. என்னை அண்டியவன், மூர்க்கனுனுலும், பண்டிதனுனுலும், ப்ராம்ஹணனுனுலும், ச்வபாக னுனுலும் அவனை விடுவிப்பேன். அவன் நாராயணனை நிந்திப்பவனுகில், அவனை விடுவிப்பதில்லை. ஆகையால், என்னுடைய பக்தர்கள், எனக்கு ப்ரீதியை உண்டு பண்ணுவதற்காக, மஹாயோகியாகிய இந்தப் புருஷோத்தமனை அர்ச்சிக்க வேண்டும், நமஸ்கரிக்க வேண்டும். அஹங்காரத்தை மட்டில் அடைந்தவரும்,

வைதிகனென்று தன்னை நினைத்தவருமான சிலர். பேதக்ஞானத்தால் நிந்திக்கின்றனர், அது (கலி) யுகத்தின் சக்தியால் செய்யப்பட்டதேயாம்.

तथा च कूर्मपुराणे — विनिन्दन्ति महादेवं ब्रह्माणं पुरुषोत्तमम्। आम्नायं धर्मशास्त्राणि पुराणानि कलौ युगे॥ कुर्वन्ति चावताराणि ब्राह्मणानां कुलेषु वै। दधीचशापनिर्दग्धाः पुरा दक्षाध्वरे द्विजाः॥ निन्दन्ति च महादेवं तमसाऽऽविष्टचेतसः। ये चान्ये शापनिर्दग्धाः गौतमस्य महात्मनः। सर्वे तेऽवतरिष्यन्ति ब्राह्मणाद्यासयोनिषु। विनिन्दन्ति हृषीकेशं ब्राह्मणान् ब्रह्मवादिनः इति॥

அவ்விதமே, கூர்ம புராணத்தில்:- கலியுகத்தில், சிவனையும், ப்ரம்ஹாவையும், விஷ்ணுவையும், வேதத்தையும், தர்மசாஸ்த்ரங்களையும் நிந்திக்கின்றனர். முற்காலத்தில் தக்ஷனின் யாகத்தில் ததீசி மஹர்ஷியின் சாபத்தால் தஹிக்கப்பட்ட ப்ராம்ஹணர்கள் ப்ராம்ஹணர்களின் குலங்களில் பிறக்கின்றனர். அவர்கள் தமோகுணத்தால் ஆக்ரமிக்கப்பட்ட சித்தம் உடையவர்களாய் சிவனை நிந்திக்கின்றனர். கௌதமரின் சாபத்தால் தஹிக்கப்பட்ட மற்றவர்கள் எவரோ அவர்களும் ப்ராம்ஹணர் முதலிய பிறவிகளில் பிறக்கப் போகின்றனர். அவர்கள், விஷ்ணுவையும், ப்ரம்ஹவாதிகளான ப்ராம்ஹணர்களையும் நிந்திக்கப் போகிறார்கள் என்று.

—★—

## सन्ध्याविधिः।

अथ सन्ध्याविधिः तत्र दक्षः — अहोरात्रस्य यः सन्धिः सूर्यनक्षत्रवर्जितः। सा तु सन्ध्या समाख्याता मुनिभिस्तत्वदर्शिभिः इति॥ पितामहः – नक्षत्रज्योतिरारभ्य सूर्यस्योदयदर्शनात्। प्रातः सन्ध्येति तां प्राहुः श्रुतयो मुनिसत्तमाः इति॥

**ஸந்த்யாவிதி**

*இனி ஸந்த்யாவிதி சொல்லப்படுகிறது. அதில், **தக்ஷர்:-** பகலுக்கும் ராத்ரிக்கும் நடுவிலுள்ள காலம் ஸூர்யனும் நக்ஷத்திரமும் காணப்படாமல் இருப்பது எதுவோ, அது உண்மையறிந்த முனிவர்களால் ஸந்த்யை என்று சொல்லப்படுகிறது. **பிதாமஹர்:-** ஓ முனிச்ரேஷ்டர்களே! நக்ஷத்ரங்களின் ஒளி மறைவது முதல் ஸூர்யோதயம் வரையிலுள்ள காலமெதுவோ அதை, ப்ராதஸ்ஸந்த்யை என்று வேதங்கள் சொல்லுகின்றன.*

अत्र व्यवस्थामाह दक्षः – रात्रन्त्ययामनाडी द्वे सन्ध्यादिः काल उच्यते । दर्शनाद्रविरेखायाः तदन्तो मुनिभिः स्मृतः इति ॥ यद्यपि कालवाचकत्वेनात्र सन्ध्याशब्दः प्रतीयते, तथाऽपि तस्मिन्काले उपास्या देवता सन्ध्याशब्देनोपलक्ष्यते । अत एव योगयाज्ञवल्क्यः – सन्धौ सन्ध्यामुपासीत नास्तगे नोद्गते रवौ । ब्रह्मणोपास्यते सन्ध्या विष्णुना शङ्करेण च ॥ कस्मान्नोपासयेद्देवीं श्रेयस्कामो द्विजोत्तमः इति ॥ शङ्खः – प्रातः सन्ध्यां सनक्षत्रां मध्यमां स्नानकर्मणि । सादित्यां पश्चिमां सन्ध्यां उपासीत यथाविधीति । स्नानकर्मणि - मध्याह्नस्नानानन्तरमित्यर्थः ।

*இங்கு வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், **தக்ஷர்:-** ராத்ரியின் கடைசி யாமத்தில் இரண்டு நாழிகைகள். ஸந்த்யையின் ஆரம்பகாலம் என்று சொல்லப்படுகிறது. ஸூர்ய பிம்பத்தின் மேல்ரேகையைக் கண்டால் ஸந்த்யையின் முடிவு, என்று முனிகளால் சொல்லப்பட்டுள்ளது. இங்கு, ஸந்த்யா சப்தம் காலவாசகமாய்த் தோன்றுகிறது தான். ஆயினும், அந்தக்காலத்தில் உபாஸிக்கத் தகுந்த தேவதை ஸந்த்யா சப்தத்தினல் சொல்லப்படுகிறது. ஆகையால் தான். **யோகயாக்ஞவல்க்யர்:-** ஸந்தியில் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். ஸூர்யன் அஸ்தமயத்தை அடைந்த*

பிறகு உபாஸிக்கக் கூடாது. உதயமாகிய பிறகும் உபாஸிக்கக் கூடாது. ப்ரம்ஹா, விஷ்ணு, சங்கரன் இவர்களும் ஸந்த்யையை உபாஸிக்கின்றனர். நன்மையை விரும்பும் ப்ராம்ஹணன் ஸந்த்யையை ஏன் உபாசிக்காமல் இருப்பான்? **சங்கர்:-** ப்ராதஸ்ஸந்த்யையை நக்ஷத்ரங்களுடன் கூடியதாயும், மத்யாஹ்ன ஸந்த்யையை மத்யாஹ்ன ஸ்நானத்திற்குப் பிறகும், ஸாயம் ஸந்த்யையை ஸூர்யன் இருக்கும் போதும் விதிப்படி உபாஸிக்கவும்.

संवर्तोऽपि-प्रातः सन्ध्यां सनक्षत्रामुपासीत यथाविधि। सादित्यां पश्चिमां सन्ध्या मर्धास्तमितभास्कराम् इति ।। काश्यपः – ब्रह्मणो हृदयं विष्णुर्विष्णोश्च हृदयं शिवः । शिवस्य हृदयं सन्ध्या तेनोपास्या द्विजोत्तमैः इति ।। व्यासोऽपि – उपासते तु यां सन्धौ निशाया दिवसस्य च। तामेव सन्ध्यां तस्मात्तु प्रवदन्ति मनीषिणः ।। अनागतां तु ये पूर्वामनतीतां तु पश्चिमाम्। सन्ध्यां नोपासते विप्राः कथं ते ब्राह्मणाः स्मृताः ।। योऽन्यत्र कुरुते यत्नं धर्मकार्येऽपि वै द्विजः । विहाय सन्ध्याप्रणतिं स याति नरकायुतम् ।। अतिक्रामति यो मोहात् सन्ध्यामन्यपरायणः । स साधुभिर्बहिष्कार्यः सर्वस्माद्विजकर्मणः ।। उत्तमा तु सनक्षत्रा मध्यमा लुप्ततारका । अधमा सूर्यसहिता प्रातः सन्ध्या त्रिधा मता' इति ।। सूर्य सहितेति गौणकालाभिप्रायेण।

**ஸம்வர்த்தரும்:-** ப்ராதஸ் ஸந்த்யையை நக்ஷத்ரங்களுடன் கூடியதாய் விதிப்படி உபாஸிக்க வேண்டும். ஸாயம் ஸந்த்யையை ஸூர்யனுடன் கூடியதாய் ஸூர்யன் பாதி மறைந்திருக்கும் பொழுது உபாஸிக்க வேண்டும். **காச்யபர்:-** ப்ரம்ஹாவின் ஹ்ருதயம் விஷ்ணு. விஷ்ணுவின் ஹ்ருதயம் சிவன், சிவனின் ஹ்ருதயம் ஸந்த்யை. ஆகையால் ப்ராம்ஹணர்கள் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். **வ்யாஸரும்:-** ராத்ரி, பகல் இவைகளில் ஸந்தியில் உபாஸிக்கப்படுகிற

தேவதையை, புத்திமான்கள் ஸந்த்யை என்று சொல்லுகிறார்கள். ப்ராம்ஹணர்கள், உதயத்திற்கு முன் ப்ராதஸ் ஸந்த்யையையும், அஸ்தமயத்திற்கு முன் ஸாயம் ஸந்த்யையையும் உபாஸிக்காதவர் ப்ராம்ஹணர்கள் என்று சொல்லத் தகுதியற்றவர். ஸந்த்யாவந்தனத்தை விட்டு வேறு தர்மகார்யத்தில் முயன்றிருப்பவன், பதினாயிரம் நரகங்களை அடைவான். அறியாமையால், வேறுகர்மத்தில் ஈடுபட்டவனாய் ஸந்த்யையை அதிக்ரமிப்பவனை ஸாதுக்கள் ப்ராம்ஹண கர்மங்கள் எல்லாவற்றினின்றும் வெளியேற்ற வேண்டும். ப்ராதஸ் ஸந்த்யை நக்ஷத்ரங்களுடன் கூடியிருப்பதால் உயர்ந்தது. நக்ஷத்ரங்கள் மறைந்தால் மத்யமம், ஸூர்யனுடன் கூடினால் அதமம், இவ்விதம் மூன்று விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது. ஸூர்யனுடன் கூடியதென்றது கௌண காலத்தின் அபிப்ராயத்தினால்.

स एव — यः सूर्यसहितां सन्ध्यां सदा कुर्वीत मोहतः । न तस्य विद्यते सन्ध्या सर्वकर्मबहिष्कृतः ॥ विधिनाऽपि कृता सन्ध्या कालातीताऽफला भवेत् । अयमेव हि दृष्टान्तो वन्ध्यास्त्रीमैथुनं यथा ॥ अकाले चेत् कृतं कर्म कालं प्राप्य पुनः क्रिया । कालातीतं तु य(:)त् कुर्यादकृतं तद्विनिर्दिशेत् ॥ अकाले = स्वकालात् पूर्वस्मिन्काले ॥ यः सन्ध्यां कालतः प्राप्तामालस्यादतिवर्तते । सूर्यहत्यामवाप्नोति उलूकत्वमियात्ततः ॥ सायं प्रातः सदा सन्ध्यां ये विप्रा नो उपासते । कामं तान् धार्मिको राजा शूद्रकर्मसु योजयेत् ॥ सन्ध्याहीनोऽशुचिर्नित्यमनर्हः सर्वकर्मसु । यदन्यत् कुरुते कर्म न तस्य फलभाग्भवेत् ॥ अनन्य चेतसः शान्ता ब्राह्मणा वेदपारगाः । उपास्य विधिवत्सन्ध्यां प्राप्ताः पूर्वे परां गतिम् ॥ या सन्ध्या सा जगत्सूतिः मायातीता तु निष्कला । ऐश्वरी केवला शक्तिः स(त)त्वत्रय-समुद्भवा ॥ तस्मात् सर्वप्रयत्नेन सन्ध्योपासनमाचरेत् । उपासितो भवेत्तेन दे(शि)वो योगतनुः परः इति ॥

வ்யாஸரே:- எப்பொழுதும், அறியாமையால், ப்ராதஸ் ஸந்த்யையை ஸூர்யோதயத்திற்குப் பிறகு செய்பவனுக்கு ஸந்த்யோபாஸன பலனில்லை. அவன் ஸர்வகர்மங்களின்றும் வெளியேற்றப்பட்டவனுவான். ஸந்த்யை விதியுடன் செய்யப்பட்டாலும், காலத்திற்குப் பிறகு செய்யப்பட்டால் நிஷ்பலமாகும். வந்த்ய(மலடு) ஸ்த்ரீயுடன் மைதுனம் போல், இதுவே த்ருஷ்டாந்தம். விஹிதமான காலத்திற்கு முன் கர்மம் செய்யப்பட்டால், முக்யகாலம் வந்த பிறகு, மறுபடி அந்தக் கர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும். முக்யகாலம் அதிக்ரமித்த பிறகு செய்யப்படும் கர்மத்தை, செய்யப்படாததென்று கருதவேண்டும். காலத்தில் ப்ராப்தமான ஸந்த்யையை சோம்பலால் அதிக்ரமிப்பவன் ஸூர்யஹத்யை செய்த தோஷத்தை அடைவான். பிறகு கோட்டாஞய் பிறப்பான். மாலையிலும், காலையிலும் ஸந்த்யையை உபாஸிக்காத ப்ராம்ஹணர்களை தாமிஷ்டனை அரசன் சூத்ரரின் கார்யங்களில் நியமிக்க வேண்டும். ஸந்த்யையை உபாஸிக்காதவன் எப்பொழுதும் அசுத்தன். ஸகல கர்மங்களிலும் யோக்யனல்ல. அவன் வேறு எந்தக் கர்மத்தைச் செய்தாலும், அதன் பலனை அடையமாட்டான். ஏகாக்ரமான மனதுடையவரும், சாந்தரும், வேதத்தை முற்றுமறிந்தவரும், முன்னேருமான ப்ராம்ஹணர்கள், முறைப்படி ஸந்த்யையை உபாஸித்துச் சிறந்த கதியை அடைந்தனர். ஸந்த்யை என்னும் தேவதை ஜகத்திற்குக் காரணமாகியது, மாயையை அதிக்ரமித்ததும், நிஷ்களமானதும், ஈச்வரனுடைய தனிப்பட்ட சக்தியும் மூன்று தத்வங்களுக்கும் காரணம் ஆகியதாம். ஆகையால் எவ்விதத்தாலும் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். உபாஸித்தவனுல் யோக சரீரரான பரமசிவனே உபாஸிக்கப்பட்டவராய் ஆகிருர்.

यमः – सन्ध्यामुपासते ये तु सततं संशितव्रताः । विधूतपापास्ते यान्ति ब्रह्मलोकं सनातनम् ।। यदह्ना कुरुते पापं कर्मणा मनसा गिरा ।

आसीनः पश्चिमां सन्ध्यां प्राणायामैस्तु हन्ति तत् ॥ यद्राध्या कुरुते पापं कर्मणा मनसा गिरा । पूर्वां सन्ध्यामुपासीनः प्राणायामैर्व्यपोहति इति ॥ मनुः – ऋषयो दीर्घसन्ध्यत्वाद्दीर्घमायुरवाप्नुयुः । प्रज्ञां यशश्च कीर्तिं च ब्रह्मवर्चसमेव च इति ॥ यागादिकर्मकृतं यशः ॥ त्यागादिकृता कीर्तिः ॥

**யமன்:-** *எப்பொழுதும் த்ருடமான நியமம் உடையவராய் ஸந்த்யையை உபாஸிப்பவர் பாபங்களற்றவராய் நித்யமான ப்ரம்ஹலோகத்தை அடைகின்றனர். மனிதன், பகலில் சரீரத்தாலும், மனதாலும், வாக்கினுலும் எந்தப் பாபத்தைச் செய்கின்ருனோ அதை மாலையில் ஸந்த்யையை, ப்ராணா யாமங்களுடன் உட்கார்ந்தவனாய் உபாஸித்துப் போக்குகின்ருன். ராத்ரியில், காயத்தாலும், மனதாலும், வாக்காலும் எந்தப் பாபத்தைச் செய்கின்ருனோ அதைக் காலையில் ஸந்த்யையை ப்ராணா யாமங்களுடன் (நின்று) உபாஸித்துப் போக்குகின்ருன்.* **மனு:-** *முனிகள், அவிச்சின்னமாய் ஸந்த்யையை உபாஸித்ததால், தீர்க்கமான ஆயுஸ்ஸையும், புத்தி, யசஸ், கீர்த்தி, ப்ரம்ஹ வர்ச்சஸ்த்தையும் அடைந்தனர். யாகாதி கர்மங்களால் உண்டாகியது யசஸ். த்யாகம் முதலியதால் உண்டாகியது கீர்த்தி.*

गोभिलः – सन्ध्या येन न विज्ञाता सन्ध्या येनानुपासिता । जीवन्नेव भवेच्छूद्रो मृतः श्वा चाभिजायते इति ॥ चन्द्रिकायाम् – उपास्य पश्चिमां सन्ध्यां सादित्यां वै यथाविधि । गायत्रीमभ्यसेत्तावद्यावदृक्षाणि पश्यति ॥ पूर्वां सन्ध्यां सनक्षत्रा मुपक्रम्य यथाविधि । गायत्रीमभ्यसेत्तावद्यावदादित्यदर्शनम् इति ॥

**கோபிலர்:-** *எவன் ஸந்த்யையை அறியவில்லையோ, ஸந்த்யையை எவன் உபாஸிக்கவில்லையோ அவன், ஜீவித்திருக்கும் போதே சூத்ரனுவான். இறந்த பிறகு*

நாயாயும் பிறப்பான். சந்த்ரிகையில்:- 'ஸாயம் ஸந்த்யையை ஸூர்யனுடன் கூடியதாய் விதிப்படி உபாஸித்து, நக்ஷத்ரங்களைப் பார்க்கும் வரையில் காயத்ரியை ஜபிக்க வேண்டும். ப்ராதஸ் ஸந்த்யையை நக்ஷத்ரங்களுடன் கூடியதாய் உபாஸித்து, ஸூர்யோதயம் வரையில் காயத்ரியை ஜபிக்க வேண்டும்.

छन्दोगश्रुतिरपि – ब्रह्मवादिनो वदन्ति कस्मात् ब्राह्मणः सायमासीनः सन्ध्यामुपास्ते कस्मात् प्रातस्तिष्ठन् का च सन्ध्या कश्च सन्ध्यायाःकालः, किञ्च सन्ध्यायाः सन्ध्यात्वं, देवाश्च वा असुराश्चास्पर्द्धन्त तेऽसुरा आदित्यमभिद्रवन्, स आदित्योऽबिभेत्, तस्य हृदयं कूर्मरूपेणातिष्ठत् स प्रजापतिमुपाधावत् तस्य प्रजापतिरेतत् भेषजमपश्यदृतं च सत्यं च ब्रह्म चोङ्कारं च त्रिपदां च गायत्रीं ब्रह्मणो मुखमपश्यत् तस्मात् ब्राह्मणोऽहोरात्रस्य संयोगे सन्ध्यामुपास्ते स ज्योतिष्याज्योतिषो दर्शनात् सोऽस्य कालः सा सन्ध्या तत्सन्ध्यायाः सन्ध्यात्वं यत्सायमासीनः सन्ध्यामुपास्ते तया वीरस्थानं जयत्यथ यदपः प्रयुंक्ते ता विप्रुषो वज्रीभूत्वाऽसुरानपघ्नन्ति इति ।।

சந்தோகச்ருதியும்:- 'ப்ரம்ஹவாதிநோ வதந்தி + நபக்னந்தி' என்று. இதன்பொருள், வேதவாதிகளான முன்னோர்கள் இவ்விதம் கேட்டுக் கொண்டனர். ப்ராம்ஹணன், ஏன் மாலையில் உட்கார்ந்தவனாய் ஸந்த்யையை உபாஸிக்கின்றான்? ஏன் காலையில் நின்றவனாய் உபாஸிக்கின்றன? எது ஸந்த்யை? எது ஸந்த்யையின் காலம்? எது ஸந்த்யையின் ஸந்த்யைத் தன்மை? என்று. இதற்கு விடை - தேவர்களும் அஸுரர்களும் பரஸ்பரம் போட்டியிட்டனர். அந்த அஸுரர்கள் யுத்தம் செய்வதற்கு ஸூர்யனை எதிர்த்துச் சென்றனர். ஸூர்யன் பயத்தை அடைந்தான். அவனது ஹ்ருதயம் ஆமை போல் இருந்தது. (தன்னைக் குறுக்கிக்

கொண்டது) அந்த ஸூர்யன் ப்ரம்ஹாவைச் சரணமடைந்தான். ப்ரம்ஹதேவன் ஸூர்யனுக்கு இதைப் பரிஹாரமாய்க் கண்டார். ருதம் (பொய் பேசாமை - நேர்மை), ஸத்யம் (உண்மை பேசுதல்), ப்ரம்ஹ (வேதம்), ஓங்காரம், மூன்று பாதங்களுடைய வேதத்திற்கு முகமாகிய காயத்ரீ இவைகளை. அவனுக்குக் கொடுத்தார். ஆகையால்தான் ப்ராம்ஹணன், பகல், ராத்ரி இவைகளின் ஸந்தியில் ஸந்த்யையை உபாஸிக்கின்றான். ஒரு ஒளி இருக்கும் காலத்தில் ஆரம்பித்து, மற்றொரு ஒளி காணப்படும் வரையில் (மாலையில் ஸூர்யன் ஒளி தெரியும் போது ஆரம்பித்து, நக்ஷத்ர ஒளி தெரியும் வரையில், மாலையில் நக்ஷத்ர ஒளி இருக்கும் போது ஆரம்பித்து ஸூர்யன் ஒளி தெரியும் வரையில்) அதுதான் ஸந்த்யாகாலம், அது ஸந்த்யை, அது ஸந்த்யையின் தன்மை. மாலையில் உட்கார்ந்து ஸந்த்யையை உபாஸிப்பதால், வீர ஸ்தானத்தை அடைகிறான். தவிர அர்க்யம் கொடுப்பதால் அந்தத் திவிலைகள் வஜ்ராயுதமாகப் பரிணமித்து அஸுரர்களை ஹிம்ஸிக்கின்றன, என்று.

तैत्तिरीयकेऽपि — रक्षाꣳसि हवा पुरानुवाके तपोग्रमतिष्ठन्ते तान् प्रजापतिर्वरेणोपामन्त्रयत तानि वरमवृणीतादित्यो नो योद्धा इति तान् प्रजापतिरब्रवीद्योधयध्वमिति तस्मादुत्तिष्ठन्तꣳ हवा तानि रक्षाꣳस्यादित्यं योधयन्ति यावदस्तमन्वगात्तानि भवा एतानि रक्षाꣳसि गायत्रियाऽभिमन्त्रितेनाम्भसा शाम्यन्ति तदुहवा एते ब्रह्मवादिनः पूर्वाभिमुखाः सन्ध्यायां गायत्रियाऽभिमन्त्रिता आप ऊर्ध्वं विक्षिपन्ति ता एता आपो वज्रीभूत्वा तानि रक्षाꣳसि मन्देहारुणे द्वीपे प्रक्षिपन्ति यत्प्रदक्षिणं प्रक्रमन्ति तेन पाप्मानमवधून्वन्ति इति ॥

**தைத்திரீயகத்திலும்:**- 'ரக்ஷாம்ஸி + யஏவம்வேத' என்று. இதன் பொருள் - முற்காலத்தில் ராக்ஷஸர்கள் தீவ்ரமான தபஸ்ஸைச் செய்தனர். அந்தத் தபஸ்ஸினால் ஸந்தோஷமுற்ற ப்ரம்ஹதேவன் 'இஷ்டமான வரனைப்

பெற்றுக் கொள்ளுங்கள்' என்றார். அந்த ராக்ஷஸர்கள் 'எங்களுடன் ஸூர்யன் யுத்தம் செய்பவனாய் ஆக வேண்டும்' என்று வரனை வேண்டினர். அவர்களை நோக்கி ப்ரம்ஹதேவன் 'அவ்விதமே ஸூர்யனோடு யுத்தம் செய்யுங்கள்' என்று உத்தரவு கொடுத்தார். அதனால் ராக்ஷஸர்கள், உதயகாலம் முதல் அஸ்தமய காலம் வரையில் ஸூர்யனோடு யுத்தம் செய்கின்றனர். அந்த ராக்ஷஸர்கள் காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தால் தணிவை அடைகின்றனர். அக்காரணத்தாலேயே வேதத்தைச் சொல்பவரான இந்த ப்ராம்ஹணர்கள் ப்ராதஸ் ஸந்த்யா காலத்தில் கிழக்கு நோக்கியவராய் இருந்து, காயத்ரியால் அபிமந்த்ரிதமான ஜலத்தை உயரமாய் விடுகின்றனர். அந்த ஜலமானது காயத்ரியின் ஸாமர்த்யத்தால் வஜ்ரத்தின் ரூபத்தை அடைந்து, அந்த ராக்ஷஸர்களை, மந்தேஹர்கள் என்னும் ராக்ஷஸர்களுக்குச் சொந்தமான அருணம் என்னும் த்வீபத்தில் தள்ளுகின்றது. அந்த ப்ரம்ஹவாதிகள் ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றுவதால் பாபத்தை உதறுகின்றனர். இந்த ஆதித்யன் ப்ரம்ஹம் என்று சாஸ்த்ரத்தால் அறிந்த ப்ராம்ஹணன் உதய காலத்திலும், அஸ்தமய காலத்திலும் ஸூர்யனை அவ்விதமே த்யானித்து, ப்ரதக்ஷிணம் செய்கின்றான். அவன் ஸகலமான நன்மையையும் அடைவான். 'ஆதித்யன் ப்ரம்ஹம்' என்று அறிகின்ற அவன், முன்பு தான் அறியாதவனாயினும் உண்மையாய் ப்ரம்ஹமாகவே இருப்பவனாகையால், இந்த ஜ்ஞானத்தால் அக்ஞானம் விலகியபின் தனது அனுபவத்தாலும் ப்ரம்ஹத்தை அடைகின்றான், என்று.

अत्र हारीतः – आदित्येन सह प्रातर्मन्देहा नाम राक्षसाः । युध्यन्ति वरदानेन ब्रह्मणोऽव्यक्तजन्मनः ।। उदकाञ्जलिनिक्षेपा गायत्र्या चाभिमन्त्रिताः । निघ्नन्ति राक्षसान् सर्वान् मन्देहाख्यान् द्विजेरिताः ।। ततः प्रयाति सविता ब्राह्मणैरभिरक्षितः । मरीच्याद्यैर्महाभागैः सनकाद्यैश्च योगिभिः ।। तस्मान्न लङ्घयेत् सन्ध्यां

सायं प्रातः समाहितः ।। उल्लङ्घयति यो मोहात् स याति नरकं ध्रुवम् इति ।।

இங்கு, ஹாரீதர்:- மந்தேஹர்கள் என்ற ராக்ஷஸர்கள் ப்ரம்ஹாவின் வரதானத்தால், காலையில் ஸூர்யனுடன் யுத்தம் செய்கின்றனர். காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்டு, ப்ராம்ஹணர்களால் விடப்பட்ட அர்க்ய ஜலாஞ்ஜலிகள், மந்தேஹர்கள் என்ற அந்த ராக்ஷஸர்களை அகற்றுகின்றன. பிறகு ஸூர்யன், மஹாத்மாக்களான மரீசி முதலிய ப்ராம்ஹணர்களாலும், ஸனகர் முதலிய யோகிகளாலும் ரக்ஷிக்கப்பட்டவராய்ச் செல்லுகிறார். ஆகையால் கவனம் உடையவனாய், மாலையிலும் காலையிலும் ஸந்த்யையை அதிக்ரமிக்கக் கூடாது. அறியாமையால் அதிக்ரமிப்பவன் நிச்சயமாய் நரகத்தை அடைவான்.

योगयाज्ञवल्क्योऽपि – त्रिंशत्कोट्यस्तु विख्याता मन्देहा नाम राक्षसाः । प्राद्रवन्ति सहस्रांशु मुदयन्तं दिने दिने ।। अहन्यहनि ते सर्वे सूर्यमिच्छन्ति खादितुम् । अथ सूर्यस्य तेषां च युद्धमासीत् सुदारुणम् ।। ततो देवगणास्सर्वे ऋषयश्च तपोधनाः । सन्धौ सन्ध्यामुपासीना यत्क्षिपन्त्यन्वहं जलम् ।। ब्रह्मव्याहृतिसंयुक्तं गायत्र्या चाभिमन्त्रितम् । तेन दह्यन्ति ते दैत्या वज्रीभूतेन वारिणा ।। एतद्विदित्वा यः सन्ध्यामुपास्ते संशितव्रतः । दीर्घमायुः स विन्देत सर्वपापैः प्रमुच्यते ।। यस्तु तां केवलां सन्ध्या मुपासीत स पुण्यभाक् । तां परित्यज्य कर्माणि कुर्वन् प्राप्नोति किल्बिषम् ।। स हन्ति सूर्यं सन्ध्याया नोपास्तिं कुरुते तु यः ।। ये हिंसन्ति सदा सूर्यं मोक्षद्वारमनुत्तमम् । कथं मोक्षस्य सम्प्राप्तिर्भवेत्तेषां द्विजन्मनाम् ।। कामान्मोहाद्भयाल्लोभात् सन्ध्यां नातिक्रमेद्विजः । सन्ध्यातिक्रमणाद्विप्रो ब्राह्मण्यात् पतितो यतः इति ।।

யோகயாக்ஞவல்க்யரும்:- மந்தேஹர்கள் என ப்ரஸித்தர்களான முப்பது கோடி ராக்ஷஸர்கள்,

ப்ரதிதினமும் உதய காலத்தில் ஸூர்யனை விரட்டுகின்றனர். அவரெல்லோரும், ஒவ்வொரு நாளிலும் ஸூர்யனைக் கொல்ல விரும்புகின்றனர். ஸூர்யனுக்கும் அந்த ராக்ஷஸர்களுக்கும் மிகப் பயங்கரமான யுத்தமாகின்றது. பிறகு, ஸகல தேவர்களும், தபோதனரான முனிகளும், அஹோராத்ர ஸந்தியில் ஸந்த்யையை உபாஸிப்பவராய், ஓங்காரத்துடனும் வ்யாஹ்ருதிகளுடனும் கூடியதாயும், காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்டதுமான ஜலத்தை விடுகின்றனர் அந்த ஜலம் வஜ்ரமாய் மாறுவதால் அதனால் அந்த ராக்ஷஸர்கள் பொசுக்கப்படுகின்றனர். இதை அறிந்து த்ருடமான வ்ரதம் உடையவனாய் ஸந்த்யையை உபாஸிப்பவன் நீண்ட ஆயுளை அடைகிறான். ஸகல பாபங்களாலும் விடப்படுகிறான். எவன், அந்த ஸந்த்யை ஒன்றை மட்டில் உபாஸிக்கின்றானோ அவன் புண்யத்தை அடைவான். அந்த ஸந்த்யையை விட்டு, மற்றக் கர்மங்களைச் செய்பவன் பாபத்தை அடைகின்றான். ஸந்த்யோபாஸனம் செய்யாதவன் ஸூர்யனை வதைக்கின்றான். சிறந்த மோக்ஷத்தின் வழியாகிய ஸூர்யனை எப்பொழுதும் ஹிம்ஸிக்கிற ப்ராம்ஹணர்களுக்கு மோக்ஷப்ராப்தி எப்படி உண்டாகும்? காமம், மோஹம், பயம், லோபம் இவைகளுள் எக்காரணத்தாலும், ப்ராம்ஹணன் ஸந்த்யையை அதிக்ரமிக்கக் கூடாது. ஸந்த்யையை அதிக்ரமிப்பதால் ப்ராம்ஹணன் ப்ராம்ஹணத் தன்மையினின்றுமே நழுவியனாவான்.

सन्ध्यात्रयमाह अत्रिः – सन्ध्यात्रयं तु कर्तव्यं द्विजेनात्मविदा सदा इति ॥ अत्र सन्ध्याशब्देन सन्ध्योपासनरूपकर्मोपलक्ष्यते । अन्यथा देवतायाः कर्तव्यत्वायोगात् ॥ एतदभिप्रेत्य, पराशरः – सन्ध्या स्नानं जपोहोमो देवतानां च पूजनम् । आतिथ्यं वैश्वदेवं च षट्कर्माणि दिने दिने इति ॥

மூன்று ஸந்த்யைகளைச் சொல்லுகிறார், அத்ரி:-

ஆத்மாவை அறிந்த ப்ராம்ஹணன் எப்பொழுதும் மூன்று ஸந்த்யைகளையும் செய்ய வேண்டும். இங்கு 'ஸந்த்யா' என்ற சப்தத்தால் ஸந்த்யோபாஸன ரூபமான கர்மம் சொல்லப்படுகிறது. தேவதையைச் செய்வதென்பது பொருந்தாது. இவ்வபிப்ராயத்தைக் கொண்டே, பராசரர்:- ஸந்த்யா ஸ்நானம், ஜபம், ஹோமம், தேவ பூஜை, அதிதிபூஜை, வைச்வதேவம் என ஆறு கர்மங்கள் ப்ரதிதினமும் செய்யத் தகுந்தவை.

अत्र कालभेदेन देवताया नामादिभेदमाह व्यासः – गायत्री नाम पूर्वाह्णे सावित्री मध्यमे दिने । सरस्वती च सायाह्ने सैव सन्ध्या त्रिषु स्मृता ॥ प्रतिग्रहादन्नदोषात् पातकादुपपातकात् । गायत्री प्रोच्यते तस्मात् गायन्तं त्रायते यतः ॥ सवितुर्द्योतनाच्चैव सावित्री परिकीर्तिता । जगतः प्रसवित्री वा वाग्रूपत्वात् सरस्वती ॥ गायत्री तु भवेद्रक्ता सावित्री शुक्लवर्णिका । सरस्वती तथा कृष्णरूपा स्याद्वर्णभेदतः ॥ गायत्री ब्रह्मरूपा तु सावित्री रुद्ररूपिणी ॥ सरस्वती विष्णुरूपा उपास्या रूपभेदतः ॥ उदये ब्रह्मरूपं तु मध्याह्ने तु महेश्वरम् । सायाह्ने विष्णुरूपं तु त्रिरूपं वै दिवाकरम् ॥ अनुसन्ध्यमुपासीत सन्ध्यारूपं रविं द्विजः इति ॥

இங்கு, கால பேதத்தால், தேவதையின் பெயர் முதலியதின் பேதத்தைச் சொல்லுகிறார், வ்யாஸர்:- காலையில் காயத்ரீ என்றும், மத்யாஹ்னத்தில் ஸாவித்ரீ என்றும், மாலையில் ஸரஸ்வதீ என்றும், ஸந்த்யைக்கு மூன்று காலத்திலும் மூன்று பெயர்கள். ப்ரதிக்ரஹ தோஷத்தினின்றும், அன்ன தோஷத்தினின்றும், பாதகத்தினின்றும், உபபாதகத்தினின்றும், தன்னை கானம் செய்பவனை (உச்சரிப்பவனை) த்ராணம் செய்வதால் (காப்பதால்) காயத்ரீ எனச் சொல்லப்படுகிறாள். ஸவிதாவை (ஸூர்யனை) ப்ரகாசப்படுத்துவதால் ஸாவித்ரீ எனப்படுகிறாள். அல்லது உலகத்தை உண்டுபண்டுவதால்

ஸாவித்ரீ எனப்படுகிறாள். வாக்ரூபமாய் இருப்பதால் ஸரஸ்வதீ எனப்படுகிறாள். காயத்ரீ சிவப்பு நிறமுள்ளவள். ஸாவித்ரீ வெண்ணிறம் உள்ளவள். ஸரஸ்வதீ கறுப்பு நிறமுள்ளவள். காயத்ரீ ப்ரஹ்மரூபிணீ ஸாவித்ரீ ருத்ரரூபிணீ ஸரஸ்வதி விஷ்ணு ரூபிணீ என்றும் உபாஸிக்க வேண்டும். உதயகாலத்தில் ப்ரம்ஹ ரூபனையும், மத்யாஹ்னத்தில் மகேச்வரனையும், ஸாயங்காலத்தில் விஷ்ணு ரூபனையும் ஸந்த்யா ரூபனை ஸூர்யனை ஒவ்வொரு ஸந்த்யையிலும் ப்ராம்ஹணன் உபாஸிக்க வேண்டும்.

याज्ञवल्क्यः – या सन्ध्या सा तु गायत्री त्रयीरूपा प्रतिष्ठिता। सन्ध्या ह्युपासिता येन विष्णुस्तेन ह्युपासितः इति ॥ उपासनं = अभिध्यानम् ॥ अत एव तैत्तिरीय ब्राह्मणम् – उद्यन्तमस्तं यन्त मादित्य मभिध्यायन् कुर्वन् ब्राह्मणो विद्वान् सकलं भद्रमश्नुतेऽसावादित्यो ब्रह्मेति ब्रह्मैव सन् ब्रह्माप्येति य एवं वेद इति ॥ अयमर्थः – कुर्वन् - प्राणायामं कुर्वन् यथोक्त नामवर्णरूपभेदतः सन्ध्याऽभिन्नमादित्यं ब्रह्मत्वेन ध्यायन्, ऐहिकमामुष्मिकं च सकलं भद्रमश्नुते। य एवमुक्तध्यानेन शुद्धान्तः - करणो वेद - ब्रह्म साक्षात्कुरुते, स पूर्वमपि ब्रह्मैव सन् अज्ञानाज्जीवभावं प्राप्तः, यथोक्तज्ञानेन तदज्ञानापगमे ब्रह्मैव प्राप्नोति इति ॥

யாக்ஞவல்க்யர்:- ஸந்த்யை என்பவளே காயத்ரீ, மூன்று வேதரூபமாயும் நிலைபெற்றவள். ஸந்த்யையையை உபாஸிப்பவன் விஷ்ணுவை (தியானிக்கிறான்) உபாஸிக்கிறான். தைத்திரீய ப்ராம்ஹணம் ''உத்யந்தமஸ்தம் + ஏவம்வேத'' என்கிறது. இதற்கு இது பொருளாம் - ''குர்வன் = ப்ராணயாமத்தைச் செய்பவனாய், முன் சொல்லிய படி நாம வர்ண ரூப பேதங்களுடன் ஸந்த்யா சப்தத்தால் சொல்லப்படும் இந்த ஆதித்யன்

ப்ரம்ஹ சப்தவாச்யன் என்று, ஸந்த்யையுடன் பேதமில்லாத ஆதித்யனை ப்ரம்ஹபாவத்துடன் த்யானிப்பவன், இவ்வுலகிலுள்ளதும், பரலோகத்திலுள்ளதுமான ஸகல மங்களத்தையும் அடைகிறான். இவ்விதம் சொல்லப்பட்ட த்யானத்தினால் சுத்தமான மனதுடையவனாய், வேத = ப்ரம்ஹத்தை ஸாக்ஷாத்கரிக்கின்றவன், அவன் முன்பும் ப்ரஹ்மமாகவே இருந்தும், அக்ஞானத்தால் ஜீவத்தன்மையை அடைந்தவனாதால், முன் சொல்லிய க்ஞானத்தால் அந்த அக்ஞானம் விலகியவுடன் ப்ரம்ஹத்தையே அடைகிறான்'' என்று.

अत एव व्यासः – प्राक्कूलेषु तत : स्थित्वा दर्भेषु सुसमाहितः । प्राणायामत्रयं कृत्वा ध्यायेत् सन्ध्यामिति श्रुतिः ।। न भिन्नां प्रतिपद्येत गायत्रीं ब्रह्मणा सह । साऽहमस्मीत्युपासीत विधिनाऽनेन वै द्विजः इति ।। ध्यानदेशोऽपि चन्द्रिकायां दर्शितः – गायत्रीं चिन्तयेद्यस्तु हृत्पद्मे समुपस्थिताम् । धर्माधर्मविनिर्मुक्तः स याति परमां गतिम् इति ।।

**வ்யாஸர்:-** பிறகு, கிழக்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில் நின்று, மிக்க கவனம் உடையவனாய், மூன்று ப்ராணா யாமங்களைச் செய்து, ஸந்த்யையை த்யானிக்க வேண்டும் என்கிறது வேதம். காயத்ரியை ப்ரம்ஹத்தோடு வேறுபட்டதாய் த்யானிக்கக் கூடாது. 'நான் அந்த காயத்ரியாகவே இருக்கிறேன்' என்று இந்த விதியுடன் ப்ராம்ஹணன் உபாஸிக்க வேண்டும். த்யான தேசமும் சொல்லப்பட்டுள்ளது **சந்த்ரிகையில்:-** காயத்ரியை ஹ்ருதய கமலத்தில் இருப்பவளாய் த்யானிப்பவன், புண்ய பாபங்களால் விடப்பட்டவனாய், சிறந்த கதியை (மோக்ஷத்தை) அடைகிறான்.

एवञ्च सन्ध्यामुपासीतेत्यनेन सन्ध्यामुक्तरूपामर्कमण्डलान्तर्गतामादित्याख्यां ब्रह्मात्मिकां देवतां हृदि साऽहमस्मीत्युपासीत ध्यायेदित्युक्तं भवति । तेनात्र 'उपासनमेव

प्रधानम्' । अन्यत् सर्वं मार्जनाद्यङ्गमित्यनुसन्धेयम्' इति चन्द्रिकामाधवीयादौ ।।

இவ்விதம் இருப்பதால், 'ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். என்றதால், ஸந்த்யையை, சொல்லப்பட்ட ரூபங்களை உடையவளாய், ஸூர்யமண்டலத்தினுள் இருப்பவளாய், ஆதித்யனென்ற நாமமுடையவளாய், ப்ரம்ஹஸ்வரூபிணியான தேவதையாய், ஹ்ருதயத்தில் நான் அவளாகவே இருக்கிறேன் என்று உபாஸிக்கவேண்டும் - த்யானிக்க வேண்டும். அதனால் இங்கு உபாஸனமே ப்ரதானம், மார்ஜனம் முதலிய மற்றதெல்லாம் அங்கமென்று அறியத் தகுந்தது, என்று சந்த்ரிகா மாதவீயம் முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டுள்ளது.

अत एव व्यासः – देशक्षोभे महापत्तौ मार्जनाघ्याद्यसम्भवे । सन्ध्यागतं सहस्रांशुं मन्त्रैः कुर्यादुपासितम् इति ।। अत एव युधिष्ठिराभिर्युद्धोद्यतैः साङ्गानुष्ठानासमर्थैः सकलाङ्गपरित्यागेनादित्योपस्थानमात्रमनुष्ठितम् ।। तदुक्तं महाभारते– 'ते तथैव महाराज दंशिता रणमूर्द्धनि । सन्ध्यागतं सहस्रांशु मादित्यमुपतस्थिरे' इति ।। सन्ध्यागतं - सन्धिमागतम् ।। अपरे तु अर्घ्यदानं सन्ध्याध्यानं गायत्री जपः उपस्थानं च प्रधानमिति वदन्ति ।। तदेवं गायत्र्यादिनामोपेत सन्ध्याशब्दप्रतिपाद्यः सवितैवोपास्यः ।।

வ்யாஸர்:- 'தேச க்ஷோபத்திலும், பெரிய ஆபத்திலும், மார்ஜனம் முதலிய அங்கங்களைச் செய்ய முடியாவிடில், ஸந்த்யா காலத்தில் மந்த்ரங்களால் ஸூர்யனை உபாஸிக்க வேண்டும்.' என்றார். ஆகையால் தான், யுத்தத்தில் முயற்சி உள்ளவரானதால் ஸாங்கமாய் ஸந்த்யோபாஸனம் செய்ய முடியாதவர்களான யுதிஷ்டிரர் முதலியவர்கள், அங்கங்கள் எல்லாவற்றையும் தள்ளி

ஸூர்யோபஸ்தானத்தை மட்டும் அனுஷ்டித்தார்கள். அது சொல்லப்பட்டுள்ளது, மஹாபாரதத்தில்:- ஓ மஹாராஜனே! யுத்தத்தில் ஈடுபட்டுள்ள அவர்கள், யுத்தத்தில் இருந்தவராகவே, ஸந்த்யாகாலத்தை அடைந்த ஸூர்யனை உபஸ்தானம் செய்தனர். மற்றவரோவெனில், அர்க்யதானம், ஸந்த்யாத்யானம், காயத்ரீ ஜபம், உபஸ்தானம் இவைகளெல்லாம் ப்ரதானம் என்கின்றனர். ஆகையால், இவ்விதம் இருப்பதால் காயத்ரீ முதலிய பெயர்களுடன் கூடிய ஸந்த்யா சப்தத்தால் சொல்லக்கூடிய ஸவிதாதான் உபாஸிக்கத் தகுந்தவர்.

—★—

## सन्ध्योपासनकालः ॥

सन्ध्योपासनकालश्च प्रागुदयात् घटिकाद्वयात्मकः 'रात्र्यन्त्ययामनाडी द्वे सन्ध्याकाल उदीरितः 'द्विनाडिका भवेत् सन्ध्या' 'उदयात् प्राक्तनी सन्ध्या घटिकाद्वयमीरिता' 'सन्ध्यामुहूर्तमात्रैव ह्रासवृद्धौ समा स्मृता' इति दक्षगर्गबोधायनादि-स्मरणात् ॥ यत्तु 'प्रातः सन्ध्या त्रिनाडी स्यात् सायं सन्ध्या तथाविधा' इति स्मरणम्, तत्सन्ध्याकालविहितकर्मान्तराभिप्राय-मित्याहुः ॥ यत्तु 'द्विघटी तूदयादर्वाक् प्रहरार्धं तथोपरि। सन्ध्याकालः स विज्ञेयो ह्यन्यथा लङ्घनं स्मृतम् इति स्मरणम्, तत् राष्ट्रक्षोभ जलालाभाशक्त्याद्यापत्सु अनुकल्पाभ्यनुज्ञापरम्॥

### ஸந்த்யோபாஸன காலம்

ஸந்த்யோபாஸநத்திற்குக் காலம் ஸூர்யோதயத்திற்கு முன் இரண்டு நாழிகை அளவுள்ளது. 'ராத்ரியின் கடைசி யாமத்தின் இரண்டு நாழிகைகள் ஸந்த்யாகாலம் எனப்பட்டுள்ளது'' என்றும், ''இரண்டு நாழிகையுள்ளது ஸந்த்யை'' என்றும், ''ஸூர்யோதயத்திற்கு முன் இரண்டு நாழிகை ப்ராதஸ் ஸந்த்யை எனப்பட்டது'' என்றும்,

''ஸந்த்யை முஹூர்த்தம் அளவுள்ளதே தான், பகல் ராத்ரிகளின் குறைவு வ்ருத்திகளிலும் ஸமமாகியதே'' என்றும் தக்ஷர், கர்க்கர், போதாயனர் முதலியவர்கள் சொல்லுகின்றனர். ஆனால், ''ப்ராதஸ் ஸந்த்யை மூன்று நாழிகையுள்ளது, ஸாயம் ஸந்த்யையும் அவ்விதமே'' என்ற வசனம் உள்ளதேயெனில் அது, ஸந்த்யா காலத்தில் விதிக்கப்பட்ட வேறு கர்மங்களில் அபிப்ராயம் உள்ளது என்கின்றனர். ஆனால், ''உதயத்திற்கு முன் இரண்டு நாழிகையும், உதயத்திற்குப் பிறகு அரையாமமும் ஸந்த்யா காலமென்று அறியத்தக்கது. அதற்கு மேல் ஆனால் ஸந்த்யையைத் தாண்டுவது ஆகும்'' என்ற ஸ்ம்ருதியுள்ளதே எனில், அது, தேச க்ஷோபம், ஜலம் கிடைக்காதது, அசக்தி முதலிய ஆபத்துகளில் அனுகல்பத்தை ஒப்புவதில் தாத்பர்யமுள்ளது.

यदाह वृद्धमनुः – न व्रतं न प्रदोषं च सन्ध्याकालोऽतिपद्यते। मुख्यकल्पोऽनुकल्पश्च सर्वस्मिन् कर्मणि स्मृतः इति ॥ मध्याह्नसन्ध्याया गौणकालमाहदक्षः – अध्यर्धयामादासायं सन्ध्या माध्याह्निकीष्यते इति ॥ याज्ञवल्क्यः – अनार्तश्चोत्सृजेद्यस्तु स विप्रः शूद्रसंमितः । प्रायश्चित्तीयते चैव लोके भवति निन्दितः इति ॥ अत्रिरपि – नोपतिष्ठन्ति ये सन्ध्यां स्वस्थावस्थास्तु ये द्विजाः । हिंसन्ति ते सदा पापा भगवन्तं दिवाकरम् इति ॥

வ்ருத்தமனு:- சொல்லுகிறார் - வ்ரதானுஷ்டான காலத்திலும், ப்ரதோஷ காலத்திலும் ஸந்த்யைக்கு அதிக்ரமமில்லை. முக்ய கல்பம் அனுகல்பம் என்ற இரண்டும் எல்லாக் கர்மங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. மத்யாஹ்ன ஸந்த்யைக்கு கௌண காலத்தைச் சொல்லுகிறார், தக்ஷர்:- ஒன்றரை யாமத்திற்கு மேல் ஸாயங்காலம் வரையில் மாத்யாஹ்னிக ஸந்த்யைக்குக் காலம் எனப்படுகிறது. யாக்ஞவல்க்யர்:- வ்யாதி இல்லாத எவன் ஸந்த்யையை விடுகிறானோ அந்த ப்ராம்ஹணன்

சூத்ரனுக்குச் சமமாவான். ப்ராயச் சித்தத்திற்கும் அர்ஹனாகிறான். உலகத்தில் நிந்திக்கப்பட்டவனாய் ஆகிறான். அத்ரியும்:- வ்யாதி அற்றவராய் இருந்தும் எந்தெந்த ப்ராம்ஹணர்கள் ஸந்த்யையை உபாஸிக்கவில்லையோ அந்தப் பாபிகளெலாம், எப்பொழுதும் ஸூர்யபகவானை ஹிம்ஸிக்கின்றனர்.

विष्णुपुराणे – उपतिष्ठन्ति वै सन्ध्यां ये न पूर्वां न पश्चिमाम्। व्रजन्ति ते दुरात्मानस्तामिस्रं नरकं नृप ॥ तस्मान्न लङ्घनं कार्यं सन्ध्योपासनकर्मणः। स हन्ति सूर्यं सन्ध्याया नोपास्तिं कुरुते तु यः ॥ सर्वकाल मुपस्थानं सन्ध्ययोः पार्थिवेष्यते । अन्यत्र सूतकाशौचविभ्रमातुरभीतितः इति ॥ सूतकादौ तु सत्यपि सामर्थ्ये सन्ध्योपासनं न कार्यमित्याह मरीचिः – सूतके कर्मणां त्यागः सन्ध्यादीनां विधीयते इति ॥

விஷ்ணு புராணத்தில்:- ப்ராதஸ் ஸந்த்யையையும், ஸாயம் ஸந்த்யையையும் உபாஸிக்காத துஷ்டர்கள் தாமிஸ்ரமெனும் நரகத்தை அடைகின்றனர். ஓ அரசனே! ஆகையால் ஸந்த்யோபாஸனத்தை விடக்கூடாது. எவன் ஸூர்யோபாஸனம் செய்வதில்லையோ அவன் ஸூர்யனை ஹிம்ஸிக்கிறான். அரசனே! எக்காலத்திலும், இரண்டு ஸந்த்யைகளிலும் உபஸ்தானம் விதிக்கப்படுகிறது. ஜனனாசௌசம், மரணாசௌசம், சித்தப்ரமம், வ்யாதி, பயம் இவைகளுள்ள காலம் தவிர்த்து. ஸூதகம் முதலியதில் ஸாமர்த்யம் இருந்தாலும் ஸந்த்யோ பாஸனம் செய்யக் கூடாதென்கிறார், மரீசி:- ஆசௌத்தில், ஸந்த்யோபாஸனம் முதலிய கர்மங்களுக்கு த்யாகம் விதிக்கப்படுகிறது.

सङ्ग्रहेऽपि —– राष्ट्र क्षोभे नृपाक्षिप्ते रोगार्तौ शावसूतके । सन्ध्यावन्दनविच्छित्तिर्न दोषाय कदाचन इति ॥ यत्तु पुलस्त्येनोक्तम् – सन्ध्यामिष्टिं चरुं सोमं यावज्जीवं समाचरेत्। न त्यजेत् सूतके वाऽपि त्यजन्गच्छेदधो द्विजः इति तत् मानससन्ध्याभिप्रायम् ।

यतस्तेनैवोक्तम् – सूतके मृतके चैव सन्ध्याकर्म न सन्त्यजेत् । मनसोच्चारयेन्मन्त्रान् प्राणायामत्रये द्विजः इति ॥ एवञ्च यानि सूतकादौ सन्ध्याकर्मनिषेधप्रतिपादकानि, तानि वचनानि मन्त्रप्रयोगनिषेधपराणीति मन्तव्यम् । अत्र विशेषमाह व्यासः – प्रक्षिपेत् सूतके त्वर्घ्यं गायत्रीं तु समुच्चरन् । दत्वा प्रदक्षिणं कुर्यात् सूर्यं ध्यायेत् ततो द्विजः इति ॥

**ஸங்க்ரஹத்திலும்:-** தேச க்ஷோபம், அரசனால் நிர்ப்பந்தம், ரோகத்தால் தொந்தரை, மரணத்தீட்டு ஸூதகம் இவைகளில், ஸந்த்யா வந்தனம் நிற்பது கேடு தருவதில்லை. **புலஸ்த்யர்:-** "ஸந்த்யா வந்தனம், இஷ்டி, சரு, ஸோமம், இவைகளை ஜீவனுள்ள வரையில் அனுஷ்டிக்க வேண்டும். ஆசௌசத்திலும் விடக்கூடாது. விட்ட ப்ராம்ஹணன் நரகத்தை அடைவான்" என்று சொல்லிய வசனமோ எனில், அது, மானஸ ஸந்த்யையைப் பற்றியதாகும். ஏனெனில், புலஸ்த்யரே - ப்ராம்ஹணன், ஜனனாசௌசத்திலும், மரணாசௌசத்திலும் ஸந்த்யோபாஸனத்தை விடக்கூடாது. மனதினால் மந்த்ரங்களை உச்சரிக்க வேண்டும், மூன்று ப்ராணாயாமங்களிலும் அப்படியே" என்று சொல்லப்பட்டுள்ளது. ஸூதகம் முதலியதில் ஸந்த்யையை நிஷேதிக்கும் வசனங்கள் எல்லாம் மந்த்ரங்களை உச்சரிப்பதை தடுக்கவே தாத்பர்யம் உள்ளவை. இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார். **வ்யாஸர்:-** ஸூதகத்திலோ எனில், காயத்ரியை உச்சரித்துக் கொண்டு அர்க்யத்தை விடவேண்டும். அர்க்யதானம் செய்து, ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். பிறகு ப்ராம்ஹணன் ஸூர்யனை த்யானிக்க வேண்டும்.

पैठीनसिरपि — सूतके सावित्र्या चाञ्जलिं प्रक्षिप्य प्रदक्षिणं कृत्वा सूर्यं ध्यायन्नमस्कुर्यादिति ॥ एतन्मार्जनादिसकलसन्ध्याकर्मोपलक्षणार्थमिति केचित् । यदत्र सन्ध्याकर्मणि श्रौतं जलाञ्जलिदानादि तदेवानुष्ठेयं नान्यदित्येवंपर मित्यपरे । यथाशिष्टाचारमत्र व्यवस्था ॥

**பைடீநஸியும்:**- ஸூதகத்தில் காயத்ரியால் அர்க்யத்தை விட்டு ப்ரதக்ஷிணம் செய்து, ஸூர்யனை த்யானிப்பவனாய் நமஸ்காரம் செய்ய வேண்டும் என்கிறார். இது, மார்ஜனம் முதலிய ஸகல ஸந்த்யா கர்மங்களையும் சொல்வதற்காக என்கின்றனர் சிலர். இந்த ஸந்த்யா கர்மத்தில் ச்ருதியால் சொல்லப்பட்ட அர்க்யதானம் முதலியது மட்டில் அனுஷ்டிக்கத் தக்கது, மற்றது அனுஷ்டிக்கத் தக்கதல்ல என்றதில் தாத்பர்யமுள்ளது. என்கின்றனர் மற்றவர். இங்கு சிஷ்டாசாரப்படி வ்யவஸ்தை அறியத்தக்கது.

शक्तस्य मुख्यकालातिक्रमे प्रायश्चित्तमाह सङ्ग्रहकारः – आचान्तो विधिवत् प्राणा नायम्यार्घ्यं चतुर्थकम् । कालात्ययविशुद्ध्यर्थं दत्वा सन्ध्यां समाचरेत् ॥ चतुर्थमर्घ्यं गायत्र्या दद्याद्व्याहृति संपुटम् । कालात्ययविशुद्ध्यर्थं त्रिसन्ध्यासु समाचरेत् ॥ प्राणायामत्रयं कृत्वा सन्ध्याकर्म समाचरेत् । प्रातः काले त्रयं कुर्यात्संगवे द्वौ दशोपरि । षट्त्रिंशन्मध्यमे काले ततो न प्राण संयमः । कालात्यये त्वकृत्वैव कृता सन्ध्या तु निष्फलेति ।

சக்தியுள்ளவனுக்கு, முக்யகாலம் அதிக்ரமிக்கப் பட்டால் ப்ராயச் சித்தத்தைச் சொல்லுகிறார். **ஸங்க்ரஹகாரர்:**- காலாதிக்ரம ப்ராயச் சித்தத்திற்காக, விதிப்படி அர்க்யத்தைக் கொடுத்து, ஸந்த்யோபாஸநம் செய்ய வேண்டும். காயத்ரியால், வ்யாஹ்ருதி ஸம்புடமாய் (முன்னாலும் பின்னாலும் வ்யாஹ்ருதிகளைச் சேர்த்து) நான்காவது அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். காலாதிக்ரம ப்ராயச் சித்தத்திற்காக மூன்று ஸந்த்யைகளிலும் செய்ய வேண்டும். மூன்று ப்ராணாயா மங்களைச் செய்து ஸந்த்யோபாஸனத்தைச் செய்ய வேண்டியது. காலையில் மூன்று ப்ராணா யாமங்களைச் செய்யவும். ஸங்கவத்தில் பனிரண்டு ப்ராணா யாமங்களையும், மத்யாஹ்னத்தில் முப்பத்தி ஆறு ப்ராணா

யாமங்களையும் செய்யவும். அதற்கு மேல் ப்ராணா யாமமில்லை. காலாதிக்ரமத்தில் இவ்விதம் செய்யாமல் செய்த ஸந்த்யை நிஷ்பலன் ஆகும்.

संवर्तः – अर्घ्यप्रदानतः पूर्वमुदयेऽस्तमयेऽपि वा । गायत्र्यष्टशतं जप्यं प्रायश्चित्तं द्विजातिभिः इति ।। गौणकालातिक्रमे स एव – उपासिता न चेत् सन्ध्या अग्निकार्यं न चेत् कृतम् । गायत्र्यष्टसहस्रं तु जपं कृत्वा विशुध्यति इति ।। ऋग्विधाने – यदादीद्ध्येजपेन्मन्त्रं दशवारं दिने दिने । अकाले नित्यकर्माणि काले काले कृतानि वै इति ।। मन्त्रश्च – 'यदा दीद्ध्येनविषाण्येभिः परायञ्यो वहीये सखिभ्यः । न्युप्ताश्च बभ्रवो वाचमक्रतं एमीदेषां निष्कृतं जारिणीव इति ।।

**ஸம்வர்த்தர்:**- அர்க்யத்தைக் கொடுப்பதற்கு முன், ஸூர்யனின் உதயமானாலும், அஸ்தமயமானாலும் ப்ராயச் சித்தமாக 108 - முறை காயத்ரியை, ப்ராம்ஹணர்கள் ஜபிக்க வேண்டும். கௌணகாலமும் அதிகரமித்தால், **ஸம்வர்த்தரே:**- ஸந்த்யோபாஸனம் செய்யப்படா விட்டாலும், அக்னிகார்யம் செய்யப்படா விட்டாலும், 1008-முறை காயத்ரியை ஜபித்தால் சுத்தனாகிறான். **ருக்விதானத்தில்:**- 'யதாதீத்யே' என்னும் மந்த்ரத்தை ப்ரதிதினம் பத்து முறை ஜபிக்க வேண்டும். நித்ய கர்மங்கள் அகாலத்தில் செய்யப்பட்டாலும் முக்ய காலத்தில் செய்யப்பட்டதாய் ஆகின்றன. மந்த்ரம் இவ்விதம் - 'யதாதீத்யே + ஜாரிணீவ' என்று.

बोधायनः – सायमतिक्रमे रात्र्युपवासः प्रातरतिक्रमेऽह-रुपवासः इति ।। इदमबुद्धिपूर्वविषयम् । बुद्धिपूर्वे तु वेदोदितानां नित्यानां कर्मणां समतिक्रमे । स्नातकव्रतलोपे च प्रायश्चित्तमभोजनम् इति मनूक्तदिनोपवासः कार्यः ।। शङ्खोऽपि – सन्ध्यादिनित्यलोपे तु दिनमेकमभोजनम् । दिनद्वये त्रिरात्रं स्यात् कृच्छ्रार्धं तु दिनत्रये ।।

दशाहे कृच्छ्रमेकं स्यादूर्ध्वं चान्द्रायणं चरेत्। चान्द्रायणं पराकं च मासादूर्ध्वं विधीयते ॥ ततोऽप्येवं प्रकल्प्यं स्याद्व्यासस्य वचनं तथा इति ॥

**போதாயனர்:-** ஸாயங்கால ஸந்த்யையை அதிக்ரமித்தால், ராத்ரி முழுவதும் உபவாஸமும், காலை ஸந்த்யையை அதிக்ரமித்தால் பகலில் முழுவதும் உபவாஸமும் ப்ராயச் சித்தம். இது புத்திபூர்வம் இல்லாத விஷயம். புத்திபூர்வமாகில், "வேதத்தில் சொல்லப்பட்ட நித்யகர்மங்களை அதிக்ரமித்தாலும், ஸ்நாதக வ்ரதத்திற்கு லோபமேற்பட்டாலும் ஒருநாள் உபவாஸம் ப்ராயச் சித்தமாகும்" என்று மனுவால் சொல்லப்பட்டபடி ஒருநாள் உபவாஸம் செய்யத் தகுந்தது. **சங்கரும்:-** ஸந்த்யை முதலிய நித்யகர்மத்திற்கு லோப மேற்பட்டால் ஒருநாள் முழுவதும் உபவாஸம் ப்ராயச் சித்தம். இரண்டு நாட்களில் லோபமேற்பட்டால் மூன்று நாள் முழுவதும் உபவாஸம். மூன்று நாட்களில் லோபமேற்பட்டால் அரை க்ருச்ரம். பத்து நாள்களில் ஏற்பட்டால் ஒரு க்ருச்ரம். அதற்கு மேல் ஏற்பட்டால் சாந்த்ராயணம். ஒரு மாஸத்திற்கு மேல் லோபமேற்பட்டால் சாந்த்ராயணமும், பராகமும் பிராயச் சித்தமாய் விதிக்கப்படுகிறது. பிறகும் இவ்விதமே கணக்கிடப்பட வேண்டும். இவ்விதம் வ்யாஸரின் வசனமாகும்.

सन्ध्यात्रयस्य तारतम्याद्देशविशेषमाह व्यासः – गृहे त्वेकगुणा सन्ध्या गोष्ठे दशगुणा स्मृता । शतसाहस्रिका नद्यामनन्ता विष्णुसन्निधौ । बहिः सन्ध्या दशगुणा गर्तप्रस्रवणेषु च । ख्याता तीर्थे शतगुणा सहस्रं जाह्नवीजले इति ॥ शातातपः – अनृतं मद्यगन्धं च दिवामैथुनमेव च । पुनाति वृषलस्यान्नं बहिः सन्ध्या ह्युपासिता इति ॥ हारीतोऽपि – ततः सन्ध्यामुपासीत बहिर्गत्वा विधानतः इति ॥

மூன்று ஸந்த்யைகளுக்கும், தாரதம்யத்தால் தேச விசேஷத்தைச் சொல்லுகிறார், **வ்யாஸர்:-** ஸந்த்யா

வந்தனமானது க்ருஹத்தில் செய்யப்பட்டால் ஒரு பங்கு பலமுடையதே. பசுத் கொட்டிலில் பத்துப்பங்கு பலனுள்ளதாம். நதியிலானுல் லக்ஷம் பங்கு பலனுள்ளதாம். விஷ்ணு ஸன்னிதியிலானுல் அழிவற்ற பலனுள்ளதாம். வீட்டிற்கு வெளியில் செய்யப்பட்டால் பத்து மடங்கு பலனுள்ளதாம். குட்டை அருவி இவைகளிலுமப் படியே. புண்ய தீர்த்தத்திலானுல் நூறு மடங்கு பலனுள்ளதாம். கங்கா ஜலத்திலானுல் ஆயிரம் மடங்கு பலனுள்ளதாம். **சாதாதபர்:-** வெளியில் செய்யப்பட்ட ஸந்த்யோபாஸன மானது, பொய்பேசுதல், மத்யத்தின் நாற்றத்தை முகர்தல் பகலில் ஸ்த்ரீ ஸங்கம் செய்தல், சூத்ரான்ன போஜனம் இவைகளால் உண்டாகிய பாபத்தையும் போக்குகின்றது. **ஹாரீதரும்:-** பிறகு வெளியிற் சென்று விதிப்படி ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும்.

बहिः सन्ध्यायामुपासितायामाहिताग्नेर्यदा विहरणाद्यङ्गलोपः, तदा विहरणादिदेश एव सन्ध्याद्वयं कर्तव्यम् ।। तदेवाभिप्रेत्योक्त-मत्रिणा - सन्ध्यात्रयं तु कर्तव्यं द्विजेनात्मविदा सदा । उभे सन्ध्ये तु कर्तव्ये ब्राह्मणैश्च गृहेष्वपि इति ।।

வெளியிற் சென்று ஸந்த்யோ பாஸனம் செய்தால், ஆஹிதாக்னிக்கு விஹரணம் முதலிய அங்கங்களுக்கு லோபமேற்படும் போல் இருந்தால் அப்பொழுது, விஹரணம் முதலியதைச் செய்யும் இடத்திலேயே இரண்டு ஸந்த்யையும் செய்ய வேண்டும். இதையே அபிப்ராயப்பட்டுச் சொல்லுகிறுர். **அத்ரி:-** ஆத்ம ஜ்ஞானியான ப்ராம்ஹணன் எப்பொழுதும் மூன்று ஸந்த்யைகளேயும் உபாஸிக்க வேண்டும். ப்ராம்ஹணர்கள் வீட்டில் இரண்டு ஸந்த்யைகளேச் செய்யலாம்.

आपस्तम्बोऽपि — सन्ध्ययोश्च बहिर्ग्रामादासनं वाग्यतश्च विप्रतिषेधे श्रुतिलक्षणं बलीयः' इति ।। अहोरात्रयोः सन्धानं सन्धिः । तौ च द्वौ । सायं प्रातश्च । तयोः सन्ध्योर्ग्रामाद्बहिः सन्ध्यामुपासीत ।

वाग्यतश्च भवेत् । लौकिकीं वाचं न वदेत् । आहिताग्नि-विषयेऽस्यापवादः । विप्रतिषेधे - श्रुतिविरोधो विप्रतिषेधः । अग्निहोत्रिणो बहिरासनमग्निहोत्रहोमश्च विरुध्येते । तत्र श्रुतिलक्षणमग्निहोत्रमेव कर्तव्यम् । न स्मार्तं बहिरुपासनम् । तस्य कल्प्यमूलत्वात् । इतरत्र क्लृप्तमूलत्वादित्यर्थः ॥

*ஆபஸ்தம்பர்:- 'ஸந்த்யோச்ச + பலீய:' என்கிறார். இதன் பொருள் - ''பகலுக்கும் ராத்ரிக்கும் பரஸ்பரம் ஸம்பந்தம் ஏற்படும் காலம் ஸந்தி எனப்படுகிறது. அவை இரண்டு, மாலையும் காலையும். அந்த ஸந்திகளில், க்ராமத்திற்கு வெளியில் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். மௌனியாயும் இருக்க வேண்டும். லௌகிகமான வார்த்தையைப் பேசக்கூடாது. ஆஹிதாக்னி விஷயத்தில் இதற்கு மறுப்புச் சொல்லப்படுகிறது - விப்ரதிஷேதம் வேதத்துடன் விரோதம். அது நேர்ந்தால். அக்னி ஹோத்ரிக்கு வெளியில் ஸந்த்யோபாஸனமும் அக்னிஹோத்ர ஹோமமும் பரஸ்பரம் விரோதிக்கின்றன. அவ்விடத்தில் ச்ருதியில் சொல்லப்பட்ட, அக்னி ஹோத்ரமே பலிஷ்டமாகும். அதுவே செய்யத் தகுந்தது. ஸ்ம்ருத்யுக்தமான வெளியில் ஸந்த்யோ பாஸனம் செய்யத் தகுந்ததல்ல. அது கல்ப்ய மூலமானதால், அக்னி ஹோத்ரம் கல்பிதமூலமானதால்'' என்பது (அனுமிதச்ருதி மூலகமான பஹிஸ்ஸந்த்யோ பாஸனத்தைவிட ப்ரத்யக்ஷ ச்ருதி மூலகமான அக்னி ஹோத்ரமே பலிஷ்டம். ஆகையால் அக்னி ஹோத்ரீ வீட்டிலேயே ஸந்த்யோ பாஸனம் செய்யலாம் என்பதாம்.)*

—*—

## प्रातस्सन्ध्या

अथ प्रातः सन्ध्या ॥ तत्र याज्ञवल्क्यः – शरीरचिन्तां निर्वर्त्य कृतशौचविधिर्द्विजः । प्रातः सन्ध्यामुपासीत दन्तधावनपूर्वकम् ॥

प्राणानायम्य सम्प्रोक्ष्य त्र्यृचेनाब्दैवतेन तु इति ॥ व्यासः – आपोहिष्ठैः स्त्र्यृचैः कुर्यान्मार्जनं तु कुशोदकैः । प्रणवेन तु संयुक्तं क्षिपेद्वारि पदे पदे । विप्रुषोऽष्टौ क्षिपेदूर्ध्वमधो यस्य क्षयाय च । रजस्तमोमोहजातान् जाग्रत् स्वप्नसुषुप्तिजान् । वाङ्मनः कायजान् दोषान्नवैतान्नवभिर्दहेत् इति ॥

### ப்ராதஸ்ஸந்த்யை

இனி ப்ராதஸ் ஸந்த்யை சொல்லப்படுகிறது. அதில், **யாக்ஞவல்க்யர்:-** ப்ராம்ஹணன், மலமூத்ர விஸர்ஜனம் செய்து, சௌசத்தை விதிப்படி செய்து, தந்ததாவனம் செய்து, ப்ராணாயாமம் செய்து, ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளால் ப்ரோக்ஷித்து ப்ராதஸ் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். **வ்யாஸர்:-** 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால், குசஜலங்களால் மார்ஜனம் செய்யவும். ஒவ்வொரு பாதத்திலும் ப்ரணவத்துடன் கூடியதாகிய ஜலத்தை ப்ரோக்ஷிக்க வேண்டும். தலையில் எட்டுத் திவலைகளையும், காலில் ஒரு திவலையையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். ரஜஸ், தமஸ், மோஹம் இவற்றால் ஜாகரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி நிலைகளில் வாக்கு, மனமம். காயம் இவைகளில் உண்டான ஒன்பது பாபங்களையும் ஒன்பது திவலைகளால் தஹிப்பான்.

योगयाज्ञवल्क्यः – नवप्रणवयुक्ताभिर्जलं शिरसि विक्षिपेत् । आपोहिष्ठेति तिसृभिः ऋग्भिः संप्रयतः शुचिः इति ॥ नारायणः – प्राङ्मुखोदङ्मुखो वाऽपि सन्ध्योपासनमाचरेत् । नवप्रणवसंयुक्तमापोहिष्ठत्र्यृचेन तु ॥ शिरस्यष्टभिरभ्युक्षेत् भूमौ यस्यक्षयाय च । सन्ध्यात्रयेऽपि कर्तव्यमापोहिष्ठैस्तु मार्जनम् इति ॥ भूमौ = पादयोः ॥ अत एव योगयाज्ञवल्क्यः – आचमनं स्वीयमार्गेण कृत्वा ऋषिच्छन्दोदेवतास्मरणपूर्वकमापोहिष्ठादित्र्यृचस्यादितः सप्तभिः पादैरूर्ध्वं सप्त विप्रुषो विक्षिप्य अष्टमेनैकां विप्रुषमधः शरीरे विक्षिप्य नवमेनैकां विप्रुषमूर्ध्वमुत्क्षिपेत् इति ॥

**யோகயாக்ஞவல்க்யர்:-** ஒன்பது ப்ரணவங்களுடன் கூடிய 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால், காயத்திலும் மனதிலும் சுத்தனாய், ஜலத்தைத் தலையில் ப்ரோக்ஷிக்க வேண்டும். **நாராயணர்:-** கிழக்கு அல்லது வடக்கு நோக்கியவனாய், ஸந்த்யோபாஸநம் செய்யவும். ஒன்பது ப்ரணவங்களுடன் கூடியதாய், 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால், தலையில் எட்டுப் பாதங்களாலும், பாதத்தில் 'யஸ்யக்ஷயாய' என்பதாலும் ப்ரோக்ஷிக்க வேண்டும். இவ்விதம் ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களால் மூன்று ஸந்த்யைகளிலும் ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். **யோகயாக்ஞவல்க்யர்:-** தன் சாகையில் சொல்லிய ப்ரகாரமாய் ஆசமனம் செய்து, ருஷி, சந்தஸ், தேவதை இவைகளை முதலில் ஸ்மரித்து, 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளின் முதலில் உள்ள ஏழு பாதங்களால் தலையில் ஏழு திவலைகளை ப்ரோக்ஷித்து, எட்டாவது பாதத்தால் ஒரு திவலையை பாதத்தில் ப்ரோக்ஷித்து, ஒன்பதாவது பாதத்தால் ஒரு திவலையைத் தலையில் ப்ரோக்ஷிக்கவும்.

प्रणवयुक्तेन मन्त्रेण प्रोक्षणे फलविशेषमाह शौनकः – नवप्रणवयुक्तेन आपोहिष्ठत्र्यृचेन तु । संवत्सरकृतं पापं मार्जनान्ते विनश्यति इति ॥ ब्रह्मा — 'ऋगन्ते मार्जनं कुर्यात् पादान्ते वा समाहितः । त्र्यृचस्यान्तेऽथवा कुर्याच्छिष्टानां मतमीदृशम् इति ॥ बहुप्रमाणानुगुण्यात् शिष्टाचाराच्च पादान्तमार्जनमेव कार्यम् ॥

ப்ரணவத்துடன் கூடிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷிப்பதில் சிறப்பைச் சொல்லுகிறார். **சௌனகர்:-** ஒன்பது ப்ரணவங்களுடன் கூடிய 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால் மார்ஜனம் செய்து கொண்ட உடனேயே, ஒருவர்ஷம் செய்த பாபம் நசிக்கின்றது. **ப்ரஹ்மா:-** ஒவ்வொரு ருக்கின் முடிவில் ப்ரோக்ஷணம் செய்யவும். அல்லது, கவனம் உடையவனாய் ஒவ்வொரு பாதத்தின் முடிவில் ப்ரோக்ஷணம் செய்யவும். அல்லது,

மூன்று ருக்குகளின் முடிவில் ப்ரோக்ஷணம் செய்யவும். சிஷ்டர்களின் கொள்கை இவ்வாறு. அநேக ப்ரமாணங்களுக்கு ஒத்ததாய் இருப்பதாலும், சிஷ்டர்களின் ஆசாரத்தாலும், ஒவ்வொரு பாதத்தின் முடிவிலும் மார்ஜனம் செய்வதே யுக்தமானது.

स्मृत्यर्थसारे – 'आपोहिष्ठेत्यृचा सम्यगुल्लेख्यं न तु वेत्ति यः । न तस्य विद्यते सन्ध्या यथा शूद्रस्तथैव सः ।। आपोहिष्ठेत्यृचामेक मुल्लेख्यं त्रिषु कारयेत् । चतुर्थं कारयेद्यस्तु ब्रह्महत्यां स विन्दति इति ।। प्रतिपादमेकमेवोल्लेख्यं कार्यम् । एवञ्च प्रत्यृचं मार्जनत्रयमेव न चतुर्थमित्यर्थः । उल्लेख्यं - मार्जनम् ।। तथा च तत्रैव – उत्तानदेवतीर्थेन दर्भाग्रैर्मूर्ध्नि विप्रुषाम् । स्पृष्ट्वाऽप ऊर्ध्वविक्षेप उल्लेख्यमिति सूरयः ।। भूमिष्ठमुदकं स्पृष्ट्वा प्रसव्येन करेण तु । मार्जनान्याचरेद्विद्वान् सन्ध्याकर्मसु सर्वदा इति ।।

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:**- 'ஆபோஹிஷ்ட' என்ற ருக்கில் உல்லேக்யத்தை (மார்ஜனத்தை) எவன் நன்றாய் அறியவில்லையோ, அவனுக்கு ஸந்த்யை இல்லை. அவன் சூத்ரனுக்கு சமமானவனே. 'ஆபோஹிஷ்ட' முதலிய ருக்குகளில் ஒரு உல்லேக்யத்தை (மார்ஜனத்தை) மூன்றிலும் செய்ய வேண்டும். நான்காவது மார்ஜனத்தை எவன் செய்கின்றானோ, அவன் ப்ரம்ஹ ஹத்யையை அடைகிறான். ஒவ்வொரு பாதத்திலும் ஒவ்வொரு மார்ஜனமே செய்ய வேண்டும். இவ்விதமாவதால், ஒவ்வொரு ருக்கிலும் மூன்று மார்ஜனங்களே, நான்காவது மார்ஜனம் இல்லை என்பது பொருள். **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலேயே:**- நிமிர்ந்த கையின் தேவ தீர்த்தத்தினால், தர்ப்பங்களின் நுனியால் ஜலத்தைத் தொட்டு, திவலைகள் சிரஸ்ஸில் ப்ரோக்ஷிப்பது 'உல்லேக்யம்' எனப்படும். அறிந்தவன், எப்பொழுதும் ஸந்த்யா கர்மங்களில், பூமியிலுள்ள ஜலத்தை, இடது கையால் ஸ்பர்சித்துக் கொண்டு மார்ஜனங்களைச் செய்ய வேண்டும்.

हारीतः – मार्जनार्चन बलिकर्मभोजनानि देवतीर्थेन कुर्यात् इति । तन्मार्जनं धाराच्युतं न कर्तव्यम् । तथा च ब्रह्मा – धाराच्युतेन तोयेन सन्ध्योपास्तिर्विगर्हिता । न प्रशंसन्ति पितरो न प्रशंसन्ति देवताः इति ॥ अत्र हेतुमाह स एव – मन्त्रपूतं जलं यस्मा दापोहिष्ठाभिमन्त्रितम् । पतत्यशुचिदेशेषु तस्मात्तत् परिवर्जयेत् इति ॥ अनेन मार्जनजलबिन्दुः क्षितितले यथा न च्युतो भवति, तथा शिरस्येव मार्जनं यत्नतः कुर्यादिति च गम्यते ॥

ஹாரீதர்:- மார்ஜனம், அர்ச்சனம், பலிகர்ம, போஜனம் இவைகளைத் தேவ தீர்த்தத்தால் செய்ய வேண்டும். அந்த மார்ஜனம், தாரையாய் விழுவதாய்ச் செய்யக் கூடாது. அவ்விதமே, ப்ரம்ஹா:- தாரையாய் விழும் ஜலத்தினால் செய்யப்படும் ஸந்த்யோபாஸனம் இழிவானதாகும். அதைப் பித்ருக்கள் புகழ்வதில்லை. தேவர்களும் புகழ்வதில்லை. இவ்விஷயத்தில் காரணத்தைச் சொல்லுகிறார். ப்ரம்ஹாவே:- 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரத்தால் அபிமந்த்ரிதமான ஜலம் மந்த்ர சுத்தமானதால், அது அசுத்த ஸ்தலங்களில் விழுமாகையால் அதை (தாரையாய் விழும் ஜலத்தால் மார்ஜனத்தை) வர்ஜிக்க வேண்டும். இதனால், மார்ஜன ஜலபிந்து, பூமியில் எப்படி விழாமல் இருக்குமோ அவ்விதம் சிரஸ்ஸிலேயே மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும் என்பதும் தோன்றுகிறது.

कथं तर्हि मार्जनमिति चेत् तत्राह स एव । नद्यां तीर्थे ह्रदे वापि भाजने मृन्मयेऽपि वा । औदुम्बरेऽथ सौवर्णे राजते दारुसम्भवे ॥ कृत्वा तु वामहस्ते वा सन्ध्योपास्तिं समाचरेत् इति ॥ औदुम्बरे - ताम्रमये । कृत्वा - उदकमिति शेषः ॥ यत्त्विदं वचनम् - 'वामहस्ते जलं कृत्वा ये तु सन्ध्यामुपासते । सा सन्ध्या वृषली ज्ञेया असुरास्तेन तर्पिताः इति, तत् मृन्मयपात्रादिसम्भवविषयम् ॥ मृन्मयाद्यभावे तु कृत्वा तु वामहस्ते वेति वामहस्तविधानमिति माधवीये ॥

அப்பொழுது, மார்ஜனம் எப்படிச் செய்யப்பட வேண்டும்? எனில், அதில் சொல்லுகிறூர், ப்ரம்ஹாவே நதியிலாவது, புண்ய தீர்த்தத்திலாவது, மடுவிலாவது, மண் பாத்ரத்திலாவது, தாம்ர பாத்ரத்திலாவது, ஸ்வர்ண பாத்ரத்திலாவது, வெள்ளிப் பாத்ரத்திலாவது, மரப் பாத்ரத்திலாவது, இடது கையிலாவது ஜலத்தை வைத்துக் கொண்டு ஸந்த்யோபாஸனம் செய்ய வேண்டும். ஆனூல், "இடது கையில் ஜலத்தை வைத்துக் கொண்டு, எவர்கள் ஸந்த்யோ பாஸனம் செய்கின்றனரோ அவர்களின் அந்த ஸந்த்யை 'வ்ருஷளீ' என்று அறியத் தகுந்தது. அதனூல் அஸுரர்களே த்ருப்தி செய்யப்பட்டவராய் ஆகின்றனர்" என்ற வசனமுள்ளதே எனில். அது, மண் பாத்ரம் முதலியது இருக்கும் விஷயத்தைப் பற்றியது. மண்பாத்ரம் முதலியவை இல்லாவிடில் 'இடது கையிலாவது வைத்துக் கொண்டு' என்று, இடது கையின் விதானம் என்று மாதவீயத்தில் உள்ளது.

व्यासः – उपवीती बद्धशिखः स्वाचान्तो द्विरनाकुलः । प्राङ्मुखः सततं विप्रः सन्ध्योपासनमाचरेत् ।। आपोहिष्ठादितिसृभिर्मार्जयेत्तु कुशोदकैः ।। सिन्धुद्वीप ऋषिश्छन्दो गायत्र्यापो हि देवता ।। मार्जने विनियोगश्च अब्देवत्ये प्रकीर्तितः ।। अविदित्वा ऋषिं छन्दो दैवतं योगमेव च । नाध्यापयेज्जपेद्वाऽपि पापीयान् जायते तु सः इति ।। योगः विनियोगः ।। याज्ञवल्क्योऽपि – ब्राह्मणं विनियोगं च छन्द आर्षं च दैवतम् ।। अज्ञात्वा पञ्च यः कुर्यान्न स तत्फलमश्नुत इति । मन्त्रार्थश्च प्रतिपत्तव्यः । यतः अविदितार्था मन्त्राः नानुष्ठेयार्थप्रकाशनसमर्थाः । अतः प्रतिपन्न मन्त्रार्थोऽनुष्ठातैव कर्मफलानि प्राप्नोति न च प्रत्यवैतीति न्यायसिद्धम् ।।

வ்யாஸர்:- யக்ஞோபவீதியாய், சிகையைக் கட்டியவனூய், இருமுறை ஆசமனம் செய்தவனூய், ஏகாக்ரசித்தனூய், கிழக்கு நோக்கியவனூய் ப்ராம்ஹணன்

எப்பொழுதும் ஸந்த்யோபாஸனம் செய்ய வேண்டும். 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால் குசஜலங்களால் மார்ஜனம் செய்ய வேண்டும். அந்த ருக்குகளுக்கு ஸிந்துத்வீபர் ருஷி, காயத்ரீ சந்தஸ், அப்பு தேவதை, மார்ஜனத்தில் விநியோகம் சொல்லப்பட்டுள்ளது. ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் இவைகளை அறியாமல், வேதமந்திரத்தைக் கற்றுக் கொடுக்கக் கூடாது. ஜபிக்கவும் கூடாது. அவன் அதிக பாபமுடையவனாய் ஆகிறான். **யாக்ஞவல்க்யரும்:-** ப்ராம்ஹணம், விநியோகம், சந்தஸ், ருஷி, தேவதை என்ற ஐந்தையும் அறியாமல் எவன் கர்மத்தைச் செய்கின்றானோ அவன் அக்கர்மத்தின் பலத்தை அடைவதில்லை. மந்த்ரங்களின் அர்த்தத்தையும் அறியவேண்டும். ஏனெனில், அர்த்தம் அறியப்படாத மந்த்ரங்கள், அனுஷ்டிக்கப்பட வேண்டிய விஷயங்களை வெளியிடுவதில் ஸமர்த்தங்களாய் ஆவதில்லை. ஆகையால் மந்த்ரார்த்தங்களை அறிந்த அனுஷ்டாதாவே கர்மபலன்களை அடைகிறான். ப்ரத்யவாயத்தையும் அடைவதில்லை என்பது ந்யாயத்தால் ஸித்தமாகியது.

मनुरपि –यदधीतमविज्ञातं निगदेनैव शब्द्यते । अनग्राविव शुष्कैधो न तज्ज्वलति कर्हिचित् इति ॥ व्यासोऽपि – पाठमात्रावसानस्तु पङ्के गौरिव सीदति इति ॥ श्रूयते च – यदेव विद्यया करोति तदेव वीर्यवत्तरम्भवतीति अर्थज्ञ इत् सकलं भद्रमश्नुते स नाकमेति ज्ञानविधूतपाप्मेति च ॥

**மனுவும்:-** அர்த்தக் ஞானமில்லாமல் அத்யயனம் செய்யப்பட்டது பாடமாத்ரத்தால் உச்சரிக்கப்பட அக்னியில்லாத சாம்பலில் உலர்ந்த ஸமித்துப் போல் ஒருகாலும் ஜ்வலிப்பதில்லை. **வ்யாஸரும்:-** அத்யயனத்தை மட்டில் முடித்தவன் (அர்த்த க்ஞானமில்லாதவன்) சேற்றில் ஆழ்ந்த பசுப்போல் வருந்துவான். **ச்ருதியும்:-** 'மந்த்ரார்த்தக் ஞானத்துடன் எக்கர்மத்தைச் செய்கின்றானோ அக்கர்மமே

அதிக வீர்யமுள்ளதாய் ஆகின்றது. 'அர்த்த க்ஞானமுள்ளவனே ஸகலமான நன்மையையும் அடைகிறான், அவன், ஜ்ஞானத்தால் பாபங்களையகற்றி ஸ்வர்க்கத்தை அடைகிறான்.

अत्र हरदत्तेन मन्त्रार्थोऽभिहितः – आपो हिष्ठा मयोभुवः। हे आपः ! यूयं मयोभुवः स्थ। मय इति सुखनाम। तस्य भावयित्र्यः स्थ। हि शब्दः प्रसिद्धौ। ता न ऊर्जे दधातन। ताः यूयं नः - अस्मान् ऊर्जे - अन्नाय दधातन - धत्त। अन्नं अस्मभ्यं दत्तेत्यर्थः। महे रणाय चक्षसे। महे - महते रणाय - रमणीयाय चक्षसे - दर्शनाय दधातन। महत् रमणीयं ज्ञानमस्मभ्यं दत्तेत्यर्थः। 'यो वः शिवतमो रसः। वः - युष्माकं सम्बन्धी, यः शिवतमो रसः सुखातिशयहेतुः रसनेन्द्रियग्राह्यः, तस्य भाजयतेह नः। तस्येति द्वितीयार्थे षष्ठी। तं रसं भाजयत। इह लोके नः अस्मान्॥ किमिव। उशतीरिव मातरः। उशतीः उशत्यः कामयमानाः, मातरः पुत्रान् यथा क्षीरादिरसेन भाजयन्ति, तथा युष्मदीयं रसमस्मभ्यं दत्तेत्यर्थः। अपि च – तस्मा अरङ्गमामवः। तस्मै द्वितीयार्थे चतुर्थी। तं रसं, अरं अलं पर्याप्तं, गमाम प्राप्नुयामेत्यर्थः। छान्दसं रूपम्। वः युष्माकम्। यस्य क्षयाय जिन्वथ। यस्य तृतीर्थे षष्ठी। येन रसेन क्षयाय निवासाय। निवासवचनोऽयमाद्युदात्तत्वात्। द्वितीयार्थे चतुर्थी। क्षयं निवासमस्मदीयं जिन्वथ प्रीणयथ। आपो जनयथा च नः। हे आपः येन च पुत्रादिप्रजाः नः अस्माकं जनयथ सम्पादयथेति॥

இங்கு, ஹரதத்தால், மந்த்ரார்த்தம் சொல்லப்பட்டுள்ளது. 'ஆபோஹி + புவ:' ஆப:= ஓ ஜலங்களே! நீங்கள், மயோபுவ: ஸ்த - மய: என்பது ஸுகத்தின் நாமம். அந்த ஸுகத்தைச் செய்பவர்களாய் இருக்கின்றீர்கள். ஹி - ப்ரஸித்தம். 'தாந + ததாதன' தா: அந்த நீங்கள், ந: - எங்களை, ஊர்ஜே - அன்னத்தின்

பொருட்டு, ததா தந - தரியுங்கள். அன்னத்தை எங்களுக்கு கொடுங்கள். 'மஹே + சக்ஷஸே - தர்சனத்திற்காக, சிறந்ததும் ரமணீயமுமான க்ஞானத்தை எங்களுக்கு கொடுங்கள். 'யோவஶ் சிவதமோரஸ:' வ: - உங்களுடையதாகிய எந்த, சிவதம: - ஸுகாதிசயத்திற்குக் காரணமாகிய, ரஸ: - நாக்கிஞல் க்ரஹிக்கக் கூடிய ரஸமுண்டோ, 'தஸ்ய + ஹந:' தஸ்ய - அந்த ரஸத்தை, பாஜயத - அடைவியுங்கள், இஹ - இவ்வுலகில், ந:- எங்களை எதைப்போல்? 'உசதீரிவமாதர:' உசதீ:=வாத்ஸல்யமுள்ள, மாதர: இவ = தாய்மார்கள் போல். அவர்கள் எப்படிப் புத்ரர்களுக்குப் பால் முதலிய ரஸத்தைக் கொடுக்கின்றனரோ அப்படி உங்களுடைய ரஸத்தை எங்களுக்கு கொடுங்கள் என்று பொருள். இனியும், 'தஸ்மா அரங்கமாமவ:' வ:= உங்களுடைய தஸ்மை - அந்த ரஸத்தை அரம் வேண்டும்வரை, கமாம - அடையக்கடவோம். 'யஸ்யக்ஷயா யஜிந்வத' யஸ்ய - எந்த ரஸத்தால், க்ஷயாய - எங்களுடைய நிவாஸத்தை, 'க்ருஹத்தை', ஜிந்வத - ப்ரீதியை அடைவிக்கின்றீர்களோ, 'ஆபோஜநயதாசந:' ஆப- ஹே ஜலங்களே! எந்த ரஸத்திஞல் புத்ரன் முதலிய ப்ரஜைகளை ந:- எங்களுக்கு, ஜநயதச -உண்டு பண்ணுகிறீர்களோ, அந்த ரஸத்தை அடையக் கடவோம்.

व्यासः — आपोहिष्ठाः सुप्रसिद्धा नवपादा भवन्ति ते । पादेपादे क्षिपेद्वारि ब्रह्महत्यां व्यपोहति इति । श्रूयते च – आपो हिष्ठामयोभुव इत्यद्भिर्मार्जयन्ते । आपो वै सर्वा देवताः । देवताभिरेवात्मानं पवयन्ते इति ॥ एवमुक्तविधिना मार्जयित्वा सूर्यश्चेत्यपः पिबेत्।

**வ்யாஸர்:**- 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்கள் மிக ப்ரஸித்தமாகியவை. அவை ஒன்பது பாதங்களுடையவை. ஒவ்வொரு பாதத்தாலும் ஜலத்தை ப்ரோக்ஷிக்கவும். ப்ரோக்ஷிப்பவன் ப்ரம்ஹஹத்யையையும் போக்குகிறுன்.

ச்ருதியும்:- 'ஆபோஹிஷ்டா' முதலியவையால் ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். ஜலங்கள் ஸர்வதேவதைகளாயுமுள்ளன. தேவதைகளால் தன்னைச் சுத்தனுக்குகின்றனர். இவ்விதம் சொல்லிய விதிப்படி மார்ஜனம் செய்து கொண்டு, பிறகு 'ஸூர்யஸ்ச' என்ற மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகவேண்டும்.

तथा च शौनकः – अग्निश्चेत्यनुवाकेन सायंकाले त्वपः पिबेत्। सूर्यश्चेत्यनुवाकेन प्रातःकाले पिबेदपः ।। आपः पुनन्त्वित्येतेन मध्याह्ने च जलं पिबेत्। अब्लिङ्गाभिः पवित्राभिः प्रोक्षयेत् कुशवारिणा इति ।। व्यासोऽपि – सायमग्निश्चमेत्युक्त्वा प्रातः सूर्येत्यपः पिबेत्। आपः पुनन्तु मध्याह्ने ततः त्वद्भिर्द्विराचमेत्।। ततः सुरभिमत्या च मार्जनं तु कुशोदकैः। कुर्याद्धिरण्यवर्णाभिर्यथाशाखं तु मार्जनम् इति ।।

அவ்விதமே, சௌனகர்:-- 'அக்னிஸ்ச' என்ற அனுவாகத்தால், மாலையில் ஜலத்தைப் பருகவும், 'ஸூர்யஸ்ச' என்ற அனுவாகத்தால் காலையில் ஜலத்தைப் பருகவும் 'ஆப: புனந்து' என்ற அனுவாகத்தால் மத்யாஹ்னத்தில் ஜலத்தைப் பருகவும். பிறகு சுத்தங்களான, அப்லிங்கங்களான 'ஆபோஹிஷ்டா' முதலியதான மந்த்ரங்களால் குச ஜலத்தால் ப்ரோக்ஷணம் செய்யவும். வ்யாஸரும்:- மாலையில் 'அக்னிஸ்ச' என்றும், காலையில் 'ஸூர்யஸ்ச' என்றும், மத்யாஹ்னத்தில் 'ஆப: புனந்து' என்றும் மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகவேண்டும். பிறகு இருமுறை ஆசமனம் செய்யவும். பிறகு 'ஸுரபிமதீ' என்ற ருக்காலும், 'ஹிரண்யவர்ண:' என்பது முதலாகிய ருக்குகளாலும், குசோதகங்களால் மார்ஜனத்தை, அவரவர் சாகையில் சொல்லியபடி செய்ய வேண்டும்.

बोधायनोऽपि – अथातस्सन्ध्योपासनविधिं व्याख्यास्यामस्तीर्थं गत्वा प्रयतोऽभिषिक्तः प्रक्षालितपाणिपादोऽप आचम्याब्लिङ्गाभिः प्रोक्ष्य अग्निश्च मामन्युश्चेति सायमपः पीत्वा

सूर्यश्च मामन्युश्चेति प्रातः सपवित्रेण पाणिना सुरभिमत्याऽब्लिङ्गाभिर्हिरण्यवर्णाभिः पावमानीभिरन्यैश्च पवित्रै रात्मानं प्रोक्ष्य प्रयतो भवति इति ॥

**போதாயனரும்:-** *இனி ஸந்த்யோபாஸனத்தின் விதியைச் சொல்லுகிறோம். புண்ய தீர்த்தத்தை அடைந்து, சுத்தனாய், ஸ்நானம் செய்தவனாய், கை கால்களை அலம்பியவனாய், ஆசமனம் செய்து, ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, 'அக்னிஶ்ச' என்ற மந்த்ரத்தால் மாலையிலும், ஸுர்யஶ்ச என்பதால் காலையிலும் ஜலத்தைப் பருகி, பவித்ரமணிந்த கையால், ததிக்ராவ்ணண:, ஆபோஹிஷ்ட, ஹிரண்யவர்ண:, பவமான: என்ற மந்த்ரங்களாலும், மற்றப் பவித்ர மந்த்ரங்களாலும் தன்னை ப்ரோக்ஷித்துப் பரிசுத்தனாகிறான்.*

पितामहोऽपि – सूर्यश्चेत्यनुवाकेन त्वपः पीत्वा समाहितः । आत्मानं प्रोक्षयेत् पश्चात् सपवित्रकरो द्विजः ॥ प्रोक्षेत् सुरभिमत्या च आपोहिष्ठादिभिस्तथा । प्रदक्षिणं परिषिच्य त्वारभेच्छ्रुतिचोदितम् इति ॥ सुरभिमती - दधिक्रावृण्ण इति ऋक् ॥ दधिक्राव्ण्णो अकारिषमिति सुरभिमतीमृचं वदन्ति । प्राणा वै सुरभयः । प्राणानेवात्मन्दधते इति श्रुतेः ॥

**பிதாமஹரும்:-** *ப்ராம்ஹணன் பவித்ர மணிந்தகையுடன் கவனமுள்ளவனாய், 'ஸுர்யஶ்ச' என்ற அனுவாகத்தால் ஜலத்தைப்பருகி, பிறகு 'ஸுரபிமதி' யாலும், 'ஆபோஹிஷ்ட' முதலியவைகளாலும் ப்ரோக்ஷிக்க வேண்டும். ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றிப் பிறகு வேதம் விதித்ததைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஸுரபிமதீ - ததிக்ராவண்ண: என்ற ருக்கு. அவ்விதம் ச்ருதியுள்ளது.*

भरद्वाजः – सूर्यानुवाकस्याग्निर् ऋषिश्छन्दो गायत्रमंशुमान् । देवता विनियोगोऽपां प्राशने समुपस्पृशेत् । देवता विनियोगोऽपां

प्राशने समुपस्पृशेत् ।। ऋषिरग्निश्चमेत्यस्य सूर्यो वा वामनोऽपि वा । छन्दो गायत्रमित्युक्तं देवताऽग्निः समीरितः ।। आपः पुनन्तुमन्त्रस्य विश्वेदेवास्तथर्षयः । छन्दोऽनुष्टुब्देवताऽऽपो बृहस्पतिरथापि वा । आत्मानं प्रोक्षयेत् पश्चाद्दधिक्राव्ण्ण इत्यृचा । आपोहिष्ठादितिसृभिः ऋग्भिश्च सकुशैर्जलैः । दधिक्राव्ण्ण इत्यस्य वामदेव ऋषिः स्मृतः । छन्दोऽनुष्टुब्विश्वेदेवा देवताः प्रोक्षणे स्मृताः ।। व्याहृत्या तत आत्मानं परिषिञ्चेत् समस्तया इति ।।

பரத்வாஜர்:- 'ஸூர்யஶ்ச' என்ற அனுவாகத்திற்கு, அக்னி ருஷி, காயத்ரம் சந்தஸ், ஸூர்யன் தேவதை, ஜலப்ராசனத்தில் விநியோகம். இவ்விதமறிந்து பருகவும். 'அக்னிஶ்ச' என்பதற்கு ஸூர்யன், அல்லது வாமனன் ருஷி, காயத்ரம் சந்தஸ், அக்னி தேவதை, 'ஆப:புனந்து' என்பதற்கு விச்வே தேவர்கள் ருஷிகள், அனுஷ்டுப் சந்தஸ், அப்புகள் அல்லது ப்ருஹஸ்பதி தேவதை. பிறகு 'ததிக்ராவண்ண;' என்ற ருக்கினாலும் ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளாலும் குசஜலங்களால் தன்னை ப்ரோக்ஷிக்க வேண்டும். 'ததிக்ராவ்ண்ண:' என்பதற்கு வாமதேவர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், விச்வே தேவர்கள் தேவதை, ப்ரோக்ஷணத்தில் விநியோகம். பிறகு சேர்க்கப்பட்ட வ்யாஹ்ருதிகளால் தன்னை ஜலத்தால் சுற்ற வேண்டும்.

चर्यापादे – पादौ हस्तौ च संक्षाल्याचम्य बद्धशिखश्शुचिः । प्राणानायम्य सङ्कल्प्य सन्ध्योपासनमाचरेत् ।। प्रोक्ष्याब्लिङ्गै-र्व्याहृतिभिः परिषिच्य समन्त्रकम् । पीत्वाऽऽचम्य दधिक्राद्यैः प्रोक्ष्याद्भिः परिषिच्य चेति ।। स्मृत्यन्तरेऽपि – सूर्यश्चेत्यनुवाकस्य छन्दो गायत्रमुच्यते । सविता देवता त्वस्य ऋषिरग्निरिति स्मृतः ।। दधिक्राव ऋचोऽनुष्टुब्वामदेव ऋषिः स्मृतः । विश्वेदेवा देवता स्याद्दधिक्रावेति वा स्मृतः इति ।। छन्दोगानान्तु आचमनमन्त्रौ

गौतमेनोक्तौ अहश्चमाऽऽदित्यश्च पुनात्विति प्रातः, रात्रिश्च मा वरुणश्च पुनात्विति सायम् इति ।।

*சர்யாபாதத்தில்:- கால் கைகளை அலம்பி, ஆசமனம் செய்து, சிகையைக் கட்டி, சுத்தனாய், ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்ப்பித்து, ஸந்த்யோபாஸநம் செய்யவும். ஆபோஹிஷ்டாதிகளால் ப்ரோக்ஷித்து, வ்யாஹ்ருதிகளால் ஜலத்தால் தன்னைச் சுற்றி, மந்த்ரத்துடன் ஜலத்தைப் பருகி, 'ததிக்ரா' முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, ஜலத்தால் தன்னைச் சுற்றவும். மற்றொரு ஸ்ம்ருதியில் :- 'ஸூர்யஸ்ச' என்ற அனுவாகத்திற்குக் காயத்ரம் சந்தஸ், ஸவிதா தேவதை, அக்னி ருஷி. 'ததிக்ரா' என்ற ருக்குக்கு அனுஷ்டுப் சந்தஸ், வாமதேவர் ருஷி, விச்வே தேவர் தேவதை, அல்லது, ததிக்ராவா தேவதையாம். சந்தோகர்களுக்கு ஆசமன மந்த்ரங்கள் கௌதமரால் சொல்லப்பட்டுள்ளன - 'அஹஸ்ச + புநாது' என்று காலையில், 'ராத்ரிஸ்ச + புநாது' என்று மாலையில் என்று.*

मन्त्रार्थस्तु – सूर्यश्च मामन्युश्च मन्युपतयश्च । सूर्यो नाम अह्नोऽधिपतिः मण्डलान्तर्वर्ती देवः । अह्नि करिष्यमाणानां कर्मणां तदधीनत्वात् तत्प्रार्थना । मन्युः क्रोधः तदधीनत्वात् पाप प्रवृत्तेरिति तत्प्रार्थना । मन्युपतयश्च मन्युः क्रोधः पतिः नियोजकः येषामिन्द्रियाणां तानीन्द्रियाणि मन्युपतयः । तैश्चक्षुरादीन्द्रियबडिशै र्विषयदुरन्तसूनास्थानेषु स्वस्याकर्षणाभावाय तद्विषय प्रार्थना । सर्वत्र चकारः समुच्चयार्थः । मन्युकृतेभ्यः पापेभ्यो रक्षन्ताम् । काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः । महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् इत्यादिशास्त्रप्रसिद्ध क्रोधाख्यमन्युकृतेभ्यः तन्निमित्तेभ्यः पापेभ्यः सर्वेभ्यो रक्षन्तां मा - माम् । यथाऽहं मन्युपरवशो भूत्वा पापं न करिष्यामि, तथा सूर्यादयो रक्षन्त्वित्यर्थः ।

மந்த்ரங்களின் அர்த்தமோவெனில் - 'ஸூர்யஶ்ச + மன்யுபதயஶ்ச' ஸூர்யன் என்பவர், பகலுக்கு அதிபதியும் மண்டலத்தில் உள்ளிருப்பவருமான தேவன். பகலில் செய்யப் போகும் கர்மங்கள் அவருக்கு அதீனமானதால் அவரைப்பற்றி ப்ரார்த்தனை. மன்யு என்பது க்ரோதம். பாபத்தில் ப்ரவ்ருத்தி அவனதீனமானதால் அவனைப்பற்றி ப்ரார்த்தனை. மன்யுபதயஶ்ச = மன்யு என்கிற க்ரோதம் பதி = ஏவுகின்றவன் எந்த இந்த்ரியங்களுக்கோ அந்த இந்த்ரியங்கள் மன்யுபதிகள் எனப்படுகின்றன. அந்தக்கண் முதலிய இந்த்ரியங்களாகிய தூண்டில்களால், விஷயங்களாகிய கொடிய வதஸ்தானங்களில், தன்னை இழுக்காமல் இருப்பதற்காக அவைகள் விஷயமான ப்ரார்த்தனை. சகாரம் சேர்ப்பதற்காக. மன்யுக்ருதேப்ய: பாபேப்யோ ரக்ஷந்தாம். 'காமஏஷ க்ரோதஏஷ:' என்பது முதலிய சாஸ்த்ரங்களால் ப்ரஸித்தனுன. க்ரோத எனும் மன்யுவினுல் செய்யப்பட்ட அவனை நிமித்தமாயுடைய பாபங்கள் எல்லாவற்றினின்றும் என்னைக் காக்க வேண்டும். எவ்விதம் நான் மன்யுக்கு அதீனனுகிப் பாபத்தைச் செய்யாமலிருப்பேனே அவ்விதம் ஸூரியன் முதலியவர்கள் என்னைக் காக்க வேண்டும் என்பது பொருள்.

किञ्च यद्रात्रिया पापमकार्षम्। रात्र्या - सप्तम्यर्थे तृतीया। रात्रावित्यर्थः । यद्वा रात्रिशब्देन तदभिमानिनी देवतोच्यते । रात्र्यभिमानिन्या देवतया प्रेरितः सन् यत्पापं रात्रौ कृतवानस्मि। तदेव साधनतो विशिनष्टि - मनसा वाचा हस्ताभ्याम्। पद्भ्यामुदरेण शिश्नेति। मनसा परहिंसादिचिन्तनेन, वाचा अनृतभाषणादिभिः, हस्ताभ्यां ब्राह्मणापगुरणादिभिः, पद्भ्यां अनाक्रमितव्यक-लिङ्गदेशाद्याक्रमणादिभिः, उदरेण अभक्ष्यभक्षणादिभिः, शिश्ना-शिश्नेन । सुपां सुलुगित्याकारः । अगम्यागमनादिभिः, उपलक्षणत्वादन्येन्द्रियैश्च यच्च पापमकार्षम्। रात्रिस्तदवलुम्पतु - रात्र्यभिमानिनी देवता अग्निचन्द्रौ वा तत्सर्वमवलुम्पतु छिनत्तु विनाशयतु।

*இனியும், - 'யத்ராத்ரியா பாபமகார்ஷம்'. ராத்ர்யா ராத்ரியில் அல்லது, ராத்ரி சப்தத்தால் அதற்கு அபிமானி தேவதை சொல்லப்படுகிறது. ராத்ரியபிமானினியான தேவதையால் ஏவப்பட்டவனாய், எந்தப் பாபத்தை ராத்ரியில் செய்தேனோ அதையே ஸாதனங்களால் விசேஷிக்கின்றான். 'மனஸாவாசா + சிச்னா' என்று. மனதினால் பிறருக்கு ஹிம்ஸை முதலியதைச் சிந்திப்பதால், வாக்கினால் பொய் பேசுவது முதலியவைகளால், ஹஸ்தங்களால் ப்ராம்ஹணனை அடிப்பதற்குக் கையை ஓங்குவது முதலியவைகளால், கால்களால் செல்லக் கூடாத களிங்கதேசம் முதலியதைச் செல்வதால், வயிற்றினால் நிஷித்த பக்ஷணம் முதலியவையால், சிச்னா = சிச்னத்தால் அகம்யாகமனம் முதலியவைகளால். உபலக்ஷணமானதால் மற்ற இந்த்ரியங்களாலும், எந்தப் பாபத்தைச் செய்தேனோ, ராத்ரிஸ்ததவலும்பது' = ராத்ர்யபிமானினியான தேவதை, அல்லது அக்னிசந்த்ரர்கள் அது முழுவதையும், அவலும்பது = அகற்ற வேண்டும்.*

यत् किञ्च दुरितं मयि। इदमहं माममृतयोनौ। सूर्ये ज्योतिषि जुहोमि स्वाहा। इह जन्मनि जन्मान्तरे वा कृतं यत्किञ्चनापि दुरितं पापराशिः मयि वर्तते, इदं पापजातं सर्वं मां चास्य पापस्य कर्तारं लिङ्गशरीराभिमानिनं अमृतयोनौ अमृतं तदेव योनिश्चेत्यमृतयोनिः। तस्मिन्नमृते अमरणधर्मके नित्ये योनौ सर्वकारणे सूर्ये - सुष्ठु ईरयति प्रेरयतीति सूर्यः, तस्मिन्नादित्यात्मके ज्योतिषि स्वयं प्रकाशबोधैकताने आत्मनि अहं जुहोमि प्रक्षिपामि। आत्मवह्नौ प्रक्षिप्य तेनाग्निना पूर्वोक्तं पापं सर्वं भस्म करोमीति यावत्॥

*'யத்கிஞ்சதுரிதம்மயி + ஜுஹோமிஸ்வாஹா' இந்த ஜன்மத்தில், ஜன்மாந்தரத்திலோ செய்யப்பட்ட எந்த துரிதம் - பாபக்குவியல் என்னிடம் இருக்கின்றதோ இந்தப்பாபக் குவியல் முழுவதையும், இந்தப் பாபத்தைச்*

செய்தவனும், லிங்கசரீராபிமானியுமான என்னையும், அம்ருதயோநெள = மரண தர்மமற்றதும், ஸர்வகாரணமுமான, ஸூர்யே = நன்றாய் ப்ரேரணம் செய்வதுமான, ஆதித்யஸ்வரூபமான, ஜ்யோதிஷி - ஸ்வயம் ப்ரகாச போதமயமான ஆத்மாவில், ஜுஹோமி - நான் சேர்க்கிறேன். ஆத்மாக்னியில் சேர்த்து அந்த அக்னியால் முன் சொல்லிய பாபம் முழுவதையும் பஸ்மமாக்குகின்றேன் என்பது பொருள்.

अग्निश्चेत्यस्य च सूर्यश्चेत्यनेन समानोऽर्थः । इयांस्तु विशेषः । अग्निः रात्र्यधिपतिः । 'यदह्ना' अहस्तदवलुम्पतु इत्यत्र च अह्नः पतिरादित्योऽहरित्युच्यते । सत्ये ज्योतिषीति अवितथस्वभावे ज्योतिषीति ॥

'அக்னிஶ்ச' என்கிற மந்த்ரத்திற்கும் அர்த்தம் 'ஸூர்யஶ்ச' என்பதற்குப் போலவே. இது மட்டில் விசேஷம். அக்னி: என்பதற்கு ராத்ரியின் அதிபதி என்று பொருள். 'யதஹ்ந', 'அஹஸ்ததவலும்பது' என்றவைகளிலும், பகலுக்குப்பதியாகிய ஆதித்யன் 'அஹ':' எனப்படுகிறான். 'ஸத்யேஜ்யோதிஷி' என்பதற்கு ஸத்ய ஸ்வபாவமான ஜ்யோதிஸ்ஸில் என்பது பொருள்.

आपः पुनन्त्विति – आपः अभिमन्त्रिताः । पुनन्तु - शोधयन्तु पृथिवीम् । पृथिव्यंशस्य बहुलत्वात् पृथिवीशब्देन स्थूलशरीरमुच्यते । पृथिवी पूता - पूतं शरीरं, लिङ्गशरीराभिमानिनं मां पुनातु । तद्गतरागद्वेषपापादिमलनिरासेन शोधयतु । पुनन्तु ब्रह्मणस्पतिः । एकवचनस्य बहुवचनम् । ब्रह्मणस्पतिश्च भगवान् पुनातु । परं ब्रह्म विश्वतः पूतम् । प्रथमैकवचनस्याकारः । वेदो वा ब्रह्म ।यदुच्छिष्टं - अप्रायत्यकरं मलादि, यच्चाभोज्यं पतिताद्यन्नम्, यद्वा मम सम्बन्धि दुश्चरितं परदारगमनादिकं, तन्निमित्तं सर्वमघजातं पुनन्तु आपः । असतां च द्रव्यप्रतिग्रहनिमित्तं पापं शोधयन्तु नाशयन्तु ।

अपास्ताशेषपापं मां स्वाहा - प्रक्षिपामि निरस्तसमस्तोपप्लवे परमात्मनि एकीकरोमीत्यर्थः।

'ஆப:புனந்து' என்பதின் பொருள். ஆப: - அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலங்கள், புனந்து - சுத்தி செய்ய வேண்டும். ப்ருதி வீம் - ப்ருத்வியை. பூமியின் அம்சம் அதிகமுள்ளதால், ப்ருதிவீ சப்தத்தால் ஸ்தூலசரீரம் சொல்லப்படுகிறது. ப்ருதிவீ பூதா - சுத்தமாக்கப்பட்ட சரீரமானது. மாம் - லிங்கசரீராபிமானியான என்னைச் சுத்தம் செய்ய வேண்டும். லிங்க சரீரத்திலுள்ள ராகம், த்வேஷம், பாபம் முதலிய மலங்களைப் போக்குவதால் சுத்தம் செய்ய வேண்டும். புனந்து ப்ரம்ஹணஸ்பதி: - ப்ரம்ஹாவிற்குப் பதியாகிய பகவானும் சுத்தி செய்ய வேண்டும். எங்கும் சுத்தமான பரப்ரம்ஹமும் சுத்தி செய்ய வேண்டும். ப்ரம்ஹ சப்தத்தால் வேதமும் சொல்லப்படலாம். யதுச்சிஷ்டம் - அசுத்தியைச் செய்யும் மலம் முதலியது எதுவோ, அபோஜ்யம் - புஜிக்கத்தகாத பதிதாத்யன்னம் முதலியது எதுவோ, என்னைச் சேர்ந்த, துச்சரிதம் - பரதாரகமனம் முதலியது எதுவோ, அந்த நிமித்தமாய் உள்ள ஸகல பாபராசியையும் ஜலங்கள் சோதிக்க வேண்டும். அஸத்துக்களின் த்ரவ்யத்தை ப்ரதிக்ரஹித்ததாலுண்டாகிய பாபத்தையும் போக்க வேண்டும். ஸகல பாபங்களுமற்ற என்னை, ஸ்வாஹா - சேர்க்கிறேன், ஸகலவித தொந்திரையுமற்ற பரமாத்மாவினிடத்தில் ஒன்று சேர்க்கிறேன், என்பது பொருள்.

अत्र विष्णुः – जानुभ्यामुपरिष्टात्तु शुष्कवासाः स्थितो जले।
सन्ध्यामाचमनं कुर्वन् शुचिः स्यादशुचिः स्वयम् इति ।।

இங்கு, விஷ்ணு:- உலர்ந்த வஸ்த்ரத்தைத் தரித்தவன், முழங்கால்களுக்கு மேலான ஜலத்தில் நின்று, ஸந்த்யா வந்தனம், ஆசமனம் இவைகளைச் செய்தால், தான் சுத்தனாயினும் அசுத்தனாவான்.

मन्त्राचमनानन्तरं नारायणस्तु विशेषमाह – स्पृष्ट्वा चाभिष्टुता तोयं मूर्ध्नि ब्रह्ममुखेन तु । आपोहिष्ठेति सूक्तेन दर्भैर्मार्जनमाचरेत् इति ॥ अभिष्टुत् ओङ्कारः । ब्रह्ममुखमपि मनुनोक्तम् – ओङ्कारपूर्विकास्तिस्रो महाव्याहृतयस्तथा । त्रिपदा चैव गायत्री विज्ञेया ब्रह्मणो मुखम् इति ॥ तेन तोयं स्पृष्ट्वा तेन तोयेन आपो हिष्ठेति सूक्तेन दर्भैर्मूर्ध्नि मार्जनमाचरेदित्यर्थः ॥ कात्यायनस्तु – शिरसो मार्जनं कुर्यात् कुशैः सोदकबिन्दुभिः । प्रणवो भूर्भुवः स्वश्च गायत्री च तृतीयका ॥ अब्दैवतं त्र्यृचं चैव चतुर्थमिति मार्जनमिति ॥

*மந்த்ராசமனத்திற்குப் பிறகு விசேஷத்தைச் சொல்லுகிறார், நாராயணர்:- அபிஷ்டுத்தினாலும், ப்ரம்ஹமுகத்தாலும் ஜலத்தைத் தொட்டு, 'ஆபோஹிஷ்ட' என்ற ஸூக்தத்தினால், தர்ப்பங்களால் சிரஸ்ஸில் ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். அபிஷ்டுத் - ஓங்காரம். ப்ரம்ஹமுகமும் மனுவினால் சொல்லப்பட்டுள்ளது. ஓங்காரத்தை முதலில் உடைய மூன்று மஹாவ்யாஹ்ருதிகளும், மூன்று பாதங்களுடைய காயத்ரியும் ப்ரஹ்மத்தின் முகம். அதனால் ஜலத்தைத் தொட்டு, அந்த ஜலத்தால் 'ஆபோஹிஷ்ட' என்ற ஸூக்தத்தினால், தர்ப்பங்களால் தலையில் மார்ஜனம் செய்ய வேண்டும் என்று பொருள். காத்யாயனரோவெனில்:- ''ஜலத் திவலைகளுடன் கூடிய குசங்களால் சிரஸ்ஸுக்கு ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். ப்ரணவம், பூர்ப்புவஸ்ஸுவ:, காயத்ரீ மூன்றாவது, ஆபோஹிஷ்டாதி மூன்று ருக்குகள் நான்காவது, இவை மார்ஜன மந்த்ரங்கள்'' என்றார்.*

मन्त्राचमनानन्तरप्रोक्षणं बहुस्मृत्यनुरोधात् शिष्टाचाराच्च सुरभिमत्याऽब्लिङ्गाभिश्च तिसृभिरवश्यं कर्तव्यम् । अधिकं तु यथास्वाचारं ग्राह्यम् ॥

மந்த்ராசமனத்திற்குப் பிறகு செய்யப்படும் ப்ரோக்ஷணமானது, அநேக ஸ்ம்ருதிகளை அனுஸரிப்பதாலும், சிஷ்டாசாரத்தாலும், ஸுரபிமதீ, 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகள் இவைகளால் அவச்யம் செய்ய வேண்டும். இதை விட அதிகமானுல் அதை அவரவர் ஆசாரப்படி க்ரஹிக்கவும்.

अर्थस्तु – दधिक्राव्ण्णो अकारिषम्। दधि क्रामति प्राप्नोतीति दधिक्रावा । एतन्नामको दधिप्रियः कश्चिद्देव(ता)विशेषः । अग्निरित्यन्ये । तस्य देवस्य अकारिषं - अहं कर्म कृतवानस्मि । कीदृशस्य ? जिष्णोः - जयशीलस्य, अश्वस्य - व्यापिनः, वाजिनः - अन्नवतः । स देवः नः अस्माकं मुखा - मुखं, सुरभि करत् - कर्पूरादिद्रव्यसमृद्धिप्रदानेन सुगन्धोपेतं करोतु । नः - अस्माकं, आयूंषि च प्रतारिषत् प्रवर्द्धयत्विति । शुद्धिहेतुत्वञ्च श्रूयते दधिक्राव्ण्णा पुनातीति ।।

இதன் அர்த்தமோவெனில் - 'ததிக்ராவ்ண்ணோ அகாரிஷம்'. தயிரை அடைவதால் 'ததிக்ராவா' என்று பெயருள்ள, தயிரில் ப்ரீதியுள்ள ஒரு தேவன், அக்னி என்கின்றனர் சிலர். அந்தத் தேவனுக்கு, அகாரிஷம் - நான் கர்மத்தைச் செய்தவனுய் ஆகின்றேன். ஜிஷ்ணோ: - ஜயசீலனுக்கு, அச்வஸ்ய - வ்யாபித்தவனுக்கு, வாஜிந:- அன்னம் உடையவனுக்கு, அந்தத் தேவன், ந:- எங்களுடைய, முகா - முகத்தை, ஸுரபிகரத் - கர்ப்பூரம் முதலிய நல்வாஸனையுள்ள த்ரவ்யஸம்பத்தைக் கொடுப்பதால் நல்வாஸனை உள்ளதாய் செய்ய வேண்டும். ந: - எங்களுக்கு, ஆயூம்ஷிச - வாழ்நாட்களையும், ப்ரதாரிஷத் - வ்ருத்தி செய்ய வேண்டும். சுத்தி ஹேதுத் தன்மையும் ச்ருதியால் தெரிகிறது, 'ததித்ராவ்ண்ணு புநாதி' என்று,

मार्जनानन्तरं प्रजापतिः – जलपूर्णं तथा हस्तं नासिकाग्रे समर्पयेत्। ऋतञ्चेति पठित्वा तु तज्जलं तु क्षितौ क्षिपेत् इति ।। ततः

सूर्यायार्घ्यं निवेदयेत्। तत्र शौनकः – व्याहृत्या सह गायत्र्या सन्ध्यां प्रत्यञ्जलिं क्षिपेत् इति ॥ व्यासोऽपि – कराभ्यां तोयमादाय गायत्र्या चाभिमन्त्रितम्। आदित्याभिमुखस्तिष्ठन् त्रिरूर्ध्वमथ चोत्क्षिपेत् इति ॥

*மார்ஜனத்திற்குப் பிறகு* **ப்ரஜாபதி:-** *ஜலத்தால் நிறைந்த கையை மூக்கின் நுனியில் வைக்கவும். 'ருதம்ச' என்ற மந்த்ரத்தைப் படித்து, அந்த ஜலத்தை பூமியில் விடவேண்டும். பிறகு ஸூர்யனின் பொருட்டு அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். அதில்,* **சௌனகர்:-** *வ்யாஹ்ருதியுடனும், காயத்ரியுடனும், ஸந்த்யையைக் குறித்து ஜலாஞ்லியை விடவேண்டும்.* **வ்யாஸரும்:-** *கைகளால் ஜலத்தை எடுத்து, காயத்ரியால் அபிமந்த்ரித்து, ஸூர்யனுக்கு எதிராய் நின்று கொண்டு, மூன்று தடவை அர்க்யத்தை உயர்த்தி விடவேண்டும்.*

अत्र विशेषमाह हारीतः – सावित्र्याऽभिमन्त्रितमुदकं पुष्पमिश्रमञ्जलिना क्षिपेत् इति ॥ पितामहः – उभाभ्यां तोयमादाय हस्ताभ्यां सुसमाहितः। गायत्र्या मन्त्रिता आप प्रणवव्याहृतिपूर्वया ॥ रवेरभिमुखस्तिष्ठन्नूर्ध्वं त्रिः सन्ध्ययोः क्षिपेत् इति ॥ शङ्खोऽपि – सूर्यायैव तु गायत्र्या त्रिसन्ध्यास्वञ्जलिं क्षिपेत्। प्रातर्मध्याह्नयोस्तिष्ठन् सायमासीन एव वा। मन्देहानां वधार्थाय प्रक्षिपेदुदकाञ्जलिम्। प्रायश्चित्तार्थमाचम्य मुच्यते दैत्यहत्यया ॥ प्रणवव्याहृतीभिश्च कृत्वाऽऽत्मानं प्रदक्षिणम्। आचम्यैव ततस्तिष्ठन् ध्यायेत् सन्ध्यां समाहितः इति ॥

*இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார்.* **ஹாரீதர்:-** *காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தைப் புஷ்பங்களுடன் கூடியதாய் அஞ்ஜலியால் விடவேண்டும்.* **பிதாமஹர்:-** *கவனமுடையவனாய், இரு கைகளாலும் ஜலத்தை எடுத்து, ப்ரணவ வ்யாஹ்ருதிகளுடன் கூடிய*

காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட அந்த ஜலத்தை, ஸூர்யனுக்கு நேராய் நின்று கொண்டு, மூன்று தடவை, இரு ஸந்த்யைகளிலும் உயர்த்தி விடவேண்டும். **சங்கரும்:-** மூன்று ஸந்த்யைகளிலும், ஸூர்யனின் பொருட்டு காயத்ரியால் அர்க்யத்தை விடவேண்டும். காலையிலும், மத்யாஹ்னத்திலும் நின்று கொண்டும், மாலையில் உட்கார்ந்து கொண்டும் விடவேண்டும். மந்தேஹர்கள் என்கிற ராக்ஷஸர்களின் வதத்திற்காக அஞ்ஜலியை விடவேண்டும். ப்ராயச்சித்தத்திற்காக ஆசமனம் செய்தால், ராக்ஷஸஹத்யாதோஷத்தால் விடப்படுகிறான். ப்ரணவம், வ்யாஹ்ருதிகள் இவைகளால், தன்னை ப்ரதக்ஷிணம் செய்து, ஆசமனம் செய்து, பிறகு நின்றவனாய், கவனமுடையவனாய் ஸந்த்யையை த்யானிக்க வேண்டும்.

पारिजाते – ईषन्नम्रः प्रभाते तु मध्याह्ने तु ऋजुस्तथा। गायत्र्या प्रक्षिपेदर्घ्यं सायं तूपविशन् भुवि ।। गोशृङ्गमात्रमुद्धृत्य रविं दृष्ट्वा जलाञ्जलिम्। द्वौ पादौ च समौ कृत्वा पार्ष्णी उद्धृत्य विक्षिपेत् इति ।। सङ्ग्रहेऽपि – द्वौ हस्तौ युग्मतः कृत्वा पूरयेदेकमञ्जलिम् । गोशृङ्गमात्रमुद्धृत्य जलमध्ये जलं क्षिपेत् ।। जलेष्वर्घ्यं प्रदातव्यं जलाभावे शुचिस्थलम् । सम्प्रोक्ष्य वारिणा सम्यक्ततोऽर्घ्याणि प्रदापयेत्।। मुक्तहस्तेन दातव्यं मुद्रां तत्र न कारयेत्। तर्जन्यङ्गुष्ठयोर्योगे राक्षसी मुद्रिका स्मृता।। राक्षसी मुद्रिकादत्तं तत्तोयं रुधिरं भवेत् इति ।।

**பாரிஜாதத்தில்:-** காலையில் கொஞ்சம் குனிந்து நிற்பவனாயும், மத்யாஹ்னத்தில் நேராய் நிற்பவனாயும், மாலையில் பூமியில் உட்கார்ந்தவனாயும், காயத்ரியால் அர்க்யத்தை விடவேண்டும். இரண்டு கால்களையும் ஸமமாய் வைத்துக் கொண்டு, குதிக்கால்களை உயர்த்தி, ஸூர்யனைப் பார்த்துக் கொண்டு, மாட்டின் கொம்பளவு தூக்கி அர்க்யத்தை விடவேண்டும். **ஸங்க்ரஹத்திலும்:-** இரு கைகளையும் சேர்த்து ஒரு அஞ்சலி ஜலத்தைப் பூர்ணமாய்ச் செய்யவும். பசுவின் கொம்பளவு உயர்த்தி

ஜலத்தின் நடுவில் அர்க்யத்தை விடவும். ஜலத்தில் அர்க்யத்தை விடவேண்டும். ஜலமில்லாவிடில் சுத்தமான ஸ்தலத்தை ஜலத்தால் ப்ரோக்ஷித்து அந்த இடத்தில் அர்க்யங்களைக் கொடுக்க வேண்டும். கைகளைப் பிரித்தவனாய்க் கொடுக்க வேண்டும். அக்காலத்தில் முத்ரையைச் செய்யக் கூடாது. தர்ஜனீ விரல் பெருவிரல் இரண்டும் சேர்ந்தால் ராக்ஷஸீ முத்ரை எனப்படுகிறது. அந்த முத்ரையுடன் கொடுக்கப்பட்ட ஜலம் ரக்தமாய் ஆகும்.

भरद्वाजः – ततः प्रदक्षिणीकृत्य त्वद्भिस्सम्प्रोक्षिते शुचौ । देशे च दर्भसंक्लृप्ते वाग्यतः प्राङ्मुखः स्थितः ।। दर्भान् धारयमाणः सन्नात्मनो ध्यानमाचरेत् । उपविश्य द्विराचम्य ग्रहादींस्तर्पयेत्ततः इति । योगयाज्ञवल्क्यः – बाह्यानि करणानि प्रत्याहृत्य अन्तःकरणं चात्मनि प्रतिष्ठाप्य स्फटिकमणिकल्पे चित्तदर्पणे प्रतिबिम्बित-मात्मानमुपाधेर्निष्कृष्य स्वे महिम्नि स्थितं सच्चिदानन्दमहमस्मीति किञ्चित् कालं ध्यायेत् इति ।। पितामहः – पाणिना जलमादाय सकृत् कुर्यात् प्रदक्षिणम् । आदित्यादीन् ग्रहांस्तत्र तर्पयेत् सुसमाहितः इति ।।

**பரத்வாஜர்:-** பிறகு ப்ரதக்ஷிணம் செய்து, ஜலத்தால் ப்ரோக்ஷிக்கப்பட்டதும், சுத்தமும், தர்ப்பம் உள்ளதுமான ஸ்தலத்தில், மௌனியாய், கிழக்கு நோக்கியவனாய் நின்று, தர்ப்பங்களைத் தரித்தவனாய், ஆத்மத்யானம் செய்ய வேண்டும். பிறகு, உட்கார்ந்து, இருமுறை ஆசமனம் செய்து, நவக்ரஹங்கள் முதலியவரைத் தர்ப்பிக்க வேண்டும். **யோகயாக்ஞவல்க்யர்:-** வெளியிலுள்ள இந்த்ரியங்களை உள்ளிழுத்து, அந்த:கரணத்தையும் தன்னிடத்தில் நிறுத்தி, ஸ்படிகரத்னத்திற்குச் சமமான சித்தமெனும் கண்ணாடியில் ப்ரதிபிம்பித்துள்ள ஆத்மாவை உபாதியினின்றும் வெளியேற்றி, தனக்கே உரிய மஹிமையிலுள்ள ஸச்சிதானந்த வஸ்துவாக நான் இருக்கிறேன் என்று கொஞ்சகாலம் த்யானிக்க வேண்டும். **பிதாமஹர்:-** கையால் ஜலத்தை எடுத்து, ஒருமுறை

ப்ரதக்ஷிணம் செய்யவும், கவனமுடையவனாய், ஆதித்யன் முதலிய க்ரஹங்களைத் தர்ப்பிக்கவும்.

जाबालियोगयाज्ञवल्क्यौ – सन्ध्ययोरुभयोः काले ध्यात्वा विष्णुं सनातनम्। निर्मलात्मा स्थितो दर्भे गायत्रीमारभेत्ततः इति ॥ अर्घ्यदाने मन्त्रान्तरमुक्तं विष्णुना – कराभ्यामञ्जलिं कृत्वा जलपूर्णं समाहितः। उदुत्यमिति मन्त्रेण तत्तोयं च क्षिपेद्भुवि ॥ ततः प्रदक्षिणं कृत्वा जलं स्पृष्ट्वा विशुध्यति । जलाभावे महामार्गे बन्धने त्वशुचावपि। उभयोः सन्ध्ययोः काले रजसा वाऽर्घ्यमुत्क्षिपेत्। तदभावेऽपि सूर्यस्य ध्यानमेव समाचरेत् इति ॥ कात्यायनस्तु – उत्थायार्कं प्रति प्रास्य त्रिकमञ्जलिमंभसः । उच्चित्रमित्यनेनैव मुपतिष्ठेदनन्तरम् इति ॥

**ஜாபாலியும், யோகயாக்ஞவல்க்யரும்**:- இரண்டு ஸந்த்யா காலத்திலும், தர்பத்தில் நின்றவனாய், நிர்மல சித்தனாய் நித்யனான விஷ்ணுவை த்யானித்து, பிறகு காயத்ரியை துவக்க வேண்டும். அர்க்ய தானத்தில் வேறு மந்த்ரத்தைச் சொல்லுகிறார் **விஷ்ணு**:- இரு கைகளையும் சேர்த்து, அந்த அஞ்ஜலியை ஜலத்தால் நிரப்பி, கவனமுடையவனாய், 'உதுத்யம்' என்ற மந்த்ரத்தால், அந்த ஜலத்தைப் பூமியில் விடவும். பிறகு ப்ரதக்ஷிணம் செய்து, ஜலத்தைத் தொட்டு சுத்தனாகிறான். ஜலம் இல்லாவிடினும், பெரு வழியிலும், காராக்ருஹத்திலும், அசுத்தியிலும், இரண்டு ஸந்த்யா காலங்களிலும் புழுதியாலாவது அர்க்யத்தை விடவேண்டும். அதுவும் இல்லாவிடில், ஸூர்ய த்யானத்தையே செய்ய வேண்டும். **காத்யாயனரோவெனில்**:- எழுந்து, ஸூர்யனைக் குறித்து மூன்று அர்க்யம் விட்டு, பிறகு 'உதுத்யம்' 'சித்ரம்' என்ற மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்ய வேண்டும்.

स्मृत्यन्तरेऽपि – उदुत्यं चित्रं तच्चक्षुरुपस्थाय त्रिभिस्सदा। सन्ध्ययोरुभयोः सूर्यं गायत्रीजपमारभेत् इति ॥ शातातपः – दर्भहीना

तु या सन्ध्या यच्च दानं विनोदकम् । असङ्ख्यातं तु यज्जप्तं तत्सर्वं स्यान्निरर्थकम् ॥ सन्ध्यातिक्रमणे यस्य सप्तरात्रं गमिष्यति । उन्मत्तदोषयुक्तोऽपि पुनस्संस्कारमर्हति इति ॥

மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- இரண்டு ஸந்த்யைகளிலும், 'உதுத்யம்' 'சித்ரம்' 'தச்சக்ஷு:' என்ற மூன்று மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்து, காயத்ரீ ஜபத்தை ஆரம்பிக்கவும். சாதாதபர்:- தர்ப்பம் இல்லாமல் செய்த ஸந்த்யோபாஸனமும், ஜலம் இல்லாமல் கொடுத்த தானமும், கணக்கிடாமல் ஜபித்த ஜபமும் முழுவதும் பயனற்றதாகும். எவன் ஏழுநாள் ஸந்த்யா வந்தனம் செய்யவில்லையோ, அவன் உன்மாத தோஷமுள்ளவனாயினும் புனருபநயனத்திற்கு அருஹனாகிறான்.

अत्र प्रयोगक्रमः – पादौ हस्तौ प्रक्षाल्य द्विराचम्य दर्भपाणिः प्राणानायम्य प्रातस्सन्ध्यामुपासिष्य इति सङ्कल्प्य वारिणा पुण्ड्रं धृत्वा, आपोहिष्ठेति मन्त्रस्य सिन्धुद्वीप ऋषिः गायत्री छन्दः आपो देवता इति शिरोमुखहृदयेषु विन्यस्य प्रोक्षणे विनियोग इति विनियोगं स्मृत्वा मन्त्रार्थस्मरणपूर्वकं आपोहिष्ठेति त्र्यृचस्यादितः सप्तभिः पादैः सप्रणवैस्तद्रहितैर्वा सप्तविप्रुषश्शिरस्युत्क्षिप्य अष्टमेनैकां विप्रुषं पादयोर्निक्षिप्य नवमेनैकां शिरस्युत्क्षिप्य सप्रणवव्याहृत्याऽऽत्मानं परिषिञ्चेत् ।

இங்கு ப்ரயோகத்தின் க்ரமம் சொல்லப்படுகிறது. கால் கைகளை அலம்பி, இருமுறை ஆசமனம் செய்து, தர்ப்பபாணியாய் ப்ராணாயாமம் செய்து, 'ப்ராதஸ் ஸந்த்யாம் உபாஸிஷ்யே' என்று ஸங்கல்பித்து, ஜலத்தால் புண்ட்ரம் தரித்து, ஆபோஹிஷ்டேதி மந்த்ரஸ்ய ஸிந்துத்வீப: ருஷி:, காயத்ரீ சந்த:, ஆபோ தேவதா என்று சிரஸ், முகம், மார்பு இவைகளில் ந்யஸித்து 'ப்ரோக்ஷணே விநியோக:' என்று விநியோகத்தை ஸ்மரித்து, மந்த்ரார்த்தங்களின் ஸ்மரணத்துடன், 'ஆபோஹிஷ்ட'

முதலிய மூன்று ருக்குகளின் முதலில் உள்ள, ப்ரணவத்துடன் கூடிய, அல்லது ப்ரணவம் சேராத, ஏழு பாதங்களால் ஏழு திவலைகளை சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்து, எட்டாவது பாதத்தால் ஒரு திவலையை பாதத்தில் ப்ரோக்ஷித்து, ஒன்பதாவது பாதத்தால் ஒரு திவலையை சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்து, ப்ரணவத்துடன் கூடிய வ்யாஹ்ருதியால் ஜலத்தால் தன்னைச் சுற்றவும்.

ततः सूर्यश्चेत्यनुवाकस्य अग्निः ऋषिः गायत्री छन्दः सूर्यो देवता आचमने विनियोग इति पूर्ववद्विन्यस्य विनियोगं च स्मृत्वा अर्थस्मरणपूर्वकं सूर्यश्चेत्यनेनाभिमन्त्रिता अपः पीत्वा द्विराचामेत्। दधिक्रावृण्ण इति मन्त्रस्य वामदेव ऋषिः अनुष्टुच्छन्दः विश्वेदेवा देवता, दधिक्रावा वा देवता, मार्जने विनियोग इति पूर्ववद्विन्यस्य एतया सुरभिमत्या आपोहिष्ठाभिस्तिसृभिश्च पादशो मार्जयित्वा पूर्ववदात्मानं परिषिञ्चेत्।

பிறகு, 'ஸூர்யஸ்ச' என்ற அனுவாகத்திற்கு அக்னி ருஷி, காயத்ரீ சந்தஸ், ஸூர்யன் தேவதை, ஆசமனத்தில் விநியோகம் என்று முன்போல் ந்யஸித்து, விநியோகத்தையும் ஸ்மரித்து, அர்த்த ஸ்மரணத்துடன் 'ஸூர்யஸ்ச' என்ற அனுவாகத்தால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தைப் பருகி, இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். 'ததிக்ராவ்ண்ண:' என்ற மந்த்ரத்திற்கு, வாமதேவர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், விச்வே தேவர், அல்லது ததிக்ராவா தேவதை, ப்ரோக்ஷணத்தில் விநியோகம் என்று முன்போல் ந்யஸித்து, இந்த ருக்கினாலும், 'ஆபோஹிஷ்ட' முதலியவையாலும் பாதம் பாதமாய் ப்ரோக்ஷித்து, முன்போல் தன்னை ஜலத்தால் சுற்றவும்.

ततः अर्घ्यप्रदानं करिष्य इति सङ्कल्प्य गायत्र्याश्च वक्ष्यमाणमृष्यादिकं विन्यस्य तदर्थं च स्मृत्वा अभिमन्त्रितं जलाञ्जलिं सूर्यायार्घ्यं त्रिरुत्क्षिपेत् । तत आचम्य सजलेन पाणिना

सकृदात्मप्रदक्षिणं कृत्वाऽसावादित्यो ब्रह्मेत्यात्मानं ध्यात्वा हृदयमभिमृश्याचम्य यथाचारं ग्रहादींस्तर्पयेत् इति ॥

பிறகு 'அர்க்யப்ரதானம் கரிஷ்யே' என்று ஸங்கல்பித்து, காயத்ரியின் (சொல்லப்போகிற) ருஷி முதலியதை ந்யஸித்து, அர்த்தத்தையும், ஸ்மரித்து, காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலாஞ்ஜலியை, ஸுர்யனுக்கு அர்க்யமாய் மூன்று முறை உயர்த்தி விடவேண்டும். பிறகு, ஆசமனம் செய்து, ஜலத்துடன் கூடிய கையுடன் ஒரு முறை ஆத்மப்ரதக்ஷிணம் செய்து, 'அஸாவாதித்யோ ப்ரஹ்ம' என்று ஆத்ம த்யானம் செய்து, மார்பைத் தொட்டு ஆசமனம் செய்து, அவரவர் ஆசாரப்படி நவக்ரஹங்கள் முதலியவரைத் தர்ப்பிக்க வேண்டும்.

## जपदेशासनादिविधिः ।

जपदेशमाह योगयाज्ञवल्क्यः – अग्न्यगारे जलान्ते वा जपेद्देवालयेऽपि वा । पुण्यतीर्थे गवां गोष्ठे सिद्धक्षेत्रेऽथवा गृहे इति ॥ स्मृतिरत्ने – सूर्याग्निरुद्रदेवानां गुरूणामपि सन्निधौ । अन्येषां च प्रशस्तानां मन्त्रानभिमुखो जपेत् ॥ अश्वत्थबिल्वतुलसीवन-पुष्पान्तरावृते इति ॥ स्मृतिसारे – सूर्यस्याग्रेर्गुरोरिन्दोर्दीपस्य च जलस्य च । विप्राणां च गवां चैव सन्निधौ शस्यते जपः इति ॥

### ஜபதேச ஆஸநாதி விதி

ஜபதேசத்தைச் சொல்லுகிறூர், **யோகயாக்ஞவல்க்யர்:-** அக்னி சாலை, ஜல ஸமீபம், தேவாலயம், புண்ய தீர்த்தம், பசுக் கொட்டில், ஸித்தரின் க்ஷேத்ரம், தனது க்ருஹம் இவைகளும் ஒன்றில் ஜபம் செய்யவும். **ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ஸுர்யன், அக்னி, ருத்ரன், தேவர்கள், குருக்கள் இவர்களின் ஸன்னிதியில், சிறந்த மற்றவருக்கு எதிரிலாவது ஜபிக்கவும். அச்வத்தம், பில்வம், துளஸீ வனம், புஷ்பங்கள் இவைகளால்

சூழப்பட்ட இடத்திலாவது ஜபிக்கவும். **ஸ்ம்ருதிஸாரத்தில்:-** ஸூர்யன், அக்னி, குரு, சந்த்ரன், தீபம், ஜலம், ப்ராம்ஹணர், பசுக்கள் இவரது எதிரில் ஜபம் செய்வது புகழப்படுகிறது.

शङ्खः – गृहे त्वेकगुणं प्रोक्तं नद्यादौ द्विगुणं स्मृतम्। गवां गोष्ठे दशगुणमग्न्यगारे शताधिकम्। सिद्धक्षेत्रेषु तीर्थेषु देवतायाश्च सन्निधौ। सहस्रं शतकोटीनामनन्तं विष्णुसन्निधौ इति ॥ व्यासोऽपि – गुह्यका राक्षसास्सिद्धाः हरन्ति प्रसभं यतः। एकान्ते गुह्यदेशे तु तस्माज्जप्यं समाचरेत् इति ॥ अङ्गिरा अपि – प्रच्छन्नानि च दानानि ज्ञानं च निरहङ्कृतम्। जप्यानि च सुगुप्तानि तेषां फलमनन्तकम् इति ॥

**சங்கர்:-** க்ருஹத்தில் செய்வது ஒரு பங்கு பலமுள்ளது. நதி முதலியதில் செய்வது இரண்டு பங்கு பலமுடையதாகும், பசுக்களின் கொட்டிலில் செய்வது பத்து மடங்கு பலமுடையது. அக்னி சாலையில் செய்வது நூறு மடங்கு பலமுடையது. ஸித்த க்ஷேத்ரங்கள், புண்ய தீர்த்தங்கள், தேவதையின் ஸன்னிதி இவைகளில் செய்வது நூறு கோடிகளில் ஆயிரம் மடங்கு பலமுடையது. விஷ்ணு ஸன்னிதியில் செய்வது எல்லையற்றதாகும். **வ்யாஸரும்:-** குஹ்யகர், ராக்ஷஸர், ஸித்தர் இவர்கள் பலாத்காரமாய் ஜபத்தை அபஹரிக்கின்றனர். ஆகையால் ஏகாந்த ஸ்தலத்தி மறைவுள்ள இடத்தில் ஜபத்தைச் செய்ய வேண்டும். **அங்கிரஸ்ஸும்:-** மறைத்துக் கொடுக்கப்பட்ட தானங்கள், அஹங்காரமற்ற க்ஞானம், மறைத்துச் செய்யப்பட்ட ஜபங்கள் இவைகளின் பலம் அழிவற்றதாகும்.

शौनकः – आब्रह्मलोकादाशेषादालोकालोकपर्वतात्। ये वसन्ति द्विजा देवास्तेभ्यो नित्यं नमोनमः ॥ इति मन्त्रं समुच्चार्य नमस्कुर्यात् सुरद्विजान् ॥ अपसर्पन्तु ते भूता ये भूता भुवि संस्थिताः। ये भूता विघ्नकर्तारस्ते गच्छन्तु शिवाज्ञया ॥ तलेन वामपादस्य भूमौ घातत्रयं चरेत् ॥ उग्रभूतपिशाचाद्या ये च वै भूमि(भा)धारकाः।

एतेषामविरोधेन ब्रह्मकर्म समारभे ॥ सङ्कल्प्यैवं जपेत् सम्यङ्मन्त्रार्थगतमानसः ।

சௌனகர்:- 'ஆப்ரம்ஹலோகா + நமோநம:' என்ற மந்த்ரத்தை உச்சரித்து, தேவர்களையும் ப்ராம்ஹணர்களையும் நமஸ்கரிக்கவும். இதன் பொருள்:- 'மேல் ப்ரம்ஹலோகம் வரை, கீழ் சேஷலோகம் வரை, பூமியில் லோகா லோகபர்வதம் வரையிலும் எந்த ப்ராஹ்மணர்களும் தேவர்களும் வஸிக்கின்றனரோ அவர்களுக்கு நித்யமும் நமஸ்காரம் நமஸ்காரம்' என்பது. பிறகு, 'அபஸர்ப்பந்து + சிவாக்ஞயா' என்ற மந்த்ரத்தால், பூமியில் இடது காலினால் மூன்று முறை உதைக்கவும். 'உக்ரபூத + ஸமாரபே' என்று ஸங்கல்பித்து, மந்த்ரார்த்தத்தை நாடிய மன முடையவனாய் ஜபிக்க வேண்டும். 'அபஸர்ப்பந்து' என்பதின் பொருள்:- எந்தப் பூதங்களிங்கு பூமியில் இருக்கின்றனவோ, அவைகள் விரைந்து செல்ல வேண்டும். விக்னம் செய்யும் பூதங்கள் எவையோ அவைகள் சிவனின் ஆக்ஞையால் இங்கிருந்து செல்ல வேண்டும். 'உக்ரபூத' என்பதின் பொருள்:- 'உக்ரமான பூதப்ரேத பிசாசங்கள் முதலிய எவர் பூமியை தரிக்கிருக்கின்றனரோ இவர்களுக்கு விரோதம் இல்லாமல் ஜபகர்மத்தை ஆரம்பிக்கிறேன்' என்று.

कुशाजिनाम्बरेणाढ्यं कल्पयेदासनं बुधः ॥ वंशोष्टकाश्मधरणीतृणपल्लवनिर्मितम् । वर्जयेदासनं धीमान् दारिद्र्यव्याधिदुःखदम् । सर्वसिध्यै व्याघ्रचर्म ज्ञानसिद्ध्यै मृगाजिनम् । नादीक्षितस्य गृहिणः कृष्णसाराजिनं स्मृतम् ॥ विशेद्यतिर्वनस्थश्च ब्रह्मचारी मृगाजिने । वस्त्रासनं रोगहरं कम्बलं दुःखमोचनम् । स्वस्तिकाद्यासनेनाथ विशेत्तत्र निराकुलः । वीरासनं स्वस्तिकं वा बध्वाऽन्यतरदासनम् ॥ पद्मं वा मुक्तकं वाऽपि बध्वा जपमथाचरेत् इति ।

குசம், க்ருஷ்ணாஜினம், வஸ்த்ரம் இவைகளுடன் சேர்ந்த ஆஸனத்தைச் செய்து கொள்ளவும். மூங்கில், செங்கல், கல், மண், புல், தளிர் இவைகளால் செய்யப்பட்ட ஆஸனத்தை அறிந்தவன் வர்ஜிக்க வேண்டும். அவை தரித்ரத் தன்மை, வ்யாதி, துக்கம் இவைகளைக் கொடுப்பதாகும். புலியின் தோல் எல்லா ஸித்திகளையும் செய்யும். மானின் தோல் ஜ்ஞானத்தை அளிக்கும். தீக்ஷிதனல்லாத க்ருஹஸ்தனுக்கு, க்ருஷ்ணஸார மானின் தோல் கூடாது. யதியும், வானப்ரஸ்தனும் மான்தோலில் உட்காரலாம். வஸ்த்ராஸனம் ரோகத்தை ஹரிக்கும். கம்பளாஸனம் துக்கத்தை அகற்றும். விஹிதமான ஆஸனத்தில், ஸ்வஸ்திகம் முதலான ஆஸனத்தால் ஏகாக்ரசித்தனாய் உட்கார வேண்டும். வீராஸனம், ஸ்வஸ்திகாஸனம், பத்மாஸனம், முக்தகாஸனம் என்றவைகளுள் ஏதாவது ஒரு ஆஸனத்தைச் செய்து ஜபத்தை ஆரம்பிக்க வேண்டும்.

आसनलक्षणमुक्तं तेनैव – एकं पादमथैकस्मिन् विन्यस्योरुणि संस्थितः । पादेऽन्यस्मिंस्तथा चोरुं वीरासन मुदाहृतम् ॥ जानूर्वोरन्तरे सम्यक्कृत्वा पादतले उभे । ऋजुकायस्समासीनः स्वस्तिकं तत् प्रचक्षते ॥ ऊर्वोरुपरि विप्रेन्द्र कृत्वा पादतले लभे । पद्मासनं वदेदेतत् सर्वेषामपि पूजितम् ॥ सम्पीड्य सीवनीं दक्षां गुल्फेनैव तु सव्यतः । सव्यां दक्षिणगुल्फेन मुक्तासनमुदीरितम् ॥ एवमासनयुक्तः सन् भूतशुद्धिं समाचरेत् इति ॥

ஆஸனங்களின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார். சௌனகரே:- ஒரு துடையின் மேல் மற்றொரு பாதத்தையும், மற்றொரு பாதத்தின் மேல் மற்றொரு துடையையும் வைத்து உட்காருவது 'வீராஸனம்' எனப்பட்டது. முழங்கால், துடை இவைகளின் நடுவில் இரண்டு பாதங்களையும் வைத்துக் கொண்டு ருஜுவான சரீரத்துடன் உட்கார்ந்திருப்பது 'ஸ்வஸ்திகம்' என்னும்

ஆஸனமென்று சொல்லுகின்றனர். இரண்டு துடைகளின் மேல், இரண்டு பாதங்களையும் வைத்து உட்காருவது 'பத்மாஸனம்' இது எல்லா ஆஸனங்களிலும் சிறந்தது. வலது ஸீவனியை (குஹ்யத்திற்குக் கீழ் உள்ள ஸூத்ரம்) இடது காலின் (மணிக்கட்டால்) நெருக்கியும், இடது ஸீவனியை வலது காலின் குல்பத்தால் நெருக்கியும் உட்காருவது 'முக்தாஸனம்' எனப்பட்டது இவ்விதம் ஆஸனத்திலிருந்து, பூத சுத்தியைச் செய்ய வேண்டும்.

मन्त्रदेवताप्रकाशिकायाम् :- पृथिव्या मेरुपृष्ठ ऋषिः । अतलं छन्दः । कूर्मो देवता । आसने विनियोगः । पृथ्वि त्वया धृता लोका देवि त्वं विष्णुना धृता । त्वं च धारय मां देवि पवित्रं चासनं कुरु इत्यासनं परिकल्प्य उरसि गुरुभ्यो नमः इत्यञ्जलिं कृत्वा गणपतये नमः सरस्वत्यै नमः इति दक्षिणांसे दुर्गायै नमः क्षेत्रपालकाय नमः इति सव्यांसेऽञ्जलिं कृत्वा भूतशुद्धिं कुर्यात् ।।

மந்த்ரதேவதா ப்ரகாசிகையில்:- 'ப்ருத்வி' என்பதற்கு, மேருப்ருஷ்டர் ருஷி, அதலம் சந்தஸ், கூர்மன் தேவதை, உட்காருவதில் விநியோகம். ப்ருத்வித்வயா + சாஸனம் குரு' (இதன் பொருள்:- ஓ பூதேவி! உன்னால் உலகங்கள் தரிக்கப்படுகின்றன. நீ விஷ்ணுவினால் தரிக்கப்பட்டிருக்கிறாய். பூ தேவி ! நீ என்னையும் தரிக்க வேண்டும். ஆஸனத்தையும் சுத்தமாய்ச் செய்ய வேண்டும், என்பது) என்ற மந்த்ரத்தால் ஆஸனத்தைக் கற்பித்து, மார்பில் குருப்யோ நம:' என்று அஞ்ஜலியைச் செய்து, 'கணபதயே நம:, ஸரஸ்வத்யை நம:' என்று வலது தோளிலும், 'துர்காயை நம:, க்ஷேத்ரபாலகாய நம:' என்று இடது தோளிலும் அஞ்ஜலியைச் செய்து, பூத சுத்தியைச் செய்யவும்.

धर्मकन्दं ज्ञाननालमैश्वर्याष्टदलं वैराग्यकर्णिकं हृदयाम्बुजमुकुलं प्रणवेन विकसितं ध्यात्वा कर्णिकास्थं चैतन्यात्मकं जीवं प्लुत

प्रणवोच्चारणेन सुषुम्नानाडीमार्गतः निस्सार्य तं जीवं द्वादशान्त-स्थितसहस्रदलकमलनिष्ठपरमात्मना सह हंस इति मन्त्रेणैकीकृत्य स्वशरीरस्थकल्मषजातं पुरुषाकारेण विचिन्त्य शोषण दाहनप्लावनानीत्थं कुर्यात्।

*தர்மத்தைக் கிழங்காயுடையதும், ஜ்ஞானத்தைத் தண்டாக உடையதும், ஐச்வர்யங்களை எட்டு தளங்களாயுடையதும், வைராக்யத்தைக் கர்ணிகை (தாது) யாய் உடையதுமான ஹ்ருத்யபத்ம முகுளத்தை, ப்ரணவத்தால் மலர்ந்ததாக த்யானித்து, கர்ணிகையில் இருக்கும் சைதன்ய ஸ்வரூபியான ஜீவனை, ப்லுதமான ப்ரணவத்தை உச்சரிப்பதால் ஸுஷும்ந நாடீ மார்க்கத்தால் வெளியேற்றி, அந்த ஜீவனை த்வாதசாந்தத்திலுள்ள ஸஹஸ்ரதள பத்மத்திலுள்ள பரமாத்மாவோடு, 'ஹம்ஸ:' என்ற மந்த்ரத்தால் ஒன்றாக்கி, தன் சரீரத்திலுள்ள பாபக்குவியலை மனித ரூபமாய் த்யானித்து, சோஷணம், தாஹனம், ப்லாவனம் இவைகளை வருமாறு செய்யவும்.*

ब्रह्महत्याशिरस्कं च स्वर्णस्तेयभुजद्वयम्। सुरापानहृदा युक्तं गुरुतल्पकटिद्वयम् ॥ तत्संयोगपदद्वन्द्वं प्रत्यङ्गसमपातकम् । उपपातकरोमाणं नखश्मश्रुविलोचनम् ॥ खड्गचर्मधरं कृष्णं कुक्षौ पापं विचिन्तयेत् । तं पापपुरुषं नाभिदेशस्थितषट्कोणान्तर्गत यमितिवायुबीजोत्थवायुना शोषयित्वा पुनस्तं हृदयदेशस्थितत्रिकोण गतरमित्यग्निबीजोत्थवह्निना दाहयित्वा तद्भस्म दक्षिणनासा-पुटान्निस्सार्य भ्रूमध्यस्थार्द्धचन्द्राकारामृतमण्डलान्तस्थ - वमित्यमृतबीजोत्थितया अमृतधारया निष्कल्मषं स्वशरीरमाप्लाव्या शुद्धिं कृत्वा द्वादशान्तनीतमात्मानं सुषुम्नानाडीमार्गेण हृदयकमले ओं सोऽहमितिमन्त्रेण स्थापयेत्॥

ப்ரம்ஹ ஹத்யையை சிரஸ்ஸாய் உடையவனும், ஸ்வர்ண ஸ்தேயத்தை இரண்டு கைகளாய் உடையவனும், ஸுராபானத்தை மார்பாய் உடையவனும், குருதல்ப்பகமனத்தை இரண்டு இடுப்பாய் உடையவனும், தத்ஸம் யோகத்தை இரண்டு பாதங்களாய் உடையவனும், ஸமபாதகங்களை மற்ற அங்கங்களாய் உடையவனும், உபபாதகங்களை ரோமங்கள், நகங்கள், மீசை, கண்கள் இவையாய் உடையவனும், கத்தி, கேடயம் இவைகளைத் தரித்தவனும், கறுப்பு நிறமுள்ளவனுமாய் பாபபுருஷனை வயிற்றில் இருப்பவனாய் த்யானிக்க வேண்டும். அந்தப் பாப புருஷனை, நாபி தேசத்திலுள்ள ஷட்கோணத்திலுள்ள 'யம்' என்னும் வாயுபீஜத்தால் சோஷணம் செய்து, மறுபடி அவனை, ஹ்ருதய தேசத்திலுள்ள த்ரிகோணத்திலுள்ள 'ரம்' என்னும் அக்னி பீஜத்தால் தஹிக்கச் செய்து, அந்தச் சாம்பலை வலது மூக்கின் த்வாரத்தால் வெளியேற்றி, புருவங்களின் மத்யத்திலுள்ள அர்த்த சந்த்ராகாரமான அம்ருத மண்டலத்தின் உள்ளிலுள்ள 'வம்' என்னும் அம்ருத பீஜத்தினின்றும் எழும்பிய அம்ருத தாரையால் பாபமற்ற தன் தேஹத்தை மூழ்க்கி சுத்தமாய்ச் செய்து, த்வாதசாந்த ஸ்தானத்தில் சேர்க்கப்பட்ட ஆத்மாவை ஸுஷும் நாநாடியின் வழியாய் ஹ்ருதய கமலத்தில், 'ஓம் ஸோஹம்' என்ற மந்த்ரத்தால் ஸ்தாபிக்க வேண்டும்.

एवं भूतशुद्धिं कृत्वा प्राणप्रतिष्ठां कुर्यात्। प्राणप्रतिष्ठामन्त्रस्य ब्रह्मविष्णुमहेश्वरा ऋषयः । ऋग्यजुस्सामाथर्वाणि छन्दांसि । प्राणशक्तिः परादेवता । प्राणप्रतिष्ठार्थे विनियोगः - रक्तांभोधिस्थपोतोल्लसदरुणसरोजाधिरूढा कराब्जैः पाशं कोदण्डमिक्षूद्भव मलिगुण मप्यङ्कुशं पञ्चबाणान् । बिभ्राणासृक्कपालं त्रिनयनलसिता पीनवक्षोरुहाढ्या देवी बालार्कवर्णा भवतु सुखकरी प्राणशक्तिः परा नः ।। इति ध्यात्वा प्राणप्रतिष्ठामन्त्रं जपेत् – 'आं ह्रीं क्रों यरलवशषसहों हंसः सोऽहं सोऽहं हंसः । अमुष्य प्राणा इह प्राणा

अमुष्य जीव इह स्थितः । अमुष्य सर्वेन्द्रियाणि अमुष्य वाङ्मनश्चक्षुः श्रोत्रजिह्वाघ्राणप्राणा इहागत्य सुखं चिरं तिष्ठन्तु स्वाहा इति ॥ अमुष्यस्थाने ममेत्युच्चारयन् प्राणप्रतिष्ठां कुर्यात् ॥

இவ்விதம் பூதசுத்தியைச் செய்து, ப்ராண ப்ரதிஷ்டையைச் செய்ய வேண்டும். அதன் ப்ரகாரம் மூலத்திலுள்ளது. த்யான ச்லோகத்தின் பொருள்:- "ரக்த ஸமுத்ரத்திலுள்ள ஓடத்தில் விளங்கும் சிவந்த தாமரைப் பூவில் இருப்பவளும், தாமரை போன்ற கைகளால் பாசத்தையும், வண்டுகளை நாணாக உடைய கரும்பு வில்லையும், அங்குசத்தையும், ஐந்து பாணங்களையும், ஸ்ரக்கையும், (பூமாலை அல்லது ஜபமாலை) கபாலத்தையும் தரித்தவளும் மூன்று நேத்ரங்களால் ப்ரகாசிப்பவளும், பருத்த ஸ்தனங்களுடையவளும், பாலஸூர்யன் போல் சிவந்த நிறமுடையவளுமான சிறந்த ப்ராணசக்தி தேவதை நமக்கு ஸுகத்தைச் செய்பவளாய் ஆகவேண்டும்" என்பது.

ततो मातृकान्यासं कुर्यात् – मातृकासरस्वतीमन्त्रस्य ब्रह्मा ऋषिः । गायत्री छन्दः । मातृकासरस्वती देवता । मातृकान्यासे विनियोगः । पञ्चाशद्वर्णभेदैर्विहितवदनदोःपादयुक्कुक्षिवक्षोदेशां भास्वत्कपर्दाकलितशशिकलामिन्दुकुन्दावदाताम् । अक्षस्रक्कुम्भ-चिन्तालिखितकरवरां पद्मसंस्थां त्रिनेत्रामच्छाकल्पामतुच्छस्तन-जघनभरां भारतीं तां नमामि इति ध्यात्वा बिन्दुसहितां मातृकां न्यसेत् ।

பிறகு மாத்ருகாந்யாஸத்தைச் செய்ய வேண்டும். மாத்ருகா ஸரஸ்வதீ மஹா மந்த்ரத்திற்கு ப்ரம்ஹா ருஷி, காயத்ரீ சந்தஸ், ஸரஸ்வதீ தேவதை, மாத்ருகா ந்யாஸத்தில் விநியோகம். த்யானம் - 'பஞ்சாசத்வர்ண + தாம் நமாமி' என்று. இதன் பொருள்:- 'ஐம்பது அக்ஷரங்களால் கல்ப்பிதமான முகம், கைகள், கால்கள், வயிறு, மார்பு ப்ரதேசங்களை உடையவளும், ப்ரகாசிக்கின்ற ஜடாஜூடத்தில் தரிக்கப்பட்ட சந்த்ர கலையை

*உடையவளும், சந்த்ரன், குருக்கத்திப் புஷ்பம் இவை போல் வெண்ணிறம் உள்ளவளும், ஜபமாலே, அம்ருதகும்பம், சின்முத்ரை, புஸ்தகம் இவைகளைக் கைகளில் உடையவளும், பத்மத்தில் இருப்பவளும் மூன்று கண்களை உடையவளும் நிர்மலமான அலங்காரம் உடையவளும், பருத்த ஸ்தன ஜகனம் உடையவளும், ஆன அந்த பாரதீ தேவியை வணங்குகின்றேன்' என்று.*

प्रपञ्चसारे न्यासस्थलमभिहितम् – कानवृत्तद्व्यक्षिश्रुति-नासिकगण्डोष्ठदन्तमूर्ध्वास्ये । दोःपत्सन्ध्यग्रेषु च पार्श्वद्वय-पृष्ठनाभिजठरेषु ।। हृद्दोर्मूलावरगलकक्षेषु हृदादिपाणि पादयुगे । जठराननयोर्व्यापकसञ्ज्ञ्यातानक्षरान्न्यसेत् क्रमतः इति ।। केति ।। कं शिरः । द्विशब्दः अक्षिश्रोत्रनासिकागण्डोष्ठदन्तेषु प्रत्येकं सम्बध्यते । दोःपत्सन्ध्यग्राणि विंशतिः । दोर्मूलं दक्षिणम् । आ(या)दिक्षान्ता व्यापकसंज्ञाः । तैः व्यापकन्यासमपि कुर्यादित्यर्थः ।।

*ப்ரபஞ்சஸாரத்தில் ந்யாஸ ஸ்தானம் சொல்லப்பட்டுள்ளது - 'காநந + க்ரமத:' என்று இதன் பொருள்:- நெற்றி, முகவ்ருத்தம், கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்குகள் இரண்டு, கன்னங்கள் இரண்டு, உதடுகள் இரண்டு, பல் வரிசைகள் இரண்டு, தலை, வாய், கைகள், கால்கள், ஸந்தி அக்ரங்கள் முதலியவை இருபது, வயிற்றின் பக்கங்கள் இரண்டு, முதுகு, நாபி, வயிறு, மார்பு, வலதுதோள், கழுத்தின் பின்புறம், இடது தோள், வ்யாபக ந்யாஸத்திற்கு ஆறு ஸ்தானங்கள், இவைகளில் அக்ஷரங்களை ந்யாஸிக்கவும்.*

*ந்யாஸப்ரகாரம் இவ்விதம்:* अं नमः *நெற்றியில்* आं नमः *முகவ்ருத்தத்தில்.* इं नमः *வலது கண்ணில்.* ईम् नमः *இடது கண்ணில்.* उं नमः *வலது காதில்.* ऊं नमः *இடது காதில்.* ऋं नमः *வலது மூக்கில்* ॠं नमः *இடது மூக்கில்* ऌं नमः *வலது கன்னத்தில்* ॡं नमः *இடது கன்னத்தில்* एं नमः *மேலுதட்டில்* ऐं

नमः கீழு தட்டில் ओं नमः மேல் தந்தங்களில். औं नमः கீழ் தந்தங்களில். अं नमः சிரஸ்ஸில். अः नमः முகத்தில். ஆகப்பதினாறு. कं नमः வலது கையின் மூலத்தில். खं नमः கூர்ப்பரத்தில். गं नमः மணிக்கட்டில். घं नमः விரல்களின் மூலத்தில். ङं नमः விரல்களின் நுனியில். चं नमः இடதுகையின் மூலத்தில். छं नमः கூர்ப்பரத்தில். जं नमः மணிக்கட்டில். झं नमः விரல்களின் மூலத்தில். ञं नमः விரல்களின் நுனியில். टं नमः வலதுகால் மூலத்தில். ठं नमः முழங்காலில். डं नमः மணிக்கட்டில். ढं नमः விரல்களின் மூலத்தில். णं नमः விரல்களின் நுனியில். तं नमः இடதுகால் மூலத்தில், थं नमः இடது முழங்காலில், दं नमः மணிக்கட்டில், धं नमः விரல்களின் மூலத்தில், नं नमः விரல்களின் நுனியில், पं नमः வயிற்றின் வலதுபாகத்தில். फं नमः இடது பாகத்தில். बं नमः முதுகில். भं नमः நாபியில். मं नमः வயிற்றில். यं नमः மார்பில். रं नमः வலது தோளில். लं नमः கழுத்தின் பின் புறத்தில். वं नमः இடது தோளில். शं नमः ஹ்ருதயம் முதல் வலதுகை விரல்கள் வரையில். षं नमः ஹ்ருதயம் முதல் இடதுகை விரல்கள் வரையில். सं नमः ஹ்ருதயம் முதல் வலது கால் விரல்கள் வரையில். हं नमः ஹ்ருதயம் முதல் இடது கால் விரல்கள் வரையில் ळं नमः ஹ்ருதயம் முதல் வயிறு வரையில். क्षं नमः ஹ்ருதயம் முதல் முகம் வரையில். இவ்விதம் மாத்ருகாந்யாஸ வ்யாபக ந்யாஸக்ரமம்.

## प्राणायामविधिः

अथ प्राणायामविधिः। तत्र योगयाज्ञवल्क्यः — एवं संमार्जनं कृत्वा बाह्यशुद्ध्यर्थमादरात्। तथाऽऽभ्यन्तरशुद्ध्यर्थं प्राणायामं

समाचरेत् इति ।। बृहस्पतिः — बध्वाऽऽसनं नियम्यासून् स्मृत्वा चर्ष्यादिकं तथा । सन्निमीलितदृङ्मौनी प्राणायामं समभ्यसेत् इति ।।

### ப்ராணுயாமவிதி

*இனி ப்ராணுயாம விதி சொல்லப்படுகிறது. அதில்,* **யோகயாக்ஞவல்க்யர்:-** *இவ்விதம் பாஹ்ய சுத்திக்காக ப்ரோக்ஷணம் செய்து, ஆப்யந்த்ர சுத்திக்காக ப்ராணுயாமத்தைச் செய்ய வேண்டும்.* **ப்ருஹஸ்பதி:-** *ஆஸன பந்தம் செய்து, மூச்சை அடக்கி ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் இவைகளை ஸ்மரித்து, கண்களை மூடியவனுய், மௌனியாய் ப்ராணுயாமத்தைச் செய்யவும்.*

आसनं चात्र स्वस्तिकादि — यत्तु दक्षवचनम् – सन्ध्यात्रयेऽपि कर्तव्यं प्राणायामत्रयं द्विजैः । आसीनस्तु भवेत् सायं मध्याह्ने स्थित एव च ।। तिष्ठन्नेव तथा कुर्यात् प्रातः काले समाहितः इति, तत् 'असावादित्यो ब्रह्मेति ध्यानात् पूर्वकालिकविषयम् । प्राक्कूलेषु ततः स्थित्वा दर्भेषु सुसमाहितः । प्राणायामत्रयं कृत्वा ध्यायेत् सन्ध्यामिति श्रुतिः इति व्यासस्मरणादिति केचित् ।। अन्ये तु बध्वाऽऽसनमिति सायंकालविषयम् । प्रातस्तिष्ठन् प्राणायामेन शुध्यति सायमासीनः प्राणायामेन शुध्यति, इत्यखण्डादर्शवचनात् प्रातस्तिष्ठतैव प्राणायामः कर्तव्यः इत्याहुः ।।

*இங்கு 'ஆஸனம்' என்பது ஸ்வஸ்திகம் முதலியது. ஆனுல், ''ப்ராம்ஹணர்கள் மூன்று ஸந்த்யைகளிலும் மூன்று ப்ராணுயாமங்களைச் செய்ய வேண்டும். மாலையில் உட்கார்ந்தும், மத்யாஹ்னத்தில் நின்றும், காலையில் அவ்விதமே நின்றும் கவனம் உடையவனுய் ப்ராணு யாமம் செய்ய வேண்டும்'' என்று தக்ஷரின் வசனம் உள்ளதே எனில், அது 'அஸாவாதித்யோ ப்ரம்ஹ' என்ற*

த்யானத்திற்கு முன் செய்யும் ப்ராணு யாமத்தைப் பற்றியது, "பிறகு கிழக்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில் நின்று, கவனம் உடையவனுய் மூன்று ப்ராணு யாமங்களைச் செய்து, ஸந்த்யையை த்யானிக்க வேண்டும் என்கிறது வேதம்" என்று வ்யாஸர் சொல்வதால்" என்கின்றனர் சிலர். மற்றவராணுல் 'பத்வாஸனம் என்பது ஸாயங்கால விஷயம். 'காலையில் நின்றவனுய் ப்ராணுயாமம் செய்வதால் சுத்தனுகிருன். மாலையில் உட்கார்ந்தவனுய் ப்ராணுயாமம் செய்வதால் சுத்தனுகிருன்' என்று அகண்டாதர்ச வசனமிருப்பதால், காலையில் நின்றவனுகவே ப்ராணுயாமம் செய்ய வேண்டும்" என்கின்றனர்.

संवर्तः — प्राणायामैस्त्रिभिः पूतो गायत्रीं तु जपेत्ततः इति ॥ कर्मप्रदीपे – देवार्चने जपे होमे स्वाध्याये श्राद्धकर्मणि । स्नाने दाने तथा ध्याने प्राणायामास्त्रयस्त्रयः ॥ आदावन्ते च गायत्र्याः प्राणायामत्रयं स्मृतम् । सन्ध्यायामर्घ्यदाने च स्मृत एकोऽसुसंयमः ॥ अङ्गुष्ठानामिकाभ्यां तु तथैव च कनिष्ठया । प्राणायामस्तु कर्तव्यो मध्यमां तर्जनीं विना ॥ तर्जनीमध्यमायोगं प्राणायामे तु वर्जयेत् । तर्जनीं मध्यमां स्पृष्ट्वा कुर्वन् शूद्रसमो भवेत् इति ॥ तत्रैव – वामहस्तेन गणयन् प्राणायामं जपेद्विजः । कुर्याद्धोमे च सर्वत्र तथाऽकुत्सितकर्मकृत् इति ॥

**ஸம்வர்த்தர்:-** மூன்று ப்ராணு யாமங்களால் சுத்தனுய் ஆகிப் பிறகு காயத்ரியை ஜபிக்க வேண்டும். **கர்மப்ரதீபத்தில்:-** தேவபூஜை, ஜபம், ஹோமம், அத்யயனம், ச்ராத்தம், ஸ்நானம், தானம், த்யானம் இவைகளில் மும்மூன்று ப்ராணு யாமங்கள் செய்யப்பட வேண்டும். காயத்ரீ ஜபத்தின் ஆதியிலும் அந்தத்திலும் மூன்று ப்ராணுயாமங்கள், ஸந்த்யையிலும், அர்க்ய

தானத்திலும், ஒரு ப்ராணு யாமம் விதிக்கப்பட்டுள்ளது. பெருவிரல், பவித்ரவிரல், சிறுவிரல் இவைகளால் ப்ராணு யாமம் செய்ய வேண்டும். நடுவிரல், தர்ஜனீ விரல் இவைகளை விட்டு. ப்ராணா யாமத்தில் மத்யமா தர்ஜனீ இவ்விரல்களைச் சேர்க்கக் கூடாது. தர்ஜனீ மத்யமா விரல்களைச் சேர்த்துச் செய்பவன் சூத்ரனுக்கு ஸமன் ஆவான். கர்மப்ரதீபத்திலேயே:- இடது கையால் எண்ணிக் கொண்டு ப்ராணு யாமத்தை ப்ராம்ஹணன் ஜபிக்க வேண்டும். ஹோமத்திலும், அவ்விதமே. எல்லாக் கர்மங்களிலும் அவ்விதமே. இழிவான கார்யத்தைச் செய்யாதவனுய் ஜபிக்க வேண்டும்.

प्राणायामलक्षणमाह मनुः – सव्याहृतिं सप्रणवां गायत्रीं शिरसा सह। त्रिः पठेदायतप्राणः प्राणायामः स उच्यते इति ।। पठेत् मनसेति शेषः ।। तथा च संवर्तः – प्रणवेन तु संयुक्ता व्याहृतीः सप्त नित्यशः । सावित्रीं शिरसा सार्धं मनसा त्रिः पठेद्द्विजः इति ।। याज्ञवल्क्योऽपि – गायत्रीं शिरसा सार्धं जपेद्व्याहृतिपूर्विकाम् । प्रतिप्रणव संयुक्तां त्रिरयं प्राणसंयमः इति ।। प्रतिव्याहृति प्रणवेन संयुक्तां गायत्रीं मुखनासिकासञ्चारिणं वायुं निरुन्धन् मनसा त्रीन्वारान् जपेदित्ययं सर्वत्र प्राणायामः इति विज्ञानेश्वरः ।।

ப்ராணு யாமத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிருர், மனு:- வ்யாஹ்ருதிகளுடன் கூடியதும், ப்ரணவத்துடன் கூடியதுமான காயத்ரியை சிரஸ்ஸுடன், மூச்சுக் காற்றை அடக்கியவனுய், மூன்று தடவை ஜபிக்க வேண்டும். அது ப்ராணு யாமம் எனப்படுகிறது. இங்கு, 'மனதினுல்' என்று சேர்க்கவும். அவ்விதமே, ஸம்வர்த்தர்:- ப்ரணவத்துடன் கூடிய ஏழு வ்யாஹ்ருதிகளையும், காயத்ரியை சிரஸ்ஸுடனும், மனதினுல் ப்ராம்ஹணன் மூன்று முறை ஜபிக்க வேண்டும். யாக்ஞவல்க்யரும்:- வ்யாஹ்ருதிகளை முன்னுடைய காயத்ரியை சிரஸ்ஸுடன்,

ஒவ்வொன்றிலும் ப்ரணவத்துடன் கூடியதாய் மூன்று முறை ஜபிக்கவும். இது ப்ராணுயாமம். இங்கு, ''ஒவ்வொரு வ்யாஹ்ருதியிலும் ப்ரணவத்துடன் காயத்ரியை, முகத்திலும் மூக்கிலும் ஸஞ்சரிக்கும் வாயுவை அடக்கியவனுய், மனத்தினுல் மூன்று முறை ஜபிக்க வேண்டும். இவ்விதமாகிய இது எல்லாவற்றிலும் ப்ராணுயாமம்'' என்ருர் விக்ஞானேச்வரர்.

योगयाज्ञवल्क्योऽपि – भूर्भुवः स्वर्महर्जनस्तपः सत्यं तथैव च। प्रत्योङ्कारसमायुक्तं तथा तत्सवितुः परम्। ओमापो ज्योतिरित्येतच्छिरः पश्चात् प्रयोजयेत्। ओमापो ज्योतिरित्येष मन्त्रो वै तैत्तिरीयकः। त्रिरावर्तनयोगात्तु प्राणायामस्तु शब्दितः इति॥ यमोऽपि-ओङ्कारपूर्विकास्सप्त जपेत्तु व्याहृतीस्तथा। शिरसा सह गायत्रीं प्राणायामः परं तपः इति॥

**யோகயாக்ஞவல்க்யர்**:- பூ:, புவ:, ஸ்வ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம் இவைகளை ஒவ்வொன்றிலும் ஓங்காரத்துடன் கூடியதாயும், பிறகு 'தத்ஸவிது:' என்பதையும், பிறகு 'ஓமாபோஜ்யோதி:' என்ற சிரஸ்ஸையும் சேர்க்க வேண்டும். 'ஓமா போஜ்யோதி:' என்ற இந்த மந்த்ரம் தைத்திரீயத்திலுள்ளது. இவைகளை மூன்று முறை ஆவ்ருத்தி செய்வதால், ப்ராணுயாமம் எனச் சொல்லப்படுகிறது. **யமனும்**:- ஓங்காரத்தை முதலிலுள்ள ஏழு வ்யாஹ்ருதிகளையும், காயத்ரீயை சிரஸ்ஸுடனும் ஜபிக்க வேண்டும். இந்தப்ராணுயாமம், சிறந்த தபஸ்ஸாகும்.

अशक्तस्य जपमाह भारद्वाजः – अशक्यः स्याद्यदि प्रोक्तः प्राणायामो द्विजन्मनः। बालस्य चेतरेषां च दशकृत्वो जपः स्मृतः इति। अत्यन्ताशक्तौ स एव – सप्तैव व्याहृतीरेताः केवला वा द्विजो जपेत्। जपक्रमोऽय मेवं स्यात् सर्वपापप्रणाशनः इति॥

*சக்தி இல்லாதவனுக்கு ஜபத்தை விதிக்கின்றார்.* **பாரத்வாஜர்:-** *ப்ராம்ஹணனுக்கு, சொல்லப்பட்டபடி ப்ராணாயாமம் செய்வது இயலாவிடினும், சிறுவனுக்கும், மற்றவருக்கும் பத்து முறை ஜபம் விதிக்கப்படுகிறது. அதிக அசக்தி விஷயத்தில்,* **பாரத்வாஜரே:-** *ப்ராம்ஹணன், இந்த ஏழு வ்யாஹ்ருதிகளை மட்டில் தனியாகவாவது ஜபிக்கவும். இந்த ஜபக்ரமமும் ஸகல பாபங்களையும் அகற்றுவதாய் ஆகும்.*

स च प्राणायामः पूरककुम्भकरेचक भेदेन त्रिविधः ।। तथा च योगयाज्ञवल्क्यः – पूरकः कुम्भको रेच्यः प्राणायामस्त्रिलक्षणः । नासिकाकृष्ट उच्छ्वासो ध्मातः पूरक उच्यते ।। कुम्भको निश्चलश्वासो रिच्यमानस्तु रेचकः ।। बाह्यस्थितं घ्राणपुटेन वायुमाकृष्य यत्नेन शनैःसमस्तम् । नाड्यश्च सर्वाः परिपूरणीयाः स पूरको नाम महान्निरोधः इति ।। कुम्भकरेचकयोर्विशेषमाहात्रिः – आकेशाग्रान्नखाग्राच्च निरोधः शस्यते बुधैः । निरोधाज्जायते वायुर्वायोरग्निश्च जायते ।। अग्नेरापश्च जायन्ते ततोऽन्तश्शुध्यते त्रिभिः । शनैर्नासापुटे वायुमुत्सजेन्न तु वेगतः ।। न कम्पयेच्छरीरं तु स योगी परमो मतः इति ।

*அந்த ப்ராணாயாமம், பூரகம், கும்பகம், ரேசகம் என்ற பேதத்தால் மூன்று விதமாயுள்ளது. அவ்விதமே,* **யோகயாக்ஞவல்க்யர்:-** *ப்ராணாயாமம், பூரகம், கும்பகம், ரேசகம் என்று மூன்று விதமாயுள்ளது. மூக்கினால் இழுக்கப்பட்ட ச்வாஸம் பூரகம் எனப்படுகிறது. அசைவற்றதாய் ச்வாஸம் இருப்பது கும்பகம் எனப்படுகிறது. குறைக்கப்படும் ச்வாஸம் ரேசகம் எனப்படுகிறது. வெளியிலிருக்கும் வாயுவை முழுவதையும் மூக்கின் த்வாரத்தினால் மெதுவாய் இழுத்து, அதனால் எல்லா நாடிகளையும் நிரப்பவும். அந்த நிரோதம் பூரகம் எனப்படுகிறது. கும்பக ரேசகங்களின்*

விசேஷத்தைச் சொல்லுகிருர். அத்ரி:- கேசங்களின் நுனிமுதல் கால் நகம் நுனிவரையில் ச்வாஸ நிரோதம் ச்லாக்யம் என்கின்றனர் அறிந்தவர்கள். ச்வாஸ நிரோதத்தினின்றும் வாயு உண்டாகிறது. வாயுவினின்றும் அக்னி உண்டாகிறது. அக்னியினின்றும் ஜலமுண்டாகிறது. பிறகு இம்மூன்றினுலும் சரீரத்தினுள் சுத்தனுகிருன். மூக்கின் த்வாரத்தில் வாயுவை மெதுவாய் விடவேண்டும். வேகமாய் விடக்கூடாது. சரீரத்தை அசைக்கக் கூடாது. இவ்விதம் செய்பவன் சிறந்த யோகீ எனப்படுகிருன்.

व्यासः – नाभिमध्ये स्थितं ध्यायेत् कं रक्तं पूरकेण तु । नीलोत्पलाभं हृत्पद्मे कुम्भकेन जनार्दनम् ।। ललाटस्थं शिवं श्वेतं रेचकेनाभिचिन्तयेत् । शुद्धस्फटिकसङ्काशं निर्मलं पापनाशनम् ।। शङ्करं त्र्यंबकं श्वेतं ध्यायन् मुच्येत बन्धनात् इति ।। योगयाज्ञवल्क्यः – पूरके विष्णुसायुज्यं कुम्भके ब्रह्मणोऽन्तिकम् । रेचकेन तृतीयेन प्राप्नुयादैश्वरं पदम् ।। इडया वायुमारोप्य बाह्यं द्वादशमात्रकम्। पूरयित्वोदरं तेन नासाग्रनयनद्वयः ।ध्यायन् विरेचयेत् पश्चान्मन्दं पिङ्गलया पुनः इति ।। इडा वामनाडी । पिङ्गला - दक्षिणानाडी । कुम्भके मानस जपः ।।

வ்யாஸர்:- பூரகம் செய்யும் பொழுது. நாபிமத்யத்ததில் இருப்பவனும், ரக்தவர்ணனுமான ப்ரஹ்மாவை த்யானிக்கவும். கும்பகத்தில், ஹ்ருதய கமலத்தில் இருப்பவனும், நீலோத்பலம் போன்ற நிறம் உடையவனுமான விஷ்ணுவை த்யானிக்கவும், ரேசகத்திலே, நெற்றியில் இருப்பவனும், வெண்ணிறம் உடையவனுமான சிவனை த்யானிக்கவும். சுத்த ஸ்படிகம் போன்றவனும், நிர்மலனும், பாபத்தை அகற்றுபவனும், முக்கண்ணனும், வெண்ணிறமானவனுமான சங்கரனை த்யானிப்பவன் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபடுவான். யோகயாக்ஞவல்க்யர்:- பூரகத்தில் விஷ்ணுவின்

ஸாயுஜ்யத்தையும், கும்பகத்தில் ப்ரம்ஹாவின் ஸாமீப்யத்தையும், ரேசகத்தால் ஈச்வரனின் பதத்தையும் அடைகிருன். இடையினுல் வெளியிலுள்ள வாயுவை பன்னிரண்டு மாத்ராகாலமுள்ளதாய் ஏற்றி, அதனுல் வயிற்றை நிரப்பி, மூக்கின் நுனியில் இரண்டு கண்களையும் வைத்தவனுய், பிறகு த்யானிப்பவனுய், பிங்களையினுல் மெதுவாய் காற்றை வெளியில் விடவேண்டும். இடா - இடது நாடீ. பிங்களா - வலது நாடீ. கும்பகத்தில் மானஸமாய் ஜபம் செய்யவும்.

स्मृतिरत्ने – दक्षिणे रेचकं कुर्या द्वामेनापूरितोदरः । कुम्भकेन जपं कुर्यात् प्राणायामस्य लक्षणम् इति ॥ नारदः – प्राणो वायुश्शरीरस्थ आयामस्तस्य निग्रहः । प्राणायाम इति प्रोक्तो द्विविधः प्रोच्यते हि सः । अगर्भश्च सगर्भश्च द्वितीयस्तु तयोर्वरः । अपि ध्यानं विनाऽगर्भः सगर्भस्तत्समन्वितः इति ॥

ஸ்ம்ருதிரத்னத்தில்:- இடது நாஸிகாத்வாரத்தால் காற்றை வயிற்றில் நிரப்பி, கும்பகத்தால் ஜபம் செய்து, வலது நாஸிகாத்வாரத்தால் காற்றை வெளியில் விடவேண்டும். இது ப்ராணு யாமத்தின் லக்ஷணமாம். நாரதர்:- ப்ராணன் என்பதற்கு சரீரத்திலுள்ள வாயு என்பது பொருள். ஆயாமம் என்பதற்கு அடக்குவது என்பது பொருள். வாயுவை அடக்குவது ப்ராணுயாமம் எனப்பட்டது. அது, அகர்ப்பமென்றும், ஸகர்ப்ப மென்றும், இரண்டு விதமாய்ச் சொல்லப்படுகிறது. அவைகளுள் இரண்டாவது சிறந்ததாகும். த்யானம் இல்லாமல் செய்யப்படுவது அகர்ப்பம். த்யானத்துடன் கூடியது ஸகர்ப்பம்.

भारद्वाजः – समाहितमनाः प्राणानायम्यैव तदाकृतिम् । दशकृत्वो जपित्वैवं प्राग्गायत्रीं ततो जपेत् । जपक्रमोऽयमेवं स्यात् सर्वपापप्रणाशनः इति । तदाकृतिं - कुम्भकजपोक्तरूपाम् ॥

स्मृत्यन्तरे च – सप्तव्याहृतिसंयुक्तां गायत्रीं शिरसा सह। दशवारं जपित्वैव गायत्रीं तु ततो जपेत् इति ॥

**பாரத்வாஜர்:-** ஏகாக்ரமான மனம் உடையவனாய், ப்ராணா யாமம் செய்து, கும்பக ஜபத்தில் சொல்லப்பட்ட வடிவை பத்து முறை முதலில் ஜபித்து, பிறகு, காயத்ரியை ஜபிக்கவும். இவ்விதம் உள்ள இந்த ஜபக்ரமம், ஸகல பாபங்களையும் அகற்றுவதாய் ஆகும். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ஏழு வ்யாஹ்ருதிகளுடன் கூடிய காயத்ரியை சிரஸ்ஸுடன் பத்து முறை ஜபித்த பிறகே காயத்ரியை ஜபிக்க வேண்டும்.

ऋष्यादिकमाह भारद्वाजः – प्रणवस्य ऋषिर्ब्रह्म परमात्मा च देवता। छन्दस्तु देवी गायत्री विनियोगः क्रियावशः इति ॥ पितामहः – प्रणवस्य ऋषिर्ब्रह्म देवताऽग्निस्त्रयी च सा। छन्दस्तु देवी गायत्री वेदादौ विनियुज्यते ॥ जपकाले त्रयी देवो होमकाले हुताशनः। ध्यानकाले परं ब्रह्म विश्वेदेवास्ततोऽन्यदा इति ॥

ருஷி முதலியதைச் சொல்லுகிறார். **பாரத்வாஜர்:-** ப்ரணவத்திற்கு ப்ரம்ஹம் ருஷி, பரமாத்மா தேவதை, தேவீ காயத்ரீ சந்தஸ், விநியோகம் க்ரியைக்குத் தகுந்தது. **பிதாமஹர்:-** ப்ரணவத்திற்கு ப்ரம்ஹம், ருஷி, தேவதை அக்னி, த்ரயீயும் (மூன்று வேதங்கள்). சந்தஸ் தேவீ காயத்ரீ, வேதம் முதலியதில் விநியோகம். ஜபகாலத்தில் த்ரயீதேவதை, ஹோமகாலத்தில் அக்னிதேவதை, த்யான காலத்தில் பரப்ரம்ஹம் தேவதை. மற்ற காலத்தில் விச்வேதேவர்கள் தேவதை.

व्याहृतीनां ऋष्यादिकमाह स एव – अत्रिर्भृगुश्च कुत्सश्च वसिष्ठो गौतमस्तथा। काश्यपश्चाङ्गिराश्चैव ऋषयस्स्युर्यथाक्रमम् ॥ गायत्र्युष्णिगनुष्टुप्च बृहती पङ्क्तिरेव च। त्रिष्टुप्च जगती चैव छन्दांस्येतानि सप्त वै ॥ अग्निर्वायुस्तथाऽर्कश्च वागीशो वरुणस्तथा।

इन्द्रश्च विश्वेदेवाश्च देवताः समुदाहृताः ।। ब्राह्मी स्वाहा वाहिनी च तथा नित्या विलासिनी । प्रभावती च लोला च सप्तव्याहृतिशक्तयः ।। श्वेतं श्यामं च पीतं च पिशङ्गं नीललोहितम् ।। नीलं कनकवर्णं च वर्णान्येतान्यनुक्रमात् ।। विश्वामित्रस्तु गायत्र्या ऋषिश्छन्दः स्वयं स्मृतम् । सविता देवता चैव ब्रह्मा शिर ऋषिः स्मृतः ।। अनुष्टुबेव छन्दस्स्यात् परमात्मा च देवता इति ।।

வ்யாஹ்ருதிகளுக்கு ருஷி முதலியதைச் சொல்லுகிறார். பிதாமஹரே:- ஏழு வ்யாஹ்ருதிகளுக்கும், முறையே அத்ரி, ப்ருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காச்யபர், அங்கிரஸ் இவர்கள் ருஷிகளாவர், காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ இவைகள் ஏழும் சந்தஸ்ஸுகளாம். அக்னி, வாயு, அர்க்கன், வாகீசன், வருணன், இந்த்ரன், விச்வேதேவர் இவர்கள் தேவதைகள். ப்ராம்ஹீ, ஸ்வாஹா, வாஹிநீ, நித்யா, விலாஸினீ, ப்ரபாவதீ, லோலா என்ற ஏழும் சக்திகளாம், ச்வேதம், ச்யாமம், பீதம், பிசங்கம், நீலலோஹிதம், நீலம், கனகவர்ணம் இவ்வேழும் முறையே வர்ணங்களாம். காயத்ரீக்கு விச்வாமித்ரர் ருஷி, காயத்ரீ சந்தஸ், ஸவிதா தேவதையாம். சிரஸ்ஸுக்கு பரம்ஹா ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், பரமாத்மா தேவதையாம்.

योगयाज्ञवल्क्यस्तु – व्याहृतीनां च सर्वासा मृषिश्चैव प्रजापतिः । अग्निर्वायुस्तथाऽऽदित्यो बृहस्पत्याप एव च । इन्द्रश्च विश्वे देवाश्च देवताः समुदाहृताः । शिरसः प्रजापतिः ऋषिर्यजुश्छन्दो विवक्षितम् ।। (ब्रह्माग्निवायुसूर्याश्च इति क्वचित् ।) अग्निर्वायुश्च सूर्यश्च देवताः परिकीर्तिताः । प्राणायामप्रयोगे तु विनियोग उदाहृतः इति ।।

யோகயாக்ஞவல்க்யர் :- எல்லா வ்யாஹ்ருதிகளுக்கும் ப்ரஜாபதி ருஷி, அக்னி, வாயு, ஆதித்யன், ப்ருஹஸ்பதி, ஜலம், இந்த்ரன், விச்வேதேவர் இவர்கள்

தேவதைகள். சிரஸ்ஸுக்கு ப்ரஜாபதி ருஷி, யஜுஸ் சந்தஸ், அக்னி, வாயு, ஸூர்யன் இவர் தேவர்கள். (பிரும்மா, அக்னி, வாயு, ஸூர்யன் இவர்கள் தேவதை என்பர்.) ப்ராணாயாம ப்ரயோகத்தில் விநியோகம் என்றார்.

न्यासमाह स एव — पादयोर्जङ्घयोर्जान्वोस्तथैव जठरेऽपि च। कण्ठे मुखे तथा मूर्ध्नि क्रमेण व्याहृतीर्न्यसेत् ॥ भूरङ्गुष्ठद्वये न्यस्य भुवस्तर्जनिकाद्वये। ज्येष्ठाङ्गुलिद्वये धीमान् स्वःपदं विनियोजयेत् ॥ अनामिकाद्वये धीमान्न्यसेत्तत्पदमग्रतः। कनिष्ठिकाद्वये भर्गः पाण्योर्मध्ये धियः पदम् ॥ भूः पदं हृदि विन्यस्य भुवः शिरसि विन्यसेत्। शिखायां स्वः पदं न्यस्य कवचे तत्पदं न्यसेत्॥ अक्ष्णोर्भर्गः पदं न्यस्य न्यसेद्दिक्षु धियः पदम्। शिरस्तस्यास्तु सर्वाङ्गे प्राणायामपरो न्यसेत्॥ विन्यस्यैवं ततः कृत्वा मुद्रां ध्यात्वा क्रमेण तु। पूरकादिक्रमेणैव प्राणायामान् समाचरेत् ॥ पद्ममुद्रा सौरभेयी शङ्खमुद्रा वराहका ॥ वासुदेवात्मसंविच्च सप्त व्याहृतिमुद्रिकाः इति ॥

*ந்யாஸத்தைச் சொல்லுகிறார், யோகயாக்ஞல்க்யரே :- பாதங்கள் கணுக்கால் முழங்கால், வயிறு, கண்டம், முகம், தலை இவைகளில் முறையே ஏழு வ்யாஹ்ருதிகளையும் ந்யஸிக்கவும். 'பூ:' என்பதை இரண்டு பெருவிரல்களிலும், தர்ஜனீ விரல்கள் இரண்டிலும் 'புவ:' என்பதையும், பெருவிரல்கள் இரண்டிலும் 'ஸ்வ:' என்பதையும் ந்யஸிக்கவும். பவித்ர விரல்கள் இரண்டிலும் 'தத்' என்ற பாதத்தையும், சிறு விரல்கள் இரண்டிலும், 'பர்க்க:' என்ற பாதத்தையும், கைகளின் நடுவில் 'திய:' என்ற பாதத்தையும், 'பூ:' என்பதை ஹ்ருதயத்திலும், 'புவ:' என்பதை சிரஸ்ஸிலும், 'ஸ்வ:' என்பதை சிகையிலும், 'தத்' என்ற பாதத்தை கவசத்திலும், 'பர்க்க:' என்ற பாதத்தைக் கண்களிலும், 'திய:' என்ற பாதத்தை திக்குகளிலும், அதன் சிரஸ்ஸை ஸர்வாங்கங்களிலும் ப்ராணாயாமம் செய்பவன் ந்யஸிக்க வேண்டும். இவ்விதம் வின்யாஸம் செய்து,*

முத்ரைகளைச் செய்து, க்ரமமாய்ச் த்யானித்து, பூரகாதி க்ரமமாகவே ப்ராணாயாமங்களைச் செய்யவும். பத்மமுத்ரா, தேனுமுத்ரா, சங்கமுத்ரா, வராஹா, வாஸுதேவ முத்ரா, ஆத்ம முத்ரா, ஜ்ஞான முத்ரா என்று முத்ரைகள் ஏழாம்.

प्रणवध्यानमुक्तं मन्त्रदेवताप्रकाशिकायाम् — विष्णुं भास्वत्किरीटाङ्गदवलयगलाकल्पहारोदराङ्घ्रिश्रोणीभूषं सुवक्षोमणि-मकुटमहाकुण्डलामण्डिताङ्गम् । हस्तोद्यच्छङ्खचक्राम्बुजगदममलं पीतकौशेयवीतं विद्योतद्भास मुद्यद्दिनकरसदृशं पद्मसंस्थं नमामि इति ।।

ப்ரணவத்தின் த்யானம் சொல்லப்பட்டுள்ளது மந்த்ரதேவதாப்ரகாசிகையில்:- விஷ்ணும் + பத்மஸம்ஸ்தம் நமாமி' இதன் பொருள் - "ப்ரகாசமுள்ள கிரீடம், தோள்வளைகள், கடகங்கள், கண்டாபரணம், ஹாரம், வயிற்றிலும் கால்களிலும் இடுப்பிலும் அணியக்கூடிய ஆபரணங்கள் இவைகளையுடையவனும், நல்ல மார்புடையவனும் மணிகிரீடம், மஹா குண்டலங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட அங்கங்களை உடையவனும், கைகளில் ப்ரகாசிக்கும் சங்கம் சக்ரம், பத்மம், கதை இவைகளை உடையவனும், நிர்மலனும், மஞ்சள் நிறமான ஆடையுடைவனும், விசேஷமாய் விளங்கும் ஒளியையுடையவனும், உதிக்கும் ஸூர்யனுக்குச் சமமானவனும், தாமரையில் வீற்றிருப்பவனுமான விஷ்ணுவை வணங்குகின்றேன்" என்று.

व्यासः – स्वस्वोक्तवर्णतनवो रूपयौवनसंयुताः । क्षौमवस्त्र-परीधानाः सर्वाभरणभूषिताः ।। दिव्यचन्दनलिप्ताङ्गा दिव्यमाल्यैर-लङ्कृताः । सितोपवीतहृदयाः सपवित्राश्चतुष्कराः ।। उन्निद्रवदनांभोज प्रभामण्डलमण्डिताः । जटाकलापपूर्णेन्दुप्रभापूरितदिङ्मुखाः ।। अभयाक्षस्रगप्पात्रवरहस्तसरोरुहाः । एवं होमजपारम्भे ध्येया व्याहृतयो द्विजैः ।।

**வ்யாஸர்:-** அவரவருக்குச் சொல்லிய வர்ணமுடைய சரீரமுடையவரும், ரூபத்துடனும் யௌவனத்துடனும் கூடியவரும், வெண்பட்டு ஆடையை அணிந்தவரும், ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவரும், திவ்யசந்தனத்தால் பூசப்பட்டவரும், திவ்ய மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவரும், வெளுத்த உபவீதத்தை மார்பிலுல் உடையவரும், பவித்ரம் அணிந்தவரும், நான்கு கைகளை உடையவரும், மலர்ந்த முகபத்மத்தின் ஒளியினுல் அலங்கரிக்கப்பட்டவரும், ஜடாமகுடத்தில் உள்ள பூர்ண சந்த்ரனின் காந்தியால் நிறைக்கப்பட்ட திக்குகளை உடையவரும், அபயம், ஜபமாலை, கமண்டலு, வரம் இவைகளைக் கைகளில் உடையவருமாக வ்யாஹ்ருதி தேவதைகளை, ஹோம ஜபாரம்ப காலங்களில் ப்ராம்ஹணர்கள் த்யானிக்க வேண்டும்.

गायत्री ध्यानम् — मुक्ताविद्रुमहेमनीलधवलच्छायै-र्मुखैस्त्रीक्षणैर्युक्तामिन्दुकलानिबद्धमकुटां तत्वात्म(र्थ)वर्णात्मिकाम्। गायत्रीं वरदाभयाङ्कुशकशाः शुभ्रं कपालं गुणं शङ्खं चक्रमथारविन्दयुगलं हस्तैर्वहन्तीं भजे इति ॥

**காயத்ரீத்யானம்:-** 'முக்தாவித்ரும + வஹந்தீம் பஜே' இதன் பொருள்:- ''முத்து, பவழம், தங்கம், நீலம், வெளுப்பு இந்த நிறங்களுடையதும், மும்மூன்று கண்களுடையதுமான ஐந்து முகங்களுடன் கூடியவளும், சந்த்ரனுடன் சேர்ந்துள்ள ரத்னகிரீடம் அணிந்தவளும், ப்ரம்ஹத்தைச் சொல்லும் வர்ணஸ்வரூபிணியாயும், பத்துக் கைகளால் வரதானம், அபயதானம், அங்குசம், கதை, வெண்ணிறமான கபாலம், நாண், சங்கம், சக்ரம், இரண்டு தாமரைப் புஷ்பங்கள் இவைகளைத் தரித்தவளுமான காயத்ரியை ஸேவிக்கின்றேன்'' என்று.

इत्येवं कुर्वतः फलमाह संवर्तः — मानसं वाचिकं पापं कायेनैव तु यत्कृतम् । तत्सर्वं नश्यति क्षिप्रं प्राणायामत्रये कृते इति ॥ योगयाज्ञवल्क्योऽपि — प्राणायामत्रयं कृत्वा सूर्यस्योदयनं प्रति ।

निर्मलाः स्वर्गमायान्ति सन्तः सुकृतिनो यथा इति । मनुः – प्राणायामा ब्राह्मणस्य त्रयोऽपि विधिवत् कृताः । व्याहृतिप्रणवैर्युक्ता विज्ञेयं परमं तपः ॥ दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः । तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥ सव्याहृतिकाः सप्रणवाः प्राणायामास्तु षोडश । अपि भ्रूणहनं मासात् पुनन्त्यहरहः कृताः इति ॥

இவ்விதம் செய்பவனுக்கு பலனைச் சொல்லுகிறார் ஸம்வர்த்தர்:- மனதினாலும், வாக்கினாலும், காயத்தினாலும், எந்தெந்தப் பாபம் செய்யப்பட்டதோ அதெல்லாம், மூன்று ப்ராணாயாமங்கள் செய்தால் உடனே நசிக்கின்றது. யோக்யாக்ஞவல்க்யரும்:- ஸூர்யோதய காலத்தில், மூன்று ப்ராணாயாமங்கள் செய்தால் அவர்கள், பாபமற்றவராய், புண்யம் செய்தவர்கள் போல் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர். மனு:- வ்யாஹ்ருதிகளுடனும், ப்ரணவத்துடனும் சேர்த்து, விதியுடன் செய்யப்பட்ட மூன்று ப்ராணாயாமங்கள், ப்ராம்ஹணனுக்குச் சிறந்த தபஸ் என அறியத் தகுந்தது. உலையில் ஊதப்படும் தாதுக்களின் மலங்கள் எப்படி பொசுக்கப்படுகின்றனவோ, அப்படி, ப்ராணாயாமத்தால், இந்த்ரியங்களின் தோஷங்கள் தஹிக்கப்படுகின்றன. வ்யாஹ்ருதிகளுடனும், ப்ரணவத்துடனும் கூடிய ப்ராணாயாமங்கள் பதினாறு, ப்ரதி தினம் செய்யப்பட்டால், ஒரு மாஸத்தில், ப்ரம்ஹஹத்யை செய்தவனையும் சுத்தனாக்குகின்றன.

शौनकः – प्राणायामान् धारयेत्त्रीन् यथाविधि समाहितः । अहोरात्रकृतं पापं तत्क्षणादेव नश्यति ॥ आत्मा शुध्येद्द्वादशभिश्चतुर्विंशात् परं तपः इति ॥ यमोऽपि – दशप्रणवसंयुक्तैः प्राणायामैश्चतुर्दशैः । मुच्यते ब्रह्महत्यायाः मासाच्चैवोपपातकैः इति ॥

சௌனகர்:- கவனமுடையவனாய், விதிப்படி மூன்று ப்ராணாயாமங்களைச் செய்ய வேண்டும். ஒருநாள் முழுவதும்

செய்த பாபம் அந்த க்ஷணத்திலேயே நசிக்கின்றது. பன்னிரண்டு ப்ராணாயாமங்களால் சித்தம் சுத்தமாகின்றது. இருபத்து நான்கு ப்ராணாயாமங்களால் சிறந்த தபஸ் ஏற்படுகின்றது. **யமனும்:**- பத்து ப்ரணவங்களுடன் கூடிய பதினான்கு ப்ராணாயாமங்கள் செய்தால், ஒரு மாஸத்தில் ப்ரம்ஹ ஹத்யையினின்றும் விடுபடுவான், உபபாதகங்களாலும் விடுபடுவான்.

व्यासः – सव्याहृतिकां सप्रणवां गायत्रीं शिरसा सह। ये जपन्ति सदा तेषां न भयं विद्यते क्वचित् इति ।। योगयाज्ञवल्क्योऽपि – य एता व्याहृतीस्सप्त संस्मरेत् प्राणसंयमे । उपासितं भवेत्तेन विश्वं भुवनसप्तकम् । सर्वेषु चैव लोकेषु कामचारश्च जायते ।। षोडशाक्षरकं ब्रह्म गायत्र्यास्तु शिरः स्मृतम् । सकृदावर्तयन् विप्रः संसारादपि मुच्यते इति ।

**வ்யாஸர்:**- வ்யாஹ்ருதிகளுடனும், ப்ரணவத்துடனும், சிரஸ்ஸுடனும் கூடிய காயத்ரியை எவர்கள் நித்யமும் ஜபிக்கின்றனரோ அவர்களுக்கு ஒருகாலும் பயமில்லை. **யோக யாக்ஞவல்க்யரும்** :- எவன், ப்ராணாயாமத்தில் இந்த ஏழு வ்யாஹ்ருதிகளையும் ஸ்மரிக்கின்றானோ. அவனால் ஏழுலுகங்கள் முழுவதும் உபாஸிக்கப்பட்டவையாய் ஆகும். அவனுக்கு, ஸகல உலகங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சார சக்தியும் உண்டாகின்றது. பதினாறு அக்ஷரங்களையுடைய வேதவாக்யம் காயத்ரீக்கு, சிரஸ் எனப்படுகிறது. அதை ஒரு தடவை ஜபித்தாலும் ப்ராம்ஹணன் ஸம்ஸாரத்தினின்றும் முக்தனாகிறான்.

—★—

## गायत्र्यावाहनव्याहृत्यर्थौ ।

अथ गायत्र्यावाहनम् । भरद्वाजः – आयात्वित्यनुवाकेन हृदये वाऽर्कमण्डले । देवीमावाह्य गायत्रीं ततो ध्यायेद्विजोत्तमः इति ।।

पितामहः – आयात्वित्यनुवाकेन देवीमावाहयेत्ततः । आयात्वित्यनुवाकस्य वामदेव ऋषिः स्मृतः ।। छन्दोऽनुष्टुब्भवेदस्य गायत्री देवता स्मृता । अनेन चानुवाकेन त्वावाह्य तु यथाविधि ।। गायत्रीं विमलां देवीं हृदि वा सूर्यमण्डले । ध्यानयोगेन संपश्येद्वर्णरूप-समन्विताम् ।। प्राणानायम्य चावाह्य स्मृत्वर्ष्यादि ततो न्यसेत् । मुद्राः प्रदर्श्य ध्यात्वाऽथ जपेन्मन्त्रमयं क्रमः इति ।।

### காயத்ரீ ஆவாஹனமும், வ்யாஹ்ருதிகளின் அர்த்தமும்

இனி, காயத்ரியின் ஆவாஹனம் சொல்லப்படுகிறது. **பரத்வாஜர்:-** 'ஆயாது' என்ற அனுவாகத்தால், ஹ்ருதயத்திலாவது, ஸூர்யமண்டலத்திலாவது, காயத்ரீ தேவியை ஆவாஹனம் செய்து, பிறகு ப்ராம்ஹணன் த்யானிக்க வேண்டும். **பிதாமஹர்:-** பிறகு 'ஆயாது' என்கிற அனுவாகத்தால் காயத்ரியை ஆவாஹனம் செய்ய வேண்டும். 'ஆயாது' என்ற அனுவாகத்திற்கு, வாமதேவர் ருஷி எனப்படுகிறார். அனுஷ்டுப் சந்தஸ் ஆகின்றது. காயத்ரீ தேவதை எனப்படுகிறாள். இந்த அனுவாகத்தால் விதிப்படி ஆவாஹனம் செய்து, நிர்மலையான காயத்ரீ தேவியை, ஹ்ருதயத்திலாவது, ஸூர்ய மண்டலத்திலாவது, வர்ண ரூபங்களுடன் கூடியவளாய் த்யானிக்க வேண்டும். பிறகு, ப்ராணாயாமம் செய்து, ஆவாஹனம் செய்து, ருஷி முதலியதை ஸ்மரித்து ந்யாஸம் செய்து, முத்ரைகளைக் காண்பித்து, த்யானம் செய்து, பிறகு மந்த்ரத்தை ஜபிக்கவும். இது க்ரமமாகும்.

शौनकः – आवाहनं तैत्तिरीये ह्युक्तं चापि विसर्जनम् इति ।। मन्त्रान्तरमाह गोभिलः – आयातु वरदा देवी अक्षरे ब्रह्मवादिनी । गायत्री छन्दसां माता ब्रह्मयोने नमोऽस्तु ते इति ।। व्यासोऽपि – आवाहयेत्तु गायत्रीं सर्वपापप्रणाशिनीम् । आगच्छ वरदे देवि जप्ये मे सन्निधौ भवेः ।। गायन्तं त्रायसे यस्माद्गायत्री त्वं ततः स्मृता इति ।।

बृहस्पतिः – ऋषिं छन्दो देवतां च ध्यात्वा मन्त्रार्थमेव च। गायत्र्यास्तु समस्ताया ऋषिच्छन्दोऽधिदेवताः ॥ स्मृत्वा प्रत्यक्षरं पश्चादृष्यादीनथ संस्मरेत् इति ॥

சௌனகர்:- ஆவாஹனமும், விஸர்ஜனமும், தைத்திரீயத்தில் சொல்லப்பட்டுள்ளது. வேறு மந்த்ரத்தைச் சொல்லுகிறார் கோபிலர்:- 'ஆயாது' + நமோஸ்துதே'. வ்யாஸரும்:- ஸகல பாபங்களைம் அகற்றும் காயத்ரியை ஆவாஹனம் செய்ய வேண்டும். 'ஆகச்சவரதே தேவி + ஸ்ம்ருதா' என்பது மந்த்ரமாம். ப்ருஹஸ்பதி:- ருஷி, சந்தஸ், தேவதை, மந்த்ரார்த்தம் இவைகளை த்யானிக்க வேண்டும். ஸகலையான காயத்ரியின் ருஷி, சந்தஸ், தேவதை இவைகளை ஸ்மரித்துப் பிறகு, ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ருஷி முதலியதை ஸ்மரிக்க வேண்டும்.

पितामहः – सविता देवता यस्या मुखमग्निस्त्रिपाच्च या। विश्वामित्र ऋषिश्छन्दो गायत्री सा विशिष्यते इति ॥ व्यासः – विश्वामित्र ऋषिश्छन्दो नृचिद्गायत्र मुच्यते। देवता परमात्मा च सविता वा प्रकीर्तितः ॥ प्राणायामे जपे त्वर्घ्यदाने च विनियुज्यते इति ॥

பிதாமஹர்:- எவளுக்கு ஸவிதா தேவதையோ, அக்னி முகமோ, எவள் மூன்று பாதங்களை உடையவளோ, எவளுக்கு விசுவாமித்ரர் ருஷியோ, காயத்ரீ சந்தஸ்ஸோ அவள் புகழப்படுகிறாள். வ்யாஸர்:- விச்வாமித்ரர் ருஷி, நிச்ருத் காயத்ரம் சந்தஸ், பரமாத்மா அல்லது ஸவிதா தேவதை. ப்ராணா யாமத்திலும், ஜபத்திலும், அர்க்ய தானத்திலும் விநியோகம்.

ओं भूरित्यादीनामयमर्थः – अकारोकारमकारात्मकस्य प्रणवस्य ब्रह्मविष्णुमहेश्वरात्मकः परमात्मा प्रतिपाद्योऽर्थः। तेन सह समस्तव्याहृतिप्रतिपाद्यार्थस्यैकत्वमुच्यते। ओं भूः - सत्तास्वभावः प्रणवार्थः। एवमों भुवः - स्थितिकाले सर्वमस्मिन् भवतीति भुवः। सर्वस्थितिकारणमपि प्रणवार्थः। ओं सुवः – सुपर्वस्य वृञ् वरणे

इत्यस्य रूपम्। शोभनैः सनकादिभिर्वृतम्। सुष्ठु सर्वं वृणोति व्याप्नोतीति वा सुवः ब्रह्म। ओं महः - महतेः पूजाकर्मणो रूपम्। मुमुक्षुभिः पूजनीयत्वात् ब्रह्मैव मह इत्युच्यते। ओं जनः – जनेरन्तर्भावितण्यर्थस्य रूपम्। सर्वस्य जगतो जनकं ब्रह्मेत्यर्थः। ओं तपः - तपतेरन्तर्भावितण्यर्थस्य रूपम्। सूर्यात्मना स्थित्वा जगत्तापयति प्रकाशयतीति तपः। तदपि प्रणवार्थ एव। ओं सत्यं - क्वचिदपि देशे काले वस्तुनि केनापि प्रमाणेनाबाधितम्। सच्च त्यच्चेति वा सत्यं कार्यं कारणमप्यदः। प्रत्यक्षं च परोक्षं च यद्वा सत्यमितीरितमिति। तदपि प्रणवार्थ एव। यद्वा - भूरित्येतदधोलोकानामप्युपलक्षणम्। भूप्रभृतयश्च सप्त उपरि लोकाः पातालाद्याश्च अधोलोकाः सप्त चतुर्दशलोका अपि ब्रह्मकार्यत्वात्तदुपादानभूतब्रह्मात्मका इत्यर्थः॥

*ஓம் பூ: என்பது முதலியவைக்கு இது அர்த்தம்:- அகார உகார மகாராத்மகமான ப்ரணவத்திற்கு ப்ரம்ஹவிஷ்ணு மஹேச்வரஸ்வரூபியான பரமாத்மா பொருள். அவருடன், ஏழு வ்யாஹ்ருதிகளால் ப்ரதிபாத்யமான அர்த்தத்திற்கு ஐக்யம் சொல்லப்படுகிறது. ஓம்பூ: = ஸத்தா ஸ்வரூபம் பிரணவார்த்தம். இவ்விதம் ஓம் புவ: - ஸ்திதி காலத்தில் ஸகலமும் இவனிடத்தில் இருக்கிறது என்பதால் புவ: ஸர்வ ஸ்திதி காரணமும் ப்ரணவார்த்தம். ஓம் ஸுவ: + சோபனர்களான ஸனகாதிகளால் வரிக்கப்பட்டது. அல்லது, நன்குய் எல்லாவற்றையும் வ்யாபிக்கின்றது என்பதால் ஸுவ: - ப்ரம்ஹம். ஓம் மஹ: - முக்தியை விரும்புகிறவர்களால் பூஜிக்கத்தக்கதாய் இருப்பதால் ப்ரஹ்மமே மஹ: எனப்படுகிறது. ஓம் ஜந: - ஸகல ஜகத்திற்கும் ஜநகம் ப்ரம்ஹம் என்று பொருள். ஓம் தப: - ஸூர்ய ஸ்வரூபமாய் இருந்து ஜகத்தைத் தபிக்கச் செய்கின்றது. அதுவும் ப்ரணவார்த்தமே. ஓம் ஸத்யம் = ஒரு தேசத்திலும், ஒரு காலத்திலும், ஒரு வஸ்துவிலும், எந்த ப்ரமாணத்தாலும் பாதிக்கப்படாதது. அல்லது*

ஸ்தாவரஜங்கம ரூபமாயிருப்பதும், கார்ய காரண ரூபமாயிருப்பதும், ப்ரத்யக்ஷ பரோக்ஷ ரூபமாயிருப்பதும், 'ஸத்யம்' எனப்படுகிறது என்று சொல்லப்பட்டதும் ப்ரணவார்த்தமே. அல்லது, பூ: என்பது கீழ் உலகங்களுக்கும் உபலக்ஷணம். பூமி முதலிய ஏழு மேலுலகங்களும், பாதாளம் முதலிய ஏழு கீழுலகங்களும். இந்தப் பதினான்கு உலகங்களும் ப்ரம்ஹத்தின் கார்யங்களானதால், அவைகளுக்கு உபாதான காரணமாகிய ப்ரம்ஹாத்மகங்கள் என்பது பொருள்.

## गायत्र्यर्थः

अथ गायत्र्यर्थः – सवितुः – सर्वजगतः प्रसवितुः जगत्कारणस्य। देवस्य - द्योतनस्वभावस्य स्वयंप्रकाशचिदेकरसस्य। वरेण्यं = वरणीयं सर्वैः प्रार्थनीयं सुखैकतानरूपम्, सर्वैः सुखस्यैव प्रार्थनीयत्वात्। भर्गः - भ्रस्ज दाहे। प्रकृतिप्राकृतलक्षणस्य संसारस्य दाहकम्। यः धियः - धीवृत्तीः प्रचोदयात् - प्रेरयति, तस्य बुद्ध्यादिप्रेरकस्य सवितुर्देवस्य वरेण्यं परमानन्दैकरसं भर्गः - सकारान्तः, संसारदाहकं निर्गुणं ब्रह्म धीमहि - ध्यायामः इति॥

### காயத்ரியின் அர்த்தம்

இனி காயத்ரியின் அர்த்தம் சொல்லப்படுகிறது. ஸவிது: + ஸகல ஜகத்திற்கும் காரணமாகிய, தேவஸ்ய = ப்ரகாச சித்ஸ்வபாவனான, வரேண்யம் = எல்லோராலும் ப்ரார்த்திக்கக் கூடியதான, ஸுகஸ்வரூபமான, ஸுகமே எல்லோராலும் ப்ரார்த்திக்கத் தகுந்ததானதால் பர்க: - ஸம்ஸாரத்திற்கு தாஹகமான, ய: - எவன், திய: = புத்தி வ்ருத்திகளை, ப்ரசோதயாத் = ஏவுகின்றானோ, அந்த, புத்யாதிகளுக்கு ப்ரேரகனான ஸவிதாவான தேவனின், வரேண்யம் - பரமாநந்தைகரஸமான, பர்க: - ஸம்ஸாரதாஹகமான நிர்க்குணமான ப்ரம்ஹத்தை, தீமஹி - த்யானிக்கின்றோம், என்று.

स्मृतिभास्करे – तदित्येतत् परं ब्रह्म ध्येयं तत्सूर्यमण्डले। सवितुः सकलोत्पत्तिस्थितिसंहारकारिणः ॥ वरेण्यमाश्रयणीयं यदाधारमिदं जगत् । भर्गः स्वसाक्षात्कारेणाविद्यातत्कार्यदाहकम् ॥ देवस्य ज्ञानरूपस्य स्वानन्दात् क्रीडतोऽपि वा । धीमह्यहं स एवेति तेनैवाभेदसिद्धये॥ धियोऽन्तः करणे वृत्तीः प्रत्यक्प्रवणकारिणीः ॥ य इत्यरूपमव्यक्तं सत्यज्ञानादिलक्षणम् ॥ नोऽस्माकं बहुधाऽध्यस्त-भेदेनानेकदेहिनाम्। प्रचोदयात् प्रेरय(ति)तु सत्यज्ञानादिलक्षणः इति।

ஸ்ம்ருதி பாஸ்கரத்தில்:- தத் என்பது பரப்ரம்ஹம். அது ஸூர்யமண்டலத்தில் த்யானிக்கத் தகுந்தது. ஸவிது:- ஸகல ஜகத்துக்கும் ஜன்ம ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யும். வரேண்யம் - ஆச்ரயிக்கத் தகுந்த, இந்த உலகம் எதை ஆதாரமாக உடையதோ, பர்க:- தன்னை ஸாக்ஷாத்கரிப்பதால் அவித்யையையும் அதன் கார்யத்தையும் தஹிப்பதாகியது. தேவஸ்ய-ஜ்ஞானரூபியாகிய, அல்லது தன் ஆனந்தத்தால் க்ரீடிக்கின்ற தீமஹி - நான் அவனே என்று, அவனோடு அபேதம் ஸித்திப்பதற்காக, திய:- அந்த: கரணவ்ருத்திகளை, உள்நோக்கிச் செல்பவைகளாய். ய:- ரூபமற்றவனும், வ்யக்தமல்லாதவனும், ஸத்யம் ஜ்ஞானம் முதலியதை லக்ஷணமாயுடையவனும். ந:- பலவிதமாய் அத்யஸிக்கப்பட்ட பேதத்தால் அநேக தேஹிகளான நம்முடைய. ப்ரசோதயாத் = ஏவுகின்றானோ. (ஏவவேண்டும்) ஸத்யக்ஞானாதி லக்ஷணனாகியவன்.

विश्वामित्रः – देवस्य सवितुस्तस्य धियो यो नः प्रचोदयात्। भर्गो वरेण्यं तद्ब्रह्म धीमहीत्यर्थ उच्यते इति ॥ अगस्त्यः – यो देवस्सविताऽस्माकं धियो धर्मादिगोचराः । प्रेरयेत्तस्य यद्भर्गस्तद्वरेण्यमुपास्महे इति॥ मन्त्रदीपिकायाम् – देवस्य सवितुस्तेजो वरेण्यं भर्गसंज्ञितम्। ध्यायेमहीतिशब्दोक्तौ धीमहीत्यर्थ उच्यते॥ यः शब्दश्च यदित्यर्थे लिङ्गव्यत्ययतो भवेत् इति॥

**விச்வாமித்ரர்:-** எவன் நமது புத்திவ்ருத்திகளை ஏவுகின்றானோ, அந்த ஸவிதாவெனும் தேவரின் உபாஸிக்கத் தகுந்த பர்க்கஸ்ஸை அந்த ப்ரம்ஹத்தை த்யானிக்கின்றோம், என்று அர்த்தம் சொல்லப்படுகிறது. **அகஸ்த்யர்:-** எந்தத் தேவனான ஸவிதா, நம்முடைய புத்தி வ்ருத்திகளை, தர்மம் முதலிய விஷயங்களைப் பற்றியதாய் ஏவுகின்றானோ, அவனது பர்க்கஸ் எதுவோ, எல்லோராலும் உபாஸிக்கத் தகுந்த அதை உபாஸிக்கின்றோம். **மந்த்ரதீபிகையில்:-** தேவனான ஸவிதாவின், வரேண்யமான பர்க்கம் எனப்படும் தேஜஸ்ஸை, த்யானிக்கின்றோம். த்யாயேமஹி என்பதற்கு 'தீமஹி' என்று சொல்லப்படுகிறது. 'யத்' என்ற அர்த்தத்தில் 'ய:' என்ற பதம் லிங்கவித்யாஸத்தாலுள்ளது.

वरदराजीये नित्यमन्त्रव्याख्याने – तच्छब्दश्रुतेर्यच्छब्दोऽध्याहार्यः । सवितुः जगतां प्रसवितुः, सविता वै प्रसवानामीशे, उतेशिषे प्रसवस्य त्वमेक इत्यादिश्रुतेः । वरेण्यम् - वृङ् संभक्तौ । एण्यप्रत्ययः । सर्वेषां भजनीयम् । भर्गः - प्रकाशप्रदानेन जगतो बाह्याभ्यन्तरतमोभ-र्जनाद्वा, कालात्मकतया सकलकर्मफलपाक-हेतुत्वेन भर्जनाद्वा, वृष्टिप्रदानेन भूतानां भरणाद्वा भर्गः । देवस्य = द्योतमानस्य । धीमहि - ध्यै चिन्तायाम् । देवस्य सवितुर्वरेण्यं यत् भर्गः, तद्ध्यायामि । तच्छब्दो ब्रह्मवाचकत्वेन प्रसिद्धः । ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः इति भगवद्गीतासु स्मरणात् । आदित्यमण्डलान्तर्वर्तिनं पुरुषमनुचिन्तयामः । य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषः, अथ य एष एतस्मिन् मण्डलेऽर्चिषि पुरुषः इत्यादिश्रुतेः । यस्सविता नः - अस्माकं, धियः - हानोपादानादिविषयाणि ज्ञानानि प्रचोदयात् - प्रचोदयति प्रवर्तयति, तस्य सवितुः तत् भर्गश्चिन्तयामः इति ॥

**வரதராஜீயத்தில்:-** நித்ய மந்த்ர வ்யாக்யானத்தில்- தத்சப்தமிருப்பதால், யத்சப்தம் சேர்க்கப்பட வேண்டும்.

ஸவிது:- ஜகத்துக்களை உண்டு பண்ணுகிறவனுடைய. அவ்விதம் ச்ருதிகளில் இருப்பதால். வரேண்யம் - எல்லோருக்கும் உபாஸிக்கத் தகுந்ததான. பர்க:= ப்ரகாசத்தைக் கொடுப்பதால் உலகத்தின் வெளியிலும் உள்ளும் உள்ள இருளைப் போக்குவதால், கால ஸ்வரூபியாய் இருப்பதால் எல்லோருடைய கர்ம பலன்களின் பாகத்திற்கு ஹேதுவாய் இருப்பதால், வறுப்பதால் மழையைக் கொடுப்பதால் ப்ராணிகளைப் தாங்குவதால் 'பர்க:' எனப்படும் தேஜஸ்ஸை. தேவஸ்ய - ப்ரகாசிப்பவனின். தீமஹி - சிந்திக்கின்றோம். தேவனுன ஸவிதாவின் உபாஸ்யமான எந்தப் பர்க்கஸ்ஸோ அதை த்யானிக்கின்றேன். 'தத்' என்ற சப்தம் ப்ரம்ஹவாசகம் என ப்ரஸித்தமாகியது, அவ்விதம் பகவத் கீதையில் இருக்கிறது. ஸூர்ய மண்டலத்தின் உள்ளிலுள்ள புருஷனைச் சிந்திக்கின்றோம். அவ்விதம் ச்ருதிகள் இருக்கின்றன. ய:- எந்த ஸவிதா, ந:- நம்முடைய, திய:- ஹாநோபாதான (விடுவதும், க்ரஹிப்பதும்) விஷயங்களான ஜ்ஞானங்களை, ப்ரசோதயாத் = ஏவுகின்றானோ, அந்த ஸவிதாவின், அந்தப் பர்க்கஸ்ஸைச் சிந்திக்கின்றோம்.

मार्कण्डेयोऽपि – कुशबृस्यां निविष्टस्तु कुशपाणिर्जितेन्द्रियः । अर्कमध्यगतं ध्यायेत् पुरुषं तु महाद्युतिम् इति ।। निरुक्तभाष्येऽपि – यत् ब्रह्म नित्यं हृदि संविनिष्टं मां प्रेरयत्तिष्ठति नः सुबुद्धीः । भर्गस्तदाख्यं भजनीयमेतद्ध्यायामि नित्यं रविमण्डलस्थम् ।। देवस्य सवितुर्मध्ये यो भर्गो नो धियः स्वयम् । प्रचोदयात्तद्वरेण्यं धीमहीत्यन्वयक्रमः ।। द्युस्थानाद्द्योतनाद्वाऽपि भानुर्देव उदाहृतः । जगत्प्रसवहेतुत्वात् स एव सविता भवेत् ।। तत्सम्बन्धी च यो भर्गः पापानां भञ्जकत्वतः । अस्माकं कार्यविषये बुद्धीः प्रेरयतीह यः ।। तत् ब्रह्म प्रार्थनीयं स्या द्वरणीयमुपास्महे ।। ध्येयः सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणः सरसिजासनसंनिविष्टः । केयूरवान् मकरकुण्डलवान् किरीटी हारी हिरण्मयवपुर्धृतशङ्खचक्रः इति ।।

**மார்க்கண்டேயரும்:-** குசாஸனத்தில் உட்கார்ந்தவனாய், குசங்களைக் கையில் உடையவனாய், இந்த்ரியங்களை ஜயித்தவனாய், ஸூர்ய மண்டலத்தின் நடுவிலுள்ளவனும், மஹா ப்ரகாசமுள்ளவனுமாகிய புருஷனை த்யானிக்க வேண்டும். **நிருக்த பாஷ்யத்திலும்:-** எந்த ப்ரம்ஹம், நித்யமாய் ஹ்ருதயத்தில் உள்ளதாய் என்னை ஏவுகின்றதாய் உள்ளதோ, எங்களுடைய நற்புத்திகளையும் ஏவுகின்றதோ, பர்க்கஸ் என்று பெயருடையதாய் ஸேவிக்கத் தகுந்ததாய் நித்யமாய் ஸூர்ய மண்டலத்தில் இருப்பதாய் உள்ள அந்த ப்ரம்ஹத்தை த்யானிக்கிறேன். தேவனான ஸவிதாவின் நடுவில், எந்தப் பர்க்கஸ், நமது புத்திவ்ருத்திகளை தான் ஏவுகின்றதோ, அந்த உபாஸ்யமான பர்க்கஸ்ஸை த்யானிக்கின்றோம் என்று அன்வயத்தின் க்ரமமாம். த்யுஸ்தானமான வானத்தில் இருப்பதாலோ, (த்யோதன) ஒளியால் துலங்குவதாலோ, தேவன் என்பவன் ஸூர்யன் எனப்படுகிறான். ஜகதுத்பத்திக்கு ஹேதுவானதால் அவனே ஸவிதா எனப்படுகிறான். அவனைச் சேர்ந்துள்ள எந்தப் பர்க்கஸ் உண்டோ, (பாபங்களை வறுப்பதால் பர்க்கஸ் எனப்படுகிறது) எது நமக்குக் கார்ய விஷயத்தில் புத்தி வ்ருத்திகளை ஏவுகின்றதோ, அந்த வரணீயமான - ப்ரார்த்தனீயமான ப்ரம்ஹத்தை உபாஸிக்கின்றோம். ஸூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவனும், தாமரை ஆஸனத்தில் வீற்றிருப்பவனும், தோள்வளை, மகரகுண்டலம், கிரீடம், ஹாரம் இவைகளை அணிந்தவனும், ஸ்வர்ண மயமான சரீரம் உடையவனும், சங்க சக்ரங்களைத் தரித்தவனும் ஆகிய நாராயணன் எப்பொழுதும் த்யானிக்கத் தகுந்தவன்.

## अथ गायत्रीशिरसोऽर्थः

ओमित्युक्तार्थः । आप्नोतीत्यापः । अखण्डसत्तास्वरूपेण सर्वव्यापकः स एव । ज्योतिः - स्वयंप्रकाशचैतन्यज्योतिः । रसः = स एव आनन्दस्वभावः । तदेव अमृतं - अमरणधर्मकम् । तदेव ब्रह्म -

देशाद्यनवच्छिन्नम् । एवंभूतस्यार्थस्य व्याहृतित्रयार्थैनैक्यमुच्यते भूरित्यादिना । भूः - सत्तास्वभावः । सृष्टिकाले सर्व(म)स्मिन् भवतीति । स्थितिकाले सर्वस्मिन् भवतीति च भुवः । सर्वोपादानं सर्वस्थितिकारणं चेति यावत् । सुवः - सर्वसंहर्तृ । अयं शिरसोऽर्थः प्रणवार्थ एव । प्रणवसहितसप्तव्याहृतिभिः प्रणवसहितगायत्र्या प्रणवसहितशिरसा च प्रतिपादितमखण्डैकरसं ब्रह्म प्रत्यगात्मतयाऽनुजानाति ओमिति ॥

### காயத்ரீ சிரஸ்ஸின் அர்த்தம்

*இனி காயத்ரீ சிரஸ்ஸின் அர்த்தம் சொல்லப்படுகிறது. ஓம் என்பதற்கு அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது. ஆப:- அகண்ட ஸத்தாஸ்வ ரூபத்தால் ஸர்வ வ்யாபகனுனவன் பரமாத்மாவே. ஜ்யோதி:- ஸ்வயம் ப்ரகாசமான சைதன்ய ஜ்யோதிஸ்ஸ"ும் அவனே, ரஸ:- ஆனந்த ஸ்வபாவன் அவனே, அதுவே அம்ருதம் - மரணதர்மமற்றது. அதுவே ப்ரம்ஹ - தேசகாலாதிகளால் பிரிக்கப்படாதது. இவ்விதமுள்ள வஸ்துவுக்கு, மூனறு வ்யாஹ்ருதிகளின் அர்த்தத்துடன் ஐக்யம் சொல்லப்படுகிறது. 'பூ:' என்பது முதலியதால். பூ:= ஸத்தாஸ்வபாவமாயுள்ளது. ஸ்ருஷ்டி காலத்தில் ஸகலமும் இவனிடத்தில் உண்டாகிறது. ஸ்திதி காலத்தில் ஸகலமும் இவனிடத்தில் இருக்கின்றது, என்பதால் புவ: ஸர்வோபாதானமாயும், ஸர்வஸ்திதி காரணமாயும் உள்ளது. ஸ"வ:- ஸர்வத்தையும் ஸம்ஹரிப்பது. இந்தக் காயத்ரீ சிரஸ்ஸின் அர்த்தம் ப்ரணவார்த்தமே. ப்ரணவத்துடன் கூடிய ஏழு வ்யாஹ்ருதிகளாலும், ப்ரணவத்துடன் கூடிய காயத்ரியாலும், ப்ரணவத்துடன் கூடிய சிரஸ்ஸாலும் சொல்லப்பட்ட, அகண்டைகரஸமான ப்ரம்ஹத்தை, ப்ரத்யகாத்மா என்று ஒப்புக் கொள்ளுகிறுன் ஓம் என்பதால்.*

अथ आयात्वित्यनुवाकार्थः – आयातु – आगच्छतु । वरं ईप्सितं भक्तेभ्यो ददातीति वरदा । देवी - द्योतनस्वभावा । न क्षरति, सर्वमश्नुत

इति वा अक्षरम्। ब्रह्म - अपरिच्छिन्नम्। संमितं सम्यक् मितमवगतम्। भावे निष्ठा। ज्ञानस्वभावम्। यदेवंभूतम्, तदायात्वित्यर्थः। गायत्रीं - प्रथमार्थे द्वितीया । गायत्री । छन्दसां माता - छन्दसां देवतानामुष्णिगादीनां च माता, गायत्री त्वं, इदं - अपरोक्षैकरसं पूर्वोक्तं ब्रह्म नः - अस्माकं जुषस्व - अन्तर्भावितण्यर्थः। सेचय ॥

*இனி 'ஆயாது' என்ற அனுவாகத்தின் அர்த்தம். ஆயாது - வரவேண்டும், வரதா - இஷ்டமான வரனைக் கொடுக்கும், தேவீ - ப்ரகாச ஸ்வபாவமாகியவள். அக்ஷரம் - நாசமற்றதும், அல்லது எல்லாவற்றையும் வ்யாபிக்கின்றதும், பிரம்ஹ - பரிச்சேதமற்றதும், ஸம்மிதம் - நல்ல அறிவும், எது இவ்விதமாயுள்ளதோ, அது வரவேண்டும் என்பது பொருள். காயத்ரீம் - காயத்ரீ, சந்தஸாம் - வேதங்களுக்கும், உஷ்ணிக் முதலியதுக்கும், மாதா - தாயாகிய காயத்ரியாகிய நீ, இதம் = அபரோக்ஷைகரஸமான முன் சொல்லப்பட்ட ப்ரம்ஹத்தை, ந: - எங்களுக்கு, எங்களை, ஜுஷஸ்வ - ஸேவிக்கச் செய்வாயாக.*

गायत्र्यात्मकं परं ब्रह्म स्तूयते –ओजोसीत्यादिना। ओजः - तेजः । तदसि । सहः - पराभिभवशक्तिः । तदसि । महाप्रलयादौ सर्वाभिभवसामर्थ्यस्य सत्त्वात्। बलं - प्राणाः। भ्राजः - दीप्तिः। देवानां वस्वादीनां धाम-स्थानमसि । नामाख्यनिखिलशब्दराशिरपि त्वमेवासि। किंबहुना। विश्वमसि - विश्वं परिदृश्यमानं प्रपञ्चजातम्। विश्वायुः - विश्वजीवनहेतुत्वात्। सर्वमसि। सर्वं - सर्गान्तरादि कार्यम्। तदसि। सर्वायुः - असीति सम्बन्धः। विश्वायुरित्यनेन व्याख्यातः । अभिभूः - सर्वं सर्गजातमभिभवतीति अभिभूः। ओं प्रणवार्थश्चासि। अथ वा ओं गायत्रीमावाहयामि - गायत्र्यात्मकं परं ब्रह्मावाहयामि, सोऽहमिति ममात्मतया प्रापयामि इति ॥

காயத்ரீ ஸ்வரூபமான பரப்ரம்ஹம் ஸ்துதிக்கப் படுகிறது, 'ஓஜோஸி' என்பது முதலியதால், ஓஜ:- தேஜஸ்ஸாக, அஸி - இருக்கிறாய். ஸஹ: - பிறரை வெல்லும் சக்தியாக, அஸி - இருக்கிறாய். மஹாப்ரளயம் முதலியதில் எல்லாவற்றையும் வெல்லும் ஸாமர்த்யம் உள்ளது. பலம் - ப்ராணன்களாய், அஸி - இருக்கின்றாய். ப்ராஜ:- காந்தியாக, அஸி- இருக்கின்றாய். தேவாநாம் - வஸு முதலியவர்க்கு, தாம - ஸ்தானமாய், அஸி - இருக்கிறாய். நாமமென்கிற ஸகல சப்தராசியும் நீயே. அதிகம் சொல்வதேன். விச்வம் அஸி - காணப்படும் ப்ரபஞ்சமெலாம் ஆகவும், அஸி - இருக்கின்றாய். விச்வாயு: - உலகம் ஜீவிப்பதற்கு ஹேதுவான ஆயுளாய் இருக்கிறாய். ஸர்வமஸி - மற்றும் உள்ள ஸ்ருஷ்டி கார்யமாய் உள்ளாய். ஸர்வாயு:- அதற்கும் ஆயுளாக உள்ளாய். அபிபூ: - ஸகலமான ஸ்ருஷ்ட பதார்த்தங்களை ஸம்ஹரிப்பவளாய். ஆகிறாய். ஓம் - ப்ரணவத்தின் அர்த்தமாக இருக்கின்றாய் அல்லது, ஓம் காயத்ரீமாவாஹயாமி - காயத்ரீ ஸ்வரூபமான பரப்ரம்ஹத்தை ஆவாஹனம் செய்கிறேன், அதுவே நான் என்று எனது ஆத்மத்தன்மையுடன் சேர்க்கின்றேன்.

अथ ऋष्यादि न्यासः स्मृतिरत्ने - छन्दो गायत्री - गायत्र्याः सविता चैव देवता। मुखमग्निस्त्रिपाच्चैव विश्वामित्र ऋषिः स्मृतः। त्रयी शिरः शिखा रुद्रः विष्णुर्हृदयमेव च। उपनयने विनियोगः सांख्यायन सगोत्रिका। त्रैलोक्यं चरणं ज्ञेयं पृथिवी कुक्षिरेव च। एवं ध्यात्वा तु गायत्रीं जपेद्द्वादशलक्षणां॥ इति।

இனி, ருஷ்யாதி ந்யாஸம் சொல்லப்படுகிறது. ஸ்ம்ருதி ரத்னத்தில்:- காயத்ரீக்கு, காயத்ரீ சந்தஸ், ஸவிதா தேவதை, அக்னி முகம். மூன்று பாதங்களுடையவள். விச்வாமித்ரர் ருஷி. மூன்று வேதமும் சிரஸ். ருத்ரன் சிகை. விஷ்ணு ஹ்ருதயம். உபநயனத்தில் விநியோகம். ஸாங்க்யாயனம் கோத்ரம். மூன்று உலகமும் பாதம். பூமி வயிறு. இவ்விதம் பன்னிரண்டு விசேஷணம் உடையவளாய் த்யானித்து காயத்ரியை ஜபிக்கவும்.

अथ अक्षरऋषयः – विश्वामित्रो भरद्वाजो गौतमः कुत्स एव च। भृगुः शाण्डिल्यकश्चैव लोहितो गर्ग एव च। शातातपः सनत्कुमारस्तथा सत्यतपाः स्मृतः। भार्गवः पराशरश्च पुण्डरीकः क्रतुस्तथा ॥ दक्षश्च काश्यपश्चैव जमदग्निश्च वत्सकः। विमलश्चाङ्गिराश्चैव अत्रिः कण्वस्तथैव च। कुम्भयोनिश्चतुर्विंशदृषयः परिकीर्तिताः ॥

இனி, அக்ஷர ருஷிகள் சொல்லப்படுகின்றனர். விச்வாமித்ரர், பரத்வாஜர், கௌதமர், குத்ஸர், ப்ருகு, சாண்டில்யர், லோஹிதர், கர்கர், சாதாதபர், ஸனத்குமாரர், ஸத்யதபஸ், பார்கவர், பராசரர், புண்டரீகர், க்ரது, தக்ஷர், காச்யபர், ஜமதக்னி, வத்ஸகர், விமலர், அங்கிரஸ், அத்ரி, கண்வர், கும்பயோனி என்று இருபத்துநான்கு ருஷிகள் சொல்லப்பட்டுள்ளனர்.

अथ छन्दांसि – गायत्र्युष्णिगनुष्टुप्च बृहती पङ्क्तिरेव च। त्रिष्टुप्च जगती चैव अनुष्टुक्पङ्क्तिरेव च ॥ जगती विष्टारपङ्क्तिरनुष्टुप्पङ्क्तिरेव च। अक्षरपङ्क्तिरनुष्टुप् च जगतीत्रिष्टुभौ तथा ॥ जगत्यनुष्टुभौ चैव अनुष्टुप् त्रिष्टुभौ तथा। त्रिष्टुप् च जगती चैव देवीगायत्रमुच्यते ॥ गायत्र्यास्तु चतुर्विंशाच्छन्दांस्यक्षरशः क्रमात् इति ॥

இனி, சந்தஸ்ஸுகள் சொல்லப்படுகின்றன. காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ருஷ்டுப், ஜகதீ, அனுஷ்டுக், பங்க்தி, ஜகதீ, விஷ்டாரபங்க்தி, அனுஷ்டுப் பங்க்தி, அக்ஷரபங்க்தி, அனுஷ்டுப், ஜகதீ, த்ரிஷ்டுப், ஜகதீ, அனுஷ்டுப், அனுஷ்டுப், த்ரிஷ்டுப், த்ரிஷ்டுப், ஜகதீ, தேவீ காயத்ரம் என்று 24 சந்தஸ்ஸுகள் அக்ஷரக்ரமமாய்.

अथ अक्षरदेवताः —अग्निः प्रजापतिश्चैव सोम ईशान एव च। आदित्योऽथ गुरुश्चैव इन्द्रश्चैव भगस्तथा ॥ अर्यमा चैव सविता त्वष्टा पूषा च देवता। इन्द्राग्नी चैव वायुश्च वामदेवस्तथैव च ॥ मित्रश्च वरुणश्चैव क्रमशो देवताः स्मृताः। वैश्वदेवं ततः प्रोक्तं वैष्णवं वासवं तथा। मारुतं

चैव कौबेरमाश्विनं ब्राह्ममेव च । सावित्र्यास्तु चतुर्विंशद्देवताः समुदाहृताः इति ।। चन्द्रिकायाम् – अक्षराणां च सर्वेषां प्रजापति ऋषिः स्मृतः । छन्दो गायत्रमेव स्यात् देवो ब्रह्मैव कीर्तितः । इति ।।

*இனி, அக்ஷர தேவதைகள் சொல்லப்படுகின்றனர். அக்னி, ப்ரஜாபதி, ஸோமன், ஈசானன், ஆதித்யன், குரு, இந்த்ரன், பகன், அர்யமா, ஸவிதா, த்வஷ்டா, பூஷா, இந்த்ராக்னீ, வாயு, வாமதேவன், மித்ரன், வருணன் இவர்கள் க்ரமமாய் தேவதைகள், பிறகு விச்வேதேவர், விஷ்ணு, வஸுக்கள், மருத்துக்கள், குபேரன், அச்விகள், ப்ரம்ஹா என்ற இவர்களும் ஆக காயத்ரீக்கு 24 தேவதைகள்.* **சந்த்ரிகையில்:-** *எல்லா அக்ஷரங்களுக்கும் ப்ரஜாபதி ருஷி, காயத்ரம் சந்தஸ், ப்ரம்ஹா தேவதை.*

विश्वामित्रः – अथ तत्वानि वक्ष्यामि अक्षराणां विभागशः । पृथिवी चोदकं तेजो वायुरम्बरमेव च ।। गन्धो रसश्च रूपं च स्पर्शः शब्दोऽथ वागिति ।। हस्तावुपस्थं पायुश्च पच्छ्रोत्रे त्वक्च चक्षुषी ।। जिह्वा घ्राणं मनस्तत्वमहङ्कारो महत्तथा । गुणत्रयं च क्रमशो वर्णतत्वविनिश्चयः इति ।।

**விச்வாமித்ரர்:-** *இனி அக்ஷரங்களுக்குத் தத்வங்களைப் பிரித்துச் சொல்லுகிறேன். பூமி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம், வாக், கைகள், உபஸ்தம், குதம், கால், காது, தோல், கண்கள், நாக்கு, மூக்கு, மனஸ், அஹங்காரம், மஹத்தத்வம், ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் என்ற 24-ம் வர்ணதத்வங்களாம்.*

अथाक्षरशक्तयः – प्रह्लादिनी प्रभा नित्या विश्वा भद्रा विलासिनी । ईश्वरी च जया शान्ता कान्तिर्दुर्गा सरस्वती ।। विरूपा विशदा चेशा व्यापिनी विमला तथा । तमोपहारिणी सूक्ष्मा विश्वयोनिर्जयावहा ।। पद्मालया पद्मशोभा भद्ररूपेति शक्तयः इति ।।

இனி, அக்ஷர சக்திகள் சொல்லப்படுகின்றன. ப்ரஹ்லாதினீ, ப்ரபா, நித்யா, விச்வா, பத்ரா, விலாஸினீ, ஈச்வரீ, ஜயா, சாந்தா, காந்தி, துர்க்கா, ஸரஸ்வதீ, விரூபா, விசதா, ஈசா, வ்யாபினீ, விமலா, தமோபஹாரிணீ, ஸூக்ஷ்மா, விச்வயோனி, ஜயாவஹா, பத்மாலயா, பத்மசோபா, பத்ரரூபா என்ற 24 சக்திகளாம்.

अथाक्षरन्यासः । विश्वामित्रः – आदावस्त्रेण संशोध्य करन्यासं ततश्चरेत् । दक्षिणां तर्जनीमादिं कृत्वा पर्वसु विन्यसेत् ॥ क्रमाद्वामकनिष्ठान्त मक्षराणि करद्वये । तत्कारं विन्यसेत् स्वाङ्गपादाङ्गुष्ठद्वये द्विजः ॥ सकारं गुल्फदेशे तु विकारं जङ्घयोर्न्यसेत् । जान्वोस्तु विद्धि तुः कारं वकारं चोरुदेशतः ॥ रेकारं विन्यसेद्गुह्ये णिकारं वृषणे न्यसेत् । कटिदेशे तु यं कारं भकारं नाभिमण्डले ॥ र्गोकारं जठरे योगी देकारं स्तनयोर्न्यसेत् । वकारं हृदि विन्यस्य स्यकारं कण्ठ एव तु ॥ धीकारमास्ये विन्यस्य मकारं तालुमध्यतः । हिकारं नासिकाग्रे तु धिकारं नयनद्वये ॥ भ्रुवोर्मध्ये तु योकारं ललाटे तु द्वितीयकम् । पूर्वानने तु नः कारं प्रकारं दक्षिणानने ॥ उत्तरास्ये तु चोकारं दकारं पश्चिमानने । विन्यसेन्मूर्ध्नि यात्कारं सर्वव्यापिनमीश्वरम् ॥ ओङ्कारमादावुच्चार्य नमोन्तं चाक्षरं न्यसेत् इति ॥

இனி, அக்ஷரந்யாஸம் சொல்லப்படுகிறது. **விச்வாமித்ரர்**:- ஆதியில், அஸ்திரத்தால் சோதனம் செய்து, பிறகு கரந்யாஸம் செய்யவும். வலது கையின் தர்ஜனீ விரல் முதலாகப் பர்வங்களில் (கணுக்களில்) ந்யஸிக்கவும். க்ரமமாய் இடது கையின் சிறுவிரல் முடிய 24 அக்ஷரங்களையும், 24 பர்வங்களில் ந்யஸிக்கவும். பிறகு, தத் என்பதை இரண்டு கால்களின் பெருவிரல்களிலும், ஸ காரத்தை மணிக்கட்டுகளிலும், வி என்பதை ஜங்கைகளிலும், து: என்பதை முழங்கால்களிலும் 'வ' என்பதைத் துடைகளிலும் 'ரே' என்பதை குஹ்யத்திலும், ணி என்பதை வ்ருஷணத்திலும், யம் என்பதை

இடுப்பிலும், ப என்பதை நாபியிலும், ர்கோ என்பதை வயிற்றிலும், தே என்பதை ஸ்தனங்களிலும், வ என்பதை மார்பிலும், ஸ்ய என்பதைக் கண்டத்திலும், தீ என்பதை முகத்திலும், ம என்பதைத் தாலுவிலும், ஹி என்பதை மூக்கின் நுனியிலும், தி என்பதை இரு கண்களிலும், யோ என்பதைப் புருவங்களின் நடுவிலும், இரண்டாவதுயோ என்பதை நெற்றியிலும், ந: என்பதை முகத்தின் முன் பாகத்திலும், ப்ர என்பதை வலது பாதத்திலும், சோ என்பதை இடது பாதத்திலும், த என்பதை தலையின் புறத்திலும், யாத் என்பதைத் தலையிலும் ந்யஸிக்கவும். ஸர்வவ்யாபியான ஈச்வரனுன ஓங்காரத்தை ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் முதலில் உச்சரித்து, நம: என்பதைக் கடைசியில் சேர்த்து ந்யஸிக்க வேண்டும்.

अथ वर्णध्यानम् । ब्रह्मा – कृत्वा चैवाक्षरन्यास मशेषाघविनाशनम् । पश्चात् समाचरेद्ध्यानं वर्णरूपसमन्वितम् ॥ तत्कारं चम्पकापीतं ब्रह्मविष्णुशिवात्मकम् । शान्तं पद्मासनारूढं ध्यात्वा दहति पातकम् ॥ सकारं चिन्तयेच्छ्याममतसीपुष्पसन्निभम् । पद्मासनस्थितं सौम्यमुपपातकनाशनम् ॥ विकारं पिङ्गलं नित्यं कमलासनसंस्थितम् । ध्यायेच्छान्तं द्विजश्रेष्ठो महापातकनाशनम् ॥ तुः कारं चिन्तयेत् प्राज्ञ इन्द्रनीलसमप्रभम् । निर्दहेत् सर्वदुःखं तु ग्रहरोगसमुद्भवम् । वकारं वह्निदीप्त्याभं चिन्तयेत्तु विचक्षणः । भ्रूणहत्याकृतं पापं तत्क्षणादेव नश्यति ॥ रेकारं विमलं ध्यायेच्छुद्धस्फटिकसन्निभम् । अभक्ष्यभक्षजं पापं तत्क्षणादेव नश्यति ॥ णिकारं चिन्तयेद्योगी विद्युत्स्फुरितसप्रभम् । गुरुतल्पकृतं पापं तत्क्षणादेव नश्यति ॥ यं कारं तारकावर्णमिन्दुशेखरभूषणम् । योगिनां वरदं ध्यायेद् ब्रह्महत्याविनाशनम् ॥

இனி, வர்ணங்களின் த்யானம் சொல்லப்படுகிறது. ப்ரம்ஹா:- ஸகல பாபங்களேயும் அகற்றும் அக்ஷர

ந்யாஸத்தைச் செய்து, பிறகு வர்ணங்களின் ரூபத்துடன் கூடிய த்யானத்தைச் செய்ய வேண்டும். தத் என்பதைச் சம்பக வர்ணமாயும், ப்ரம்ஹ விஷ்ணு சிவஸ்வரூபமாயும், சாந்தமாயும், பத்மாஸனத்தில் இருப்பதாயும் த்யானித்தால் பாபத்தை எரிக்கின்ருன். ஸ என்பதைக் கறுப்பு நிறமாயும், ஆத்திப்புஷ்ப வர்ணமாயும், பத்மாஸனத்தில் இருப்பதாயும், ஸௌம்யமாயும், உபபாதகத்தை அகற்றுவதாயும் த்யானிக்கவும். வி என்பதைப் பிங்கள வர்ணமாயும், பத்மாஸனத்தில் இருப்பதாயும், சாந்தமாயும், மஹா பாதகங்களைப் போக்குவதாயும் ப்ராம்ஹணன் த்யானிக்கவும். து: என்பதை இந்த்ரநீலம். போன்றதாய் த்யானிப்பவன் க்ரஹங்களாலும் ரோகங்களாலும் உண்டாகும் ஸகல துக்கத்தையும் போக்குவான். வ என்பதை அக்னி போலுள்ளதாய் த்யானிக்க வேண்டும். கர்ப்பஹத்யா பாபம் அப்பொழுதே நசிக்கும். ரே என்பதைச் சுத்த ஸ்படிகம் போன்றதும் நிர்மலமாயும் த்யானிக்கவும். அபக்ஷ்ய பக்ஷணத்தால் உண்டாகிய பாபம் அப்பொழுதே நசிக்கின்றது. ணி என்பதை மின்னல் போல் உள்ளதாய் த்யானிக்கவும். ஆசார்யனின் மனைவியைச் சேர்வதால் உண்டாகும் பாபம் அப்பொழுதே நசிக்கும். யம் என்பதை நக்ஷத்ரம் போன்ற வர்ணம் உடையதும் சந்த்ரனைத் தரித்ததாயும், யோகிகளுக்கு வரனை அளிப்பதாயும் த்யானிக்கவும். ப்ரம்ஹஹத்யையும் நசிக்கும்.

भकारं कृष्णवर्णं तु नीलमेघसमप्रभम्। ध्यात्वा पुरुष हत्यादिपापं नाशयति द्विजः। गोंकारं रक्तवर्णं तु कमलासनसंस्थितम्। गोहत्यया कृतं पापं नाशयन्तं विचिन्तयेत् ॥ देकारं मरकतश्यामं कमलासनसंस्थितम्। सततं चिन्तयेद्योगी स्त्रीहत्यादहनं परम्॥ वकारं शुक्लवर्णन्तु जातिपुष्पसमप्रभम्। गुरुहत्याकृतं पापं ध्यात्वा दहति पावनम्॥ स्यकारं चिन्तयेत् पीतं सुवर्णद्युतिसन्निभम्। मनसा यत्कृतं पापं तत्क्षणादेव नश्यति॥ धीकारं चिन्तयेदिन्दुकुन्दपुष्पसमप्रभम्।

पितृमातृवधात् पापान्मुच्यते नात्र संशयः ॥ मकारं पद्मरागाभं चिन्तयेद्दीप्ततेजसम्। पूर्वजन्मार्जितं पापं तत्क्षणादेव नश्यति ॥ हिकारं शङ्खवर्णं तु पूर्णचन्द्रसमप्रभम्। अशेष पापदहनं ध्यायेन्नित्यं विचक्षणः ।

ப என்பதை நீலமேகம் போல் க்ருஷ்ண வர்ணமுள்ளதாய் த்யானித்தால் புருஷனைக் கொன்ற பாபத்தைப் போக்குகிறான். ர்கோ என்பதைச் சிவந்த நிறமுள்ளதும், பத்மாஸனத்தில் இருப்பதும், பசு ஹத்யா பாபத்தைப் போக்குவதாயும் சிந்திக்கவும். தே என்பதை மரகத வர்ணமாயும், பத்மாஸனத்தில் இருப்பதாயும், ஸ்த்ரீ ஹத்யா பாபத்தை அகற்றுவதாயும் த்யானிக்கவும். வ என்பதை வெண்ணிறமாயும், ஜாதிபுஷ்பத்திற்குச் சமமாயும் த்யானித்தால், குருவை வதைத்த பாபத்தைப் போக்குகிறான். ஸ்ய என்பதை மஞ்சள் நிறமுள்ளதும் ஸ்வர்ணத்திற்கு ஸமமாயும் சிந்திக்கவும். மனதால் செய்த பாபம் அப்பொழுதே நசிக்கும். தீ என்பதைச் சந்த்ரன் குருக்கத்திப்பூ இவை போன்றதாய்ச் சிந்திக்கவும். பிதா மாதா இவர்களை வதைத்த பாபத்தினின்றும் விடுபடுவான். இதில் ஸந்தேஹமில்லை. ம என்பதைப் பத்ம ராகம்போல் ஒளிவீசுவதாய் த்யானிக்கவும். முன் ஜன்மத்தில் சேர்ந்த பாபம் அப்பொழுதே நசிக்கும். ஹி என்பதைச் சங்கம் போன்றதும். பூர்ண சந்த்ரன் போன்ற காந்தியுடையதும், ஸகல பாபங்களையும் எரிப்பதாயும் சிந்திக்கவும்.

धिकारं पाण्डरं ध्यायेत् पद्मस्योपरि संस्थितम्। प्राणिहत्याकृतं पापं तत्क्षणादेव नश्यति ॥ योकारं रक्तवर्णं तु इन्द्रगोपकसन्निभम्। प्रतिग्रहकृतं पापं ध्यात्वा दहति तत्क्षणात् ॥ द्वितीयश्चैव यः प्रोक्तो योकारो रुक्मसन्निभः। निर्दहेत् सर्वपापानि नान्यैः पापैश्च लिप्यते ॥ नः कारन्तु मुखं पूर्वमादित्योदयसन्निभम्। सकृद्ध्यात्वा द्विजश्रेष्ठः स गच्छेद्दैवतं पदम् ॥ नीलोत्पलदलश्यामं प्रकारं दक्षिणामुखम्। सकृद्ध्यात्वा द्विजश्रेष्ठः स गच्छेद् ब्रह्मणः पदम् ॥ सौम्यं गोरोचनापीतं

चोकारं चोत्तराननम्। सकृद्ध्यात्वा द्विजश्रेष्ठः स गच्छेद्वैष्णवं पदम्।। शङ्खकुन्देन्दुसङ्काशं दकारं पश्चिमाननम्। सकृद्ध्यात्वा द्विजश्रेष्ठः स गच्छेदैश्वरं पदम् ।। यात्कारस्तु शिरः प्रोक्तः चतुर्वदनसम्भवः । प्रत्यक्षफलदो ब्रह्मा विष्णू रुद्र इति स्थितिः ।।

*தி என்பதை வெண்ணிறமாயும், பத்மாஸனத்தில் இருப்பதாயும் த்யானிக்கவும். ப்ராணிகளை வதைப்பதால் உண்டாகும் பாபம் அப்பொழுதே நசிக்கும். யோ என்பதைச் சிவப்பு நிறமாயும், இந்த்ர கோபப் பூச்சிக்குச் சமமாயும் த்யானித்தால் ப்ரதிக்ரஹத்தால் உண்டாகிய பாபத்தை அப்பொழுதே எரிக்கிறான். இரண்டாவது யோ என்பதை ஸ்வர்ணத்திற்குச் சமமாக த்யானிக்கவும். ஸகல பாபங்களையும் எரிப்பான், வேறு பாபங்களால் பற்றப்படமாட்டான். ந: என்பதை ஸூர்யோதயத்திற்குச் சமமாயும் பூர்வமுகமாயும் ஒருமுறை த்யானித்தாலும் தேவபதத்தை அடைவான். ப்ர என்பதை நீலோத்பல தளம்போன்ற நிறமுள்ளதும், தெற்கு முகமாகவும், ஒருமுறை த்யானித்தால் ப்ரம்ஹலோகத்தை அடைவான். சோ என்பதை கோரோசனை போன்ற மஞ்சள் நிறமுள்ளதும், வடக்கு முகமாகவம் ஒருமுறை த்யானித்தால் விஷ்ணுலோகத்தை அடைகிறான். த என்பதைச் சங்கம், குந்தம், சந்த்ரன் இவை போன்றதாயும் மேற்கு முகமாகவும் ஒருமுறை த்யானித்தால் சிவலோகத்தை அடைகிறான். யாத் என்பது நான்கு முகங்களுக்கும் ஹேதுவாகிய சிரஸ் எனப்பட்டது. ப்ரத்யக்ஷ பலத்தையளிப்பது. ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் என்று கொள்கை.*

एवं ध्यात्वा तु मेधावी जपं होमं करोति यः। न भवेत् सूतकं तस्य मृतकं च न विद्यते।। साक्षाद्भवत्यसौ ब्रह्मा स्वयंभूः परमेश्वरः। यस्त्वेवं न विजानाति गायत्रीं तु यथाविधि। कथितं सूतकं तस्य मृतकं च सदैव हि। नैव दानफलं तस्य नैव यज्ञफलं भवेत्। न च तीर्थफलं प्रोक्तं तस्यैवं सूतके

सति ॥ पादादि कुक्षिपर्यन्तं शिरः प्रभृति वक्षसि । कर्तव्यः कामिभिर्न्यासो गृहस्थैरिति निर्णयः इति ॥

இவ்விதம் த்யானித்து, புத்திமானாகிய எவன், ஜபம் ஹோமம் இவைகளைச் செய்கின்றானோ அவனுக்கு ஸூதகமும், ம்ருதகமும் (பிறப்புத் தீட்டும் மரணத்தீட்டும்) இல்லை. இவன் ஸாக்ஷாத் ப்ரம்ஹாவாகவும், பரமேச்வரனாகவும் ஆகிறான். எவன் இந்தக் காயத்ரியை விதிப்படி அறியவில்லையோ அவனுக்கு எப்பொழுதும் ஸூதகமும், ம்ருதகமும் உண்டென்று சொல்லப் பட்டுள்ளது. அவனுக்குத் தானபலமில்லை. யக்ஞபல மில்லை. தீர்த்தபலமுமில்லை. ஸூதகம் இருப்பதால். காமிகளான க்ருஹஸ்தர்கள் பாதம் முதல் வயிறுவரையிலும், தலை முதல் மார்பு வரையிலும் ந்யாஸம் செய்ய வேண்டும். என்பது ஸித்தாந்தம்.

पदन्यासमाह स एव – दक्षिणाङ्गुष्ठमारभ्य यावद्वामकनिष्ठिका। दशैतानि पदान्यस्य(ाः)क्रमेणैव न्यसेत् सुधीः ॥ शिरोभ्रूमध्य-नयनवक्त्रकण्ठेषु वै क्रमात्। हृन्नाभिगुह्यदेशेषु जानुपादद्वये न्यसेत् इति ॥

பத ந்யாஸத்தைச் சொல்லுகிறார். ப்ரம்ஹாவே:- வலது கையின் பெருவிரல் முதல், இடது கையின் சிறுவிரல் வரையில், காயத்ரியின் பத்துப் பதங்களையும் க்ரமமாய் ந்யஸிக்கவும். சிரஸ், புருவங்களின்நடு, கண், முகம், கண்டம், மார்பு, நாபி, குஹ்யம், முழங்கால், பாதம் இந்தப் பத்து ஸ்தானங்களிலும் ந்யஸிக்க வேண்டும்.

चन्द्रिकायां प्रतिपादमृष्यादिकमुक्तम् – तत्सवितुरित्यस्य विश्वामित्रऋषिः गायत्रीछन्दः ब्रह्मा देवता । भर्गो देवस्येत्यस्य विश्वामित्रऋषिः गायत्रीछन्दः विष्णुर्देवता । धियो यो न इत्यस्य विश्वामित्रऋषिः गायत्रीछन्दः रुद्रो देवतेति ॥ पादन्यासमाह विश्वामित्रः – एतैस्त्रिभिः पदैः कुर्यात् करशुद्धिं द्विजोत्तमः । अनामिकाद्वये धीमान्न्यसेत्तत्पदमग्रतः ॥ कनिष्ठिकाद्वये भर्गः

पाण्योर्मध्ये धियःपदम्। शिरसि प्रथमं पादं द्वितीयं नाभिमध्यतः। तृतीयं पादयोर्न्यस्य सर्वं सर्वाङ्गके न्यसेत् इति ॥

*சந்த்ரிகையில்:- ஒவ்வொரு பாதத்திற்கும் ருஷி முதலியது சொல்லப்பட்டுள்ளது. 'தத்ஸவிது:' என்பதற்கு விச்வாமித்ரர் ருஷி, காயத்ரீ சந்தஸ், ப்ரம்ஹா தேவதை. 'பர்கோ தேவஸ்ய' என்பதற்கு விச்வாமித்ரர் ருஷி, காயத்ரீ சந்தஸ், விஷ்ணு தேவதை, 'தியோ யோந:' என்பதற்கு விச்வாமித்ரர் ருஷி, காயத்ரீ சந்தஸ், ருத்ரன் தேவதை. பாத ந்யாஸத்தைச் சொல்லுகிறார். விச்வாமித்ரர்:- இந்த மூன்று பாதங்களாலும் கர சுத்தியைச் செய்யவும். முதலில் இரண்டு அநாமிகா விரல்களிலும் 'தத்' என்ற பாதத்தையும், சிறுவிரல்கள் இரண்டிலும் 'பர்க்க:' என்ற பாதத்தையும், கைகளின் நடுவில் 'திய:' என்ற பாதத்தையும், சிரஸ்ஸில் 1-ஆவது பாதத்தையும், நாபியில் 2- ஆவது பாதத்தையும், பாதங்களில் 3- ஆவது பாதத்தையும், மூன்று பாதங்களையும் சேர்த்து ஸர்வாங்கத்திலும் ந்யஸிக்கவும்.*

चन्द्रिकायाम् – गायत्र्या व्यापकं कृत्वा करन्यासपूर्वकं षडङ्गन्यासं कुर्यात् इति। तत्र व्यासः – हृदि तत्सवितुर्न्यस्य न्यसेन्मूर्ध्नि वरेणियम्। भर्गोदेवस्येति खण्डं शिखायां तु ततो न्यसेत्। धीमहीति न्यसेद्वर्म धियो यो नश्च नेत्रयोः । प्रचोदयादितिपदमस्त्रार्थे विनियोजयेत् ॥ अङ्गन्यासस्तु यैर्मन्त्रैः करन्यासोऽपि तैः स्मृतः इति ॥ गायत्रीसारे तु विशेषोऽभिहितः – तत्सवितुर्ब्रह्मात्मने हृदयाय नमः। वरे(णिय)ण्यं विष्ण्वात्मने शिरसे स्वाहा । भर्गो देवस्य रुद्रात्मने शिखायै वषट् । धीमहि ईश्वरात्मने कवचाय हुम् । धियोयोनः सदाशिवात्मने नेत्रत्रयाय वौषट्। प्रचोदयात् सर्वात्मने अस्त्रायफट् इति ॥

*சந்த்ரிகையில்:- காயத்ரியால் வ்யாபக ந்யாஸம் செய்து கர ந்யாஸத்துடன் ஷடங்க ந்யாஸம் செய்யவும். அதில், வ்யாஸர்:- தத்ஸவிது: என்பதை ஹ்ருதயத்திலும், வரேணியம் என்பதைச் சிரஸ்ஸிலும், பர்கோ தேவஸ்ய*

*என்பதை சிகையிலும், தீமஹி என்பதைக் கவசமாகவும், தியோயோ: என்பதை நேத்ரங்களிலும், ப்ரசோதயாத் என்பதை அஸ்த்ரத்திலும் விநியோகிக்கவும். எந்த மந்த்ரங்களால் அங்க ந்யாஸம் செய்யப்பட்டதோ அவைகளால் கரந்யாஸமும் செய்யப்பட வேண்டும்.* **காயத்ரீஸாரத்திலோவெனில்:-** *விசேஷம் சொல்லப் பட்டுள்ளது. 'தத்ஸவிது: + அஸ்த்ராயபட்' என்று.*

पितामहः — ओं भूर्विन्यस्य हृदये ओं भुवः शिरसि विन्यसेत्। ओं स्वश्शिखायां विन्यस्य गायत्र्याः प्रथमं पदम्॥ विन्यसेत् कवचे धीमान् द्वितीयं नेत्रयोर्न्यसेत्। तृतीयेनास्त्रविन्यासं चतुर्थं सर्वतो न्यसेत् इति। परोरजसि सावदोमिति गायत्र्याश्चतुर्थं पादं सर्वतः मूर्धादिपादपर्यन्तं न्यसेदित्यर्थः॥

**பிதாமஹர்:-** *ஓம்பூ: என்று ஹ்ருதயத்திலும், ஓம்புவ: என்று சிரஸ்ஸிலும், ஓம்ஸ்வ: என்று சிகையிலும் ந்யஸித்து, காயத்ரியின் 1-ஆவது பாதத்தைக் கவசத்திலும், 2- ஆவது பாதத்தை நேத்ரங்களிலும், 3-ஆவது பாதத்தால் அஸ்த்ரத்தையும், நான்காவது பாதத்தை எல்லா அங்கத்திலும் ந்யஸிக்கவும், 'பரோரஜஸிஸாவதோம்' என்னும் காயத்ரியின் நான்காவது பாதத்தை எங்கும் = சிரஸ் முதல் பாதம் வரையில் ந்யஸிக்கவும் என்பது பொருள்.*

न्यासप्रकारमाह भरद्वाजः — अङ्गुष्ठादिकनिष्ठान्तमङ्गुलीषु न्यसेत्ततः। प्रकोष्ठान्तर्बहिः पाण्योस्तलयोस्तलपृष्ठयोः। हृन्मस्तकशिखाबाहुनेत्रप्रहरणानि षट्। अङ्गान्यमूनीत्युक्तानि पल्लवानि षडेव हि॥ अङ्गुलीभिश्चतसृभिः द्वयोर्हृदयशीर्षयोः। मुष्टेरङ्गुष्ठशिरसा पश्चिमे तस्य वर्मणः॥ द्वाभ्यां कराभ्यां दृक्फालमध्ये मध्याङ्गुलैस्त्रिभिः। अङ्गुष्ठतर्जन्यग्राभ्यां सशब्दं दिक्षु पार्श्वयोः॥ षडङ्गन्यासमित्युक्तमिदमेतत् प्रकारतः। एवं विन्यस्य गायत्रीमावाह्य च यथाविधि॥ ध्यात्वोपचारं सकलं कृत्वाऽथो जपमाचरेत् इति॥ एवं भरद्वाजेन

षडङ्गन्यासमुक्त्वा अनन्तरं जपविधानात् नित्यजपे ऋष्यादि-षङ्गन्यासमात्रमावश्यकम् । फलाधिक्यापेक्षायां तु शक्तस्य अक्षरन्यासादयः कार्या इत्याहुः ॥

*ந்யாஸப்ரகாரத்தைச் சொல்லுகிறுர்.* **பரத்வாஜர்:-** *பிறகு பெருவிரல் முதல் சிறுவிரல் வரையில் விரல்களில் ந்யஸிக்கவும். கைகளின் ப்ரகோஷ்டங்களின் உள்புறத்திலும் வெளியிலும், கைகளின் உள்புறம் வெளிப்புறம் இவைகளிலும் ஆக ஆறு. ஹ்ருதயம், சிரஸ், சிகை, கைகள், நேத்ரங்கள், அஸ்த்ரம் என்பது ஆறு அங்கங்கள். ஹ்ருதயம், தலை இவைகளில் நான்கு விரல்களாலும், முஷ்டியின் பெருவிரலின் தலையால் சிகையிலும், கவசத்தில் இரண்டு கைகளாலும், கண்களுக்கும் நெற்றிக்கும் நடுவில் நடுவிரல்கள் மூன்றிஞலும், பெருவிரல் தர்ஜனீவிரல் இவைகளால் சப்தத்துடன் திக்குகளிலும் ந்யஸிப்பது ஷடங்க ந்யாஸம் எனப்பட்டது. இதை இவ்விதம் ந்யஸித்து, விதிப்படி காயத்ரியை ஆவாஹனம் செய்து, த்யானித்து, ஸகலமான உபசாரத்தையும் செய்து, பிறகு ஜபத்தைச் செய்ய வேண்டும். இவ்விதம் பரத்வாஜரால் ஷடங்க ந்யாஸத்தைச் சொல்லி. பிறகு ஜபம் விதிக்கப்பட்டிருப்பதால், நித்ய ஜபத்தில் ஷடங்க ந்யாஸம் மட்டில் ஆவச்யகம். அதிக பலத்தில் அபேக்ஷை இருந்தால், சக்தி உள்ளவனுக்கு அக்ஷர ந்யாஸம் முதலியவை செய்யப்படலாம் என்கின்றனர்.*

अत एव गृह्यपरिशिष्टे – एषोऽङ्गन्यासः । एनं विधिमप्येके नेच्छन्ति स हि विधिरवैदिकः इति ॥ चन्द्रिकायाम् – अङ्गुष्ठे चैव गोविन्दं तर्जन्यां तु महीधरम् । मध्यमायां हृषीकेशमनामिक्यां त्रिविक्रमम् ॥ कनिष्ठायां न्यसेद्विष्णुं करमध्ये तु माधवम् । यत्कृतं च हुतं जप्तं दत्तमिष्टं विशेषतः ॥ हस्तन्यासप्रभावेण सर्वं भवति चाक्षयम् । ओमिति हृदये भूरितिमुखे भुव इति शिरसि स्वरिति सर्वाङ्गे न्यासेत् । एतद्गायत्रीकवचं ततो यथाविधि गायत्रीमभ्यसेत् इति ॥

க்ருஹ்ய பரிசிஷ்டத்தில்:- இது அங்க ந்யாஸம். இந்த விதியையும் சிலர் விரும்பவில்லை, இந்த விதி அவைதிகம் என்பதால். சந்த்ரிகையில்:- பெருவிரலில் கோவிந்தனையும், தர்ஜனியில் மஹீதரனையும், நடுவிரலில் ஹ்ருஷீகேசனையும், அநாமிகையில் த்ரிவிக்ரமனையும், கனிஷ்டிகையில் விஷ்ணுவையும், கை நடுவில் மாதவனையும், ந்யஸிக்கவும். எந்தக் கர்மமும், ஹோமமும், ஜபமும், தானமும், யாகமும், ஸர்வமும் ஹஸ்த ந்யாஸப்ரபாவத்தால் அக்ஷயமாய் ஆகிறது. ஓம் என்று ஹ்ருதயத்தில், பூ: என்று முகத்திலும். புவ: என்று சிரஸ்ஸிலும், ஸ்வ: என்று ஸர்வாங்கத்திலும் ந்யஸிக்கவும். இது காயத்ரீ கவசம், பிறகு விதிப்படி காயத்ரியை ஆவ்ருத்தி செய்யவும்.

एवं कुर्वतः फलमाह व्यासः – विन्यस्यैवं जपेद्यस्तु गायत्रीं वेदमातरम् । ब्रह्मलोकमवाप्नोति व्यासस्य वचनं तथा ।। स्वरूपं यः पुनस्तस्या ज्ञात्वोपास्ते यथाविधि । गृह्णन् दोषैर्न लिप्येत रत्नपूर्णां वसुन्धराम् । यथाकथञ्चिज्जप्ता सा देवी परमपावनी । सर्वकामप्रदा प्रोक्ता किं पुनर्विधिना नृप इति ।।

இவ்விதம் செய்பவனுக்குப் பலனைச் சொல்லுகிறார். வ்யாஸர்:- இவ்விதம் ந்யாஸம் செய்து, வேதமாதாவான காயத்ரியை எவன் ஜபிக்கின்றானோ அவன் ப்ரம்ஹலோகத்தை அடைகிறான். வ்யாஸரின் வசனம் அவ்விதமுள்ளது. எவன், அந்த காயத்ரியின் ஸ்வரூபத்தை அறிந்து விதிப்படி உபாஸிக்கின்றானோ, அவன் ரத்னங்களால் நிறைந்த பூமியை ப்ரதிக்ரஹித்தாலும் பாபங்களால் பற்றப்படான். அந்தக் காயத்ரீ தேவீ எவ்விதமாய் ஜபிக்கப்பட்டாலும், மிகவும் சுத்தியைச் செய்பவளாகின்றாள். ஸகல காமங்களையும் கொடுப்பவளாய்ச் சொல்லப்பட்டுள்ளாள். ஓ அரசனே! விதியுடன் ஜபிக்கப்பட்டால், கேட்க வேண்டுமா.

## मुद्राविधिः

अथ मुद्राविधिः ॥ तत्र ब्रह्मा – अथातो दर्शयेन्मुद्राः संमुखं संपुटं तथा । ततो विततविस्तीर्णे द्विमुखत्रिमुखे ततः ॥ चतुर्मुखं पञ्चमुखं षण्मुखाधोमुखे ततः । व्यापकाञ्जलिकाख्यं च शकटं तदनन्तरम् ॥ यमपाशं च ग्रथितं ततः स्यात् संमुखोन्मुखम् । विलम्बो मुष्टिको मीनस्ततः कूर्मवराहकौ ॥ सिंहाक्रान्तं महाक्रान्तं ततो मुद्गरपल्लवौ इति ॥

### முத்ராவிதி

*இனி முத்ராவிதி சொல்லப்படுகிறது. அதில், **ப்ரம்ஹா:-** இனி முத்ரைகளைக் காண்பிக்க வேண்டும். ஸம்முகம், ஸம்புடம், விததம், விஸ்தீர்ணம், த்விமுகம், த்ரிமுகம், சதுர்முகம், பஞ்சமுகம், ஷண்முகம், அதோமுகம், வ்யாபகாஞ்ஜலிகம், சகடம், யமபாசம், க்ரதிதம், ஸம்முகோன்முகம், விலம்பம், முஷ்டிகம், மீனம், கூர்மம், வராஹம், ஸிம்ஹாக்ராந்தம், மஹாக்ராந்தம், முத்கரம், பல்லவம் என்ற முத்ரைகள்.*

एतासां लक्षणमाह स एव – संमुखं संहतौ हस्तावुत्तानौ कुञ्चिताङ्गली ॥ कुञ्चिताः - वक्राः अङ्गुलयः ययोरुक्तलक्षणयोर्हस्तयोः तौ संमुखं नाम मुद्रा ॥ संपुटं पद्मकोशाभौ करावन्योन्यसंहतौ ॥ पद्ममुकुलाभौ करौ संपुटं नाम मुद्रा ॥ विततं संहतौ हस्ता वुत्तानावायताङ्गुली ॥ आयताः - प्रसारिताः अङ्गुलयः ययोरुक्त-लक्षणयोः, तौ विततं नाम मुद्रा ॥

*இவைகளுக்கு லக்ஷணத்தைச் சொல்லுகிறார். **ப்ரம்ஹாவே:-** வக்ரமான விரல்களை உடையதும் நிமிர்ந்ததுமான இரண்டு கைகளும் சேர்ந்தால் அது 'ஸம்முகம்' எனும் முத்ரையாம். தாமரையின் மொட்டுப் போன்று இருகைகளும் சேர்ந்தால் 'ஸம்புடம்' எனும் முத்ரையாம். விரிந்த விரல்களை உடைய கைகள் நிமிர்ந்து சேர்க்கப்பட்டால் 'விததம்' எனும் முத்ரையாம்.*

विस्तीर्णं संहतौ पाणी मिथोमुक्ताङ्गुलिद्वयौ ॥ मुक्तं अङ्गुलिद्वयं याभ्यां पाणिभ्यां तौ मिथस्संहतौ विस्तीर्णं नाम मुद्रा ॥ संमुखासक्तयोः पाण्योः कनिष्ठाद्वययोगतः । शेषाङ्गुलीनां वैरल्ये द्विमुखत्रिमुखादयः ॥ मिथस्संमुखासक्तयोः पाण्योः कनिष्ठिकाद्वययोगेन शेषाङ्गुलीनां वैरल्ये अङ्गुष्ठद्वयमारभ्य अनामिकान्तं यावत् द्विमुखं त्रिमुखं चतुर्मुखं पञ्चमुखं नाम मुद्रा भवन्ति । तत्र वकारे द्विमुखं रेकारे त्रिमुखं णिकारे चतुर्मुखं यं कारे पञ्चमुखम् ॥ शेषाङ्गुलीनां संयोगात् पूर्वयोगविनाशतः । तिर्यक्संयुज्यमानाग्रौ संयुक्ताङ्गुलिमण्डलौ ॥ हस्तौ षष्मुखमित्युक्ता मुद्रा मुद्राविशारदैः ॥ पूर्वयोगः = कनिष्ठाद्वयसंयोगः । तद्विनाशेन इतराङ्गुलीनासंयोगात् तिर्यक्संयुज्यमानमग्रं ययोः, तथा संयुक्त मङ्गुलिमण्डलं च ययोस्तौ षण्मुखं नाम मुद्रा ॥

இரண்டு கைகளும் சேர்ந்து, இரண்டு விரல்கள் மட்டும் சேராமல் இருந்தால் அது 'விஸ்தீர்ணம்' எனும் முத்ரையாம். இரண்டு கைகளும் எதிராகச் சேர்ந்து, இரண்டு சிறுவிரல்கள் மட்டும் சேர்ந்தால், மற்ற விரல்கள் தனித்திருந்தால் இரண்டு பெருவிரல் முதல் அநாமிகை வரையில், த்விமுகம், த்ரிமுகம், சதுர்முகம், பஞ்முகம் என்ற முத்ரைகள் ஆகின்றன. அதில் வகாரத்தில் 'த்விமுகம்' ரே என்பதில் 'த்ரிமுகம்' ணி என்பதில் 'சதுர்முகம்' யம் என்பதில் 'பஞ்சமுகம்'. இருசிறு விரல்களும் சேராமல், மற்ற விரல்கள் எல்லாம் சேர்ந்து, குறுக்காய்ச் சேர்ந்துள்ள நுனியை உடையவகளும், விரல்களெல்லாம் சேர்ந்துள்ளதுமான இரண்டு கைகளும் இருப்பது 'ஷண்முகம்' எனும் முத்ரையாம்.

आकुञ्चिताग्रौ संयुक्तौ न्युब्जौ हस्तावधोमुखम् ॥ ईषद्वक्राग्रौ अधः कृतौ हस्तौ अधोमुखं नाम मुद्रा ॥ उत्तानौ तादृशावेव व्यापकौ कुञ्चितौ करौ ॥ तादृशौ - संयुक्ताद्युक्तलक्षणौ करौ व्यापकाञ्जलिकं नाम मुद्रा ॥ 'अधोमुखौ बद्धमुष्टी मुक्ताग्राङ्गुष्ठकौ करौ । शकटं नाम कथितम् ॥

मुक्ताग्रौ अङ्गुष्ठौ ययोः उक्तलक्षणयोः करयोः तौ शकटं नाम मुद्रा ।। यमपाशमतः परम् ।। बद्धमुष्टिकयोः पाण्योरुत्ताना वामतर्जनी । कुञ्चिताग्राऽन्यया युक्ता तर्जन्या न्युब्जवक्रया ।। बद्धमुष्टिकरूपयोः पाण्योः या उत्ताना कुञ्चिताग्रा वामतर्जनी अन्यया दक्षिणतर्जन्या न्युब्जवक्रया युक्ता, सा यमपाशं नाम मुद्रा ।। उत्तानसन्धिसंलीनबद्धाङ्गुलितलौ करौ । संमुखा घटितौ दीर्घाङ्गुष्ठौ ग्रथितमुच्यते ।। उत्तानानि सन्धिसंलीनानि बद्धानि अङ्गुलितलानि ययोस्तथोक्तौ । तावन्योन्यमुखघटितौ दीर्घौ अवक्रौ अङ्गुष्ठौ ययोस्तौ ग्रथितं नाम मुद्रा ।।

*கொஞ்சம் வளைந்துள்ள நுனியை உள்ளவைகளும், கீழ் நோக்கியவைகளுமான கைகள் இருப்பது, 'அதோமுகம்' என்ற முத்ரையாம். அதேமாதிரியான கைகள் மேல் நோக்கியதாய் இருப்பது 'வ்யாபகாஞ்ஜலிகம்' என்ற முத்ரையாம். முஷ்டியுடையதும், பெருவிரல்களின் நுனிமட்டில் விடப்பட்டதும், கீழ்நோக்கியவைகளுமான கைகள் இருப்பது 'சகடம்' எனும் முத்ரையாம். முஷ்டியாய்ப் பிடிக்கப்பட்ட கைகளுள் இடது தர்ஜனீ விரல் நிமிர்ந்து வக்ரமான நுனியுடையதாய், கவிழ்ந்தும் வக்ர நுனியுடையதுமான வலது தர்ஜனீ விரலுடன் கூடியிருந்தால், 'யமபாசம்' என்ற முத்ரையாம். நிமிர்ந்தவைகளும் சந்துகளில் மறைந்தவைகளும் சேர்க்கப்பட்டவைகளுமான விரல்களின் உள்பாகத்தை உடையவையான கைகள் எதிராகச் சேர்க்கப்பட்டு, பெருவிரல்கள் நீண்டிருப்பது 'க்ரதிதம்' என்ற முத்ரையாம்.*

सञ्चितोर्ध्वाङ्गुलिर्वामस्तादृशा दक्षिणेन तु । अधोमुखेन संयुक्तस्संमुखोन्मुख उच्यते ।। सञ्चिताः - संबद्धाः ऊर्ध्वाङ्गुलयः यस्य स तथोक्तः तादृशा दक्षिणेन अधोमुखेन संयुक्तः संमुखोन्मुखं नाम मुद्रा ।।

उत्तानोन्नतकोटी तु विलम्बः कथितौ करौ । उत्तानोन्नते कोटी ययोः करयोः तौ विलम्बो नाम मुद्रा ।।

சேர்க்கப்பட்ட விரல்களை உடைய இடதுகை, அவ்விதமான கீழ்நோக்கிய வலது கையுடன் சேர்ந்திருந்தால் ஸம்முகோன்முகம்' என்ற முத்ரையாம். நிமிர்ந்தும், உயர்ந்ததுமான நுனியை உடைய கைகள் உள்ளது 'விலம்பம்' என்ற முத்ரையாம்.

मुष्टी चान्योन्यसंयुक्तावुत्तानौ मुष्टिको भवेत् ।। अन्योन्यसंयुक्तौ उत्तानौ मुष्टी मुष्टिको नाम मुद्रा ।। मीनस्तु संमुखीभूतौ युक्ता नामिकनिष्ठिकौ । ऊर्ध्वसंयुक्तवक्राग्रशेषाङ्गुलिदलौ करौ ।। युक्ते संबद्धे अनामिकाकनिष्ठिके ययोः करयोः तौ तथोक्तौ । तावन्योन्यसंमुखीभूतौ । तथा ऊर्ध्वसंयुक्तानि वक्राणि शेषाङ्गुलिदलानि ययोःकरयोः तौ मीनो नाम मुद्रा ।।

பரஸ்பரம் சேர்ந்ததும், நிமிர்ந்ததுமாய் உள்ள முஷ்டிகள் இரண்டுமுள்ளது 'முஷ்டிகம்' எனும் முத்ரையாம். சேர்க்கப்பட்ட அநாமிகா, கநிஷ்டிகா என்ற இருவிரல்களை உடையதும், பரஸ்பரம் நேராக உள்ளதும், உயர்ந்து சேர்ந்து வக்ரங்களான மற்ற விரல்களை உடையதுமான கைகளை உடையது 'மீனம்' என்ற முத்ரையாம்.

अधोमुखः करो वामस्तादृशा दक्षिणेन तु । पृष्ठदेशे समाक्रान्तः कूर्मो नामाभिधीयते ।। अधोमुखः - न्युब्जः वामहस्तः तादृशा दक्षिणेन पाणिना पृष्ठदेशे युक्तः कूर्मो नाम मुद्रा ।। ऊर्ध्वमध्यो वामभुजः कक्षाभ्या शाश्रये करे । वाराहः कथ्यते ।। कक्षसमीपाश्रये करे सति उक्तलक्षणः वामभुजः वाराहो नाम मुद्रा ।।

கீழ்நோக்கிய இடது கை அவ்விதமான வலது கையால் பின்புறத்தில் சேர்க்கப்பட்டால் 'கூர்மம்' என்ற

முத்ரையாம். கக்ஷத்திற்கு ஸமீபத்தில் வலது கை இருக்கும் பொழுது, உயர்ந்த நடுப்பாகத்தை உடைய இடது கையை உடையது 'வராஹம்' என்ற முத்ரையாம்.

सिंहाक्रान्तं कर्णाश्रितौ करौ। तावायताङ्गुलीभूय ततः परमिहोच्यते। कर्णाश्रितावायताङ्गुली करौ सिंहाक्रान्तं नाम मुद्रा ।। किञ्चिदाकुञ्चिताग्रौ चेन्महाक्रान्तं ततः परम् ।। तावेव आकुञ्चिताग्रौ महाक्रान्तं नाम मुद्रा ।। ऊर्ध्वं किञ्चिद्गतौ पाणी मुद्गरो वामतर्जनी । ग्रस्ता दक्षिणहस्तेन ।। किञ्चिदूर्ध्वं गतयोः पाण्योः या वामतर्जनी दक्षिणहस्तेन गृहीता, सा मुद्गरो नाम मुद्रा ।। पल्लवो दक्षिणःकरः । अधोमुखस्ततो मूर्ध्नि मुद्राणामिति लक्षणम् इति ।। उक्तलक्षणः मूर्ध्नि निहितः करः पल्लवो नाम मुद्रा ।।

காதுகளில் வைக்கப்பட்டும், விரிந்த விரல்களை உடையதுமான கைகளை உடையது 'ஸிம்ஹாக்ராந்தம்' என்ற முத்ரையாம். முன் சொல்லியபடி உள்ள கைகளே கொஞ்சம் வளைந்த நுனிகளை உடையவையாய் இருந்தால் 'மஹாக்ராந்தம்' என்னும் முத்ரையாம். கொஞ்சம் உயர்ந்துள்ள கைகளுள், இடது கையின் தர்ஜனீ விரல், வலது கையால் பிடிக்கப்பட்டிருந்தால் 'முத்கரம்' என்னும் முத்ரையாம். வலது கை கவிழ்ந்ததாய். சிரஸ்ஸில் வைக்கப்பட்டால் 'பல்லவம்' என்ற முத்ரையாம். இவ்விதம் முத்ரைகளின் லக்ஷணம் சொல்லப்பட்டது.

पितामहः – पद्ममुद्रा सौरभेयी शङ्खमुद्रावराहकौ । वासुदेवात्मसंविच्च सप्त व्याहृतिमुद्रिकाः ।। अथाङ्गुष्ठद्वयं मध्ये दत्वाऽथ परितः करौ। मण्डलीकरणं सम्यगङ्गुलीनां च सर्वशः ।। पद्ममुद्रा भवेदेषा सौरभेयी ततः परम् । अनामिके कनिष्ठाभ्यां तर्जनीभ्यां च मध्यमे ।। अन्योन्याभिमुखे श्लिष्टे, शङ्खमुद्रा ततः परम् । वामाङ्गुष्ठं तु सङ्गृह्य दक्षिणेन तु मुष्टिना ।। कृत्वोत्तानं तथा मुष्टिमङ्गुष्ठे तु प्रसारयेत् ।।

वामाङ्गुल्यस्तथा दृष्टाः संयुक्ताः संप्रसारिताः । दक्षिणाङ्गुष्ठसंस्पृष्टा मुद्रा शङ्खस्य चोदिता ।। दक्षहस्तं चोर्ध्वमुखं वामहस्तमधोमुखम् । अङ्गुल्यग्रं तु संयुक्तं मुद्रा वाराहसंज्ञिता ।। अङ्गुल्या चात्ममुद्रा स्याद्वासुदेवाभिधा च सा । दक्षिणाङ्गुष्ठतर्जन्यौ संयुक्ताग्रे हृदिस्थिते । प्रसारितास्तथाऽङ्गुल्यः संविन्मुद्रा स्मृता बुधैः ।

**பிதாமஹர்:-** பத்மம், ஸௌரபேயீ, சங்கம், வாராஹம், வாஸுதேவம், ஆத்மா, ஸம்வித் என்று ஏழும் வ்யாஹ்ருதிகளின் முத்ரைகளாம். இரண்டு பெருவிரல்களையும் நடுவில் வைத்து, இரண்டு கைகளையும் விரித்து மண்டலமாய் செய்வது 'பத்மம்' எனும் முத்ரையாம். இரண்டு பவித்ர விரல்களும் இரண்டு சிறுவிரல்களாலும், இரண்டு நடுவிரல்களும் இரண்டு தர்ஜனீ விரல்களாலும், பரஸ்பரம் எதிராய்ச் சேர்க்கப்பட்டால் 'ஸௌரபேயீ' (தேனு) எனும் முத்ரையாம். இடது கையின் பெருவிரலை வலதுகை முஷ்டியினுல் பிடித்து, முஷ்டியை நிமிர்த்து விரிக்கவும். இடது கையின் விரல்கள் சேர்ந்து விரிக்கப்பட்டு வலதுகை அங்குஷ்டத்துடன் சேர்ந்தால் 'சங்கம்' எனும் முத்ரையாம். வலதுகை மேல் நோக்கியதாயும், இடதுகை அதோமுகமாயும், விரல்களின் நுனிகள் சேர்ந்திருந்தால் 'வாராஹம்' எனும் முத்ரையாம். அஞ்ஜலி செய்வது 'ஆத்ம' முத்ரையாம். அதுவே 'வாஸுதேவ' முத்ரையாம். வலதுகையின் பெருவிரலும் தர்ஜனியும் சேர்ந்து மார்பில் இருந்து, மற்ற விரல்கள் விரிக்கப்பட்டிருந்தால் 'ஸம்வித்' என்ற முத்ரையாம்.

मुद्रा तु मोदयेद्देवीं द्रावयेदुरितं तथा ।। न जातु दर्शयेन्मुद्रां महाजनसमागमे । क्षुभ्यन्ति देवतास्तस्य फलं च न कृतं भवेत् ।। अर्चने जपकाले तु ध्याने काम्ये च कर्मणि । तत्तन्मुद्राः प्रयोक्तव्या देवसान्निध्यकारिकाः इति ।।

முத்ரை என்பது காயத்ரியை ஸந்தோஷிக்கச் செய்கிறது. துரிதம் எனும் பாபத்தை ஓடச்செய்கிறது. ஆகையால் முத்ரை எனப்படுகிறது. ஜனங்கள் கூட்டத்தில் முத்ரையைக் காண்பிக்கக் கூடாது. அவ்விடத்தில் காண்பித்தால் தேவதைகள் கோபிக்கின்றனர். பலனும் கிடைக்காது. பூஜையிலும், ஜபத்திலும், த்யானத்திலும், காம்யகர்மத்திலும் அந்தந்த முத்ரைகளை ப்ரயோகிக்க வேண்டும். தேவஸான்னித்யத்தைச் செய்கின்றவையாம்.



## गायत्रीध्यानम् ॥

अथ गायत्रीध्यानम् ॥ तत्र गोभिलः – प्रातर्गायत्री रविमध्ये स्थिता रक्तवर्णा कुमारी अक्षमालाहस्ता हंसासनसमारूढा ब्रह्मदेवत्या ऋग्वेदमुदाहरन्ती ॥ मध्यन्दिने सावित्री रविमध्ये स्थिता श्वेतवर्णा यौवनस्था त्रिनेत्रा शूलहस्ता वृषभासनसमारूढा रुद्रदेवत्या यजुर्वेदमुदाहरन्ती । सायं सरस्वती रविमध्ये स्थिता श्यामवर्णा वृद्धा चतुर्भुजा चक्रहस्ता सुपर्णासनसमारूढा विष्णुदेवत्या सामवेदमुदाहरन्ती इति ॥

### காயத்ரீ த்யானம்

இனி காயத்ரீ த்யானம் சொல்லப்படுகிறது. அதில், கோபிலர்:- காலையில், காயத்ரீ ஸூர்ய மத்யத்தில் இருப்பவளாயும், சிவப்பு வர்ணமுடையவளாயும், குமாரியாயும், ஜபமாலையைக் கையில் உடையவளாயும், ஹம்ஸாஸனத்தில் இருப்பவளாயும், ப்ரம்ஹாவைத் தேவதையாய் உடையவளாயும், ருக்வேதத்தைப் படிப்பவளாயும் த்யானிக்கப்பட வேண்டும். மத்யாஹ்னத்தில், ஸாவித்ரீ ஸூர்ய மத்யத்தில் இருப்பவளும், வெண்ணிறமானவளும், யௌவனத்தில் இருப்பவளும், மூன்று கண்களுடையவளும், சூலம் தரித்தவளும், வ்ருஷபா ஸனத்தில் இருப்பவளும்,

ருத்ரனைத் தேவதையாய் உடையவளும், யஜுர் வேதத்தைப் படிப்பவளுமாய், த்யானிக்கப்பட வேண்டும். மாலையில், ஸரஸ்வதீ ஸூர்ய மத்யத்திலிருப்பவளும், கறுப்பு நிறமுடையவளும், வ்ருத்தையும், நான்கு புஜங்களுடையவளும், சக்ரத்தைக் கையிலுடையவளும், கருடாஸனத்தில் இருப்பவளும், விஷ்ணுவைத் தேவதையாய் உடையவளும், ஸாமவேதத்தைப் படிப்பவளுமாய் த்யானிக்கப்பட வேண்டும்.

गृह्यपरिशिष्टे – अथ देवताध्यानम् – या सन्ध्योक्ता सैव मन्त्रदेवता खलूपास्यते। तां सर्वदैकरूपां ध्यायेत्। अनुसन्ध्यमन्योन्यं भिन्नरूपां वा। यदैकरूपामृग्यजुस्सामत्रिपदां तिर्यगूर्ध्वाधरां षट्कुक्षिं पञ्चशीर्षामग्निमुखीं विष्णुहृदयां ब्रह्मशिरसं रुद्रशिखां दण्डक-मण्डल्वक्षसूत्राभयाङ्क चतुर्भुजां शुभ्रवर्णां शुभ्राम्बरानुलेपनस्रगाभरणां शरच्चन्द्रसहस्रप्रभां सर्वदेवमयीमिमां देवीं गायत्रीमेकामिव तिसृषु सन्ध्यासु ध्यायेत्॥

க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:- இனி, தேவதா த்யானம் சொல்லப்படுகிறது. எவள் ஸந்த்யை என்று சொல்லப்பட்டவளோ. அவளே மந்த்ர தேவதையாய் உபாஸிக்கப்படுகிறாள். அவளை எப்பொழுதும் ஒரே ரூபமுடையவளாய் த்யானிக்கவும். ஒவ்வொரு ஸந்த்யையிலும் தனித்தனியாய் மாறிய ரூபமுடையவளாக வாவது த்யானிக்கவும். ஏக ரூபையாய் த்யானித்தால், ருக்கு, யஜுஸ், ஸாம இவைகளை மூன்று பாதங்களாய் உடையவளும், திர்யக், ஊர்த்வம், அதரம் என்று மூன்று விதமாயுள்ளவளும், ஆறு குக்ஷிகளை உடையவளும், ஐந்து சிரஸ்ஸுகளுடையவளும், அக்னியை முகமாகவும், விஷ்ணுவை ஹ்ருதயமாகவும், ப்ரம்ஹாவைச் சிரஸ்ஸாகவும், ருத்ரனைச் சிகையாக உடையவளும், தண்டம், கமண்டலு, ஜபமாலை, அபயம் இவைகளைத் தரித்த நான்கு கைகளுடையவளும், வெண்ணிறம் உடைய

வளும், வெண்ணிறமான வஸ்த்ரம், சந்தனம், மாலை, ஆபரணம் இவைகளை உடையவளும், சரத் காலத்திலுள்ள ஆயிரம் சந்த்ரன் போன்ற காந்தி உடையவளும், ஸகல தேவதா ரூபிணியுமாக இந்தக் காயத்ரீ தேவியை ஒரு ப்ரகாரமாகவே, மூன்று ஸந்த்யைகளிலும் த்யானிக்கவும்.

अथ यदि भिन्नरूपां प्रातर्बालां बालादित्यमण्डलमध्यस्थां रक्तवर्णां रक्ताम्बरानुलेपनस्रगाभरणां चतुर्वक्त्रां दण्डकमण्डल्वक्षसूत्राभयाङ्कचतुर्भुजां हंसासनारूढां ब्रह्मदेवत्यां ऋग्वेदमुदाहरन्तीं भूलोकाधिष्ठात्रीं गायत्रीं नाम देवतां ध्यायेत्।

அல்லது, பின்ன ரூபமுடையவளாய் த்யானிப்பதானால், காலையில், பாலையாயும், பால ஸூர்ய மண்டலத்தில் இருப்பவளாயும், சிவப்பு வர்ணம் உடையவளும், சிவந்த வஸ்த்ரம், சந்தனம், மாலை, ஆபரணம் இவைகளை உடையவளும், நான்கு முகங்களுடையவளும், தண்டம், கமண்டலு, ஜபமாலை, அபயம் இவைகளையுடைய நான்கு புஜங்களுடையவளும், ஹம்ஸாஸனத்தில் அமர்ந்தவளும், ப்ரம்ஹதேவதையாயும், ருக்வேதத்தைப் படிப்பவளாயும், பூலோகத்தில் இருப்பவளாயும், காயத்ரீ என்ற நாமம் உடையவளுமான தேவதையாய் த்யானிக்கவும்.

अथ मध्यन्दिने तां युवतीं युवादित्यमण्डलस्थां श्वेतवर्णां श्वेताम्बरानुलेपनस्रगाभरणां पञ्चवक्त्रां प्रतिवक्त्रं त्रिनेत्रां पञ्चशेखरां शूलखड्गखट्वाङ्गडमरुकाङ्कचतुर्भुजां वृषभासनारूढां रुद्रदेवत्यां यजुर्वेदमुदाहरन्तीं भुवोलोकाधिष्ठात्रीं सावित्रीं नाम देवतां ध्यायेत्।

பிறகு, மத்யாஹ்னத்தில், அவளை யவதியாயும், யௌவனமுள்ள ஸூர்ய மண்டலத்தில் இருப்பவளும், வெண்ணிறம் உள்ளவளும், வெண்ணிறமான வஸ்த்ரம், சந்தனம், மாலை, ஆபரணம் இவைகளை உடையவளும், ஐந்து முகமுடையவளும், ஒவ்வொரு முகத்திலும் மூன்று

கண்களுடையவளும், ஐந்து முடிகளுடையவளும், சூலம், கத்தி, கட்வாங்கம், டமருகம் இவைகளைத் தரிக்கும் நான்கு கைகளை உடையவளும், வ்ருஷப வாகனத்தில் இருப்பவளும், ருத்ரனைத் தேவதையாய் உடையவளும், யஜுர் வேதத்தைப் படிப்பவளும், புவோர்லோகத்தில் இருப்பவளும், ஸாவித்ரீ எனும் நாமம் உடையவளுமான தேவதையாய் த்யானிக்கவும்.

अथ सायं वृद्धां वृद्धादित्यमण्डलस्थां श्यामवर्णां श्यामाम्बरानुलेपनस्रगाभरणामेकवक्त्रां शङ्खचक्रगदापद्माङ्कचतुर्भुजां गरुडासनारूढां विष्णुदेवत्यां सामवेदमुदाहरन्तीं स्वर्लोकाधिष्ठात्रीं तां सरस्वतीं नाम देवतां ध्यायेत् इति ॥ व्यासः – न भिन्नां प्रतिपद्येत गायत्रीं ब्रह्मणा सह । साऽहमस्मीत्युपासीत विधिना येन केनचित् इति ॥ एतत्सर्वं सन्ध्यानिरूपणे दर्शितम् ॥

பிறகு, மாலையில், வ்ருத்தையும், வ்ருத்தமான ஸூர்ய மண்டலத்தில் இருப்பவளும், கறுப்பு நிறம் உடையவளும், கறுத்த வஸ்த்ரம், சந்தனம், மாலை, ஆபரணம் இவைகளை உடையவளும், ஒரு முகமுடையவளும், சங்கம், சக்ரம், கதா, பத்மம் இவைகளைத் தரித்த நான்கு புஜங்களை உடையவளும், கருடாஸனத்தில் இருப்பவளும், விஷ்ணுவைத் தேவதையாய் உடையவளும், ஸாமவேதத்தைப் படிப்பவளும், ஸ்வர்லோகத்தில் இருப்பவளும், ஸரஸ்வதீ எனும் பெயருடையவளுமாகிய தேவதையாய் த்யானிக்கவும். வ்யாஸர்:- காயத்ரியை, ப்ரம்ஹத்துடன் பேதமுள்ளதாக நினைக்கக் கூடாது. அவளாகவே நான் இருக்கின்றேன் என்று எந்த ப்ரகாரத்தாலாவது உபாஸிக்க வேண்டும். இது முழுதும் ஸந்த்யா நிருபணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

ततः गायत्र्यास्तुरीयं पादं जपित्वा तेन गायत्रीमभिमुखीकृत्य जपेत् ॥ तदुक्तं व्यासेन – तुरीयं तु पदं तस्याः परे ब्रह्मणि संस्थितम् ।

उपस्थाय तुरीयेण जपेत्तां तु समाहितः इति ।। पितामहः – गायत्र्यास्तु त्रयः पादाश्चतुष्पादपि सा स्मृता । जपे तु त्रिपदैवोक्ता ह्यर्चने तु चतुष्पदा इति । तुरीयपादस्वरूपमुक्तं चन्द्रिकायाम् – तुरीयं पादं परोरजसि सावदोमित्यष्टाक्षरं तस्य विमलऋषिः तुरीयं छन्दः परमात्मा देवता मोक्षे विनियोगः इति ।।

*பிறகு, காயத்ரியின் நான்காவது பாதத்தை ஜபித்து, அதனால் காயத்ரியை அபிமுகமாக்கி ஜபிக்கவும். அதைச் சொல்லியுள்ளார் **வ்யாஸர்**:- காயத்ரியின் நான்காவது பாதம் பரப்ரஹ்மத்திலுள்ளது. அந்த நான்காவது பாதத்தால் காயத்ரியை உபஸ்தானம் செய்து கவனமுடையவனாய் ஜபிக்க வேண்டும். **பிதாமஹர்**:- காயத்ரீக்குப் பாதங்கள் மூன்று, அவள் நான்கு பாதங்களுடையவள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறாள். ஜபத்தில் மூன்று பாதங்களுடையவளே விதிக்கப்பட்டுள்ளாள். அர்ச்சனத்தில் நான்கு பாதங்களுடையவளாய்ச் சொல்லப்பட்டிருக்கிறாள். நான்காவது பாதத்தின் ஸ்வரூபம் சொல்லப்பட்டுள்ளது **சந்த்ரிகையில்**:- 'பரோரஜஸி ஸாவதோம்' என்று எட்டு அக்ஷரங்களுள்ளது நான்காவது பாதம், அதற்கு விமலர் ருஷி, துரீயம், சந்தஸ், பரமாத்மா தேவதை, மோக்ஷத்தில் விநியோகம் என்று.*

—★—

## गायत्रीमहिमा ।

अथ गायत्रीमहिमा । तत्र मनुः – अकारं चाप्युकारं च मकारं च प्रजापतिः । वेदत्रयान्निरदुहत् भूर्भुवः स्वरितीति च ।। निरदुहत् - निश्चकर्ष ।। तदित्यृचोऽस्याः सावित्र्याः परमेष्ठी प्रजापतिः । त्रिभ्य एव तु वेदेभ्यः पादं पाद मदूदुहत् ।। एतदक्षरमेतां च जपन् व्याहृतिपूर्विकाम् । सन्ध्ययोर्वेदविद्विप्रो वेदपुण्येन युज्यते इति ।। अक्षरम् - प्रणवम् । एतां - सावित्रीम् । वेदत्रयार्थविदः वेदत्रयजापिनः यत्फलम्, तल्लभत इत्यर्थः ।।

**காயத்ரீ மஹிமை**

இனி காயத்ரியின் மஹிமை சொல்லப்படுகிறது. அதில் மனு:- ப்ரம்ஹதேவன், அகாரம், உகாரம், மகாரம் இம்மூன்றையும், பூ:, புவ:, ஸ்வ:, இம்மூன்றையும், மூன்று வேதங்களினின்றும் வெளியாக்கினார். ப்ரம்ஹதேவன், 'தத்' என்ற ஸவித்ரு தேவதாகமான ருக்கின் மூன்று பாதங்களையும், ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களினின்றும் வெளியேற்றினார். ஆகையால், இந்த ப்ரணவாக்ஷரத்தையும், வ்யாஹ்ருதிகள் மூன்றுடைய இந்தக் காயத்ரியையும், இரு ஸந்த்யைகளிலும் ஜபிக்கும் வேதமறிந்த ப்ராம்ஹணன், வேதாத்யயன புண்யத்துடன் சேருகிறான்., மூன்று வேதங்களின் அர்த்தத்தை அறிந்தவனும், அவைகளைப் படிப்பவனும் ஆகியவனுக்கு எந்தப் பலனோ அதை அடைகிறான், என்பது பொருள்.

स एव – एतयर्चा विसंयुक्तः काले च क्रियया स्वया । विप्रक्षत्रियविड्योनिर्गर्हणां याति साधुषु ॥ सहस्रकृत्वस्त्वभ्यस्य बहिरेतत्त्रिकं द्विजः । महतोऽप्येनसो मासात् त्वचेवाहिर्विमुच्यते ॥ योऽधीतेऽहन्यहन्येतां त्रीणि वर्षाण्यतन्द्रितः । स ब्रह्म परमभ्येति वायुभूतः खमूर्तिमान् ॥ अतन्द्रितः - शक्तौ सत्यां न कदाचिदप्यन्यपरः । वायुभूतः - सर्वव्यापी । खमूर्तिमान् - लेपरहितः ॥

மனுவே:- ஸந்த்யைகளில் இந்தக் காயத்ரியை ஜபிக்காமலும், மற்றக் காலத்தில் விஹிதமான கர்மத்தைச் செய்யாமல் இருக்கும் ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன் யாராயினும், ஸாதுக்கள் நடுவில் நிந்தையை அடைகிறான். த்விஜன்' வெளியில் நதீதீரம் அரண்யம் முதலிய இடத்தில், ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரீ என்ற இம்மூன்றையும் ஆயிரம் முறை ஜபித்தால் ஒருமாஸத்தில், மஹாபாபத்தினின்றும் கூட, ஸர்ப்பம் சட்டையிடமிருந்து

